# பெரியார்

# ஈ. வெ. ரா. சிந்தனைகள்

## THOUGHTS OF PERIYAR E. V. R.

## 1



பதிப்பாசிரியர்: வே. ஆனைமுத்து

சிந்தனையாளர் கழகம்

திருச்சிராப்பள்ளி-2.





போன் : 0422 – 2572635
செல் : 936 2970121

பொறிஞர் கு.ம. சுப்பிரமணியன் பி.இ., எம்.பி.ஏ., எஃப்.அய்.இ.
(மருத நாடன்)
தலைமைப் பொறியாளர் மி.வா. (ஓய்வு)
தலைவர் : சிந்தனையாளர் கழகம்
தமிழ் தமிழர் ஒருங்கிணைப்பாளர்
அமைப்பாளர் : தொழில் நுட்ப வல்லுநர் குழுமம்

18/12ஏ, அண்ணாநகர், ஆறுமுகம் லே–அவுட்,
பூளைமேடு (அஞ்சல்), கோயமுத்தூர் – 641 004.

இன்று கோவையில் பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் அவர்களை அவரது இல்லத்தில் சந்தித்தேன். இவர் மின்வாரியத்தில் தலைமைப் பொறியாளராகப் பணியாற்றி பணிநிறைவு பெற்றவர். தந்தை பெரியாரோடு இணைந்து தமிழகம் முழுவதும் பகுத்தறிவுக் கருத்துகளைப் பரப்பியவர்.

திருச்சி சிந்தனையாளர் கழகத்தின் தலைவராக இருந்தவர். இவரது முயற்சியால் திரு.வே. ஆனைமுத்து அவர்கள் தொகுத்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டன. 2200 பக்கங்களுக்கு மேற்பட்ட இந்த மூன்று தொகுதிகளும் பெரியாரின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் அடங்கிய தொகுப்பு ஆகும். பெரியாரின் பன்முக ஆற்றலை வெளிப்படுத்துகிற அரிய நூலாக இன்றளவும் இந்த நூல் போற்றப்படுகிறது.

பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் எழுதிய கவிதை நூலை இணையத்தில் வலையேற்றுவதற்காக அவரைச் சந்தித்தபோது பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற நூலைப்பற்றி அவரிடம் பேசினேன். அந்த நூலை வெளியிட்ட நினைவலைகளை அவர் விளக்கினார். நூல் வெளியீட்டிற்காப் பட்டபாடுகள் என் கண்முன் நிழலாடியது. அவர் காட்டிய தந்தை பெரியாரின் உருவம் என் முன் நிழலாடியது. பகுத்தறிவு விதைப்பிற்காகத் தன்வாழ்நாளின் இறுதிவரை பேசியும் எழுதியும் வந்த அவரது உறுதி தெரிந்தது.

பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் தொகுப்பினை இணையத்தில் வலையேற்றினால் உலகமக்கள் வலைஇறக்கிப் படித்து மகிழ்வார்களே என்று சொன்ன பொழுது, நூலை வெளியிட்ட சிந்தனையாளர் கழகத்தின் தலைவர் திரு. கு.ம. சுப்பிரமணியம் அவர்கள் மகிழ்வோடு, தன் கைப்படியாக வைத்திருந்த அந்த முதன்மைப் படியை அன்போடு எடுத்து வந்து கொடுத்தார்.

இணையத்தில் வெளியிடுங்கள், அய்யாவின் கருத்துகள் உலகம் முழுவதும் பரவட்டும் என்று அவர் கொடுத்தபோது நான் பெருமகிழ்வு அடைந்தேன். நான் பத்தாம் வகுப்பு படித்தபோது, தாராபுரம் நூலகத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பக்கமாகப் படித்து நெஞ்சில் பதிந்து என்னை வழிநடத்திய அந்த நூலை நான் படவடிவக் கோப்பாக்கும் வாய்ப்பு கிடைத்தது கண்டு நெஞ்சு நெகிழ்ந்தேன்.

ஆனைமுத்து அய்யா அவர்கள் பெருமுயற்சியில் திரட்டிச் சேகரித்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற இந்த மூன்று தொகுதிகளும் உலகம் முழுவதும் உள்ள நம் தமிழ் மக்களுக்கும் இனிவரும் அடுத்த தலைமுறையினருக்கும் வழிகாட்டியாக நின்று பகுத்தறிவூட்டும் என்று நம்புகிறேன்.

bghs;shrpr erd; (09-06-2011)
jkpHk;tiy (www.thamizham.net)

## 5. பத்தினி–பதிவிரதை

பத்தினி—பதிவிரதை என்ற சொற்கள் முட்டாள்தனத்திலிருந்தும், மூர்க்கத்தனத்திலிருந்தும் தோன்றிய சொற்களாகும்.

இச் சொற்களுக்கு இயற்கையிலோ, நீதியிலோ, சமத்துவத்திலோ, சுதந்திரத்திலோ சிறிதும் இடமில்லை. இச்சொற்கள் தமிழ்ச் சொற்களுமல்ல; இச்சொற்களுக்கு உரிய பொருளில் தமிழில் சொற்களோ சொல்லோ இல்லை.

இச்சொற்பொருளுக்குள்ள குணம், மனிதர்களுக்கு அவசியம் என்ன ? என்பதுபற்றி இதுவரையிலும் யாராலும் விளக்கப்படவே இல்லை. இச்சொற்கள் ஆரியமொழிச் சொற்கள் என்றாலும், அவர்களது பழக்கவழக்கங்களிலும் அவர்களது நூல்கள், கதைகள், கற்பனைப் புராண இதிகாசங்கள், நீதிகள், நடப்புகள் முதலிய எவற்றிலும் இச்சொற்களுக்கு உரிய குணங்கள் எவையும் அறிவுக்கு ஏற்ற முறையில் கற்பிக்கப்படவே இல்லை. ஆரிய புராண இதிகாசங்களில் காணப்படும் பதிவிரதைகள், பத்தினிகள் யாவரும் மேற்சொன்ன பொருளுக்கு ஏற்றபடி நடந்தார்கள், நடந்துகொண்டார்கள் என்பதாக ஒரு பதிவிரதை கூடச் சுட்டிக் காட்டப்படவில்லை.

ஆரிய நீதியாகிய மனுதர்மத்தில், பெண்கள் பச்சைப் பதிவிரதைகளாக இருக்க வேண்டும் என்று எங்கும் காணப்படவே இல்லை.

மற்றும், பதிவிரதா தர்மத்துக்கு என்ன பலன் உண்டு என்றுகூட எதிலுமே காணப்பட முடியவில்லை.

ஆரிய பதிவிரதைகள் தன்மைக்கு அகலிகை, சீதை, துரோபதை, மண்டோதரி, என்று சொல்லப்பட்ட பதிவிரதைகளின் யோக்கிதையே நன்றாக விளங்கும்.

மற்றும், பதிவிரதைகளுக்கு உதாரணம் காட்டிக் கற்பிக்கப்பட்டிருக்கும் சாவித்திரி, நல்லதங்கை, கண்ணகி முதலிய பெண்களின் தன்மையை அவர்களது அனுபவத்தைப் பார்த்தாலும்—பதிவிரதத் தன்மை விளங்கும்.

பதிவிரதைகளுக்கு ஏன் துன்பம், துயரம் ஏற்படவேண்டும்? அவர்கள் ஏன் ‘விதவைகள்’ ஆகவேண்டும்?

மற்றும், தமிழர்களது சரித்திரத்தில்—தமிழர்கள் பெண்களின் எண்ணிக்கையில்—தமிழர் சரித்திரம் தொடங்கிய காலம்முதல் இன்றுவரை ஒரே ஒரு பெண்ணைத்தான் பத்தினியாக—பதிவிரதையாகப் போற்றப்படவேண்டியவளாகக் கண்டுபிடிக்க முடிந்திருக்கிறது என்றால், இது தமிழ்ப் பெண்சமுதாயத்திற்கு எவ்வளவு இழிவும் பழியும் ஆகும் என்று சிந்தியுங்கள்.

தமிழர் பெண்களில் ஒருத்திதான் பதிவிரதை என்பது தமிழர் பெண் சமுதாயத்தை இழிவுபடுத்தியதும், வெறுக்கத்தகுந்த செய்கையும் ஆகாதா? அக் கதையை உண்டாக்கினவன் ஒரு முட்டாளாக இருக்கவேண்டும்; இல்லையானால், பெண்களை—தமிழர்களை இழிவுபடுத்தின வருணாசிரம தர்மத்தைக் காப்பாற்றுகிற அயோக்கியனாக இருக்க வேண்டும் என்பதை மட்டும் கூறி முடிக்கிறேன்.

[‘விடுதலை’-தலையங்கம்—4-5-1973]

# 6. இந்தியப் பெண்கள்

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

இந்தியாவில் இந்துப் பெண்கள், இந்துமத சம்பிரதாயப்படி, பாபஜென்மங்களாகக் கருதப்படுவர். அதாவது, சென்ற ஜென்மத்தில் அவர்கள் செய்த பாபகாரியங்களால், இந்த ஜென்மத்தில் பெண்களாய்ப் பிறக்கின்றார்கள் என்பது ஒரு சாஸ்திர விதி. ஒரு குடும்பத்தில் எத்தனை பெண் குழந்தைகள் இருந்தாலும், அக் குடும்பத்திற்கு ஆண் குழந்தைகள் இல்லாவிட்டால், அதைப் 'பிள்ளையில்லாத குடும்பம்' என்று சொல்லுவது வழக்கம். ஒரு வீட்டில் பெண் குழந்தை பிறந்தால், அது அவ் வீட்டுக்கு அதிருப்தி தரத் தக்க விஷயமாகவே கருதப்படும். ஆண் குழந்தை பிறந்தால் வெகு திருப்தியுடன் ஆடம்பரமாகச் செலவு செய்வார்கள். ஏதாவது ஒரு சபை அல்லது கூட்டம் ஒருவரும் பேசாமல் நிசப்தமாய் இருப்பதாய் இருந்தால் அதைப் பார்த்து, "என்ன, பெண் பிறந்த வீடுபோல் இருக்கிறதே!" என்று கேட்பது வழக்கம். எவ்வளவு பெண் குழந்தைகள் இருந்தாலும், ஒருவனுக்கு ஆண் குழந்தை இல்லாவிட்டால், வேறு குடும்பத்தில் இருந்து ஒரு ஆண் பிள்ளையைச் சுவீகாரம் எடுத்துக் கொள்வார்களே ஒழிய, பெண் குழந்தையை வாரிசுக் குழந்தையாய்க் கருதுவதில்லை.

'பெண்கள் எந்த நிலையிலும் சுதந்திரத்திற்கு அருகதையற்றவர்கள்' என்பதே மதச் சம்பிரதாயம். ஒரு பெண்ணாணவள் குழந்தைப் பருவத்தில் தாய், தந்தை மேற்பார்வையிலும், வாலிபப் பருவத்தில் புருஷன் மேற்பார்வையிலும், வயோதிகப் பருவத்தில் தன் மக்களின் மேற்பார்வையிலும் இருக்கவேண்டுமே ஒழிய, சுதந்திரமாய் இருக்கக்கூடாதென்று மனுதர்ம சாஸ்திரத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது மாத்திரமல்லாமல், பெண்களைக் கடவுள் பிறவியிலேயே விபசாரிகளாய்ப் பிறப்பித்திருப்பதால் அவர்களைச் சர்வ ஜாக்கிரதையாகக் காவல் காக்க வேண்டும் என்று மத சாஸ்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

பெண்களுக்குக் கல்வி கற்பிப்பதும் மத சாஸ்திர விரோதமான காரியமாகும். இவ்வளவு நாகரிகமான காலத்திலும் இந்தியாவில் மொத்த ஜனத்தொகையில் 100க்கு ஒருவர் வீதம்தான் பெண்கள் கல்வி கற்றிருக்கக்கூடும். அப்படிக் கற்றிருந்தாலும் அந்தக் கல்வி அவர்களது வாழ்க்கையில் யாதொரு காரியத்திற்கும் பயன்படுவதில்லை. பெண்களுக்குக் கற்றுக்கொடுப்பதெல்லாம் வீட்டு, சமையல் வேலை முதலிய வேலைகளைச் செய்யத்தான் கற்றுக்கொடுப்பது வழக்கம். சிறு பருவம் முதலே அவர்களை ஆண் குழந்தைகளிடம் இருந்து பிரித்துவைக்க வேண்டும் என்று கருதுவதால், பொதுப்பள்ளிக் கூடங்களுக்கு அவர்களை அனேகமாய் அனுப்பமாட்டார்கள். மற்றபடி, சிறு குழந்தைப் பருவத்தில் யாருக்காவது சங்கீதம், பாட்டு முதலியவை கற்றுக்கொடுக்கப்பட்டாலும், அவை அப்பெண்ணின் வாழ்க்கையில் சிறிதும் பயன்பட சந்தர்ப்பம் இருப்பதே கிடையாது.

கலியாண விஷயம் என்பது மிகவும் பரிதாபகரமானது. அனேகமாகப் பெண்களுக்கு 10, 12 வயதிற்குள்ளாகக் கலியாணம் ஆகிவிடும். பிறந்த ஒரு வருஷத்திலிருந்தே எப்பொழுது வேண்டுமானாலும் கலியாணம் செய்யலாம். சில வகுப்புகளில் எப்படியானாலும் 10 வயதிற்குள் கலியாணம் செய்தாகவேண்டும் என்கின்ற நிர்ப்பந்தம் உண்டு. கலியாணம் என்பது, பெண் கழுத்தில் ஆண் ஒரு கயிற்றைக் கட்டுவதுதான். தாலி கட்டுகின்றது என்கின்ற சடங்கு நடக்கிற வரையிலும், பெண்ணுக்கு மாப்பிள்ளை இன்னார் என்றே அடையாளம் தெரியாது; மாப்பிள்ளைக்கும் பெண் இன்னார் என்றே அடையாளம் தெரியாது. கலியாணம் என்பது பெண்–மாப்பிள்ளை ஆகியவர்களின் பெற்றோர்கள் செய்துகொள்ளும் ஏற்பாடே ஒழிய, பெண்–மாப்பிள்ளை ஆகிய இருவருடைய சம்மதம் என்பது கிடையாது. பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் பொருத்தம் என்பது ஜோசியத்தின் மூலமும் சகுனத்தின் மூலமும் பார்ப்பதே தவிர, பிரத்தியட்ச யோக்கியதை

முதலியவைகளைக் கொண்டு பார்ப்பதில்லை. 5, 10 வயதுள்ள சிறு பெண்களுக்கு 40, 50 வயதுள்ள மாப்பிள்ளைகளைக் கலியாணம் செய்வதும் உண்டு. 60 70 வயதுக் கிழவர்களுக்குச் சிறு பெண்களைக் கலியாணம் செய்வதும் உண்டு. சென்ற ஆண்டில் கூட 90 வயதுக் கிழவன் ஒரு சிறு பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டான். பெண்ணின் தாய் தகப்பன்மார் யாருக்குக் கலியாணம் செய்து கொடுப்பதானாலும் பெண் சம்மதித்துத்தான் ஆகவேண்டும். பெண் ஏதாவது தனது அதிருப்தியைக் காட்டினால், அது பெண்ணின் கற்பிற்கே விரோதமானது என்று சொல்லிவிடுவதால், பெண் தன்னை யாருக்குக் கொடுப்பதானாலும் சம்மதித்தாக வேண்டும்.

கலியாணம் செய்யப்பட்ட பெண், புருஷன் வீட்டு வேலைக்கே கலியாணம் செய்யப்பட்டதாய்க் கருதி, புருஷன் வீட்டில் மாமனார், மாமி, நாத்தி, கொழுந்தன் ஆகியவர்களுக்கு வேலையாளாக இருந்து சகல வேலைகளையும் பார்க்கவேண்டும். சில வகுப்புகளில் பெண், புருஷனின் தகப்பன்மாருக்கும், சகோதரர்களுக்கும் கூட 'பெண்சாதி'யாய் இருக்க வேண்டும். இதற்குச் சட்டத்திலும் இடம் உண்டு. பெண், தாய் வீட்டிலிருந்து புருஷன் வீட்டிற்குப் போகும்பொழுது அழுதுகொண்டே போவாள். பெற்றோர்கள் பெண்ணுக்குச் சொல்லியனுப்பும் புத்திமதியெல்லாம், 'புருஷன் வீட்டில் உள்ளவர்களுக்குப் பணிந்து, நல்ல வேலைக்காரியாய் நடந்துகொள்' என்றுதான் சொல்லியனுப்புவார்கள். அந்தப் பெண்ணை புருஷன் எவ்வளவு கொடுமையாய் நடத்தினாலும் கேள்வி கிடையாது. புருஷன் எவ்வளவு அயோக்கியனாகவும், குடிகாரனாகவும், சூது, விபச்சாரம் செய்பவனாகவும் இருந்தாலும் பெண்ணுக்கு அவனைக் கேட்க அதிகாரம் கிடையாது.

அவன் வரும்படி இல்லாமல் திரிந்தாலும், பெண் தானே கூலி வேலை செய்தாகிலும் அவனுக்குச் சோறு போடவேண்டும். பெண் இவற்றையெல்லாம் தனது முன்ஜென்மத்தின் கர்மபலன் என்று எண்ணிக்கொள்ள வேண்டும்.

புருஷன் மேற்கொண்டு எத்தனை 'பெண்சாதி' வேண்டுமானாலும் கலியாணம் செய்துகொண்டு வாழலாம்; எத்தனை 'தாசி'களை வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம். இந்துமதக் கடவுள்கள் 60 ஆயிரம் பெண்களைக் கட்டிக்கொண்டதாகவும், 12 ஆயிரம் தாசிகளை வைத்திருந்ததாகவும் மத ஆதாரங்கள் உண்டு. எந்த நிலையிலும் கலியாண ரத்து என்பது கிடையவே கிடையாது. பெண்ணுக்கு ஒரு தடவை கலியாணம் ஆகிவிட்டால் சாகும்வரை அவனிடமேதானிருக்க வேண்டும். புருஷன் கொடுமை சகியாமல் பெண் தாய் வீட்டுக்குப் போய்விட்டால், புருஷன் கோர்ட்டில் தாவாசெய்து டிக்ரி பெற்றுப் பெண்ணைச் சுவாதீனம் செய்துகொள்ளலாம். ஆனால், பெண்ணுக்குப் புருஷனிடம் இருந்து ஜீவனாம்சம் பெறத்தான் பாத்தியம் உண்டு. அதுவும் பெண் விபச்சாரி என்று புருஷன் ருசுப்படுத்திவிட்டால் அந்த ஜீவனாம்சமும் இல்லை.

பெண்ணுக்குத் தகப்பன் சொத்தில் சிறிதும் பங்கு கிடையாது; புருஷன் சொத்திலும் பங்கு கிடையாது.

புருஷன் இறந்துவிட்டால் பெண் விதவை என்று அழைக்கப்படுவாள். புருஷன் இறக்கும்போது அவள் எவ்வளவு செல்வத்துடன் மேன்மையாய் இருந்தாலும், கணவன் இறந்தவுடன் அவள் ஒரு 'அபசகுன உருவமாக ஆகிவிடுவாள். நகை அணியக் கூடாது; புஷ்பம், வாசனை, நல்ல உடுப்பு ஆகியவை அணியக்கூடாது. ஒரே வேளை—அதுவும் சத்தற்ற ஆகாரந்தான் சாப்பிடவேண்டும். சில வகுப்புகளில் தலையை மொட்டையடித்து, வெள்ளை உடுப்பு அணிந்து கொண்டு வீட்டிற்குள்ளாகவே வீட்டு வேலைகள் செய்து கொண்டு இருக்கவேண்டும். விதவையைக் காணுவது அபசகுனமாகப் பாவிக்கப்படும். விதவைக்குக் குடும்பக் காரியங்களில் அல்லது சடங்குகளில் எந்தவித பாத்தியமும் கிடையாது; சாப்பாட்டுக்கு மட்டும் பெறப் பாத்தியம் உண்டு. வேறு கலியாணம் செய்து

கொள்ளக்கூடாது. ஆனால், புருஷன் தனது பெண் சாதி இறந்த 10 நாட்களிலே மறு கலியாணம் செய்து கொள்ளலாம்.

அவன் எவ்வளவு கிழவனாய் இருந்தாலும் மறுமணம் செய்து கொள்ளுவதில் எவ்வித ஆட்சேபமும் இல்லை. புருஷன் குழந்தையே இல்லாவிட்டாலும், ஆண் குழந்தை இல்லாவிட்டாலும் வேறு கலியாணம் செய்துகொள்ளலாம். பெண் தனது குழந்தைப் பருவத்தில் புருஷன் இறந்துபோனாலும் வேறு கலியாணம் செய்துகொள்ளக் கூடாது.

இது பொதுநிலைமையாகும். இனி சில தனி வகுப்புகளிலுள்ள பெண்கள், நிலைமைபற்றிச் சில குறிப்பிடுகின்றேன். சில வகுப்புகளில் பெண்கள், ஆண்களின் கண்களுக்கே தென்படக் கூடாது. உடம்பு, தலை, முகம் ஆகிய எல்லாவற்றையும் ஒரு துணியினால் போர்த்து மூடிக்கொள்ளவேண்டும். கண்கள் மாத்திரம் தெரியும்படி ஓட்டை விட்டுப் பார்த்துக்கொண்டே போகவேண்டும். பெண்கள் எங்கும் தனியே போகக் கூடாது; சிறு பெண்ணை, அதாவது 8, 10, 12 வயதுப் பெண்ணை 20, 30, 40 வயதுக் காரர்களுக்குக் கட்டிக் கொடுத்தாலும், கலியாணமான அன்று இரவே படுக்கை வீட்டில் பெண்ணையும் ஆணையும் தனியாகப் படுக்கவைத்துவிடுவார்கள். அவன் அதை காமாகாரமாய், எப்படி மிருகத்தனமாய் வேண்டுமானாலும் சில சமயங்களில் நடத்துவான்.

சில வகுப்புகளில், மகனுக்குக் கலியாணம் செய்த பெண் மாமனாருக்கும் 'பெண் சாதியாய்' இருந்தாக வேண்டும். 10 வயதுப் பையனுக்கு 20 வயதுப் பெண்ணைக் கலியாணம் செய்து, பையன் 18 வயது நிரம்புவதற்குள் பெண்ணுக்கு 2, 3 குழந்தைகள் பிறந்துவிடும்; குழந்தைகள் மாமனாருக்கோ அல்லது புருஷனுடைய அண்ணனுக்கோ பிறந்ததாக இருந்தாலும் அக் குழந்தைகள் சட்டப்படி புருஷனுக்குப் பிறந்த 'லெஜிட்டிமேட்' (Legitimate) குழந்தைகளாகவே பாவிக்கப்படும்.

சில வகுப்புகளில் குடும்பத் தலைவன் மாத்திரம் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு அவனுடைய சகோதரர்கள் உட்பட எல்லோருமே, அப்பெண்ணைப் 'பெண்சாதியாய்' அனுபவிப்பது உண்டு.

சில வகுப்புகளில் ஒரு குடும்பத்தில் மூத்தவன் மாத்திரம்தான் கலியாணம் செய்து கொள்ளலாம். மற்ற இளைய சகோதரர்களெல்லாம் வேறு சாதிப் பெண்களை வைப்பாட்டியாக வைத்துக்கொண்டு இருப்பது வழக்கம். இதன்படி, வைப்பாட்டியாக வைத்துக்கொண்ட பெண்களுக்குக் குழந்தைகள் பிறந்தால், அவற்றைத் தகப்பன் காப்பாற்றவேண்டும் என்கின்ற நிபந்தனை இல்லை; தகப்பன் சொத்தில் அவர்களுக்குப் பங்கும் இல்லை.

சில வகுப்புகளில் உயர்ந்த சாதிக்காரன் என்கின்ற 'பிராமணன்' மற்ற வகுப்புப் பெண்களைக் கூப்பிட்டால் அவனுக்கு அவள் இணங்கியே ஆகவேண்டும். ஒரு பெண்ணினுடைய புருஷனைக் கூப்பிட்டே அவனுடைய பெண்சாதிமீது தனக்கு ஆசையாய் இருப்பதாகவும் அவளை அழைத்துவரும்படியும் கேட்டால், புருஷன் உடனே அழைத்துக் கொண்டு போகவேண்டும். பெண் சம்மதிக்காவிட்டால் நிர்ப்பந்தப்படுத்தி, அல்லது கொடுமைப்படுத்திச் சம்மதிக்கச் செய்வதும் உண்டு. சில வகுப்புகளில் 'குரு' கூப்பிட்டால் இணங்கியே ஆகவேண்டும். முன் குறிப்பிட்ட—அதாவது ஒரு குடும்பத்தில் மூத்தவன் மாத்திரம் கலியாணம் செய்துகொள்ளலாம்; மற்றவர்கள் வேறு வகுப்புகளில் வைப்பாட்டி வைத்துக்கொள்ளலாம் என்று குறிப்பிட்ட வகுப்பில், பெண்கள் மிதி ஆகி அனேக பெண்கள், சாகும் வரை கலியாணம் இல்லாமல் கன்னிப் பெண்களாக இருந்து, சாவது வழக்கம். இப்படிப்பட்ட பெண்களுக்கு, அவர்கள் செத்த பிறகு பிணத்திற்கு ஒருவனைத் தாலி கட்டச் செய்து பிறகு நெருப்பில் வைத்துக் கொளுத்திவிடுவது வழக்கம்.

சில வகுப்புகளில், ‘ கடவுளுக்குப் பெண்சாதி ஆகிறது ’ என்று கோயிலில் வைத்துக் கடவுளைக் கலியாணம் செய்துகொண்டதாக ஏற்பாடு செய்து, பொது விபச்சாரியாய் வாழச்செய்வது உண்டு. இவர்களுக்குப் பெயர் ‘ தேவதாசி.’

ஒரு கலியாணமான பெண்ணுடன் மற்றொரு ஆண் சம்பந்தம் வைத்துக்கொண்டதாகத் தெரிந்தால், ஆண் சட்டப்படி தண்டனைக்குள்ளாவான். பெண்ணைச் சாதியை விட்டுத் தள்ளிவைத்துவிடுவார்கள். ஒரு பெண் விபச்சாரியாக இருந்தால், சொத்து வைத்துக்கொண்டு சுதந்திரமாய் இருக்கலாம்; இல்லாவிட்டால் சொத்து உரிமை இல்லை; சுதந்திரமும் இல்லை.

[பெண்கள் கூட்டத்தில் சொற்பொழிவு—‘ குடிஅரசு ’ 10-1-1948]

## 7. பெண்கள் போகப் பொருள்களா ?

தலைவரவர்களே ! பெரியோர்களே ! தோழர்களே !

பெண்கள் மனித சமுதாயத்தில் சரி பகுதி எண்ணிக்கை கொண்டவர்கள். இரண்டொரு உறுப்பில் மாற்றம் அல்லாமல், மற்றபடி பெண்கள் மனித சமுதாயத்தில் ஆண்களுக்கு முழு ஒப்பும் உவமையும் கொண்டவர்கள் ஆவார்கள் என்பேன். நாமும் அவர்களைச் சிசு குழந்தைப் பருவமுதல் ஓடிவிளையாடும் பருவம் வரையில் கொஞ்சி முத்தங்கள் கொடுத்து, பலவிதத்தும் பேத உணர்ச்சியே அற்று, ஒன்றுபோலவே கருதி நடத்துகிறோம், பழகுகிறோம். அப்படிப்பட்ட மனித ஜீவன்கள் அறிவும் பக்குவமும் அடைந்தவுடன், அவர்களைப்பற்றி இயற்கைக்கு மாறான கவலை கொண்டு, மனித சமுதாயத்தில் வேறாக்கி, கடைசியாக ஒரு பொம்மையாக்கி, பயனற்ற ஜீவனாக மாத்திரமல்லாமல், அதைப் பெற்றோருக்கு ஒரு தொல்லையான ‘ பண்டமாக ’ ஆக்கிக் கொண்டு, அவர்களது வாழ்வில் அவர்களை அவர்களுக்கும் மற்றும் உள்ளவர்களுக்கும் கவலைப் படத்தக்க ஒரு ‘சாதனமாய்ச் ’ செய்துகொண்டு, அவர்களைக் காப்பாற்றவும் திருப்திப் படுத்தவும் அலங்காரப்படுத்தி திருப்தியும் பெருமையும் அடையச்செய்ய வேண்டியதுமான ஓர் அஃறிணைப் பொருளாகவே ஆக்கிவருகிறோம்.

பெண்களால் வீட்டிற்கு, சமுதாயத்திற்குப் பலன் என்ன ? எங்கு கெட்டபேர் வந்து விடுகிறதோ என்பது தானே ? இன்று பெண்கள் வேலை என்ன ? ஓர் ஆணுக்கு ஒரு பெண்ணாய் அமைப்பது. அது எதற்கு? ஆணின் நலத்துக்குப் பயன்படுவதற்கும், ஆணின் திருப்திக்கும், ஆணின் பெருமைக்கும் பெண் ஓர் உபகருவி என்பதல்லாமல் வேறு என்ன ? ஓர் ஆணுக்கு ஒரு சமையல்காரி; ஓர் ஆணின் வீட்டிற்கு ஒரு வீட்டுக்காரி; ஓர் ஆணின் குடும்பப் பெருக்குக்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை ; ஓர் ஆணின் கண் அழகிற்கும் மனப் புளகாங்கிதத்திற்கும் ஓர் அழகிய அலங்கரிக்கப்பட்ட பொம்மை என்பதல்லாமல், பெண்கள் பெரிதும் எதற்குப் பயன்படுகிறார்கள்; பயன்படுத்தப்படுகிறார்கள் ?

இது என்ன நியாயம் ? மனித சமுதாயம் தவிர மற்றபடி மிருகம், பட்சி, பூச்சி, ஐந்து முதலியவைகளில் வேறு எந்த ஜீவனாவது, ‘ ஆண்களுக்காகவே இருக்கிறோம் நாம் ’ என்ற கருத்துடன், நடத்தையுடன் இருக்கிறதா ?

இந்த இழிநிலை பெண்களுக்கு அவமானமாய்த் தோன்றவில்லை என்பதற்காகவே, ஆண்கள் பெண்களை இவ்வளவு அட்டூழியமாக நடத்தலாமா என்று கேட்கிறேன். ஓர் ஆண் ஒரு பெண்ணைத் தனது சொத்து என்று எண்ணுகிறானே—எதனால் ? துணியாலும் நகையாலுந்தானே ! கம்பி இல்லாத தந்தியும் ரேடியோவும், அணுகுண்டும் கண்டுபிடிக்கப் பட்ட இந்தக் காலத்திலும் பெண்கள் அலங்காரப் பொம்மைகளாக இருப்பதா ?

நம் 'பெண்கள் உலகம்' பெரிதும் மாற்றமடைய வேண்டும். நம் பெண்களைப் போல், பூமிக்குப் பாரமானவர்கள்—மனிதனுக்குத் தொல்லையானவர்கள்—நல்ல நாகரீக மான வேறு நாடுகளில் கிடையாது. இங்கு படித்த பெண், படியாத பெண் எல்லோரும் பொம்மைகளாகவே இருக்கிறார்கள். பெற்றோர்களும், கணவன்மார்களும் அவரவர்களது பெண்களை அழகிய பொம்மைத் தன்மையை உடையவர்களாக ஆக்கி அதைக் கொண்டே திருப்தி அடைகிறார்கள்; பெருமை அடைகிறார்கள். பெண்களைத் திருப்தி செய்ய அவர் களை நல்ல பெண்களாக ஆக்க, 'விலையுயர்ந்த நகையும் தணியும் கொடுத்து அழகிய சிங்காரப் பதுமையாக்கிவிட்டால் போதும் என்று நினைக்கிறார்கள்.

பெண்கள் பெருமை, வருணனை ஆகியவைகளில் பெண்கள் அங்கம், அவயவங்கள், சாயல் ஆகியவைகளைப்பற்றி 50 வரி இருந்தால் அவர்களது அறிவு, அவர்களால் ஏற்படும் பயன், சக்தி திறமை பற்றி ஒரு 5 வரிகூட இருக்காது. பெண்களின் உருவை அலங் கரிப்பது, அழகை மெச்சுவது, சாயலைப் புகழுவது ஆகியவைகள் பெண்கள் சமுதாயத் திற்கு அவமானம், இழிவு, அடிமைத்தனம் என்பதை ஆயிரத்தில் ஓர் பெண்ணாவது உணர்ந்திருக்கிறாள் என்று சொல்லமுடியுமா?

பெண்களுக்குத் தகப்பன் சொத்தில் உரிமை கிடையாதது ஏன் என்று எந்தப் பெண்ணாவது காரணம் கேட்டனளா? "பெண்களை அனுபவிக்கிறவன்—அவர்களிடம் வேலை வாங்கிப் பயன் அடைகிறவன் காப்பாற்றமாட்டானா?" என்பதுதான் அதற்கேற்ற நகை அணி ஆகியவையாகும்.

'பெண்களுக்கு, மக்கள் கவனத்தை ஈர்க்கும்படியான நகை, துணிமணி, ஆபரணம் ஏன்?' என்று எந்தப் பெண்ணாவது, பெற்றோராவது, 'கட்டினவ'ராவது சிந்திக்கிறார் களா? பெண்கள் அஃறிணைப் பொருள் என்பதற்கு இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்? தன்னை அலங்கரித்துக்கொண்டு மற்ற மக்கள் கவனத்தைத் தம்மீது திருப்புவது இழிவு என்றும், அநாகரீகம் என்றும் யாருக்கும் தோன்றாததற்குக் காரணம், அவர்கள் போகப் பொருள் என்ற கருத்தேயாகும். இது பரிதாபமாகவே இருக்கிறது.

நல்ல கற்புடைப் பெண்களுக்கு உதாரணம், "மற்றொருவர் உள்ளம் புகாள்" என்பது திராவிட மரபு நூற்களின் கூற்று. அதாவது, ஒரு பெண் இயற்கையில் கற்புடை யவளா யிருந்தால் தன் கணவன் தவிர மற்றவர்கள் நினைவுக்குக்கூட ஆளாகமாட்டாள்— "பிறர் நெஞ்சு புகாள்" என்பதாகும். நாம் நம் பெண்ணை மற்றவர்கள் எப்படிப்பட் டவர்களாயினும், 150 தடவை திரும்பித் திரும்பிப் பார்க்கும்படி, அவர்கள் கவனத்தை நம்மீது திரும்பும்படி அலங்கரிக்கிறோம். அலங்கரிக்க அனுமதிக்கிறோம். அதில் நம் பணம், உழைப்பு, நம் வாழ்க்கைப் பயன் முதலியவைகளைச் செலவழிக்கிறோம். இது ஏன், எதற்காக என்று சிந்திக்காததால்—அதைத் தவிர வேறு காரியத்திற்கு நம் பெண்கள் பயன்படாமல் போய்விட்டார்கள்.

நான் பாமர மக்களை மாத்திரம் சொல்லவில்லை. நம் அறிஞர், செல்வர், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரானவர்கள் என்று சொல்லப்படும் பெரியோர்களின் யோக்கியதை களையும், அவர்கள் பெண்கள் உலகத்துக்கு ஆற்றும் தொண்டுகளைப் பற்றியுமே சொல்லுகிறேன்.

திராவிடப் பேரறிஞர்களின் மனைவிகள், தங்கை, தமக்கைகள், பெண்கள் எங்கே, எப்படிப் பிறந்தார்கள்? எப்படி வளர்ந்தார்கள்? எப்படித் தகுதி ஆக்கினார்கள்? எப்படி இருக்கிறார்கள்? ஷராப்புக் கடைகள், ஜவுளிக் கடைகள் ஆகியவற்றில் விளம்பரத்திற்கு வைத்திருக்கும் அழகிய பொம்மைகள், உருவங்கள் போலல்லாமல்—நாட்டுக்கு, மனித சமுதாயத்திற்கு, பெண்கள் உலகத்திற்கு இவர்கள் என்ன மாதிரியில் தொண்டாற்ற அல்லது தாங்களாவது ஒரு புகழோ, கீர்த்தியோ பெறத்தக்கபடி வைத்தார்களா? இவர்

களே இப்படி இருந்தால்—மற்ற பாமர மக்கள், தங்கப் பெட்டியின் உள்ளே வெல்வெட் மெத்தை போட்டுப் பூட்டித்தானே வைப்பார்கள்!

நம் பெண்கள்—நகைகள் மாட்டும் 'ஸ்டாண்டா'? இந்தப் பிரபல ஆண்கள் பிறந்த வயிற்றில்தான் இவர்கள் தங்கை, தமக்கையர் பிறந்தார்கள்? இவர்கள் தகப்பன்மார்கள் தான்—அவர்களுக்கும் தகப்பன்மார்கள்? அப்படி இருக்க, இவர்களுக்கு இருக்கும் புத்தி திறமை அவர்களுக்கு ஏன் இல்லாமல் போகும்? இதைப் பயன்படுத்தாதது நாட்டுக்கு, சமூகத்திற்கு நட்டமா, இல்லையா?

பெண்கள் படிப்பு என்பது சுத்த முட்டாள்தனமான முயற்சியாகவே பெரிதும் இருக்கிறது. ஒரு குடும்ப வாழ்க்கைப் பெண்ணுக்கு அவள் தாய் தகப்பன் பாட்டு, பிடில், வீணை, நாட்டியம் கற்றுக்கொடுத்து, அவற்றில் வெற்றியாய்த் தேறவைக்கின்றனர். அப் பெண்ணை ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்தபின்பு, அந்தப் பாட்டு, பிடில், வீணை யாருக்கு என்ன நன்மை கொடுக்கிறது? புகுந்த வீட்டில் சங்கீதம் பாடினால், 'இது என்ன குடித்தன வீடா வேறுவீடா?' என்று மாமி கேட்கிறாள். பிடிலும் வீணையும் தூசி அடையும்.

ஆகவே, இந்தப் படிப்பு நல்ல மாப்பிள்ளை சம்பாதிக்க ஒரு 'அட்வர்டைஸ் மெண் டாகப்' பயன்பட்டது தவிர, மற்றபடி வீணாகப் போய்விட்டதல்லவா? வெறும் செலவு கண்டதுதானே மிச்சம் என்கிறேன். அதுபோல், ஒரு பெண்ணை தாய் தகப்பன்—B.A. படிக்கவைத்து, ஒருவன் கையில் பிடித்துக்கொடுத்து, அந்தப் பெண் சமையல் செய்யவும் குழந்தை வளர்க்கவும் நகை, துணி அலங்காரங்களுடன் மக்கள் கவனத்தை ஈர்க்கவும் செய்தால் B.A. படிக்கவைத்த பணம் வீண் என்பதோடு, அதற்காக சர்க்கார் செலவழித்த மக்கள் வரிப்பணமும் வீண்தானே? இது தேசிய குற்றமாகாதா?

இந்தத் துறையில் எந்த அறிஞரும் சீர்திருத்த வாதியும் கவலை செலுத்தாமல்—எல்லோராலும் இனப் பெருக்கத்திற்கே பெண்கள் ஆளாக்கப்பட்டு விட்டார்கள். நான் சில படித்த பெண்களைப் பார்க்கிறேன். வயிற்றில் ஒரு குழந்தை; கட்கத்தில் ஒரு குழந்தை; கையில் பிடித்துக்கொண்டு ஒரு குழந்தை; இவ்வளவோடு சிலருக்கு முன்னால் ஓடும்படி ஒரு குழந்தையை விட்டு—இப்படியாகப் படைகளோடு நல்ல நிகழ்ச்சிகள் நடக்கும் கூட்டங்களுக்கு வந்து நடுவிலிருந்துகொண்டு, நிகழ்ச்சிகளுக்கு இடையூறும் தொல்லையும் கொடுப்பதைப் பார்க்கிறேன். இதற்காக அவர்கள் வெட்கப்படாததையும், சிலர் வருத்தப் படுவதையும் பார்க்கிறேன். இது மனித சமூகத்தில் இருக்கத்தக்கதா? அதுவும் நாகரிக சமூகத்தில்—படித்த பெண்கள், படித்தவர் வீட்டுப் பெண்கள் என்கிறவர்கள் இடையில் இருக்கத்தக்கதா? இந்த இலட்சணத்தில் நகைகள், விலையுயர்ந்த துணிகள் ஏன்? குழந்தைகள் கூட்டத்தில் மலஜலம் கழிக்கும், கத்தும் ஆபாசங்கள் ஏன்?

நகைக்கும் துணிக்கும் போடும் பணத்தை பாங்கியில் போட்டு குறைந்த வட்டியாவது வாங்கி, குழந்தை பிறந்தவுடன் அதை எடுக்க அந்த வட்டியில், ஓர் ஆள் வைத்தாவது அதைப் பார்த்துக்கொள்ளச் செய்தால், அன்பு குறைந்துவிடுமா? பெற்ற தகப்பன் குழந்தையைத் தன்னுடன் கூடவே வைத்துத்தானா அழகு பார்க்கின்றான்? அன்பு காட்டுகின்றான்? கொஞ்சி விளையாடுகின்றான்? ஆகையால், குழந்தையை ஆட்கள் மூலம் வளர்க்க வேண்டும். சமையல்—ஆட்கள் மூலம் செய்விக்க வேண்டும். பெண்கள்—ஆண்களைப் போல் உயர்வேலை பார்க்கவேண்டும்; பொம்மைகளாக—நகைமாட்டும் ஸ்டாண்டுகளாகக் கூடாது என்கிறேன்.

ஆண்கள் பார்க்கும் எல்லா வேலைகளையும், தொண்டுகளையும் பெண்கள் பார்த்துச் செய்ய முடியும் என்பேன். ஆனால் நகைப் பைத்தியம்—துணி அலங்காரப் பைத்தியம்—அணிந்து கொண்டு சாயல் நடை நடக்கும் அடிமை, இழிவு, சுயமரியாதை அற்ற தன்மைப் பைத்தியம் ஒழிய வேண்டும்.

நம் பெண்கள், நாட்டுக்கும் சமூகத்துக்கும் பயன்படாமல் அலங்காரப் பொம்மைகளாக ஆனதற்கு, ஆண்களின் கண்களுக்கு விருந்தானதற்குக் காரணம், இந்தப் பாழாய்ப் போன—ஒழுக்கமற்ற சினிமாப் படங்களேயாகும். சினிமாப் பெண்களின் தன்மை என்ன? ஒழுக்கம் என்ன? வாழ்க்கை என்ன? இலட்சியம் என்ன? இவை எல்லாவற்றையும் நம் பெண்கள் கருதாமல்—புகழ், வீரம், பொதுநலத் தொண்டு முதலியவற்றில் கீர்த்தி பெற்ற ஆண்களைப் போல் தாங்களும் ஆகவேண்டுமே என்றில்லாமல்—இப்படி அலங்கரித்துக் கொண்டு திரிவது பெண்கள் சமுதாயத்தின் கீழ்ப்போக்குக்குத்தான் பயன்படும் என்று வருந்துகிறேன்.

'டிசென்சி' (Decency)—சுத்தம்—கண்ணுக்கு வெறுப்பில்லாத ரம்மியம் வேண்டாம் என்று நான் சொல்லுவதாக யாரும் கருதக்கூடாது. அது அவசியம் வேண்டும். ஆனால், அது அதிகம் பணம் கொண்ட, மக்கள் கவனத்தை ஈர்க்கத் தகுந்த 'பேஷன்' அலங்காரத்தால் அல்ல என்றும், சாதாரண குறைந்த தன்மையில் முடியும் என்றும் உணரவேண்டும்.

நம் நாட்டுப் பெண்கள் மேல் நாட்டுப் பெண்களைவிடச் சிறந்த அறிவு, வன்மை, ஊக்கம் உடையவர்களாவார்கள். நம் நாட்டுச் சீதோஷ்ணநிலை அப்படிப்பட்டது. ஒரு 'ருக்குமணி', ஒரு 'விஜயலட்சுமி' என்கின்ற பார்ப்பனப் பெண்தானா பொது வாழ்வில் ஈடுபடத்தக்கவர்களாக, மந்திரிகளாக ஆகவேண்டும்? ஏன் நம்மவர்கள் ஏராளமாக வெளியில்வரக்கூடாது? இவர்களைத் தடுப்பது சீலை, நகை, துணி அலங்காரவேஷம் அல்லாமல் வேறு என்ன?

எனவே, பெற்றோர்கள் தங்கள் பெண்களைப் பெண் என்றே அழையாமல் ஆண் என்றே அழைக்க வேண்டும். பெயர்களும் ஆண்கள் பெயர்களையே இடவேண்டும்! உடைகளும் ஆண்களைப் போல கட்டுவித்தல் வேண்டும். சுலபத்தில், 'இது ஆணா? பெண்ணா' என்று மற்றவர்கள் கண்டுபிடிக்க முடியாத மாதிரியில் தயாரிக்க வேண்டும். பெண்ணும், தன்னை, 'பெண் இனம்' என்று கருத இடமும் எண்ணமும் உண்டாகும் படியாக நடக்கவேகூடாது. ஒவ்வொரு பெண்ணும், 'நமக்கும் ஆணுக்கும் ஏன் பேதம்? ஏன் நிபந்தனை? ஏன் உயர்வு தாழ்வு?' என்ற எண்ணம் கொள்ள வேண்டும். ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், நம் பெண்கள் வெறும் போகப் பொருளாக ஆகப்படாது. அவர்கள் புது உலகைச் சித்தரிக்க வேண்டும் என்பதுதான் என் கருத்து.

[திருப்பத்தூரில் 15-9-1946-ல் சொற்பொழிவு-'குடிஅரசு' 21-9-1946]

## 8. இளம் வயது விவாக விலக்கு மசோதா

மக்கள் இளம் வயதில்—அதாவது தக்க வயதும், அறிவும், உணர்ச்சியும் இல்லாத காலத்தில்—விவாகம் செய்யப்பட்டு வருவதால், மக்கள் சமூக வளர்ச்சிக்கும் உரத்திற்கும் கேடாயிருந்து வருகிறது என்கின்ற உண்மையை நமது வாழ்வில் தினமும் அனுபவத்தில் கண்டு வருவதோடு, அவற்றைத் தடுக்கவேண்டுமென்பதாகவும் முயற்சி எடுத்து வருகின்றோம்.

இதைப்பற்றிப் பல சமூக மகாநாடுகளிலும், பல சீர்திருத்த மகாநாடுகளிலும் பேசி தீர்மானங்களும் செய்து வந்திருக்கின்றோம். ஆனால், அதை அனுசரித்து அது அமுலில் வரத்தக்க ஏற்பாடுகள் ஏதாவது செய்ய ஆரம்பித்தால், உடனே அங்கு மதம் வந்து குறுக்கே விழுந்து, அம் முயற்சிகளை அழிப்பது வழக்கமாகவே இருந்து வந்திருக்கின்றதும் நாம் அறிவோம். இதன் காரணமாகவே, பெரிதும் நாம் மனித இயற்கைக்கு விரோதமான மதங்களும் கண்மூடிக் கொள்கைகளும் மண்மூடிப்போக வேண்டுமென்று முயற்சித்து வருகின்றோம். இம் முயற்சிக்கு யார் எதிரிடையாக இருந்தபோதிலும் நாம் ஒரு சிறிதும் இலட்

சியம் செய்யாமல் இடையூறான மதங்களையும் அதற்கு ஆதாரமான சாமிகளையும்கூட ஒழித்தாக வேண்டும் என்றே சொல்லுகின்றோம்.

சமீப காலத்தில் சென்னை சட்டசபையில் இது விஷயமாய் சட்டம் செய்வதைப்பற்றி வாதம் நடைபெற்ற சமயத்தில், பார்ப்பனரல்லாதார் கட்சியைச் சேர்ந்த மாஜி மந்திரி சர். ஏ. பி. பாத்ரோ அவர்கள் சற்று மாறுதலாய்ப் பேசியதற்காக அவரை, 'பார்ப்பனரல்லாதார் கட்சி ஸ்தானத்தை இராஜிநாமா கொடுத்துவிட்டுப் பார்ப்பனர் கட்சிக்குப் போய்விட வேண்டும்' என்றுகூட எழுதியிருந்தோம். அவரை இனி 'பார்ப்பனரல்லாதார் கட்சியைச் சேர்ந்தவர்' என்று சொல்வது பார்ப்பனரல்லாதார் சமூகத்திற்கே அவமானம் என்றுகூட எழுதி இருந்தது வாசகர்களுக்குத் தெரியும்.

இந்நிலையில் சென்ற வாரம் இந்திய சட்டசபையில் இம் மசோதா விவாதத்திற்கு வந்தபோது தமிழ்நாட்டுப் பார்ப்பனர்கள் பெரிதும் இம் மசோதாவிற்கு விரோதமாய்ப் பேசியிருப்பதாகவும், பலர் தனி விண்ணப்பம் கொடுத்திருப்பதாகவும், அதில் சில முகமதிய அங்கத்தவர்களும் கையொப்பம் இட்டிருப்பதாகவும் தெரிய வருவதுடன், பல சங்கராச்சாரிகளும், சாஸ்திரிகளும் 'இராம ராஜ்யம்' நடத்தும் மகாராஜாக்களும் இம் மசோதாவிற்கு விரோதமாய் அரசப் பிரதிநிதியிடம் தூது போனதாகவும் தெரியவருகின்றது.

இந்த வருணாசிரமக்காரரோடு சில முகமதியர்களும் சேர்ந்துகொண்டதானது, அச் சமூகத்திற்கே அவமானத்தை விளைவித்த காரியமென்பதோடு, மனித சமூக உரிமைக்கே கேடுவிளைவித்ததாகுமென்றே கருதுகிறோம். அவர்களைப்பற்றிய மற்ற விஷயங்களையும், அதில் இவர்கள் பார்ப்பனர்களுக்கு அடிமையாய் இருந்து வாழவேண்டிய அவசியத்தில் இருக்கிற விஷயங்களையும் வெளிப்படுத்தவும் அவர்களைக் கண்டிக்கவும் ஆன காரியங்களை அச் சமூகத் தலைவர்களுக்கும் அச் சமூகப் பத்திரிக்கைகளுக்குமே விட்டுவிட்டு, நமது பிரதிநிதி என்னும் உரிமையின் பேரால் நடந்துகொண்டவர்களைப்பற்றி சற்று விசாரிப் போம்.

இது விஷயமாய் இந்திய சட்டசபையில் நடந்த முழு விவரத்தையும் எழுத நமக்குப் போதிய இடமில்லாவிட்டாலும், அம் மசோதாவிற்கு விரோதமாய்ப் பேசிய தமிழ்நாட்டுப் பிரதிநிதியும், இந்துமத வருணாசிரமப் பிரதிநிதியும் ஆகிய எம். கே. ஆச்சாரியார் அவர்களின் போக்கைச் சற்று கவனிப்போம்.

திரு. ஆச்சாரியார் அவர்கள் இச் சட்டத்தை எதிர்த்துப் பேசுகையில், 'பாலிய விவாக மில்லாவிட்டால் உண்மையான கற்பு என்பது சாத்தியமில்லை' என்றும், 'பெண்களின் வாழ்க்கை நாசமடைந்துவிடும்' என்றும், 'குடும்ப வாழ்க்கை துக்கமயமாகி சதா ஆபத்திற்குள்ளாகி இருக்கும்' என்றும், 'புருஷர்களுக்குச் சிறைத் தண்டனை அளித்துவிடுவதால் பெண்கள் நடத்தையும் அதிகக் கேவலமாக மாறிவிடும்' என்றும், 'பாலிய விவாகம் இருந்தாலொழிய வாழ்க்கையில் உண்மையான ஒழுக்கம் ஏற்படுவது அசாத்தியம்' என்றும் பேசி இருக்கின்றதாகத் தெரியவருகிறது. இவைகள் 'சுதேசமித்தின், தமிழ்நாடு' பத்திரிகைகளில் காணப்படுகின்றதுடன் 'சுதேசமித்திரன்' நிருபரும் திரு. ஆச்சாரியாரை ஆதரித்தும் புகழ்ந்தும் எழுதி இருக்கின்றார்.

பாலிய விவாக மில்லாவிட்டால் பெண்கள் கற்பு கெட்டுப்போகும் என்று சொல்வதும், வாழ்க்கையில் துக்கம் ஏற்படும் என்று சொல்வதும் எவ்வளவு மனந்துணிந்து சொன்ன அயோக்கியத்தனமான வார்த்தைகளாகும் என்பதை வாசகர்கள்தான் யோசித்துப் பார்க்க வேண்டும். இது பார்ப்பனர்களுக்காக என்றோ, அல்லது அய்யங்கார் கூட்டத்திற்காக என்றோ திருவாளர் ஆச்சாரியார் பேசியிருப்பாரானால், நமக்கு அதைப்பற்றி அவ்வளவு கவலை இல்லை. ஆனால், நம் எல்லோருக்குமே பிரதிநிதி என்கின்ற முறையில் பேசி இருப்பதால் நாம் அதைக் கண்டிக்காமல் இருக்க முடியவில்லை. நம்மில் அனேகர்கள்

இதுவரை பெண்களை சுமார் இருபது வயதுவரைகூட வைத்திருந்து விவாகம் செய்து கொடுத்திருக்கின்றார்கள் என்பதும், இப்போதுதான் வரவர பார்ப்பனீயத்திற்கு அடிமைப் பட்டு பார்ப்பனர்களைப் பார்த்து காப்பியடித்து, தாங்களும் உயர்ந்த சாதிக்காரர் என மதிக்கப்படவேண்டும் என்கின்ற ஆசையில், பலர் சிறு பிராயத்திலேயே கலியாணம் செய்து விடுகின்றார்கள் என்பதும் யாவரும் அறிந்ததே. திரு. ஆச்சாரியாரின் வாக்குமூலப் படிக்குப் பார்த்தால், பக்குவமான பின்னோ, பக்குவமாகி 2 வருடம், 4 வருடம் பொறுத்தோ விவாகம் செய்யப்பட்ட பெண்கள் கற்பில்லாமல் விபச்சாரிகளான பிறகுதான் விவாகம் செய்துகொடுக்கப்பட்டிருப்பதாக ஏற்படுகிறது. திரு. ஆச்சாரியார் ஒரு சமயம் தாம் மற்ற வர்களைப்பற்றி அப்படிச் சொல்லவில்லையென்றும், தம்முடைய சமூகத்தைப்பற்றித்தான் தாம் சொன்னதாகவும் சொல்வாரானால், தம் சமூகத்துப் பெண்களும் பக்குவமடைந்து விட்டால் அவர்கள் கலியாணமில்லாமல் கற்புடனிருக்க முடியாதென்று கருதிச் சொன்னவ ராகவே நினைக்க வேண்டியிருக்கிறது. இதனால் அவர் எப்படியும் பெண்கள் சமூகத்தையே இழிவுபடுத்தியதாகத்தான் கொள்ளவேண்டியிருக்கிறது.

திரு. ஆச்சாரியார் இப்படிச் சொல்ல நேர்ந்தது அந்தப் பார்ப்பனீயத் தன்மையே ஒழிய வேறல்ல. ஏனெனில் பார்ப்பனீயத்தன்மையான இந்து மதம் என்பதில், 'பெண்கள் காவல் இல்லாமல் கற்புடனிருக்க முடியாது' என்றே சொல்லப்படுகிறது. உதாரணமாக, இந்துக்கள் என்பவர்கள் கலியாண காலத்தில் கலியாணப் பெண்களுக்கு கற்புக்கு உதாரண மாகக் காட்டி உறுதிவாங்க வழங்கும் மகா பதிவிரதையென்று சொல்லப்படும் அருந்ததி என்னும் 'உத்தம ஸ்திரி'யின் யோக்கியதையைப் பார்த்தால், மற்ற பெண்களுடைய நிலைமை தானாகவே விளங்கும். அதாவது, ஒரு சத்தியம் சொல்லவேண்டிய சந்தர்ப்பத்தில் அருந்ததி சொல்வதாவது :—

'ஸ்திரீகளுக்கு மறைவான இடமும், புருஷர்களின் சந்திப்பும் கிடைக்கும் வரையில் தான், ஸ்திரீகள் பதிவிரதைகளாக இருக்க முடியுமாதலால், பெண்களை, வெகு ஜாக்கிரதை யாகக் காவல்காக்க வேண்டும்' என்பதாகத் தேவர்களிடத்தில் சொல்லி சத்தியத்தைக் காப் பாற்றினதாக இந்துமதம்—அதிலும் சைவர்களுக்கு ஆதாரமான, 'மகா சிவபுராணம்' சொல்லுகிறது. அதற்கு ஆதாரமாக மற்றொரு இடத்திலும் அதாவது துரோபதையும் அருந்ததி சொன்னதையேதான் சொல்லி, சத்தியத்தை நிரூபித்ததாகவும் சொல்லப்பட்டிருக் கிறது.

அதாவது, 'ஆண்கள் இல்லாதிருந்தாலொழிய, பெண்கள் கற்புடையவர்களாக இருக்க முடியாது' என்பதாகப் பாரதத்தில் இதைப்பற்றிச் சொல்லும்போது—'வசிஷ்டர் நல்லற மனைவியை அனையாள்'—அதாவது அருந்ததிக் கொப்பானவள் சொன்னாள் என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்தக் கொள்கைகளையுடைய இந்துமதப் பிரதிநிதியிடம்—அதிலும் வருணாசிரம தர்மியிடம் வேறு என்ன எதிர்பார்க்கமுடியும் ? இதே யோக்கியர்தான் மூன்று வருடத்திற்கு முன் திருச்சியில் கூடிய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், 'ஒரு பார்ப்பனரல்லாத பைய னுடன் ஒரு பார்ப்பனப் பையன் ஒரு வேளை சாப்பிட்டால் ஒரு மாதம் பட்டினியிருப்பேன்' என்று சொன்னவர்—இப்படிச் சொன்ன பிறகுதான் செங்கற்பட்டு, வட ஆர்க்காடு, தென்னார்க்காடு ஜில்லாக்களின் பிரதிநிதியாக அந்த ஜில்லா வாசிகள் அவரை இந்திய சட்டசபைக்கு அனுப்பினார்கள். அவருடைய தேர்தலுக்காகத்தான் பார்ப்பனரல்லாத தேசியவாதிகள், காங்கிரஸ்காரர்கள் என்பவர்கள் தொண்டைகிழியப் பிரச்சாரம் செய் தார்கள்.

எனவே, இதிலிருந்தே நம் நாட்டு வோட்டர்களின் யோக்கியதையையும், தேசிய வாதிகளின் யோக்கியதைகளையும் ஒருவாறு தெரிந்துகொள்ளலாம்.

தவிர, இப்படிப்பட்ட ஆசாமிகளையும் இவர்களுக்கு ஆதாரமாயுள்ள மதங்களையும் இவர்களை இந்திய சட்டசபைக்கு அனுப்பிய காங்கிரசையும் காப்பாற்றிக்கொண்டிருக்கும் யோக்கியர்கள்தாம் மிஸ். மேயோவைக் குற்றம் சொல்லிக்கொண்டு திரிகிறார்கள் என்பதை வாசகர்களே தெரிந்துகொள்வார்களாக.

நிற்க, திரு. ஆச்சாரியார் சொன்ன மற்றொரு விஷயத்தைப்பற்றிக் கவனிப்போம். அதாவது, 'பாலிய விவாகம் செய்யாவிட்டால் குடும்ப வாழ்க்கையில் துக்கம் ஏற்படும்' என்கிறார்.

என்ன துக்கம் ஏற்படுமென்பது நமக்கு விளங்கவில்லை. அதைப்பற்றி விவரிக்க நமக்கு வெட்கமாயிருக்கிறது. அன்றியும், புருஷர்கள் சிறைக்குப் போய்விட்டால் பெண்களின் நடத்தை கேவலமாகிவிடும் என்றும் சொல்லுகிறார்.

இவை எவ்வளவு தூரம் பெண்களை இழிவுபடுத்துவதாகின்றது? இந்துமதமும் வேதமும், புராணமும், வைதீகமும், வருணாசிரமமும் பெண்களை அடிமைப்படுத்துவதையும், கேவலப்படுத்துவதையும் அஸ்திவாரமாகக் கொண்டனவாதலால், இம்மாதிரியான வார்த்தைகள் நமது இந்திய சட்டசபைப் பிரதிநிதிகளிடமிருந்து வருவது ஒரு அதிசயமல்ல.

உதாரணமாக, கடவுளுடைய அவதாரமென்று சொல்லப்படும் இராமனே, கடவுள் பெண்சாதியின் அவதாரம் என்று சொல்லப்படும் சீதையின் கற்பில் சந்தேகப்பட்டு, அவள் நெருப்பில் பொசுக்கப்படவும் பூமியில் புதைக்கப்படவும் செய்ததிலிருந்தும், அந்த சீதையும் ஒரு சமயத்தில் புருஷனை விட்டுப் பிரியும்போது, 'இதோ பார்! நான் இப்பொழுதே கர்ப்பமாகியிருக்கிறேன்' என்றும், 'இது புருஷனிடத்திலேயே உண்டான கர்ப்பம்' என்றும் வயிற்றைத் திறந்து காட்டியதோடு, தான் கொஞ்சகாலம் புருஷனை விட்டு நீங்கி இருக்க நேருவதாலேயே தான் விபச்சாரத்தனம் செய்து கர்ப்பந்தரித்துவிட்டதாகத் தன் புருஷன் கருதக்கூடாது என்றும் கேட்டுக்கொண்டிருப்பதிலிருந்தும் (வால்மீகி ராமாயணம்) திரு. ஆச்சாரியார், மற்ற பெண்கள் புருஷனைவிட்டு நீங்கி இருந்தால் ஒழுக்கம் கெட்டுவிடுவார்கள் என்று சொல்வதில் ஆச்சரியமொன்றுமில்லை.

ஆனால், இவைகள் மனிதத் தன்மைக்கு ஏற்றதான வார்த்தைகளாகுமா என்றும், நமது பெண் சகோதரிகளுக்கு நியாயம் செய்ததாகுமா என்றும் கேட்கின்றோம்.

இதைக் கேட்ட அன்னிய நாட்டார்கள் என்ன நினைப்பார்கள்?

எனவே, நமது மக்களின் முன்னேற்றத்திற்கும் மனிதத் தன்மைக்கும் ஏற்றதான சீர்திருத்தங்கள் செய்யப் புறப்படும்போதெல்லாம், இப்படி ஒரு கூட்டத்தார் இருந்துகொண்டு, நம்மை இழிவுபடுத்தி முட்டுக்கட்டை போட்டுக்கொண்டு வருவதை இனி எத்தனை காலத்திற்குத்தான் நாம் பொறுத்துக்கொண்டிருப்பது என்பது நமக்கு விளங்கவில்லை.

இவை இப்படியிருக்க, இவ்விஷயங்களில் ஒரு சிறிதும் கவலை எடுத்துக்கொள்ளாமல், தேசத்தின் பேராலும், சாமியின் பேராலும், சமயத்தின் பேராலும், சமயாச்சாரியாரின் பேராலும், புராணங்களின் பேராலும் உலகத்திற்கு நன்மையைச் செய்தவர்களைப்போல் வேஷம் போட்டுக்கொண்டு மக்களை ஏமாற்றி வயிறுவளர்த்து வருகிறவர்களைப் பார்க்கும் போது—திரு. ஆச்சாரியாரைவிட இக்கூட்டத்தார்களே அதிகமான அயோக்கியர்களும், கொடுமைக்காரர்களும், மனிதவர்க்கத்தின் முன்னேற்றத்திற்கு எதிரிகளுமாவார்கள் என்று தோன்றுகிறது.

ஆதலால், பொதுமக்கள் இதிலிருந்தாவது அறிவு பெற்று 'தேசிய' மென்றும், சைமன் பகிஷ்காரமென்றும், சமயப் பாதுகாப்பு என்றும், தேசியத் திட்டமென்றும், முழு

சுதந்திரமென்றும் சொல்லிக்கொண்டு திரியும் சுயநல வீணர்களின் வலையில் சிக்கி ஏமாந்து போகாமல், உண்மையான சீர்திருத்தத்திற்கும் சுயமரியாதைக்கும் ஏற்ற கொள்கைகளில் ஈடுபட்டு அரசியலையும் சமூக இயலையும் கைப்பற்றி, அதைத் தக்க வழியில் திருப்ப வேண்டியது அவசியமென்று மற்றொரு முறை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

['குடிஅரசு'-தலையங்கம்—23-9-1928]

## 9. விதவா விவாகம்

பழுத்த ஞானமும் நீடிய அனுபவமும் கொண்ட அறிஞர் திரிசிரபுரம் திருவாளர் சி. பி. ராஜகோபால் நாயுடு அவர்கள் தாம் ஆக்கிய, 'விதவா' விவாக விளக்கம் என்னும் புத்தக அச்சுப் பிரதியை அனுப்பி, எனது அபிப்பிராயத்தை எழுதுமாறு எழுதியிருந்தார்.

விதவா விவாகத்தைப்பற்றி நான் தீவிர கருத்துக் கொண்டவனேயாகிலும் போதிய அமயமும் அவகாசமும் வாய்த்திலாமையான், அஃதினை ஊன்றிப் படித்து விரைவினில் எனது கருத்தினை வெளியிட இயலாது போயிற்று. பிறகு அப் புத்தகம் முடிவு பெற்று புத்தக ரூபமாய் கிடைக்கப் பெற்றேன். அஃதினை அமைதியுடன் படித்து எனக்குத் தோன்றிய சில கருத்துக்களை எழுத முற்பட்டேன்.

இந்திய நாட்டின் ஆளுகை உரிமை இந்தியருக்கே கிடைக்கவேண்டுமென அரசியல் சீர்திருத்தக்காரர்களும், இந்திய மக்களுக்குள்ளிருக்கும் வகுப்புப் பிரிவினையும், சாதி வேற்றுமையும் தொலையவேண்டுமென்பதாக சமூக சீர்திருத்தக்காரர்களும் போராடுகிறார் களேயன்றி, பெண் மக்களுள் ஒரு பகுதியார் அழிந்துவருவதைப் பாராமுகமாகவே பார்த்து வருகின்றனர்.

சிருஷ்டிகர்த்தா மக்கட் படைப்பிலடங்கிய ஆண் பெண்களை ஏற்றத் தாழ்வுடன் படைக்கவில்லை என்பதை அறிவுடைய உலகம் ஏற்கும். அங்க அமைப்பிலன்றி அறிவின் பெருக்கிலோ, வீரத்தின் மாண்பிலோ ஆண் பெண்களுக்கு ஏற்றத்தாழ்வான வித்தியாசம் காண இயலுமோ? இயலவே இயலாது. ஆடவரிலும் சரி, பெண்டிரிலும் சரி, முறையே அறிவாளிகளும் ஆண்மையுடையோரும்; அறிவிலிகளும், பேடிகளும் உள்ளனர். இவ் வாறிருக்க, திமிர்பிடித்த இந்த ஆண் உலகம் சாந்தகுல பூஷணமான பெண்ணுலகத்தைத் தாழ்த்தி, அடிமைப்படுத்திவருதல் முறையும் தர்மமுமான செயலாகாது.

இந்துமத ஆண் உலகம் தங்களது பெண்ணுலகத்தின் மாட்டு பூண்டொழுகும் கொடுமைச் செயல்கள் பலவற்றில் இங்கு நாம் விதவைகளைப்பற்றி மட்டும் கவனிக்க வேண்டியுள்ளது.

உலக இன்பத்தை நுகர்ந்து அலுத்துப்போயிருக்கும் பழுத்த கிழவனாயினும், தன் மனைவியார் இறந்துவிட்டவுடன் மறுமணம் புரிய முயலுகிறான். அதுவும் வனப்பு மிகுந்த, எழில் பொருந்திய இளஞ் சகோதரிகளையே தன் மனத்திற்குத் தேர்ந்தெடுக் கிறான். ஆயின், ஒரு பெண்மகள் தன் கொழுநனை இழந்துவிட்டால்—அவள் உலக இன்பத்தையே சுவைத்தறியாதவளாயிருப்பினும்—தன் ஆயுட்காலம் முற்றும் அந்தோ, தன் இயற்கைக் கட்புலனை இறுக மூடி, மனம் நொந்து, வருந்தி மடிய நிபந்தனை ஏற்பட்டு விடுகிறது. என்னே! அநியாயம்!

இந்து சகோதரர்கள் இவ்வாறு தங்கள் சமூகம் அநியாயமாய் அழிந்துவருவதைப் பார்த்துக்கொண்டு வருவது பெரும் பாவகரமான செயலாகும்.

முன்னாளில் தன் கணவனைப் பறிகொடுத்த மனைவியும் உடன்கட்டை ஏறுதல் வழக்கமாயிருந்தது. இக்கொடிய வழக்கத்தை அக்காலத்தில் ஆங்கிலோ இந்திய வியாபாரக்



தமையனார் ஈ. வெ. கிருஷ்ணசாமி, தாயார் சின்னத்தாயம்மை,
தங்கை S. R. கண்ணம்மாள் ஆகியோருடன் பெரியார் ஈ. வெ. ரா. (1935 ல்)

கூட்டத்தின் தலைவராயிருந்த வாரன்-ஹேஸ்டிங்ஸும், சுவாமி தயானந்த சரஸ்வதி போன்ற இந்திய நாட்டு அறிவாளிகளும் எடுத்துக்கொண்ட பெருமுயற்சியால் நிறுத்தப் பட்டது. உடன்கட்டை ஏறுதலை நிறுத்துவதற்காகப் போராடிய அக் காலத்திலும்—ஆச்சாரமே அழிந்துபோவதாகவும், மதமே கெட்டுப்போவதாகவும் பெருங் கிளர்ச்சி ஏற்பட்டது. ஆனால், நாளடைவில் அக் கூக்குரலும் அடங்கி, 'சககமனம்' என்னும் உடன்கட்டை ஏறுதலான கொலை வழக்கமும் அறவே மறைந்தது.

இதுபோழ்து நம் நாட்டில் விதவைகள் மறுமணம் செய்துகொள்ளலாகாதென்னும் வழக்கமிருப்பது பாரபட்சம் நிரம்பிய கொடுமையான செயலாகும். தன் மனைவியை இழந்த கிழவன் மறுமணம் செய்துகொள்ளலாமென்றும், தன் கணவனை இழந்த—மகப்பேறு பெறாத இளமங்கை மறுமணம் செய்துகொள்ளலாகாதென்றும் கூறுவது நடுநிலைமை கொண்ட அறச் செயலாகாது.

விதவைகள் மறுமணம் செய்துகொள்ளும் வழக்கம் கற்புக்குப் பங்கம் விளைவிப்பது ஆகும் எனக் கூறினால் அது பொருந்தாது. விதவைகளை மறுமணம் செய்விக்காதிருத்தலி னாலேயே அவர்கள் கற்பழிந்து மாய்கின்றனர். காமச்சுவை கருதும் இளம் கைம்பெண்கள் படிற்றொழுக்கத்தில் வீழ்ந்து, அதனால் கருப்பந்தரித்து இரண்டோர் திங்களுள் 'சிசு ஹத்தி' தோஷத்திற்கு உள்ளாகின்றார்கள். இப் பாவம் யாரைச் சாரும்? விதவைகளை மறுமணம் செய்துகொள்ளல் ஆகாதென்று கட்டாயப்படுத்திவரும் பெற்றோர் களையே சாரும். மறுமணம் விரும்பாத பெண்களைத் தவிர்த்து, ஏனைய கைம் பெண் களுக்கு மறுமணம் செய்வித்தலே நன்று.

விதவைகளின் கலியாணத்தைப்பற்றி இவ்வாறு எழுதும் நான், எழுத்தளவோடும் சொல்லளவோடும் ஆதரிக்கின்றேனா, அன்றிச் செய்கையிலும் ஆதரித்துள்ளேனா என்ற அய்யம் அன்பர்களுக்குத் தோன்றலாம். இதன் பொருட்டேனும் எனது கருத்தைப் பிரதி பலிக்கும் செய்கையைக் கூற விரும்புகிறேன்.

நான் கர்நாடக பலிஜவார் வகுப்பைச் சேர்ந்தவன். என் வகுப்பின் பெண் மக்கள் முக்காடுடன்—'கோஷாவாக' இருக்கவேண்டியவர்கள் எனவும், விதவா விவாகத்தை அனுமதிக்கப்படாத வகுப்பினரெனவும் வழங்கப்படுபவர்கள். நான் பிறந்த குடும்பமோ அளவுக்கு மிஞ்சிய ஆசாரத்தையும், வைணவ சம்பிரதாயத்தையும் கடுமையாய் ஆதரிக்கும் குடும்பம். இப்படி இருந்தபோதிலும், என்னுடைய 7-வது வயதிலிருந்தே மக்களில் உயர்வு-தாழ்வு கற்பித்தலையும், ஒருவர் தொட்டதை மற்றொருவர் சாப்பிடலாகாதெனச் சொல்வதையும் நான் பரிகாசம் செய்துவந்ததோடு, யாரையும் தொடுவதற்கும், எவர் தொட்டதையும் சாப்பிடுவதற்கும் நான் சிறிதும் பின்வாங்கியதே கிடையாது.

என்னை, இளம் போதிலிருந்தே எங்கள் வீட்டு ஆக்குபுரைக்குள் செல்ல அனுமதிப்ப தில்லை. நான் தொட்ட செம்பை என் தகப்பனார் தவிர மற்றையோர் கழுவாமல் உபயோகப்படுத்தமாட்டார்கள். எங்கள் குடும்ப ஆசார அனுஷ்டானங்களைப் பார்த்துப் பொறாமைப்படுபவர்கள்—என்னைப் பார்த்து சாந்தியடைந்து விடுவார்கள். 'நாயக்கருக்கு அவர்கள் ஆச்சாரத்திற்கு ஏற்றாற்போல்தான்—ஒரு பிள்ளையென்றாலும் பிள்ளை, நவமணியாய்ப் பிறந்திருக்கிறது!' என்று சொல்லுவார்கள். என்னுடைய 16-வது வயதிலேயே, பெண் மக்களைத் தனித்த முறையில் பழக்குவதும்—அவர்களுக்கென சில கட்டுத்திட்டங்களை ஏற்பாடு செய்வதையும் ஆண் மக்களின் அகம்பாவம் என்று நினைத்து வந்தேன்.

இவ்வாறாக, என் தங்கை தன் இளம் வயதிலேயே ஒரு பெண் குழந்தையையும், ஒரு ஆண் குழந்தையையும் விடுத்து விண்ணுற்றாள். அவற்றுள் அம்மாயி என்று அழைக்கப் பெறும் அப்பெண் குழந்தைக்கு அதன் 10-வது வயதில்—சிறந்த செல்வாக்கோடு ஒரு

செல்லக் கலியாணம் செய்துவைத்தோம். கலியாணம் செய்த 60-ம் நாள் அப்பெண்ணின் கணவன் என்னும் 13 வயதுள்ள சிறு பையன், பகல் 2 மணிக்கு 'விஷபேதி'யால் விண்ணுற்றான். அவன் இறந்தான் என்ற செய்தியைக் கேட்டதும், அப்பெண்குழந்தை என்னிடம் ஓடிவந்து, 'மாமா! எனக்குக் கலியாணம் செய்து வை என்று நான் உன்னைக் கேட்டேனா? இப்படி என் தலையில் கல்லைப் போட்டாயே' என்று 'ஓ'வென்று அலறிய சத்தத்தோடு என் காலடியில் அதன் மண்டையில் காயமுண்டாகும்படி திடீரென்று விழுந்தது. துக்கம் விசாரிப்பதற்காக அங்கு வந்திருந்த ஆண் பெண் உள்பட சுமார் 600, 700 பேர்கள் அக் குழந்தையையும், என்னையும் பார்த்தவண்ணமாய்க் கண்களிலிருந்து தாரைதாரையாக நீர் வடித்தனர். எனக்கும் அடக்கவொண்ணா அழுகை வந்துவிட்டது. ஆனால், கீழே கிடந்த அந்தக் குழந்தையை நான் கையைப்பிடித்துத் தூக்கும்போதே, மறுபடியும் அதற்குக் கலியாணம் செய்துவிடுவது என்கின்ற உறுதியுடனேயே தூக்கினேன்.

பிறகு, அந்தப் பெண் பக்குவமடைந்த ஒரு வருடத்திற்குப்பின், அதற்குக் கலியாணம் செய்ய நானும் எனது மைத்துனரும் முயற்சி செய்தோம். இச்செய்தி எனது பெற்றோருக்கும் மற்றோருக்கும் எட்டவே, அவர்கள் இதைத் தங்கள் வகுப்புக்கு ஒரு பெரிய ஆபத்து வந்துவிட்டதுபோலக் கருதி, பெரிதும் கவலைக்குள்ளானவர்களாகி, நாங்கள் பார்த்துவைத்திருந்த இரண்டொரு மாப்பிள்ளைகளையும் கலைத்தார்கள். முடிவில் எனது மைத்துனரின் இரண்டாந்தாரம் மைத்துனரைப் பிடித்து சரி செய்து, எவரும் அறியா வண்ணம் பெண்ணையும், மாப்பிள்ளையையும் சிதம்பரத்திற்கு அழைத்துச் சென்று அங்கு கோயிலில் கலியாணம் செய்வித்து ஊருக்குக் கூட்டி வந்தனர். ஆனால், நான் சிதம்பரத் திற்குப் போகாமல் ஊரிலேயே இருக்கவேண்டியதாயிற்று. ஏனெனில், அவர்கள் போயுள்ள செய்தியை சுற்றத்தார் அறிந்தால், ஏதாவது மாப்பிள்ளையைத் தடைசெய்து விடுவார்களோ என்கிற பயத்தால், நான் ஊரிலிருந்தால் கலியாணத்திற்காக வெளியூருக்குப் போயிருக்கிறார்களெனச் சந்தேகமிருக்காது என்கிற எண்ணங்கொண்டேயாகும். இக் கலியாணத்தின் பலனாக, இரு மூன்று வருட காலம் பந்துக்களுக்குள் வேற்றுமையும் பிளவும் ஏற்பட்டு, சாதிக் கட்டுப்பாடு இருந்து, பிறகு அனைத்தும் சரிப்பட்டுப்போயின.

பெண்ணும் மாப்பிள்ளையும் ஒத்துவாழ்ந்து ஓர் ஆண் மகவைப் பெற்றனர். ஆனால், துரதிருஷ்டவசமாகக் கொஞ்ச நாளையில் அந்த இரண்டாவது புருஷனும் இறந்து விட்டான். இப்பொழுது தாயும் மகனுமே சேமமாயிருக்கிறார்கள். இன்னமும் எனது வகுப்பில் 13 வயதுக்குக் கீழ்ப்பட்ட விதவைக் குழந்தைகள் சிலர் இருக்கின்றனர். பாவம், அக் குழந்தைகளை அவர்களின் பெற்றோர்கள் தீண்டாதார்போல் கருதி நடத்துவதைத் தினமும் பார்க்கப் பாவமாயிருக்கிறது.

எவ்வளவோ இடருக்குள் அகப்பட்டு அக் கலியாணத்தை முடித்து வைத்தோம். ஆனால், கடைசியில் அந்த இரண்டாவது கணவனும் மரிக்கவே விதவா விவாக விஷயத்தில் தீவிரமாகத் தலையிட வேண்டுமென எனக்கிருந்த கருத்துக்கு பெரிய முட்டுக்கட்டை போட்டதுபோலாயிற்று.

விதவைகளின் விஷயம் நினைவிற்கு வரும்போதும்—நேரில் காண நேரும் போதும்—'உலக இயற்கை, எளியாரை வலியார் அடக்கி ஆண்டு இம்சிப்பதல்லாமல் வேறல்ல' என்றே முடிவு செய்வேன். நமது இந்து சமூகம் எந்தக் காலத்தில் எவருடைய ஆதிக்கத்தில் கட்டப்பட்டதோ, அன்று மதமில்லாமல், முறையில்லாமலிருந்து, இயற்கையாகவே ஏதாவது கட்டுப்பாடுகள் ஏற்பட்டு, அவற்றை வலியவர்கள் தங்கள் தங்கள் சுயநலத் திற்குத் தக்கபடி திருத்திக்கொண்டார்களோ என நினைக்கும்படி இருந்தாலும்—பொதுவாய் விதவைத் தன்மை நிலைத்திருக்கும் காரணத்தினாலேயே இந்து மதமும் இந்து சமூகமும் ஒருகாலத்தில் அடியோடு அழிந்துபோனாலும் போகுமென்பதே எனது முடிவான கருத்து.

அரசியல் என்றும் சமூகவியல் என்றும் ஜனாச்சார சீர்திருத்தவியல் என்றும் பெண் மக்கள் முன்னேற்றமென்றும் சொல்லிக்கொண்டிருக்கும் மக்களில் பெரும்பான்மையோர், இவற்றைத் தங்களது வாழ்விற்கும் கீர்த்திக்கும் சுயநலத்திற்கும் பயன்படுத்திக்கொள்வோராக இருக்கிறார்களே தவிர, உண்மையில் அக் கருத்தைக்கொண்டு உழைப்பவர்கள் அரிதினும் அரிதாகிவிட்டனர் என்று சொல்லுவதை மன்னிக்க வேண்டுகிறேன்.

அன்றியும், இவ்விதத் துறைகளிலும் சீர்திருத்தங்களிலும் பாடுபடுபவர்களாய்க் காணப்படுவோர்களில் பெரும்பாலோர், தாங்கள் செய்வது சரியென்ற தீர்மானம் தங்களுக்கேயில்லாமல் 'உலக மொப்புக்குச்' செய்பவர்களாகவே இருக்கிறார்கள். பெண் மக்கள் முன்னேற்றத்தைப்பற்றிப் பேசுவோர், தங்கள் வீட்டுப் பெண்களைப் படுதாவுக்குள் வைத்துக்கொண்டும்; விதவா விவாகத்தைப்பற்றிப் பேசுவோர்—தங்கள் குடும்பங்களிலுள்ள விதவைகளைக் காவல்போட்டு, விதவைத் தன்மையைக் காப்பாற்றிக் கொண்டும் இருக்கிறார்களே தவிர, உண்மையில் ஒரு சிறிதும் தாங்கள் நடவடிக்கையில் காட்டுவதில்லை. இதன் காரணம் என்னவெனப் பார்க்கும்போது, பெண்மக்கள் என்று நினைக்கும்போதே, அவர்கள் அடிமை; நமக் கடங்கினவர்கள்; கட்டுப்படுத்தி வைக்கப்பட வேண்டியவர்கள் என்கிற உணர்ச்சி ஏற்படுகிறது என்றே நினைக்கிறோம். இதனாலேயே அவர்களை விலங்குகளைப்போல நடத்திவருகிறார்கள். அவர்களுக்குச் சுதந்திரம் கொடுப்பது என்கிற விஷயத்தை நினைக்கும்போது, செய்யக்கூடாத ஒரு பெரிய குற்றமான செய்கையைச் செய்ய நினைக்கிறதுபோலவே தோன்றுகிறது. அதனால், மனித சமூகத்தில் சரி பகுதியான எண்ணிக்கைக்குப் பிறவியிலேயே சுதந்திரம் இல்லை என்பதுதானே இதன் பொருள்? ஆடவருக்குப் பெண்டிரைவிடச் சிறிது வலிமை அதிகமாக ஏற்பட்ட குற்றந்தானே, இம்மாதிரி ஒரு சரி சமமான சமூகத்தைச் சுதந்திரமில்லாமல் அடிமைப் படுத்தும் கொடுமையை அனுஷ்டிக்க வேண்டியதாயிற்று? இந்தத் தத்துவமே வரிசைக் கிரமமாக மேலோங்கி எளியோரை வலியோரால் அடிமையாக்கச் செய்கிறது.

உலகில் மனித வர்க்கத்திற்கு அடிமைத் தத்துவம் ஒழிய வேண்டுமானால் பெண்ணுலகை அடிமையாகக் கருதி நடத்தும் அகம்பாவமும், கொடுமையும் ஒழிய வேண்டும். இது ஒழிந்த நிலையே—சமத்துவம், சுதந்திரம் என்னும் முளைமுளைக்கும் இடம்.

உலகிலேயே மிகப் பெரிய சீர்திருத்தக்காரரான மகாத்மா காந்தியடிகள் இந்து விதவைகளைப்பற்றி, அனேக சந்தர்ப்பங்களில் பேசியும், எழுதியும் வந்திருக்கிறார். அவற்றுள் சென்ற ஆண்டு, 'நவஜீவன்' பத்திரிக்கையில் மகாத்மா எழுதி இருக்கும் விஷயத்தைக் கவனித்தால், விதவைகளின் விடுதலை சம்பந்தமாய் மகாத்மா எவ்வளவு தூரம் உழைக்கிறார் என்பது புலனாகும். அக் கட்டுரையின் ஒரு சில பாகமாவது:—

'பால்ய விதவைகளைக் கட்டாயப்படுத்தி வைத்திருப்பது போன்று—இயற்கைக்கு விரோதமான பொருள் உலகில் வேறொன்றும் இல்லை என்பது எனது திடமான நம்பிக்கை. விதவைத் தன்மை என்பது எவ்விதத்திலும் ஒரு தர்மமாகாது. பலாத்காரத்தினால் அனுஷ்டிக்கச் செய்யும் எவ்விதச் செயலும் அறமாகாது. பலாத்காரத்தினால் நடத்தும் விதவை வாழ்வு பாவமானது. பதினைந்து வயதுள்ள ஒரு பால்ய விதவை தானாகவே விதவை வாழ்வைக் கொண்டிருக்கின்றாள் என்று சொல்லுவது, அவ்விதமாகச் சொல்லுவோரின் கொடூர சுபாவத்தையும், அறியாமையையுமே விளக்குகிறது.'

என்று எழுதிவிட்டு, விதவைகள் மறுமணம் செய்துகொள்ள வேண்டுமென்பதாகத் தன் உள்ளன்போடும் ஆவேசக் கிளர்ச்சியோடும் மகாத்மா கூறிய மணிவாசகங்களில் ஒரு சிலவற்றைக் கவனிப்போம்.

"………அமைதியுடன் தங்களுடைய துக்கத்தைச் சகித்துக்கொண்டு, தங்களுடைய உண்மையான கருத்தைத் தங்களின் பெற்றோர், அல்லது போஷகர்களான ஸ்திரீ, புருஷர்

களிடம் தைரியமாய்ச் சொல்லிவிடவேண்டும். அவர்கள் அதைக் கவனிக்காவிட்டால் தாங்களே, ஒரு யோக்கியமான புருஷன் கிடைத்தால் உடனே விவாகம் செய்துகொள்ளட்டும். அதுவரையில் யோக்கியமான புருஷனை அடைய தமயந்தி, சாவித்திரி முதலியவர்கள்போல் தவம் செய்வதே ஏற்ற வழியாகும்.........விதவைகளின் போஷகர்கள் இவற்றைச் சரிவரக் கவனியாவிடின், பின்னால் பச்சாதாபப்படுவார்கள். ஏனெனில், நான் ஒவ்வோரிடத்திலும் துராசாரமே பார்த்துக்கொண்டு வருகிறேன். விதவைகளைப் பலாத்காரமாய்த் தடுத்து, விதவைத்தன்மைகளை அனுஷ்டிக்கச் செய்வதால் விதவைகளுக்காவது, குடும்பத்திற்காவது அல்லது விதவா தர்மத்திற்காவது மேன்மை உண்டாகவே மாட்டாது. இம்மூன்று தத்துவங்களும் நசித்து வருவதை என் கண்களினாலேயே பார்த்துக்கொண்டிருக்கிறேன். பால்ய விதவைகளே! நீங்களும் உங்களைப் பலவந்தப்படுத்தி விதவைகளாக வைத்திருக்கும் ஸ்திரீ புருஷ வர்க்கங்களும் இதை அறியுமாக!' இவ்வாறாக 1921-ம் வருடத்திய ஜனசங்கியைப்படி இந்து கைம்பெண்களின் தொகையினை நோக்குகையில் அய்யகோ! என் நெஞ்சு துடிக்கிறது!

| | | |
|---|---|---|
| 1 வயதுள்ள விதவைகள் | ... | 597 |
| 1 முதல் 2 வயதுள்ள விதவைகள் | ... | 494 |
| 2 முதல் 3 வயதுள்ள விதவைகள் | ... | 1,257 |
| 3 முதல் 4 வயதுள்ள விதவைகள் | ... | 2,837 |
| 4 முதல் 5 வயதுள்ள விதவைகள் | ... | 6,707 |
| ஆக மொத்தம் | ... | 11,892 |
| 5 முதல் 10 வயதுள்ள விதவைகள் | ... | 85,037 |
| 10 முதல் 15 வயதுள்ள விதவைகள் | ... | 2,32,147 |
| 15 முதல் 20 வயதுள்ள விதவைகள் | ... | 3,96,172 |
| 20 முதல் 25 வயதுள்ள விதவைகள் | ... | 7,42,820 |
| 25 முதல் 30 வயதுள்ள விதவைகள் | ... | 11,63,720 |
| ஆக மொத்தம் விதவைகள் | ... | 26,31,788 |

அல்லாமலும், இத்தகைய விதவைத் தன்மையானது, பிரஜா உற்பத்திக்குப் பேரிடராயிருக்கிறது. நமது இந்து மதத்திலிருந்து ஏவரேனும் இரண்டொருவர் பிற மதத்திற்கு மாற்றப்பட்டால் நம் மக்களுக்கு எவ்வளவோ துன்பம் நேரிட்டு விட்டதாகக் கருதிப் பரிதாப்படுகிறார்கள். இதன் காரணம், நமது மதத்தினரில் இருவர் குறைந்து விட்டதால் இந்து சமூகத்திற்குக் கஷ்டமும் நஷ்டமும் ஏற்பட்டு விட்டது என்பதனாலேயன்றோ! அந்த இரண்டு நபர்களுக்காக இவ்வளவு துக்கமும், துயரமும் ஏற்படுமானால், தற்காலம் நமது இந்திய நாட்டிலுள்ள இருபத்தாறு இலட்சத்து முப்பத்தோராயிரத்து எழுநூற்று எண்பத்தெட்டு விதவைகளும் கலியாணம் செய்து கொண்டு இல்லற வாழ்க்கை நடத்துவதாயிருந்தால் எத்துணைக் குழந்தைகள் பெறக்கூடும்! சராசரி மொத்தத்தில் மூன்றில் இரண்டு மடங்கு பெண்கள் 2 வருடத்திற்கு 1 குழந்தை வீதம் பெறுவதாக வைத்துக்கொண்டாலும்—தடவை ஒன்றுக்கு 87,726 குழந்தைகள் வீதம் வருடம் ஒன்றுக்கு 4,38,631 பிரஜா உற்பத்தியை நாம் கெடுத்துக் கொண்டு வருகின்றோம். இது, இரண்டொருவர் மதம் மாறுவதால் நஷ்டம் வந்துவிட்டதாகக் கருதுவோருக்குப் புலப்படுவதில்லை. பால் மணம் அறாத—5 வயதிற்குட்பட்ட இளங் குழந்தைகள் மட்டிலும் 11,892 பேர் இருக்கிறார்கள் என்பதையும், தன் பிறவிப்பயனையே நாடுதற்கில்லாது, இன்பந்துய்த்தற்கில்லாது அடக்கிவைக்கப்பட்டிருக்கும் 15 வயதிற்குட்பட்ட கைம்பெண்கள் 2,32,147 பேர் இருக்கிறார்கள் என்பதையும் கேட்கவே என் குலை நடுங்கிற்று. இத் தகைய படுமோசமான விதவைத் தன்மையை எந்த நாகரிக உலகம் ஏற்கும்?

விதவைகளின் கொடுமையை நீக்க ஒரு நூறு வருடங்களாக இராஜாராம் மோகன்ராய், ஈஸ்வர சந்திர வித்தியாசாகரர், கோலாப்பூர் மகாராஜா, சுரேந்திரநாத் பானர்ஜி முதலிய அறிஞர்கள் பாடுபட்டு உழைத்தனர். இதுபோழ்தும் இத்தகைய சீர்திருத்தத் துறையில் பாஞ்சாலத் தலைவர்கள் பலர் இறங்கி உழைத்து வருகின்றனர்.

['குடிஅரசு'-கட்டுரை—22-8-1926]

சகோதரிகளே, சகோதரர்களே!

விதவைகளுக்கு விவாகம் செய்யலாமா என்பதற்கும், சாஸ்திரத்திற்கும் என்ன சம்பந்தம் என்பது எனக்கு விளங்கவில்லை. ஒரு சமயம் விவாகம் எந்த மாதிரி செய்வது என்பது பற்றி யோசிப்பது என்றாலும் சமாதானம் சொல்லலாம். அப்படிக்கின்றி, விவாகம் செய்யலாமா, வேண்டாமா என்பதற்கே சமாதானம் சொல்லுவதென்றால் அது சுத்த முட்டாள்தனமென்று தோன்றவில்லையா?

என்னைக் கேட்டால் இந்தக் கொடிய நாட்டில் விதவைகளுக்குத் துன்பத்தை இழைத்தவர் நமது இராஜாராம் மோகன்ராய் அவர்கள் என்பதே எனது அபிப்பிராயம். ஏனெனில், அவரால்தான் நமது விதவைகள் இருக்கவும் கஷ்டப்படவும் ஏற்பட்டுவிட்டது. எப்படி என்றால், மோகன்ராய் அவர்கள் உடன்கட்டை ஏற்றும் வழக்கத்தை நிறுத்தாதிருப் பாரானால் ஒவ்வொரு பெண்டும் புருஷன் இறந்தவுடனே அவனோடு கூடவே அவன் பக்கத்தில் 'மாங்கல்ய ஸ்திரி' யாகவே உயிருடன் கட்டையில் வைத்துச் சுடப்பட்டுக் 'கற்பு லோகத்தை' அடைந்து, மோட்சலோகத்திலிருப்பாள்! கற்புலோகமும், மோட்சமும் எவ்வளவு புரட்டாயிருந்தாலும்—ஒன்று மாத்திரம் நிச்சயம். அதாவது, உயிருடன் சுடப் பட்ட பெண்ணுக்கு ஒரு மணிநேரந்தான் கஷ்டம் இருந்திருக்கக்கூடும். ஆனால், அந்தப்படி நடவாமல் காப்பாற்றப்பட்ட விதவைப் பெண்ணுக்கு அவள் ஆயுள்காலம் முழுவதும் அங்குலம் அங்குலமாகச் சித்திரவதை செய்வதுபோன்ற கஷ்டத்தை விநாடி தோறும் அனுபவித்துவர நேரிடுகின்றதா இல்லையா என்றுதான் கேட்கிறேன்.

இப்போதும் விதவைகளுக்கு உடனே மணம் செய்யவேண்டும்; மணமில்லாத பெண் இருக்கக்கூடாது என்ற நிர்ப்பந்தம் கொஞ்ச காலத்திற்காவது இருக்கவேண்டும். இல்லை யானால் உண்மையான ஜீவகாருண்யத்தை உத்தேசித்துப் பழைய உடன்கட்டை ஏற்றும் வழக்கத்தையாவது புதுப்பிக்கவேண்டும் என்பதுதான் எனது அபிப்பிராயம். ஏனெனில், விதவைத் தன்மையை நினைத்தால் வயிறு பற்றி எரிகிறது; நெஞ்சம் கொதிக்கிறது. மனிதனுக்குத் தன் பெண்சாதி சமீபத்தில் இல்லாத காலங்களில் போக இச்சை ஏற்பட்டால் உடனே 'போக மாதர்'களைக் கொண்டு அவ்விச்சையைத் தணிக்கவேண்டியதும்; மிருகங்களுக்கு ஏற்படும் தினவைத் தீர்த்துக்கொள்ள மைதான வெளியில் சொரிக்கல் நட்டு வைக்கவேண்டியதும் 32 தர்மங்களில் 2 தர்மங்களாகக் கொண்டு—கோயில்களில் தாசிகளை வைத்தும், கிராமங்கள்தோறும் நத்தங்களில் சொரிக்கல் நட்டும் வைத்திருக் கிறார்கள். ஆனால், இப்பேர்ப்பட்ட ஜீவகாருண்ய அறிவு—நமது பெண் மக்களிடம் மாத்திரம் ஏன் காட்டமுடியாமல் போய்விட்டது என்பதை நினைக்கும்போது, ஜீவகாருண்யப் புரட்டும் 32 தர்மங்களின் புரட்டும் நன்றாய் விளங்கும்.

அதோடு மாத்திரமல்லாமல், அம் மாதிரி ஜீவகாருண்யம் கூடாது என்பதற்குச் சாஸ்திரம் இருப்பதாயும், அந்த சாஸ்திரம் கடவுளால் சொல்லப்பட்டதாகவும் மனிதர்கள் என்பவர்கள் சொல்ல வருவார்களானால்—அப்படிப்பட்ட சாஸ்திரத்தையும், கடவுளையும், மனிதர்களையும் என்ன செய்வது என்பதை நீங்கள்தான் யோசித்து முடிவு கட்டவேண்டும்.

ஒரு பெண்சாதியை இழந்த ஆண் கலியாணம் செய்துகொள்ளலாமா வேண்டாமா என்பதைப் பற்றி, எந்தப் பெண்ணாவது அபிப்பிராயம் சொல்ல வருகிறாளா? அப்படி

யிருக்க, புருஷனை இழந்தவள் கலியாணம் செய்துகொள்ளலாமா வேண்டாமா என்பதைப் பற்றி அபிப்பிராயம் சொல்லப் புருஷனுக்கு என்ன பாத்தியம் என்பது நமக்கு விளங்க வில்லை. நாட்டில், சிறப்பாக நமது சமூகத்தில் விதவைகள் கர்ப்பமடைந்து கர்ப்பத்தை அழிப்பதும், பிள்ளைகளைப்பெற்றுக் கொலை செய்வதும், வீடுகளை விட்டுப் பெற்றோர் அறியாமல் நினைத்த புருஷர்களுடன் ஓடுவதும், பிறகு பொது விபசாரிகளாகி குச்சுகள் மாறுவதும் முதலிய காரியங்களைத் தினமும் கண்ணால் பார்த்தும் தாங்களாகவே துன்பங்கள் அடைந்து வரும்போது, விதவா விவாகம் சாஸ்திர சம்பந்தமா, சாதி வழக்கமா என்று பார்க்கும் மூடர்கள் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்களா என்று கேட்கிறேன். சாஸ்திரத்தில் இடம் இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? சாதியில் வழக்கம் இருந்தால் என்ன? இல்லாவிட்டால் என்ன? அதைப் பற்றிக் கவனிப்பதில் பலன் என்ன? புருஷனை இழந்த பெண்ணுக்குப் புருஷ இச்சை இருக்குமா, இருக்காதா? அவளுக்குப் புருஷன் வேண்டுமா, வேண்டாமா—என்பதைத்தானே கவனித்து முடிவுகட்டவேண்டும்? அமாவாசையில் பிறந்த பிள்ளை திருடும் என்று ஜோசியத்திலிருந்து விட்டால், அந்தப் பிள்ளை திருடின திருட்டையெல்லாம் ஜோசியம் நம்புகிறவன் சும்மா விட்டுவிடுவானா என்று கேட்கிறேன்?

தினம் புருஷனுடன் வாழ்ந்து கொண்டு, புருஷன் என்பதாகத் தனக்கு ஒரு எஜமான் இருக்கிறான் என்று நினைத்துக் கொண்டு அடிமைத்தனத்தில் இருந்து, குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொண்டு இருக்கும் மாங்கலியப் பெண்களின் போக உணர்ச்சியைவிட—மேற்கண்ட கவலைகளேயில்லாத விதவைப் பெண்களின் போக உணர்ச்சி எத்தனை மடங்கு அதிகமாயிருக்கும் என்பதை நீங்களே நினைத்துப் பாருங்கள்! ஒரு ஜீவனைப் பட்டினியாகப் போட்டுக் கொல்வதிலும் ஒரு பெண்ணை விதவையாக வைத்துச் சாகாமல் காப்பாற்றுவது கொடுமை அல்லவா என்பதை யோசித்துப் பாருங்கள்! ஒரு பெண் எதற்காக விதவையாய் இருக்கவேண்டும் என்பதற்கு இதுவரை யாராவது காரணம் சொன்னார்களா? அல்லது எந்த மதமாவது, எந்த சாதியாவது காரணம் சொல்லி இருக்கின்றனவா? காரணமில்லாத இவ்விதக் கொடுமையான ஜீவ இம்சையைச் செய்துகொண்டிருக்கும் சமூகம் வடிகட்டின முட்டாள்தன முடையது என்பதற்கு என்ன ஆட்சேபங்கள் சொல்லப்போகின்றீர்கள்?

விதவைகளாயிருப்பது கடவுள் கட்டளை என்று கருதுவீர்களானால்—விதவைகளுக்குப் போக உணர்ச்சியும், அதனால் ஏற்படும் கவலையும் சில சமயங்களில் கர்ப்பம் உண்டாக்கப்படுவதும், அது அழிக்கப்படுவதும், பெற்ற குழந்தையைக் கழுத்தைத் திருகுவதுமான காரியங்கள் நடைபெற முடியுமா என்று யோசித்துப் பாருங்கள்!

விதவைத் தன்மை நாட்டில் இருப்பதாலேயே சாஸ்திரங்களும், கடவுள் செயல் என்பவைகளும், சோதிடம் என்பவைகளும் பொய் என்பதாக உங்களுக்கு விளங்கு கின்றதா, இல்லையா?

ஏனெனில், நம்மில் ஒவ்வொருவனும் கலியாணம் செய்வது கடவுள் முன் பூ வைத்தோ, கருட தரிசனம் பார்த்தோ குறிகேட்டோ திருப்தி அடைந்தும்; சாஸ்திர விதிப்படியும் செய்கிறான். அப்படியிருக்க, இந்தக் கதி நேர்ந்தால் மேற்கண்டவைகள் நிஜமாய் இருக்கமுடியுமா? இந்த அஸ்திவாரப்புரட்டை நாம் நம்பி, 'மதம்,' 'சாதி,' 'வழக்கம்' என்று சொல்லுகின்றோமே நமக்கு வெட்கமாக இல்லையா? அல்லது புத்தியில்லையா என்று கேட்கிறேன்.

பெரும்பாலும் மதப்படியும், சாதி வழக்கப்படியும் நடக்காதவர்களேதான் மதம் என்றும், சாஸ்திரம் என்றும், சாதி வழக்கம் என்றும் தொல்லைப்படுத்துகிறார்கள்.

தங்களைப் பொறுத்தவரை, தாங்கள் நம்பும் மதக் கொள்கைப்படியும், சாஸ்திரப் படியும் நடக்க முடியாதவர்கள்தானே—நாம் செய்யும் காரியத்திற்கு இடையூறாக மதத்தை

யும், சாஸ்திரத்தையும், வழக்கத்தையும் கொண்டுவந்து போடுகின்றார்கள்? இப்படிப் பட்டவர்களால்—தங்களுக்காகக் கொண்டுவந்து போடும் மதத்திற்கும் சாஸ்திரத்திற்கும் கடுகளவு புத்தியுள்ள எந்த மனிதனாவது மதிப்புக்கொடுக்க முடியுமா என்று பாருங்கள்.

உதாரணமாக, சாரதா மசோதாவை எடுத்துக்கொள்ளுங்கள். பெண்கள் பருவம் அடைந்ததற்குப் பின்னால் கலியாணம் செய்தால் சாஸ்திர விரோதமாம்; பாவமாம்; நரகம் கிடைக்குமாம். இதற்குச் சத்தியாக்கிரகம் செய்து உயிரை விடவேண்டுமாம். நீங்கள் இந்த வீரர்களை உண்மையானவர்கள் என்று நம்புகிறீர்களா?

இந்த வீரர்களின் ஆண்—பெண் கடவுள்களுக்கும், அவர்களது சொந்தக்காரர் களுக்கும் எப்போது கலியாணம் நடந்தது? கலியாணம் நடந்ததை இவர்கள் பார்க்கா விட்டாலும்—எப்போது நடந்ததாக இவர்கள் சாஸ்திரம் கூறுகின்றது என்பதைச் சற்று நினைத்துப் பாருங்கள்.

சீதைக்கும், ருக்குமணிக்கும், சத்தியபாமைக்கும், பார்வதிக்கும், வள்ளிக்கும், தெய்வ யானைக்கும், மீனாட்சிக்கும், ஆண்டாளுக்கும், நாச்சியாருக்கும், துரோபதைக்கும் எப்போது கலியாணம் நடந்தது? இவர்கள் பருவம் அடைந்த பிறகா? அதற்கு முந்தியா என்று கேட்கிறேன்.

பழைய இராஜாக்கள் என்பவர்கள் காலத்திலும், மத சம்பந்தமான புராணங்களிலும் எங்காவது 'மைனர்' பெண்களையோ 10 வயதுக்குட்பட்ட பெண்களையோ கலியாணம் செய்துகொடுத்ததாக இவர்கள் சொல்லக்கூடுமா என்று கேட்கிறேன். தவிரவும், மேற் கண்ட ஆண் பெண் கடவுள்கள் தாங்களாகவே கலியாணம் செய்துகொண்டார்களா? அல்லது அவர்களின் தாய் தகப்பன்மார்—கட்டுச்சாத மூட்டையைத் தோளில் சுமந்து திரிந்து மாப்பிள்ளை தேடி—சகுணம், குறி சோதிடப் பொருத்தம் முதலியவை பார்த்துக் கலியாணம் செய்துகொடுத்தார்களா என்று யோசித்துப் பாருங்கள்!

இந்த சாஸ்திரத்தை வைத்துக்கொண்டிருப்பவர்கள், சாஸ்திரத்தில் பருவமடைந்த பிறகு கலியாணம் செய்வதற்கு இடமில்லை என்று சொல்ல வருவார்களானால்—அதிலும் அதற்காக அவர்கள் சத்தியாக்கிரகம் செய்வேனென்று சொல்வார்களானால், அவர்கள் நம்மை எவ்வளவு முட்டாள்கள் என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்! உங்களுக்கு ஒரு காரியம் சரியென்று பட்டால்—அது சாஸ்திர சம்மதமா, விரோதமா என்று எதிர்பார்ப்பது அறியாமையும் அடிமைத் தனமுமாகும். இந்த உலகத்திற்கு அவசியமான காரியம்—மேல் லோகத்தில் என்ன பயனைத் தரும் என்பது மற்றொரு அடிமைத் தனமாகும்.

எந்தக் காலத்திலோ, எங்கிருந்தோ, யாராலோ, எதற்காகவோ, யாருக்கோ எழுதிய ஒரு புத்தகத்தை—இந்தக் காலத்திற்கு, இந்த இடத்திற்கு, நமது நன்மைக்காக, நமது நன்மையில் கவலை கொண்டவர்களால் எழுதப்பட்டதென்றும்—அதன்படி நடந்து தீர வேண்டும் என்றும் கருதுகின்றவன் மனிதனல்லன் என்பதுதான் எனது மாற்றமுடியாத உறுதியான அபிப்பிராயம் ஆகும்.

[சென்னை பிரம்மசமாஜ கட்டடத்தில், 19–10–1929-ல் தலைமையுரை—'குடிஅரசு' 27–10–1929]

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

நமது நாட்டில் விதவைகள் உள்ள வீடுகளில் நடக்கும் காரியங்கள் எனக்கு நன்றாய்த் தெரியும். அனேக சிசுக் கொலைகளும், அனேக மனவருத்தங்களும், இயற்கைக்கு விரோதமான காரியங்களும்—ஏதாவது ஒன்று நடந்தவண்ணமாகவே இருந்து வருகின்றது. இதனால் பல கொலைகளும் நடக்கின்றன. சில இடங்களில்

பெண்கள் வெளியில் ஓடஓட அழைத்துவந்து பந்தோபஸ்தில் வைக்கப்படுகின்றனர். இவற்றிற்கெல்லாம் காரணம் என்னவென்று பார்த்தால், இயற்கை உணர்ச்சியைக் கட்டுப் படுத்தி வைப்பதேயாகும்.

இயற்கை உணர்ச்சியைக் கட்டுப்படுத்தும் சட்டங்களும், முறைகளும் சரிவர நடைபெறா. அப்படி எங்காவது நடைபெற்றாலும் நிலைத்திருக்க முடியாது. இந்தக் கொடுமைகள் இப்படியே இருக்குமானால் 4 அல்லது 5 பெண்கள் கூடி ஒரு ஆணைத் தங்கள் இன்பத்திற்கு என்று ஏற்படுத்தி, அவனுக்கு நல்ல போஷணையும் அழகும் செய்து அடைத்துவைத்து—அவனைத் தங்களது காம இச்சை தீர்க்கும் இன்பப் பொருளாய் அனுபவிக்கும் காலமும், வீட்டு அடிமையாய் வைத்து நடத்தப்படும் காலமும் வந்துவிடும் என்றுதாம் கருதுகிறோம். அப்படி வந்தால் ஆச்சரியப்படமாட்டோம்.

இந்நாட்டில் ஒழுக்கம் சீர்பட வேண்டுமானால்—விபச்சாரம் என்னும் காரியத் திலுள்ள கெடுதிகள் நீங்கவேண்டுமானால்—விதவைத் தன்மையும், ஆண்களுக்கு விபச்சார தோஷமில்லை என்கின்ற நடப்பையும் ஒழித்தாக வேண்டும். இவ்விரண்டு காரியங்களே பெரிதும் மனித் தன்மைக்கும், இயற்கை இன்ப நுகர்ச்சிக்கும் இடையூறாய் இருந்து வருகின்றன. பெண்களைப் பெற்றோர்களும் ஒரு விஷயத்தில் கவனிக்க வேண்டும். பெண்களுக்கு 16 வயதுவரை நல்ல கல்வியைக் கொடுக்கவேண்டும்; தனக்கு வேண்டிய வனைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளப் பழக்கவேண்டும்.

ஒரு குழந்தையுள்ள விதவையை மணம் செய்துகொள்ள ஏற்பட்டால், 'குழந்தையே இல்லாத விதவை கிடைக்கவில்லையா?' என்றும்; இதற்குமுன் பக்குவமான 'சாந்தி முகூர்த்தமான' விதவையைக் கலியாணம் செய்தபோது, 'பக்குவமாகாத விதவை கிடைக்கவில்லையா?' என்கிறார்கள். வேறு சாதியில் ஒரு விதவையைக் கலியாணம் செய்துகொண்டபோது, 'நமது சாதியிலேயே ஒரு விதவை இல்லையா?' என்கிறார்கள். இவ் விஷயங்களில் நாம் பொதுஜன அபிப்பிராயத்தைக் கண்டு பயப்படக்கூடாது.

[நாகர்கோவிலில், 10–9–1930-ல், சொற்பொழிவு—'குடிஅரசு' 28–9–1930]

தலைவரவர்களே! தோழர்களே!

ஒருசமயம் விதவா விவாகஞ் செய்துகொண்டது குற்றம் என்று சொல்லப்படுமானால் அதுவும் அறியாமை என்றுதான் சொல்லவேண்டும். உலகில் இந்தியாவைத் தவிர வேறு எந்த நாட்டிலும்—எந்த மதத்திலும் விதவை மணம் ஒப்புக்கொள்ளப்படுகின்றது.

இந்தியாவிலும், இந்து மதத்திலுங்கூட அனேக சாதிகளில் விதவை மணம் அனுமதிக்கப்பட்டும் நடந்தும் வருகின்றது.

விதவைத் தன்மையை அனுமதிக்கும் சமூகம் மற்றொரு விதத்தில் விபச்சாரத் தனத்தைத் தூண்டவும், அனுமதிக்கவும் செய்கின்ற சமூகம் என்றுதான் சொல்லவேண்டும்.

[காரைக்குடியில், 19–4–1935-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 28–4–1935]

தாய்மார்களே! தோழர்களே!

விதவைத் தன்மையேதான் விபச்சாரம் என்கின்ற பிள்ளையைப் பெறுகின்றது. பிறகு, ஆண் எப்படி வேண்டுமானாலும் திரியலாம்—எவ்வளவு பெண்சாதிகளை வேண்டு மானாலும் மணக்கலாம் என்கின்ற முறையே விபச்சாரம் என்னும் அந்தப் பிள்ளையை வளர்க்கின்றது.

கலியாண ரத்து இல்லை என்கிற முறையானது, விபச்சாரத்தை நீடூழி வாழச் செய்கிறது. இவற்றிற்கு எல்லாம் பரிகாரம் செய்யாமல் விபச்சாரத்தைப்பற்றிப் பேசுவது என்பது பயனற்ற காரியமாகும்.

விதவைத் தன்மை என்பது நமது நாட்டில் மிக்க கொடுமையான முறையில் இருந்துவருகின்றது. இதை எந்தச் சீர்திருத்தவாதியும் கவனிப்பதேயில்லை. விதவைகள் வாழ்க்கை ஒரு சிறைக்கூட வாழ்க்கையை ஒக்கும். ஒரு கைதிக்குள்ள நிர்ப்பந்தம் ஒவ்வொரு விதவைக்கும் இருந்துவருகின்றது. எப்படி ஒரு கைதியானவன் சிறைக்கூட விதியை மீறவேண்டும் என்கின்ற ஆசைக்கும், அவசியத்துக்கும் உள்ளாகிறானோ, அது போலவேதான் ஒவ்வொரு விதவையும் விதவைச் சட்டத்தை மீறவேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாகிக் கஷ்டப்படுகிறாள். இந்தக் கொடுமை ஒரு நிரபராதியான பெண்ணுக்கு ஏன் ஏற்படவேண்டுமென்று கேட்டால், இதற்கு என்ன மறுமொழி இருக்கிறது? இந்த 20-வது நூற்றாண்டில் தலைவிதி என்றும், கடவுள் செயல் என்றும் சொல்லி மக்களை ஏய்க்க முடியுமா?

விதவைத் தன்மை என்பது கடவுள் செயலாக இருந்தால், பார்ப்பனர்கள் நிறைந்த பார்த்தசாரதிகோயில் தெரு (சென்னை), தெப்பக்குளத்தில் தினம் ஒரு குழந்தை எப்படி மிதக்கமுடியும்? ஊர்தோறும் குப்பைத்தொட்டிகளும், ஓடைப் புறம்போக்குகளும், கள்ளி மேடும், ஊருணிகளும் எப்படிப் பிள்ளைகளைப் பெறமுடியும்?

ஆகவே, மனித சமூகத்துக்குக் கடுகளவாவது புத்தியும், நேர்மையும் இருக்கிறது என்று சொல்லப்பட வேண்டுமானால், இந்த விதவைக் கொடுமை முதலில் ஒழிக்கப்பட்டாக வேண்டும். இந்தக் கொடுமை பகுத்தறிவுள்ள மனித சமூகத்தில் இருக்கிறது என்றால், பகுத்தறிவுக்கு இழிவு கற்பிக்க இதைவிட வேறு உதாரணம் வேண்டுமா என்று கேட்கிறேன்.

அதோடு, கலியாண ரத்து என்கின்ற ஒரு முறையும் ஏற்படுத்தி ஆகவேண்டும். ஏனெனில், கலியாண ரத்துக்கு இடமில்லாத காரணத்தாலேயே ஆண்கள் மனைவிமார்களிடத்தில் மனிதத் தன்மையோடு நடந்துகொள்ளாமல் மிருகத்தனமாய் நடக்கத் தூண்டப்படுகிறார்கள்.

மனைவிமார்களைத் தங்களுக்குப் பிடிக்கவில்லையானால் ஆண்கள், மறுபடியும் மணம் செய்துகொள்கிறார்கள்.

மணமில்லாமல் வைப்பு முறையிலும் வேறு ஸ்திரிகளைச் சேர்த்துக்கொள்ளவும் செய்கிறார்கள். மற்றும் தங்களுக்கு இஷ்டமானபடியெல்லாம் நடந்துகொண்டு பெண்களை இம்சிக்கிறார்கள்.

இவ்வளவுக்கும் தைரியம் வந்ததற்குக் காரணம், ஆண்கள் எப்படி நடந்துகொண்டாலும் மனைவிமார்களுக்கு ஜீவனாம்சம் கேட்கும் பாத்தியம் தவிர வேறு எவ்வித உரிமையும் இல்லாததேயாகும்.

பெண்களுக்குத் தங்கள் கணவன் பிடிக்கவில்லையானால், சகித்துக்கொண்டு, தலைவிதி என்பதாகச் சொல்லி திருப்தியுடன் இருக்கவேண்டியதைத்தவிர வேறு ஒரு கதியும் இல்லை. குரூர குணமுள்ள புருஷன், குடிகார புருஷன், குஷ்டரோகியான புருஷன் முதலிய எப்படிப்பட்டவனாய் இருந்தாலும் அவனுடைய கொடுமைகளைச் சகித்துக் கொண்டு அவனுடன்கூட பெண் வாழவேண்டியிருக்கிறது. இது ஜீவகாருண்யமாகுமா என்று கேட்கிறேன்.

[கீழையூர், திருப்புவனம், திருச்சி ஆகிய இடங்களில் சொற்பொழிவு—'குடிஅரசு' 16-6-1935]

தாய்மார்களே! தோழர்களே!

'விதவைத் திருமணம்' என்கிற சொல், நமது பெண்கள் விஷயத்தில்தான் சொல்லப் படுகிறதே தவிர, ஆண்கள் விஷயத்தில் சொல்லப்படுவதில்லை. எப்படி இந்த அம்மை ஒரு புருஷனுடன் கூடி, அவர் காலமான பிறகு இன்னொரு புருஷனை மணந்துகொள் கிறார்களோ—அதுபோல ஆண்களும் பலர், ஒரு மனைவி தவிர இரண்டாவதாக வரிப்பதை விதவைத் திருமணம் என்கிறார்களா? 'விதவன் திருமணம்' என்றுதானே போட வேண்டும்?

நானே ஒரு விதவன்; விதவனாகிப் பின் இரண்டாவது பெண்டாட்டி கட்டிக் கொண் டிருக்கிறேன். இம்மாதிரி சம்பவம் நம்நாட்டில் வெகுகாலத்திற்கு முன்பிருந்தே நடந்து வருகிறது; பெண்களும் செய்துகொண்டிருக்கிறார்கள். சாஸ்திர, மதப்புராணங்களைப் பார்த்தால் ஏராளமாக உண்டு. நமது பெண்கள் இப்படிச் செய்து கொள்ளுகிறதுதான் நமக்கு அதிசயமாகத் தோன்றலாமே தவிர, உலகத்தில் இது அதிசயமல்ல.

கிறிஸ்தவர்களிலும் முஸ்லிம்களிலும்—கணவன் இறந்தவுடனே பெண்கள், வேறு புருஷனைக் கட்டிக் கொள்வார்கள். இது நம் நாட்டில் சிற கூட்டத்தில் நடப்பது அதிசயம் என்னலாமே தவிர, புருஷன் செத்துவிட்டால் வேறு ஒரு புருஷனைச் சேர்த்துக் கொள்வது உலகத்தில் நடந்துவருகிற வழக்கமேயாகும். இந்துக்கள் என்று சொல்லப்படுகிற சாதியில் பல சாதிப் பிரிவுகள் உண்டு. சமூகத்தில் சிலரை, அவர்கள் ஏதோ தாழ்வான சாதி என்று கூறுகிறார்கள்! ஆனால், அவர்களிடையே இவ்வித மறுமணம் ஏராளமாக நடந்துவருகிறது.

முன்பு மலையாளத்தில் கலியாணம் என்று ஒன்று கிடையாது; 30 ஆண்டுகளாகத் தான் உண்டு; சிட்டுக் கலியாணம் என்பார்கள். அப்போது எட்டு வயது, பத்து வயதுப் பெண்களை ஒன்றுக்கு 100 பேர்கள்வரை உட்கார வைத்து, ஒரு பார்ப்பான்—நம்பூதிரி என்பவன் அவர்களின்மேல் தண்ணீரை ஊற்றி, ஒரே கயிற்றால் முடிச்சுப் போட்டு விடுவான். அந்த நூறு பேரும் வாழ்க்கை நடத்துவதற்குச் சுத்தியாகி விடுவார்கள். அவர்கள் யாருடன் வேணுமானாலும் கலந்துகொள்ளலாம். அதை, 'சம்பந்தம்' என்று கூறுவார்கள். கொஞ்சம் வசதியுள்ளவர்கள் தங்கள் சாதியில் சம்பந்தம் வைத்துக் கொண்டால், ஒரு மாற்று அல்லது அய்ந்து ஆறு மாற்றுக்குக் குறைவாகக் கருதுவார் களாதலால்—பார்ப்பானையே வைத்துக் கொள்வார்கள். வெள்ளையாகவே கூறுவார்கள்: 'இந்தப் பார்ப்பானிடம்—இந்த நம்பூதிரியிடம் தனக்குச் சம்பந்தம்' என்று; வாரத்திற்கு ஒரு ஆண் மாற்றிக்கொள்ளலாம்.

சில வகுப்புகளில் இந்த விதவைக் கலியாணம் என்று சொல்லுவதற்குப் பதில், குடும்பத்தில் இளையவன் அல்லது மூத்தவன் ஒருவன் இறந்து விட்டாலோ—இரண்டாம் பேருக்குக் கலியாணம் என்று தெரியாமலே அவனுடைய மனைவி இவனுக்கு உரிமையாகி விடுகிறாள்! அதில் தப்பு இல்லை; நான் பார்த்திருக்கிறேன். மலையாளத்தில் இது உரிமையாக வந்துவிடுகிறது.

என் குடும்பத்தில் 1909-லே ஒரு நிகழ்ச்சி நடந்தது. எனது தங்கைக்கு (பொன்னுத் தாய்) ஒரு பெண் இருந்தது. அதற்கு ஒன்பது வயதிலேயே திருமணம் செய்து விட்டார்கள். கலியாணம் ஆகி 30-ம் நாள் நடைபெறும் சடங்கான தாலிமாற்றல் சடங்கு செய்வதற்கான ஏற்பாடு நடந்தது. அன்று மாப்பிள்ளைக்கு 2, 3 தடவை திடீரென்று வயிற்றுப்போக்கு போயிற்று. சரி பிள்ளையாண்டான் பலகாரம் அதிகமாய்ச் சாப்பிட்டிருப்பான், சரியாய்ப் போய்விடும் என்று இருந்து விட்டார்கள். அது 7, 8 தடவை என்று ஆகி, கடைசியில் அது காலரா (பேதி) என்ற நிலைக்கு வந்து விட்டது. அப்புறம் என்னென்னவோ செய்தும் பயன் இல்லை. 12 வயதுடைய மாப்பிள்ளை இறந்துபோனான்.

பிறகு இரண்டு, மூன்று வருஷங் கழித்து அந்தப் பெண் பெரியமனுஷியாகி விட்டது. உடனே மறு மணத்திற்கு ஏற்பாடுசெய்து கடைசியாக ஒரு பையனைப் பார்த்து முடிவு செய்தேன்; வெளியில் யாரிடமும் கூறவில்லை. எனக்கு இயற்கையாகவே சிறிது தைரியம் உண்டு. ஒரு வேலை செய்தேன். நான், சந்தேகத்திற்கு இடமில்லாமல் ஊரில் இருந்து கொண்டேன். என் மைத்துனர், பெண், நம்பிக்கையுள்ள ஒரு அம்மை ஆகிய மூவரையும் சிதம்பரத்தில் நடைபெறும் ஆருத்திரா தரிசனத்தைப் பார்ப்பதற்கென்று சிதம்பரம் அனுப்பிவிட்டேன். பையனைப் பட்டணத்தில் அச்சாபீஸ் சாமான் வாங்குவதற்காக என்று இந்தப் பக்கம் சொல்லி அனுப்பிவிட்டேன். சாமானை வாங்கிக்கொண்டு சிதம்பரம் வந்து விடவேண்டுமென்று ஏற்பாடு.

சிதம்பரத்தில் ஒரு நாயுடு இன்ஸ்பெக்டர்—எனக்கு மிகவும் வேண்டியவர்; அவரிடம் தான் அனுப்பி வைத்தேன். அவரிடம்போய், 'இராமசாமி அனுப்பிவைத்தான்' என்றுகூறி விஷயத்தைக் கூறியவுடன், அவர் மிக்க மகிழ்ச்சியோடு அதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். அவர் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் ஆதலால் பெரிய மனுஷர்கள் பலர் வந்தனர். அவர்களது இல்லத்திலேயே திருமணம் முடிந்தது. பிறகு எனக்குத் தந்தி வந்தது— 'எங்களின் யாத்திரை சரியாய் நடந்துபோயிற்று' என்று. கலியாணம் ஆன இரண்டாம் நாள் வெளியில் தெரிந்து போய்விட்டது. நான் இரயிலில் வரவேற்கப் போனேன். எனது அப்பா அழாத குறையாய், 'அவமானம் வந்து விட்டதே' எனத் தலையில் கைவைத்து உட்கார்ந்து விட்டார். எங்கள் அம்மாவோ, தூக்கில் தொங்கவேபோய்விட்டார்கள்.

ஊரில் பலர் கூடினார்கள்; ஒருமனதாகச் சாதிநீக்கம் செய்துவிட்டார்கள். நாங்கள் மூன்று வீட்டாரும், நீக்கப்பட்ட ஆறுவருஷம் வரை சாதியிலிருந்து தள்ளப்பட்டு (உறவினர் விலக்கம்) இருந்தோம்.

பிறகு 'சேர்மன்' தேர்தல் வந்தது. நான் நின்று தேர்தலில் ஜெயித்தேன். ஒவ்வொரு சமூகத்தாரும் சீர் கொண்டுவந்து என்னைப் பார்த்துச் சென்றனர். ஓரிருவர், 'என்ன! நம்முடைய சாதியில் ஒருவன் சேர்மனாக வந்திருக்கிறான்; ஊரில் உள்ள மற்ற சாதியார் எல்லாம் சீர் கொண்டு போகிறார்கள்; நாம் சும்மா இருப்பதா?' என்று கிளம்பி விட்டனர். அது எப்படியோ சூடுபிடித்து, கடைசியில் என்னைப் பார்ப்பதற்கென்று வந்தார்கள். முதல்நாளே வருவதாகச் சொல்லி அனுப்பியிருந்தார்கள். சரி, வரட்டும்; என்ன செய்கிறார்கள் என்று பார்ப்போம் என்று ஒரு அண்டா நிறையக் காப்பி போட்டு வைத்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் மேளம் வைத்துக்கொண்டு 7–8 ரூபாயில் ஒரு வேட்டியும் எடுத்துக்கொண்டு வந்தார்கள். உட்கார்ந்து பேச ஆரம்பித்தவுடன், நாகம்மையார் டம்ளரில் காப்பியை ஊற்றி ஆள்மூலம் அனுப்பினார்கள். பார்த்தார்கள்— சரி என்று இரண்டு மூன்று பேர்கள் வாங்கிச் சாப்பிட்டனர். அவ்வளவுதான்—எல்லோரும் மடமடவென்று தொடர்ந்து வாங்கிச் சாப்பிட்டார்கள். ஒரு அண்டா காப்பியும் தீர்ந்து, இன்னொரு அண்டா போடும்படி ஆகிவிட்டது. அன்று முதலே எங்களைத் தள்ளிவைத்தது தீர்ந்து போய்விட்டது.

சிலர் கூறுவார்கள்: 'சாதி ஒழிய வேண்டுமானால் ஒவ்வொருவரும் தம் சாதியில் திருமணம் செய்யக்கூடாது என்று அரசாங்கம் சட்டம் செய்யவேண்டும்' என்று. அது தப்பு; நம்மில் சாதியில்லை. பார்ப்பான் ஒரு சாதி; மற்ற நாம் எல்லோரும் ஒரு சாதி. இந்த இரண்டுக்கும் நடப்பதுதான் கலப்புமணம் எனலாம். எப்படி உத்தரவு போட்டால் பயனுள்ளதாகும் என்றால், 'ஒருவன் கலியாணமே ஆகாமல் இருந்தால் கலியாணம் ஆகாத பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளலாம். அது தப்பு இல்லை. ஆனால், ஒரு கலியாணம் ஆகி மனைவி தவறிப்போய் இரண்டாவது கலியாணம் செய்து கொண்டால், அது போலவே ஒரு கலியாணம் ஆகி கணவன் தவறிப்போய் உள்ள பெண்ணையே கலியாணம் செய்துகொள்ளவேண்டும். இது மாதிரியே ஒரு பெண்ணும் முதல் கலியாண

மானால் முதலாவது கலியாணம் செய்துகொள்ளுபவனையும், இரண்டாவது கலியாண மானால் முதல் மனைவியை இழந்தவனையும் கலியாணம் செய்துகொள்ளவேண்டும் '— இது மாதிரி உத்தரவு போடணும். இப்போது இது மாதிரி இல்லாததால், இது மாதிரி முறை புதுமையானதாகத் தோன்றுகிறது. இதில் ஒன்றும் ஆச்சரியமில்லை. இதில் இந்தப் பெண்ணைத்தான் பாராட்ட வேண்டும். ஒருமுறை கெட்டது தப்பு இல்லை. நம்கடவுள் மத, சாஸ்திர, புராணங்களைப் பார்த்தால் தெரியும். கடவுள் என்பவைகளின் பெண்டாட்டிகள் கெட்டதையும், அவர்கள் ஒழுக்கங்கெட்ட நடத்தைகளும்! மானமிழந்த கடவுளும் உண்டு. மனைவியை வாடகைக்கு விட்ட பக்தர்களும் உண்டு. மோட்சம் பெறுவதற்காகத் தம் மனைவியைக் கடவுளுக்குத் தானம் தந்தவர்கள் கூட உண்டு.

[குத்தாலத்தில், 31-3-1959-ல் சொற்பொழிவு—' விடுதலை ' 7-4-1959]

## 10. விவாக ரத்து

' விவாக ரத்து ' சட்டமானால் உடனே எல்லாப் பெண்களும் தங்கள் கணவன்களை விட்டு ஓடிப்போவார்கள் என்றும், ' கற்பு நிலை ' அடியோடு கெட்டுப்போகுமென்றும் பலர் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். பாதுகாப்பிற்கும் அவசியத்திற்கும் ஒரு சட்டம் செய்தால், பொதுஜனங்கள் எல்லோரும் அதே வேலையாய் இருப்பார்களென்பது நியதியல்ல. அவசிய மான சந்தர்ப்பங்களில் மாத்திரந்தான் ஜனங்கள் அதனைக் கையாளுவார்கள். ஏனெனில், அதனால் ஏற்படக்கூடிய கஷ்ட நஷ்டங்களுக்குத் தாங்களே பாத்தியப்பட்டவர்கள் என்பது அனுபவத்தினால் மக்களுக்கு நாளடைவில் விளங்கிவிடும். ஆகவே, விவாக ரத்து அனுமதிக்கப்படுமானால் ஏதோ ஆபத்து வந்துவிடுமென்று சிலர் நினைத்துக்கொண் டிருப்பது அவர்களது சுயநலத்தினால் ஏற்படக்கூடிய பயம் என்றுதான் சொல்லுவோம்.

விவாக ரத்து சட்டமாவது பெண்கள் சமூகத்திற்கு ஒரு இன்றியமையாத பாது காப்புக் கருவி என்பதே நமது முடிவான அபிப்பிராயம். புருஷனுக்கும் மனைவிக்கும் பரஸ்பர அன்பும், சமமான வாழ்க்கையும் ஏற்படவேண்டுமானால், இருவருக்கும் தனித் தனியாக உரிமை இருந்தால்தான் முடியும். இப்போதிருக்கும் இந்திய சமூகத்திலுள்ள மண வாழ்க்கையானது பல வழிகளிலும் பெண்மக்களுக்குப் பாதகமான முறையிலேயே நடைபெற்று வருகின்றது. ஒரு புருஷன் தனக்குத் தேவை இல்லாதபோது தனது மனைவியை ஒதுக்கிவைத்துக்கொள்ள உரிமை அளித்திருக்கும் நமது சட்டமானது பெண் களுக்கு அதே உரிமையைக் கொடுக்காமலிருப்பது வருந்தத்தக்க விஷயமாகும். இந்த உரிமை மனிதனுக்கு இருப்பதால் எல்லாப் புருஷர்களும் இதே வேலையாகவா இருக் கிறார்கள் என்றுதான் கேட்கிறோம்.

ஆகவே, இதே உரிமையைப் பெண்மக்களுக்கும் அளிக்கவேண்டியது நியாயமும் கிரமமும் ஆகும் என்பதை இன்னும் ஏன் ஆண் மக்களில் சிலர் அறியவில்லை என்பது தான் நமக்கு விளங்கவில்லை. இந்த விவாக ரத்துத் தீர்மானத்தை, வைதீகப் பத்திரிகைகள் தான் கண்டித்தனவென்றால், நமது ஜனநாயக தினசரியான ' ஜஸ்டிஸ் ' பத்திரிகையும் கண்டித்ததுதான் நமக்கு விளங்கவில்லை. எது எப்படி ஆயினும், இந்தத் தீர்மானத்தின் அவசியத்தை நமது சுயமரியாதை இயக்கத்து அன்பர்கள் நன்கு அறிவார்களாகையால், இம் மாதிரியான சமத்துவமான நோக்கமுடைய விஷயங்களில் எவ்வளவு எதிர்ப்பு இருந் தாலும், அதற்காக நாமோ நமது இயக்கத்தைச் சேர்ந்தவர்களோ எங்கள் கடமையினின்றும் பின்வாங்கமாட்டோம் என்பதை மாத்திரம் உறுதி கூறுகிறோம்.

[' குடிஅரசு '—தலையங்கம்—29-12-1929]

ஆண், பெண் கலியாண விஷயத்தில் அதாவது, புருஷன்—மனைவி என்ற வாழ்க்கையானது நமது நாட்டிலுள்ள கொடுமையைப்போல், வேறு எந்த நாட்டிலும் கிடையவே கிடையாது என்று சொல்லலாம். நமது கலியாண தத்துவம் எல்லாம் சுருக்கமாய்ப் பார்த்தால், பெண்களை ஆண்கள் அடிமையாகக்கொள்வது என்பதைத் தவிர, வேறு ஒன்றுமே அதிலில்லை. அவ்வடிமைத்தனத்தை மறைத்துப் பெண்களை ஏமாற்றுவதற்கே சடங்கு முதலியவைகள் செய்யப்படுவதோடு, அவ்விதக் கலியாணத்திற்குத் தெய்வீகக் கலியாணம் என்பதாக ஒரு அர்த்தமற்ற போலிப் பெயரையும் கொடுத்துப் பெண்களை வஞ்சிக்கின்றோம்.

பொதுவாகக் கவனித்தால், நமது நாடு மாத்திரமல்லாமல் உலகத்திலேயே அனேகமாய்க் கலியாண விஷயத்தில் பெண்கள் மிகக் கொடுமையாயும், இயற்கைக்கு விரோதமான நிர்ப்பந்தமாயும் நடத்தப்படுகிறார்கள் என்பதை நடுநிலைமையுள்ள எவரும் மறுக்க முடியாது. ஆனால், நமது நாடோ இவ்விஷயத்தில் மற்ற எல்லா நாட்டையும்விட மிக்க மோசமாகவே இருந்து வருகிறது.

இக்கொடுமைகள் இனியும் இப்படியே நிலைபெற்றுவருமானால், சொற்பகாலத்திற்குள்ளாக, அதாவது—ஒரு அரை நூற்றாண்டுக்குள்ளாகக் கலியாணச் சடங்கும் தொந்தமும் உலகத்தில் அனேகமாய் மறைந்தேபோகும் என்பதை உறுதியாய்ச் சொல்லலாம். இதை அறிந்தே மற்ற நாடுகளில் அறிஞர்கள் பெண்கள் கொடுமையை நாளுக்கு நாள் தளர்த்திக் கொண்டு வருகின்றார்கள். நம் நாடு மாத்திரம் குரங்குப் பிடியாய்ப் 'பழைய கருப்பனாகவே' இருந்துவருகின்றது. ஆதலால், தலைகீழ் முறையான பெண்கள் கிளர்ச்சி ஒன்று நமது நாட்டில்தான் அவசரமாய் ஏற்படவேண்டியிருக்கின்றது.

செங்கற்பட்டு சுயமரியாதை மாநாட்டில், 'பெண்களுக்கும் ஆண்களுக்கும் கலியாண விடுதலை செய்துகொள்ள உரிமையிருக்கவேண்டும்' என்பதாக ஒரு தீர்மானம் செய்யப்பட்டவுடனும்; பின்னர், சென்னையில் கூடிய பெண்கள் மாநாட்டில், 'கலியாணத்துக்கு ஒரு சட்டம் வேண்டும்' என்று தீர்மானித்தவுடனும், சீர்திருத்தவாதிகளென்று தங்களைச் சொல்லிக்கொள்பவர்கள் உட்படப் பலர் உலகமே முழுகிவிட்டதாகக் கூக்குரலிட்டார்கள். ஆனால், செங்கற்பட்டுத் தீர்மானத்திற்குப் பிறகு, வெளிநாட்டிலும், இந்தியாவிலும் பல இடங்களில் கலியாண ரத்துச் சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. ரஷ்யாவில், கலியாணமே தினசரி ஒப்பந்தம்போல் பாவிக்கப்பட்டு வருகின்றது; ஜெர்மனியில் புருஷனுக்கும் பெண்சாதிக்கும் இஷ்டமில்லையானால், உடனே காரணம் சொல்லாமலே கலியாணத்தை ரத்து செய்துகொள்ளலாமென்பதாகச் சட்டம் கொண்டுவரப்பட்டது யாவருக்கும் தெரிந்த விஷயமாகும். சமீபத்தில், பரோடா அரசாங்கத்தாரும் 'கலியாண ரத்துக்கு' சட்டசபையில் சட்டம் நிறைவேற்றிவிட்டார்கள். மற்றும், பல மேல்நாடுகளிலும் இவ்விதச் சட்டங்கள் இருந்தே வருகின்றன. நமது நாட்டில் மாத்திரம் இவ்விஷயமாய்ச் சட்டம் செய்வதைப்பற்றிக் கவலைப்படாமலிருந்து வருகின்றதானது, மிகவும் கவலையற்ற காரியமென்றே சொல்லவேண்டும். சாதாரணமாகத் தென்னாட்டில் அனேக புருஷர்கள் தங்களது பெண்சாதிகளின் நடவடிக்கைகளில் சந்தேகங்கொண்டு கொலைகள் செய்ததாகத் தினம் பத்திரிகைகள் மூலம் செய்திகள் வெளியாவதைப் பார்த்துவருகின்றோம்.

சில சமயங்களில் ஒரு பெண்சாதியின் நடவடிக்கை சந்தேகத்திற்காகப் பல கொலைகள் நடந்ததாகவும் பார்க்கின்றோம். தெய்வீக சம்பந்தமான கலியாணங்கள் இப்படி முடிவடைவானேன், என்பதைப்பற்றித் தெய்வீகத்தில் பிடிவாதமுள்ள எவருக்குமே யோசிக்கப் புத்தியில்லை. பெண்கள் உலகம் முன்னேற்றமடைய வேண்டுமானால்—அவர்களுக்கு மனிதத் தன்மையும், மனித உரிமையும், சுயமரியாதையும் ஏற்படவேண்டுமானால், ஆண்களுக்குத் திருப்தியும் இன்பமும் உண்மையான காதலும் ஒழுக்கமும் ஏற்படவேண்டுமானால்—கலியாண ரத்திற்கு இடம் அளிக்கப்படவேண்டியது முக்கியமான காரியமாகும்.

அப்படிக்கில்லாதவரையில் ஆண், பெண் இருவருக்கும் உண்மை இன்பத்திற்கும் சுதந்திர வாழ்க்கைக்கும் இடமே இல்லாமல் போய்விடும்.

நமது 'சீர்திருத்தவாதிகள்' பலர், ஒரு மனிதன் இரண்டு பெண்டாட்டிகளைக் கட்டிக் கொள்வதைப்பற்றி மாத்திரம் குடிமுழுகிப் போய்விட்டதாகக் கூச்சல் போடுகின்றார்கள். இவர்கள் எதை உத்தேசித்து இப்படிக் கூச்சல் போடுகின்றார்கள் என்பது நமக்கு விளங்க வில்லை. மதத்தை உத்தேசித்தா? அல்லது பகுத்தறிவை உத்தேசித்தா? அல்லது மனித சுதந்திரத்தை உத்தேசித்தா? என்பது நமக்குச் சிறிதும் விளங்கவில்லை. அல்லது மனித ஒழுக்கத்தை உத்தேசித்து இப்படிப் பேசுகின்றார்களா என்பதும் விளங்கவில்லை. இதைப் பற்றி மற்றொரு சமயம் விவரிப்போம்.

நிற்க, ஒரு பெண்ணுக்குமேல் மனிதன் கலியாணம் செய்துகொள்ளக்கூடாது என்று சொல்லுபவர்களை நாம் ஒன்று கேட்கிறோம். அதென்னவெனில், கலியாணம் என்பது மனிதன் இன்பத்துக்கும் திருப்திக்குமா? அல்லது சடங்குக்காகவா? என்று கேட்பதோடு– இஷ்டமில்லாத, ஒற்றுமைக்கு இசையாத, கலவிக்கு உதவாத ஒரு பெண் எந்தக் காரணத் தினாலோ ஒருவனுக்குப் பெண்சாதியாக நேர்ந்துவிட்டால், அப்போது புருஷனுடைய கடமை என்ன என்று கேட்கின்றோம். அதுபோலவே, ஒரு பெண்ணுக்கும் அப்படிப் பட்ட ஒரு புருஷன் அமைந்துவிட்டால், அப்பெண்ணின் கதி என்ன என்றுதான் கேட் கின்றோம். கலியாணம் என்பது தெய்வீகமாகவோ, பிரிக்க முடியாததாகவோ உண்மை யிலிருக்குமாயின், அதில் இவ்விதக் குறைகளும் குற்றங்களும் ஏற்பட முடியுமா என்பதை யோசித்தாலே, தெய்வீகம் என்பது முழுப்புரட்டு என்பது எப்படிப்பட்ட மனிதனுக்கும் புரியாமற்போகாது.

ஆகவே, நமது நாட்டிலும் மற்ற நாடுகளிலிருப்பது போன்ற கலியாண ரத்துக்குச் சட்டம் சமீபத்தில் ஏற்படாமல் போகுமாயின், கலியாண மறுப்புப் பிரச்சாரமும், கலியாணம் ஆன புருஷர்களுக்கும் பெண்களுக்கும் பல தாரப் பிரச்சாரமும்தான் செய்யவேண்டியது வரும். அன்றியும், இது சமயம் ஒற்றுமைக்கும் திருப்திக்கும் இன்பத்திற்கும் உதவாத பெண் களுடைய புருஷர்கள் கண்டிப்பாகத் தைரியமாக முன்வந்து தங்களுக்கிஷ்டமான பெண் களைத் திரும்பவும் மணம் செய்து கொள்ளத் துணியவேண்டும் என்றும் தூண்டுகின்றோம். ஏனெனில், அப்படி ஏற்பட்டால்தான் தெய்வீகம் என்கின்ற பெயரைச் சொல்லிக்கொண்டு புருஷர்களுக்கும் பெண்களுக்கும் சம்மதமும், முன்பின் அறிமுகமும் இல்லாமல் செய்யப் பட்டுவரும் கலியாணங்களினால் மணமக்கள் அடையும் துன்பம் ஒழிபட முடியும். மனிதன் ஏன் பிறந்தானோ, ஏன் சாகிறானோ என்பது வேறு விஷயம். ஆதலால், அது ஒருபுறமிருந்தாலும் மனிதன் இருக்கும்வரை அனுபவிக்கவேண்டியது இன்பமும் திருப்தியுமாகும்.

அப்படிப்பட்ட சாதனத்தில், இப்படிப்பட்ட தொல்லைக்கும் துன்பத்திற்குமிடமான இடையூறு இருக்குமானால், அதை முதலில் களைந்தெறியவேண்டியது ஆறறிவுள்ள மனிதனின்முதல் கடமையாகும். மனித ஜீவகாருண்யத்திற்கும் திருப்திக்கும் இன்பத்திற் கும் வேலை செய்பவர்கள் இதை முதலில் செய்யவேண்டும். அப்படிக்கில்லாமல், "ஏதோ கலியாணம் என்பதாக ஒன்றைச் செய்துகொண்டோமே, செய்தாய்விட்டதே, அது எப்படி இருந்தாலும் சகித்துக்கொண்டுதானே இருக்கவேண்டும்" என்று கருதி, துன்பத்தையும் அதிருப்தியையும் அனுபவித்துக்கொண்டிருப்பதும், அனுபவித்துக்கொண்டிருக்கச் செய் வதும் மனிதத் தன்மையும், சுயமரியாதையுமற்ற காரியமாகுமேயல்லாமல், ஒருநாளும் அறிவுடைமையாகாது என்பதே நமது அபிப்பிராயமாகும்.

['பெண் ஏன் அடிமையானாள்? என்ற புத்தகத்திலிருந்து. 11-ம் பதிப்பு : 1971]

# 11. மறுமணம் தவறல்ல

"ஒரு மனைவியிருக்க, ஆண்மகன் மறுமணம் செய்யலாமா?" என்ற விஷயத்தில் பலருக்குப் பலவித அய்யப்பாடுகள் தோன்றியிருக்கின்றன. இந்த விஷயத்தில் சுயமரியாதை இயக்கத்தில் ஈடுபட்டவர்களுக்குள்ளேயே—இம்மாதிரி, 'மறுமணம் செய்து கொள்வது தவறு' என்கிற அபிப்பிராயமும் சந்தேகமும் இருந்துவருகின்றன. பொது ஜனங்களில் பலர், "மனைவியிருக்க மறுமணம் செய்துகொள்வது, சீர்திருத்தக் கொள்கைக்கு விரோதம்" என்று கருதுகிறார்கள்.

முதலாவது, இந்தக் கொள்கையைப்பற்றிக் கவனிக்கும் முன்பு, மணம் என்பது என்ன என்பதை முதலில் விளங்கிக்கொள்ளவேண்டும். மணம் என்பதை, மணமக்கள் தாங்கள் வாழ்க்கைச் சவுகரியத்துக்காகச் செய்துகொள்ளும் ஒரு ஒப்பந்த ஏற்பாடு என்று தான் நாம் கருதுகிறோம். ஆதலால், அதில் இவர்களுடைய சுயேச்சையையும் சேர்த்தோ அல்லது தனித்தனியோ கட்டுப்படுத்தும் எவ்விதக் கொள்கைக்கும் இடம் இருக்கக்கூடாது என்றும் கருதுகின்றோம். இதுமாதிரி கருதுவது சரியா, தப்பா என்று முடிவு செய்வதிலிருந்தே மேற்கண்ட கேள்விக்குச் சிறிது சமாதானமும் கிடைத்துவிடும்.

நிற்க, இன்று உலகத்தில் இயற்கை உணர்ச்சியிலும் அனுபவத்திலும் மற்றும் கட்டுப்பாட்டுக் கொள்கையின் கீழும், தமிழர் பின்பற்றும் மதத்தின்படியும் மறுமணம் என்பது எங்காவது தடுக்கப்பட்டிருக்கின்றதா—என்பதை நம்மால் அறியமுடியவில்லை. அதுமாத்திரமல்லாமல், மண விஷயமாய் ஏற்படுத்தப்பட்ட சட்டதிட்டங்களிலும், எந்த மத சம்பந்தமான கொள்கைகளிலும் மறுமணம் என்பது தடுக்கப்பட்டிருப்பதாகவும் தெரியவில்லை. இந்து மதத்தில் அறுபதனாயிரம் பெண்கள் வரையும்; இஸ்லாமிய மதத்தில் 4 பெண்கள் வரையிலும், கிறிஸ்துவ மதத்தில் அளவு குறிப்பிடாமல் எவ்வளவு பெண்களை மணம் செய்துகொள்ள நேர்ந்தாலும் அதுவரையிலும், மணம் செய்துகொள்ள இடமிருக்கின்றது. கிறிஸ்துவ மதத்தில் மாத்திரம் ஆணோ, பெண்ணோ திருமணத்தை ரத்து செய்துவிட்டு மறுமணம் செய்துகொள்ளலாம் என்பதாகவும், அந்தப்படி ரத்து செய்துகொள்வதிலும் இன்னின்ன நிபந்தனைகளின்படிதான் செய்துகொள்ளலாமென்றும் காணப்படுகின்றது. அதாவது, சமுதாய சம்பந்தமான ஒரு பாதுகாப்பை உத்தேசித்து மாத்திரமேயல்லாமல் கொள்கைக்காக அல்ல என்று புரியும்படியாகவே ஏற்பாடு செய்யப் பட்டிருக்கின்றது. ஆகவே, இவ்வளவுதான் மறுமண விஷயத்தில் மற்ற மதத்திற்கும் கிறிஸ்துவ மதத்திற்கும் உள்ள வித்தியாசம். எனவே, ஒன்றுக்கொன்று நிபந்தனைகளிலும் திட்டங்களிலும்தான் வித்தியாசமே தவிர, மற்றபடி மறுமணக் கொள்கையை—மதங்களின்படி பார்த்தால்—எந்த மதமும் ஆட்சேபித்திருப்பதாய்த் தெரியவில்லை.

அன்றியும், இந்துமதத்தில் இந்துக் கடவுள்களே பல மணங்கள் செய்துகொண்டதாகவும், மற்றும் பல வைப்பாட்டிகளை வைத்திருப்பதாகவும் மத ஆதாரங்களில் காணப்படுவதுடன், அக் கடவுள்களை அந்தப்படியே—அதாவது, பல மனைவிகள், வைப்பாட்டிகள் ஆகியவைகளுடன், தமிழர்கள்—இந்துக்கள் என்பவர்கள் பூசை, கலியாண உற்சவம் முதலியவைகள் செய்தும் வணங்குகின்றார்கள். இஸ்லாமிய மதத்திலும், நாயகம் முகமது நபி அவர்களே ஏககாலத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளுடன் இருந்ததாக ஒப்புக் கொள்ளப்படுகின்றது. ஆகவே, இதை மறுப்பவர்களோ, இம்மாதிரி கடவுள்களையோ, நபிகளையோ குற்றம் சொல்லுகின்றவர்களோ ஒருக்காலும் தங்கள் மதத்தின்பேரால், மத சம்பந்தமான கட்டளைகளின் பேரால் மறுக்கின்றோம் என்று சொல்லிக்கொள்ள முடியாது. அந்தப்படி யாராவது ஒருவர் தன்னை இந்துவென்று சொல்லிக்கொண்டு இம்மாதிரி—அதாவது, "ஒரு மனிதன் மனைவி இருக்க மறுமணம் செய்துகொள்ளலாமா?" என்று கேட்பாரேயானால், அப்படிப்பட்டவர் தம் மதத்தைவிடத் தன்னுடைய பகுத்தறிவையோ, அல்லது அனுபவ சவுகரியத்தையோ, அல்லது வேறு ஏதாவது ஒரு கொள்கையையோ

முக்கியமாகக் கருதிக்கொண்டு, இம்மாதிரி கேள்வி கேட்க வந்திருக்கிறார் என்றுதான் கொள்ளவேண்டும்.

ஆகவே, அக் கேள்விக்காரர் தன்னை இந்து என்றும் கருதிக்கொண்டு கேள்வி கேட்பதைவிடப் பகுத்தறிவுக்காரர் என்றோ, அனுபவக் கொள்கைக்காரர் என்றோ கருதிக் கொண்டு கேள்வி கேட்கிறார் என்று அறிந்தோமானால், அது விஷயத்தில் நாம் மகிழ்ச்சி அடைவதுடன், அவருக்கு நியாயம் மெய்ப்பிக்கும் விஷயத்தில் நமக்குச் சிறிதும் கஷ்ட மில்லை யென்றே எண்ணுகின்றோம்.

நிற்க, பொதுவாக ஒரு மனிதனுக்குத் தன் முதல் மனைவி (1) செத்துப்போன காலத்திலும், (2) மற்றொரு கணவனிடம் ஆசைகொண்டு வெளிப்பட்டுவிட்ட காலத்திலும் மறுமணம் செய்துகொள்வதை யாரும் குற்றம் சொல்லுவதில்லை. அதுபோலவே, (3) தீராத கொடிய வியாதிக்காரியாயிருக்கும் காலத்திலும் மறுமணம் செய்துகொள்வதை யாரும் ஆட்சேபம் செய்வதில்லை. (4) பைத்தியக்காரியாய்—புத்தி சுவாதீனமில்லாமற் போய்விட்ட காலத்திலும், யாரும் ஆட்சேபம் செய்வதில்லை. ஆகவே, பகுத்தறிவுக் காரரும் அனுபவக்கொள்கைக்காரர்களும் மேற்கண்ட முதல் சந்தர்ப்பம் தவிர, மற்ற மூன்று சந்தர்ப்பங்களிலும்கூட, மனைவியிருக்க மறுமணம் செய்வதை ஆட்சேபிக்க மாட்டார்கள். இனி, அய்ந்தாவது, ஆறாவது முதலியவைகளாகப் பல விஷயங்களைக் கவனிப்போம். (5) மனைவி அறியாமையாலோ, முரட்டுத்தனமான சுபாவத்தாலோ புருஷனை இலட்சியம் செய்யாமல் ஏறுமாறாய் நடந்துகொண்டு வருவதாக வைத்துக் கொள்வோம். (6) புருஷன் பெண்ணின் மனத்திற்குத் திருப்திப்படாததாலோ அல்லது வேறு காரணத்தாலோ புருஷனிடம் பெண்ணுக்கு அன்பும் ஆசையும் இல்லாமல் வெறுப்பா யிருப்பதாக வைத்துக்கொள்வோம். (7) மேற்கண்ட குணங்களுடன் அடிக்கடி தாய் வீட்டுக்குப் போய்விடுவதாக வைத்துக்கொள்வோம். (8) புருஷனுடைய கொள்கைக்கு நேர் மாற்றமான கொள்கையுடன் புருஷன் மனம் சதா சங்கடப்படும்படி பிடிவாதமாய் நடந்துகொள்ளும் சுபாவமுடையவள் என்று வைத்துக்கொள்வோம். இவைகள் மாத்திர மல்லாமல், மற்றுமிதுபோன்ற குணங்களுள்ள மனைவியிடம் அகப்பட்டுக்கொண்ட கணவன் கதி என்ன ஆவது என்பதைக் கவனிக்கவேண்டியது கேள்வி கேட்பவர்கள்—அதாவது, அனுபவக் கொள்கைக்காரர்கள் என்பவர்களின் முக்கிய கடமையாகும்.

இவை தவிர, புருஷனுக்கு 12 வயதிலும், பெண்ணுக்கு 10 வயதிலும் பெற்றோர் களாலோ, மற்றவர்களாலோ திருமணம் செய்யப்பட்டிருப்பதால், அவைகள் மணமக்கள் அனுசரிக்கவேண்டிய தர்மங்களுக்குக் கட்டுப்பட்ட மணங்களாகுமா? அல்லது திருமணங் கள் செய்து வைத்தவர்கள் அனுசரிக்கவேண்டிய தர்மங்களுக்குக் கட்டுப்பட்டவைகளாகுமா? என்பதும் கேள்வி கேட்கிறவர்கள்—அதாவது, பகுத்தறிவுக்காரர்கள் கவனிக்க வேண்டிய முக்கிய விஷயங்களாகும். இந்தக் காரணங்கள் தவிர, மற்றும் எது எப்படியிருந்தாலும் மனத்துக்குப் பிடிக்கவில்லை; அன்புக்குச் சிறிதும் பாத்திரமில்லை; வாழ்க்கைத் திருப்திக்கும் இயற்கை இன்பத்திற்கும் சிறிதும் பயன்படவில்லை என்று மணமகன் முடிவு செய்து கொள்ளத் தகுந்த மணமகளை அடைந்து விட்டால், அப்போது மணமகளின் கடமை என்ன? என்பதை மதக் கட்டுப்பட்டுக்காரரும் அனுபவக் கொள்கைக்காரரும் பகுத்தறிவுக்காரரும் பாமர பொதுஜனங்களும் சேர்ந்து கவனித்துப் பார்க்கவேண்டிய காரியமாகும்.

கடைசியாக இவைகளெல்லாம் ஒருபுறமிருக்க, இவைகளைப் பற்றிய யோசனையே சிறிதுமின்றி—'மற்றொருபுறம் எப்படியிருந்தாலும் பொறுத்துக் கொள்ளவும், சகித்துக் கொள்ளவும் வேண்டும்; ஒருகாலமும் மனைவியிருக்க மறுமணம் செய்துகொள்ளக்கூடாது' என்று ஒருவர் சொல்லுவாரானால், அப்படிச் சொல்லுகின்றவர் எந்தக் கொள்கையின்மீது, அல்லது என்ன அவசியத்தைக் கோரி, அல்லது என்ன நியாயத்தை உத்தேசித்து, எவ்வித

நன்மையை அனுசரித்து, அல்லது எந்தப் பகுத்தறிவைக்கொண்டு அப்படிச் சொல்லு கின்றார்; அல்லது எதிர்பார்க்கின்றார் என்று விளக்கப்பட வேண்டும்.

அப்பொழுதுதான் அது கவனிக்கப்படத்தக்கதாகும். ஏனெனில், சாதாரணமாகப் பேசுவோமானால், வெகு சாதாரண பாமரமக்கள் என்பவர்களும்கூட இக்காலத்தில் ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசும்போது—'அது சுருதி, யுக்தி, அனுபவம் ஆகிய மூன்றிற்கும் பொருத்தமாயிருக்கின்றதா?' என்று கேட்பது எங்கும் சகஜமாயிருக்கின்றதைப் பார்க் கின்றோம். அன்றியும், அம்மூன்று வார்த்தைகளின் அமைப்பும் முதலில் குறிப்பிட்ட சுருதிப்படி அதாவது, நமக்கு முன்பிருந்த அனுபவசாலிகளின் அபிப்பிராயங்கள் என் கின்ற முறையில் கவனிக்கவேண்டும் என்கின்ற தத்துவம் கொண்டதானாலும், அப்படிப் பட்ட அனுபவசாலிகளின் அபிப்பிராயம் எவ்வளவு சரியானதென்று சொல்லப்பட்டாலுங் கூட—மற்றும் அவ்விஷயமானது யுக்திக்கு (அதாவது நமது பகுத்தறிவுக்கு) ஒத்ததாயிருக் கின்றதாவென்று கவனிக்க வேண்டுமென்கின்ற தத்துவத்தையே கொண்டு யுக்தி என்பதை இரண்டாவதாக வைக்கப்பட்டிருக்கின்றதையும் பார்க்கின்றோம். அப்படியும்—அதாவது, யுக்திக்குப் பொருத்தமானதாக இருந்து விட்டதாகச் சொல்லப்படுவதானாலும் அது அனு பவத்திற்கு (அதாவது நடைமுறையில் கொண்டுசெலுத்த) ஏற்றதாயிருக்கின்றதா? என்று கவனித்துப் பார்க்கவேண்டும் என்கின்ற தத்துவத்தை வைத்தே அனுபவம் என்பதை முடிவில்—மூன்றாவதாக வைக்கப்பட்டிருக்கின்றது என்பது யாவருக்கும் விளங்கும். ஆகவே, ஒரு மனிதன் 'ஒரு மனைவி இருக்கும் போது மறுமணம் செய்துகொள்ளக் கூடாது' என்பது, இந்த மேற்கண்ட மூன்று பரீட்சைகளில் எந்தப் பரீட்சைக்கு விரோத மானதென்று கேட்கின்றோம்.

நிற்க, திருமணத்தில் மணமகனுக்கு மணமகளை வாழ்க்கைத் துணை என்று கருது கின்றோம். இந்நிலையில், மேலே ஆரம்பத்தில் சொல்லப்பட்ட 9 வகைப்பட்ட அசவுகரிய மான குணங்களமைந்த மணமகள் ஒரு மணமகனுக்கு அமையப்பட்டுவிட்டால், அது வாழ்க்கைத் துணையா, அல்லது வாழ்க்கைத் தொல்லையா என்பதை முதலில் கண்டிப்பாய்க் கவனிக்கவேண்டும். வேடிக்கையாக வெளியிலிருந்து பேசுகின்றவர்கள் உண்மையறியாமல் —நிலையறியாமல் சிறிதும் பொறுப்பற்ற முறையில் பாமர மக்களின் ஞானமற்ற தன் மையைத் தங்களுக்கு ஆதாரமாய் வைத்துக்கொண்டு, கண்மூடித் தனமாய்க் குற்றம் சொல்லக் கருதிக்கொண்டு, 'மனைவியிருக்க மறுமணம் செய்யலாமா?' என்று யார் வேண்டு மானாலும் பேசிவிடலாம். அதாவது, 'மனைவியிருக்க மறுமணம் செய்துகொள்வது— அக்கிரமம், அயோக்கியத்தனம்' என்பதாகச் சொல்லிவிடலாம். ஆனால், அந்தப்படி செய்துகொண்டது தப்பா; அல்லது இந்தப்படி சொன்னது தப்பா—என்பதையும் பகுத் தறிவைக் கொண்டாவது, அனுபவத்தைக் கொண்டாவது இந்தப்படி பேசுகின்றோமா —நினைக்கின்றோமா—இதில் பிரவேசிக்கின்றோமா என்றும் நினைத்துப் பார்த்தால், கடுகளவு அறிவுடையவனுக்கும் ஒருகாலமும் உண்மை விளங்காமற் போகாது என்று உறுதியாகச் சொல்லுவோம்.

கடைசியாக ஒன்று சொல்லுகின்றோம். ஒரு மனிதன் ஒரு விஷயம் தனக்கு இஷ்ட மில்லையென்றோ, இன்ன காரியம் செய்யத் தனக்கு உரிமை இருக்கவேண்டுமென்றோ, உரிமையிருக்கக்கூடாதென்றோ கருதுவதற்கு அருகதை உடையவன்தானா, அல்லது அற்றவர்களா என்பதையும்; இம் மாதிரியான தன் சொந்த விஷயங்களில் முடிவான அபிப்பிராயத்திற்கு வர அவனுக்கு உரிமையில்லையா என்பதையும் கவனிக்க வேண்டியது உண்மையான விடுதலையும் சுதந்திரமும் கோருகின்றவர்களின் கடமையாகும்.

நிற்க, வாஸ்தவத்திலேயே அன்பும் ஆசையுமில்லாத, அல்லது அவை தனக்கு ஏற்படாத ஒரு இடத்தில் மனிதன் எப்படி வாழ்வது? மக்களுடைய அன்புக்கும் ஆசைக்கும் இன்பத்திற்கும் திருப்திக்கும்தான் ஒரு பெண்ணுக்கு ஒரு ஆணும், ஒரு ஆணுக்கு ஒரு

பெண்ணும் சேர்ந்து மணம் (வாழ்க்கை ஒப்பந்தம்) செய்துகொள்வதா? அல்லது மணம் செய்துகொண்டதற்காக அன்பையும், ஆசையையும் திருப்தியையும் தியாகம் செய்வதா? என்பதை மனித ஜீவ சுபாவமுடைய ஒவ்வொருவரையும் யோசித்துப் பார்க்கும்படி வேண்டுகின்றோம்.

உலகிலுள்ள மூடப்பழக்க வழக்கங்களில்—அர்த்தமற்ற கட்டுப்பாடுகளில்—சிக்கிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் மக்களை அவற்றிலிருந்து விடுவிப்பது என்பது சுலபமான காரியமல்லவானாலும், அவ்விதக் கட்டுப்பாடுகளையும் கஷ்டங்களையும் ஒழிக்கவென்றே ஏற்பட்ட ஸ்தாபன நடவடிக்கைகளையே—'மூடப்பழக்க வழக்கப் படியும், குருட்டு நம்பிக்கைப்படியும் செய்யவில்லை' என்று குற்றம் சொன்னால், சொல்பவர்களுக்கு அறிவு என்பது ஏதாவது இருக்கின்றதா என்றுதான் கருத வேண்டியதிருக்கின்றது. ஏனெனில், இவ்வியக்கம் (சுயமரியதை இயக்கம்) அதற்காகவே ஏற்பட்டிருக்கும்போது, அதன் நடவடிக்கைகள் வேறு எப்படி இருக்கமுடியும்? ஆகையால், இவ்வித யுக்திக்கும் அனுபவத்திற்கும் மனித சுதந்திரத்திற்கும் இன்பத்திற்கும் திருப்திக்கும் விரோதமான கொள்கைகள் எதற்காகக் காப்பாற்றப்பட வேண்டும் என்னும் விஷயங்களை அன்பர்கள் நிடுநிலையில் இருந்து நேர்வழியில் சிந்தித்துப் பார்ப்பார்களாக.

நிற்க, சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்தவர்களுக்குள்ளாகவே மறுமண விஷயத்திலுள்ள அதிருப்தியைப்பற்றிச் சற்றுக் கவனிப்போம்.

சுயமரியாதை இயக்கத்தில் கலியாண ரத்து என்பதும் ஒரு திட்டமாகும். அந்தப் படியே செங்கற்பட்டு மாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, ஈரோடு மாநாட்டில் அதற்காக ஒரு சட்டம் செய்யவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே மணம் செய்துகொண்ட மணமக்கள் அந்தப்படியே கணவன் மனைவியையோ, மனைவி கணவனையோ கலியாண பந்தத்திலிருந்து நீக்கிவிட அல்லது நீக்கிக்கொள்ள உரிமை ஒப்புக்கொள்ளப்பட்டாய் விட்டது. இந்தப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட கொள்கை அமுலில் கொண்டுவரச் சட்ட சம்பந்தமான இடையூறு யாருக்காவது, எந்த மதத்திற்காவது இருக்குமானால், அதற்காகச் சட்டத்தை உத்தேசித்துக் கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதா? அல்லது சட்டங்களைக் கவனிக்காமல் நியாயம் என்று தோன்றியபடி நடந்துகொள்வதா? என்பதைக் கவனித்துப் பார்த்தால், அவர்களது அதிருப்திக்குச் சிறிதும் இடமிருக்காது என்றே கருதுகின்றோம்.

உதாரணமாக, சுயமரியாதைக் கொள்கைப்படி செய்யப்படும் திருமணங்களிலும் சில சட்டப்படி செல்லக்கூடாதவைகளாக இருந்தாலுமிருக்கலாம். அதாவது,

'மணமக்களிருவரும் வேறு வேறு சாதிகள்' என்று சொல்லப்படும் கலப்பு மணங்களும்; மூடப் பழக்க வழக்கங்களும் அர்த்தமற்றதும் அவசியமற்றதுமான சடங்குகள் செய்யப்படாத சில திருமணங்களும் செல்லுபடியற்றதாகவானாலும் ஆகலாம் என்று சட்ட வல்லுநர்கள் சொல்லுவதாகக் கேள்விப்படுகிறோம். அப்படியிருந்தாலும், கொள்கையிலிருக்கும் அவாவை உத்தேசித்துச் சட்டத்தைக் கவனியாமலும், அதனால் ஏற்படக்கூடிய பலன்களை இலட்சியம் செய்யாமலும் எல்லாவற்றுக்கும் துணிந்து பலர் மணம் செய்து கொள்வதை நாம் பார்க்கின்றோம். ஆகவே, மறுமண விஷயத்தில், முதல் 'மனைவி'யைச் சட்டப்படி கல்யாண ரத்துச் செய்யமுடியாமல் போய்விட்டதால், 'கல்யாண ரத்துச் செய்யாமல் மறுமணம் நடத்தப்பட்டது' என்று சொல்லப்படுவதைவிட—இம் மாதிரித் திருமணங்களில் சுயமரியாதைக்காரர்களுக்குக் கொள்கைப் பிசகோ, நியாப் பிசகோ இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை.

தவிரவும், முதல் மனைவி மணமகனுடன் ஒன்றாக வாழ்ந்து கொண்டு இருக்கும் போதுகூட, மறுமணம் செய்துகொள்ளப்படுவதையும், சுயமரியாதைக் கொள்கை ஏன் ஆதரிக்கின்றது என்பதைப் பற்றியும் சற்றுக் கவனிப்போம்.

மக்களின் அன்பும் ஆசையும் ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு, அது இன்ன விதமாக, இன்னாரோடு மாத்திரம்தான் இருக்கவேண்டும் என்பதாக நிர்ப்பந்திக்க எவ்வித நியாயமும் இருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. ஏனெனில், ஆசையென்பது ஜீவ சுபாவமானது. அதை ஏதோ ஒரு நிர்ப்பந்தத்திற்காகத் தடுத்து வைப்பது என்பது ஒரு வகையான அடிமைத் தனமேயாகும். அன்பு, ஆசை ஆகியவைகள் ஏற்படுவது ஜீவனுக்கு இயற்கைச் சுபாவம் என்றும், அது சுதந்திரமுடையதாயும் உண்மையுடையதாயும் இருக்கவேண்டும் என்றும், அதை ஒரு இடத்திலாவது ஒரு அளவிலாவது கட்டுப்படுத்துவதென்பது ஜீவசுபாவத்திற்கும் இயற்கைத் தத்துவத்திற்கும் மீறினதென்றும் ஒப்புக்கொள்கின்ற மக்கள், அன்பு ஒருவரிடம்தான் இருக்கவேண்டும் என்று சொல்ல முன் வருவது முன்னுக்குப்பின் முரண் என்றே சொல்லுவோம். ஆனால், அனுபவத்தில் உள்ள சில சவுகரிய, அசவுகரியங்களை உத்தேசித்தும், இயற்கைத் தடுப்பு, சமுதாய வாழ்க்கை நலக்கொள்கைமுறை முதலியவைகளை உத்தேசித்தும்—அன்பும் ஆசையும் கட்டுப் பாட்டுக்குள் அடங்கவேண்டியதாக ஏற்படலாம் என்பதை நாம் மறுக்க வரவில்லை. அன்றியும், ஒப்பந்தங்களினால் கட்டுப்படவேண்டியதாகவும், ஆசைப் பெருக்கால் தானாகவே கட்டுப்பட்டு விட்டதாகவும் போனாலும் போகலாம். அம்மாதிரி நிலைகளில் இம்மாதிரிக் கேள்விக்கே இடமில்லை. ஆதலால், அப்படிப்பட்ட காரியங்களை அவரவர் இஷ்டத்திற்கே விட்டுவிடவேண்டியதவசியமாகும். முடிவாக ஒன்று சொல்லி, இதை இப்போது முடிக்கின்றோம்.

அதாவது, இம் மாதிரியான கேள்விகளுக்கெல்லாம் ஒரேயடியாய் அடியோடு இடம் இல்லாமல் போகவேண்டுமானால், பொதுவாகப் பெண்கள் நிலைமை மாறியாகவேண்டும். ஏனெனில், மேற்கண்ட கேள்வி கேட்கப்படுவதற்குப் பெரிதும் அஸ்திவாரமாயிருக்கும் காரணமெல்லாம், 'இப்படிச் செய்துவிட்டால், முன்மணம் செய்துகொண்ட பெண்ணின் கதி என்ன ஆவது?' என்கின்ற கவலை கொண்டேதான் கேள்வி கேட்கப்படுகின்றது. எந்தெந்தக் காரணத்தால் புருஷனுக்குப் பெண் பிடிக்கவில்லையோ—ஒத்துவரவில்லையோ—அந்தக் காரணங்களால் பெண்ணுக்குப் புருஷன் பிடிக்காதபோது, இப்போது புருஷனுக்கு இருக்கவேண்டுமென்று சொல்லப்படும் சுதந்திரமும் சவுகரியமும் போல பெண்களுக்கும் ஏற்பட்டுவிடுமானால், பிறகு இந்த மாதிரியான அனுதாபமும் கவலையும் கொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட இடமே இருக்காது என்பதுதான்.

நம்மைப் பொறுத்தவரை ஆண்களுக்குச் சொன்ன விஷயங்கள் எல்லாம் பெண்களுக்கும் பொருந்துமென்றும், அவர்களுக்கும் ஆண்களைப் போலவே ஏற்படவேண்டுமென்றும், அம்மாதிரியே அவர்களும் நடந்துகொள்ளவேண்டுமென்றும், உலக வாழ்விலும் சமுதாயத்திலும் சட்டத்திலும் மதத்திலும் ஆண்களுக்குள்ள சவுகரியங்களும் உரிமைகளும் பெண்களுக்கும் இருக்கவேண்டுமென்றும், அப்பொழுதுதான் பெண்களுக்கு உண்மையான சுதந்திரம் ஏற்பட்டதாகும் என்பதோடு, உண்மையான—திருப்திகரமான இன்பத்தையும் ஆசையையும் அடையமுடியுமென்றும் கருதுகின்றோம்.

['பெண் ஏன் அடிமையானாள்?' என்ற புத்தகத்திலிருந்து. 11-ம் பதிப்பு : 1971]

## 12. ஒருதார மணம்

இந்துக்கள் என்று கூறப்படும் பிரிவினருக்குள் இன்று பலதார மணம் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. எவ்விதக் கொடுமைக்குட்பட்டாலும், திருமணத்தை ரத்து செய்து கொள்ளும் உரிமை மனைவிக்குக் கிடையாது. இன்றுள்ள 'இந்துச் சட்டம்' என்பது மனுதர்ம சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்டது. பெண்ணுக்கு எந்தவித உரிமையும் கிடையாது என்பதும் (மனு-9 : 3); கணவன் சொன்னபடி மனைவி

நடக்காவிடில் உலகத்தாரால் நிந்திக்கப்பட்டு நரியாய்ப் பிறந்து பாவப் பிணியால் வருந்துவாள் என்பதும் (9 : 30)—இன்னும் பல கட்டுப்பாடுகளும் பெண்களுக்கு மட்டுமே விதிக்கப்பட்டிருப்பதை மனுதர்மத்தில் காணலாம். இவைகளை அடிப்படையாக வைத்துச் செய்யப்பட்டதுதான் இந்துச் சட்டம். இதைத் தலைகீழாக மாற்றியமைத்தாலொழிய, திராவிடப் பெண்களுக்குச் சுயேச்சையில்லை. இந்தத் துறையில் 'ராவ் கமிட்டி' என்ற 'இந்துச் சட்டத் திருத்த விசாரணைக் கமிட்டி'யின் முடிவுகள், விரைவில் இந்திய சட்டசபையில் விவாதத்திற்கு வருமென்று அறிகிறோம்.

அரசியல் நிர்ணய சபையில் செய்யப்படவிருக்கும் முடிவுப்படி, இம் மாதிரிச் சட்டங்களை மாற்றும் உரிமை, இனிமேல் மாகாண சட்டசபைகளுக்கே வழங்கப்படும் என்ற நம்பிக்கையிருக்கிறது. அதுவரையில் காத்திருப்பதற்குப் பதிலாக தோழர். ஏ. காளேஸ்வர ராவ் என்பவர் இருதார மணத்தைத் தடுப்பதற்காகவும், திருமண ரத்து உரிமையை இரு பாலருக்கும் வழங்குவதற்காகவும், சென்னை சட்டசபையில் ஒரு மசோதாவைக் கொண்டு வரப்போவதாகத் தெரிகிறது.

இந்த மாகாணத்தைப் பொறுத்த வரையில், நமது 20 ஆண்டுப் பிரச்சாரத்தின் பயனாக, இம் மசோதாவுக்குப் பொதுமக்களின் எதிர்ப்பு இருக்காதென்றே கூறலாம். படித்த ஒரு சிலரும், வைதிகப் பித்து நீங்காதவரும் இம் மசோதாவை எதிர்க்கலாமே தவிர—மற்றவர்கள், குறிப்பாகப் பெண்மக்கள் எதிர்க்கமாட்டார்கள் என்றே நினைக்கிறோம்.

முதலாவது சுயமரியாதை மாநாடு செங்கற்பட்டில் கூடியபோது, அதாவது சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்பு, திருமண ரத்து உரிமையை வற்புறுத்தி அம் மாநாட்டில் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. அதற்குப் பிறகு சில மாதங்கள் கழித்து, சென்னையில் நடைபெற்ற மாதர்கள் மாநாட்டில், அத் தீர்மானத்தைக் கண்டித்தும், 'திருமண ரத்து மத விரோதமானது' என்றும் தீர்மானிக்கப்பட்டது ஒரு சிலருக்காவது நினைவிருக்கலாம். அவ்வளவு பின்னணியிலிருந்த இம் மாகாண மாதர்கள் இன்று எவ்வளவோ முன்னேறியிருக்கின்றனர். ஆதலால், படித்த பெண்கள் சார்பில் இம் மசோதாவிற்கு எதிர்ப்பிருக்காதென்றே கூறலாம்.

பிள்ளைப் பேறில்லை என்ற காரணத்தைக் காட்டியும், வேறு அற்பச் சண்டைகளைக் கொண்டும், 'இந்துமத ஆண்கள்' ஒரு மனைவியிருக்கும்போது மற்றொரு பெண்ணையும் மணந்துகொள்ளுகின்றனர். அவ்வாறு செய்பவர்கள் இருவரும் மனமொப்பி, திருமண ஒப்பந்தத்தை ரத்து செய்து கொண்ட பிறகாவாது செய்தாலும் பரவாயில்லை. அதைவிட்டு, ஆண்மட்டும் சர்வாதிகாரத்துடன் மற்றொரு பெண்ணை மணந்துகொள்கிறான். பெண்ணும் இதே காரணத்தைக் கொண்டு (பிள்ளைப் பேறில்லாமை), சர்வாதிகாரத்துடன் மற்றொரு ஆணை மணந்து வீட்டில் சேர்த்துக் கொண்டால் கணவன் சும்மாயிருப்பானா?

இது மட்டுமல்ல; திருமணமான ஆண்களில் சிலர் பிற பெண்களுடன் நேசமாகி அதைப் பெருமையாகவும் வெளிப்படையாகவும் கூறிக்கொள்ளும் அக்கிரமச் செயலை சென்னை நகரத்தைத் தவிர வேறெங்கும் காணமுடியாது.

இம் மாதிரிக் கொடுமைகளைத் தடுப்பதற்கு இந்தப் புதிய மசோதா உதவி செய்யும்.

திருமண ரத்து உரிமை சட்டத்திலிருக்குமானால், நாள்தோறும் ஆயிரக்கணக்கான திருமண ரத்துக்கள் நடைபெறும் என்று சிலர் விஷமப்பிரச்சாரம் செய்வார்கள். இது பெருந் தவறு. சட்டத்திலிருக்கும் ஒருரிமையை எல்லோரும் செய்வதென்பது எளிதல்ல. 'இந்து' என்று கூறப்படுகிறவன் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணந்து கொள்ளலாம் என்பதைச் சட்டம் அனுமதிப்பதனால், எத்தனை பேர் பல மனைவிகளுடன் இருக்கிறார்கள்?

எனவே, திருமண ரத்து என்பது கணவன்—மனைவி ஆகியவர்களுக்கு இருக்க வேண்டிய தற்காப்பு ஆயுதம்; இதைக்கொண்டு இருவருமே அடிக்கடி குத்திக் கொள்வார்கள் என்று கூறுவது அபத்தம்.

இந்த மசோதாவில், 'எல்லாத் திருமணங்களையும் சர்க்காரில் பதிவு செய்துவிட வேண்டியது அவசியம்' என்ற ஒரு விதியையும் சேர்த்துக் கொண்டால்தான் நல்லது.

இம் மசோதாவைக் காங்கிரஸ் மந்திரிசபை நிறைவேற்றி வைக்குமா, அல்லது ஒரு விசாரணைக் கமிட்டியை நியமித்துவிட்டுத் தட்டிக்கழிக்குமா என்பது தெரியவில்லை. ஆண்களே நிறைந்திருக்கும் சட்டசபையிலிருந்து (மசோதாவைக் கொண்டுவருபவர் ஆண் தான் என்றாலும்) பெண் சமுதாயத்திற்கு அதிக நியாயம் கிடைக்கும் என எதிர்பார்க்க முடியாது. இம் மசோதாவை உடனே நிறைவேற்றி வைக்காவிட்டால், சட்டசபையிலுள்ள பெண் அங்கத்தினர்களனைவரும், பெரிய பெண் பட்டாளங்களைத் திரட்டிக் கிளர்ச்சி செய்தால் வெற்றி கிடைக்கும். இம் மசோதா விஷயத்தில் பெண்களுக்கெதிராக சர்வ கட்சி ஆண்களும் ஒன்றுசேர்ந்துவிடுவார்கள்; பெண்ணினம் உஷாராயிருக்கட்டும்!

['விடுதலை'—தலையங்கம்—4-9-1946]

## 13. கர்ப்பத் தடை

கர்ப்பத் தடையின் அவசியத்தைப்பற்றி நாம் கருதும் காரணங்களுக்கும் மற்றவர்கள் கருதும் காரணங்களுக்கும் அடிப்படையான வித்தியாசமிருக்கின்றது. அதாவது, பெண்கள் விடுதலையடையவும் சுயேச்சை பெறவும் கர்ப்பத் தடை அவசியமென்று நாம் கூறுகின்றோம். மற்றவர்கள், பெண்களின் உடல் நலத்தை உத்தேசித்தும், பிள்ளைகளின் நன்மையை உத்தேசித்தும், நாட்டின் தரித்திர திசையை உத்தேசித்தும், குடும்பச் சொத்து குறையாமல் இருக்கவேண்டுமென்பதை உத்தேசித்தும் கர்ப்பத் தடை அவசியம் என்று கூறுகின்றார்கள். இதை மேல்நாட்டினர் பலர்கூட ஆதரிக்கிறார்கள். ஆனால், நமது கருத்தோ இவைகள் எதையும் முக்கியமாய்க் கருதினதல்ல. மற்றெதைக் கருதி என்றால், முன் சொன்னது போல் பொதுவாகப் பெண்களின் விடுதலைக்கும் சுயேச்சைக்குமே கர்ப்பம் விரோதியாய் இருப்பதால், சாதாரணமாய்ப் பெண்கள் பிள்ளை பெறுவதை அடியோடு நிறுத்திவிட வேண்டுமென்கிறோம். அதுமாத்திரமல்லாமல், பல பிள்ளைகளைப் பெறுகின்ற காரணத்தால் ஆண்களும்கூட சுயேச்சையுடனும் விடுதலையுடனும் இருக்கமுடியாதவர்களாக இருக்கின்றார்கள். இதன் உண்மையைச் சாதாரணமாய் ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தங்கள் சுதந்திரத்திற்குக் கஷ்டம் வருகிறது என்கிற காலத்தில் பேசிக்கொள்வதைப் பார்த்தாலே தெரியும்.

ஒரு மனிதன் தான் கஷ்டநிலையில் பேசும்போது, "நான் தனியாய் இருந்தால் ஒரு கை பார்த்துவிட்டு வருவேன். 4, 5 குழந்தைகள் ஏற்பட்டுவிட்டதால் இவைகளைக் காப்பாற்ற வேண்டுமே என்கிற கவலையால் பிறர் சொல்லுவதை யெல்லாம் கேட்டுக் கொண்டு ஆளாயிருக்கவேண்டி இருக்கின்றது" என்றே சொல்லுகிறான். அதைப் போலவே பெண்ணும், "நான் தனியாய் இருந்தால் எங்காகிலும் தலையின்மேல் துணியைப் போட்டுக்கொண்டு போய்விடுவேன். அல்லது ஒரு குளத்திலாவது ஆற்றிலாவது இறங்கிவிடுவேன்; இந்தக் கஷ்டத்தைச் சகித்துக்கொண்டு அரை நிமிடமும் இருக்க மாட்டேன்; ஆனால், இந்தக் குழந்தைகளையும் குஞ்சுகளையும் எப்படி விட்டுவிட்டுப் போகமுடியும்?" என்றே சொல்லுகிறாள்.

உலகத்தில் மக்கள் கஷ்டப்பட்டு தன்தன் ஜீவனத்திற்கே—பொருள் தேடுவதற்கே சுதந்திரத்தை விற்று அடிமையாகவேண்டிய நிலையில் இருக்கும்போது, பிள்ளைகளையும்,

குட்டிகளையும் காப்பாற்ற வேண்டிய அவசியமும் தலைமேல் இருக்குமானால், அந்த இடத்தில் எப்படி சுயேச்சை இருக்கமுடியும்? ஆகையால், ஆண் பெண் இருவர்களின் சுயேச்சைக்குமே கர்ப்பமாவதும் பிள்ளைகளைப் பெறுவதும் இடையூறான காரியமாகிறது. அதிலும் பெண்கள் சுயேச்சைக்குக் கர்ப்பம் என்பது கொடிய விரோதியாய் இருக்கிறது. அதனால்தான் நாம் கண்டிப்பாய் 'பிள்ளை பெறுவதை நிறுத்தியே ஆகவேண்டும்' என்கிறோம்.

அன்றியும், பெண்கள் வியாதியஸ்தர்களாய் ஆவதற்கும், சீக்கிரம் கிழப் பருவம் அடைவதற்கும் ஆயுள் குறைவதற்கும் இந்தக் கர்ப்பம் என்பதே மூல காரணமாக இருக்கின்றது. தவிரவும், ஆண்களில் பிரம்மசாரிகளும் சந்நியாசிகளும் சங்கராச்சாரியர்களும் தம்பிரான்களும் பண்டார சன்னியாசிகளும் ஏற்பட்டிருப்பதுபோல், பெண்களிலும் பிரம்மச்சாரிகள் ஏற்படுவதற்கு இந்தக் கர்ப்பமே தடையாய் இருந்து வருகின்றது. இந்தப் படி, நம்மில் ஒருவருக்கொருவர் கருத்தும் காரணமும் எப்படி இருந்தபோதிலும் கர்ப்பத் தடை என்பதில் அபிப்பிராயபேதமில்லாதிருப்பது குறித்து நாம் மகிழ்ச்சி அடைகின்றோம்.

இந்தத் தேசத்தில் பிறக்கும் குழந்தைகளை எல்லாம் இந்தத் தேசத்து அரசாங்கமே வளர்த்து, கல்விகொடுத்து 'மேஜர்' ஆக்கிவிடவேண்டும் என்கின்ற ஒரு நிபந்தனை இருந்திருக்குமானால்—அப்படிக்கில்லாமல் யாரோ பெற்று யாரோ வளர்த்து மக்களைப் பெருக்கி அடிமைக்கு விடுவதனால்—சர்க்கார் எப்படி அதை வேண்டாம் என்று சொல்ல முன்வருவார்கள்? உண்மையான சுகாதாரத்தில் பிள்ளைப்பேற்றைத் தடுப்பது முக்கியமான சுகாதாரம் என்பதை டாக்டர் பட்டம் பெற்றவர்கள்கூட அறியாமல்போனது வருந்துவதற்குரியதாகும்.

மதுவிலக்குப் பிரச்சாரத்தைவிட, தொத்து வியாதிகளை ஒழிக்கும் பிரச்சாரத்தை விட இந்தக் கர்ப்பத்தடைப் பிரச்சாரம் மிகவும் முக்கியமானதென்பதே நமது அபிப்பிராயம். ஆதலால், இந்தக் கர்ப்பத்தடைக்கு நமது நாட்டில் ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தி அதன் மூலம் பிரச்சாரம் செய்யப் பொதுமக்களில் சிலராவது இதுசமயம் முன்வரவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறேன்.

['குடி அரசு'—தலையங்கம்—6-4-1330]

ஒருவன் தன்னால் காப்பாற்றக்கூடியதற்கும் அதிகமாகப் பிள்ளைகளைப் பெற்றுக் கஷ்டப்பட்டு என்ன பயன் என்பது கவனிக்கத் தக்கதாகும். 'உலகம் விருத்தியாக வேண்டாமா?' என்ற சொல் சுத்த முட்டாள்தனமானது. சம்போக விஷயங்களில் கவலையற்றும் முரட்டுத்தனமாயும் அளவுக்கு மீறியும் நடந்துகொள்வதால் மனிதர்களுக்கு ஏற்படும் வியாதிகளைப் போலவேதான் குழந்தைகள் ஏற்படுவதும் என்பதே தவிர அதற்கும் இதற்கும் சற்றும் வித்தியாசமே இல்லை. சம்போக உணர்ச்சி உள்ள உயிர்களில் மனிதனைத் தவிர வேறு எந்த உயிருக்கும், குழந்தை பெறுவதற்காக என்கின்ற எண்ணத்தின்மீது உணர்ச்சி தோன்றுவதே கிடையாது. மனிதன் பகுத்தறிவுக்காரன் என்கின்ற ஆணவத்தால் அவனுக்கு ஏற்படும் அனேக முட்டாள்தனமான செய்கைகளைப்போல், குழந்தை பெறவேண்டும் என்கின்ற முட்டான்தனமும் ஏற்பட்டு, அது ஒரு ஆசையாகி, சொத்தாகி, 'மோட்சத்திற்கு' உதவும் காரியமாகி, கடைசியாய் வீண் துன்பமும்பட்டு மற்றவர்களுக்கும் தொந்தரவு கொடுப்பதைத் தவிர வேறு ஒரு பயனும் இல்லை.

மேலும், பிள்ளை பெறுவதினாலேயே பெண்கள் சமூகம் அடிமையாகி அனேக ஆபத்துக்களுக்கும் வியாதிக்கும் உள்ளாகி அற்ப ஆயுளுடன் துன்பமும் படவேண்டியதாகி, அவர்கள் வாழ்வே பரிதாபத்திற்குரியதாக முடிகின்றது. பிள்ளைகளைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு தங்களுக்கே என்று கருதுவதால் சுதந்திரமும் வீரமும் இன்றி அடிமையானதுமான காரியங்களுக்கு ஆளாகிறார்கள். பெண்கள் துன்பம் இப்படி இருக்க,

பொதுவில் வேலையில்லாத் துன்பத்தை நீக்கவும், மக்கள் கவலையும் தொல்லையும் இல்லாமல் இருக்கவும் பிள்ளைப்பேற்றைக் குறைப்பது என்பது தக்க வழியாகும்.

['குடி அரசு'–தலையங்கம்—14–12–1930]

ஒரு தேசத்து மக்கள் தேக ஆரோக்கியமும் பலமும் வீரமும் சுயமரியாதையும் அறிவும் உள்ளவர்களாக இருக்கவேண்டுமானால், அவர்கள் குழந்தைப்பருவம் முதற் கொண்டே தங்கள் பெற்றோர்களால் கவனிக்கப்பட்டும் கல்வி கற்பிக்கப்பட்டும் விசாரமில்லாமல் மன உல்லாசமாகவும் வளர்க்கப்படவேண்டும். அவ்விதம் பெற்றோர்களால் குழந்தைகள் வளர்க்கப்பட வேண்டுமானால், பெற்றோர்கள் தங்கள் சக்திக்கும் தகுதிக்கும் போதுமான அளவே குழந்தைகளை அளவோடு நிறுத்திக்கொள்ளவேண்டும். அப்படி இல்லாமல், சக்திக்கும் அளவுக்கும் மீறி அதிகக் குழந்தைகளைப் பெற்றால், கஷ்டத்திற்குள்ளாவதுடன் குழந்தைகளும் பலவீனர்களாகவும் சவுகரியமற்றவர்களுமாகி, அவர்களைக் கொண்ட தேசமும் தரித்திரத்தில் மூழ்கி மற்ற மக்களுக்கும் துன்பத்தை விளைவிக்க வேண்டியவர்களாகி விடுவார்கள்.

உதாரணமாக, நமது நாட்டையே எடுத்துப் பார்ப்போம். சில குழந்தைகளைக் கொண்ட சிறிய குடும்பங்களுக்கும், அதிகமான பிள்ளைகுட்டிகளைக்கொண்ட பெரிய குடும்பங்களுக்கும் உள்ள வித்தியாசங்களை நாம் உள்ளங் கை நெல்லிக்கனிபோல் அறிகின்றோம். முதலாவது, பிள்ளைகளை அதிகம் பெறப்பெற, பெற்றோர்களின் சுகபோகங்கள் தானாகவே குறைந்துகொண்டு வருகின்றன. இதுபோலவேதான், ஒரு நாடும் தனது சக்திக்கு மீறி மக்களை உடையதாகிவிட்டால், அது சதாகாலமும் பஞ்சத்தினாலும் நோயினாலும் துன்பப்பட்டுக்கொண்டு இருக்கவேண்டியதோடு, தன் அழகையும் முற்போக்கையும் சுயமரியாதையையும் இழந்து தயங்கவேண்டியதாக இருக்கின்றது.

இந்த உண்மை அறியாமலே இதுவரை அனேக சமூக சீர்திருத்தக்காரர்கள் தங்கள் நாட்டின் மக்கள் சமூகத்தின் முற்போக்கிற்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் வேறு எத்தனையோ துறைகளில் உழன்று துன்பப்பட்டும் பயனடையாமல் சலிப்பின்மீது கடைசியாக ஒரு நாட்டு மக்களை, மற்றொரு நாட்டு மக்கள் வெறுக்கவேண்டியவர்களாகி விட்டார்கள்; சதாகாலமும் பிறர்மீதே குற்றம் சொல்லவேண்டியவர்களாகவுமாகி விட்டார்கள்; நன்றாய் வாழ்பவர்களின்மீது பொறாமைப்படவேண்டியவர்களாகவும் மற்றவர்களைப் பட்டினி போட்டால்தான் தாம் வாழலாம் என்று நினைக்கவேண்டியவர்களாகவுமாகி விட்டார்கள்.

ஆனாலும், சில நிபுணர்கள் இவ் விஷயங்களை நடுவுநிலைமையிலிருந்து ஆராய்ச்சி செய்துபார்த்து, இவ்விதக் கொடுமையான நிலைமைக்கு உண்மையான காரியங்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

முதலில் ஜனங்கள் அதிகமாகப் பிள்ளைகளைப் பெற்று மனித சமூகத்தை அதிகப் படுத்திவிடக்கூடாது. இந்த முடிவானது இப்போது மேல்நாட்டின் அறிவாளிகள், பொது நலசேவைக்காரர்கள், வைத்திய–பொருளாதார நிபுணர்கள் பலராலும் ஒப்புக்கொள்ளப் பட்டு, இத் துறைகளில் இறங்கி, மேலும் மேலும் ஆராய்ச்சி செய்து மிக்க முற்போக்கான மார்க்கங்களையும் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

அன்றியும், இந்தத் தத்துவத்தை அனேக அறிஞர்கள் தங்கள் வாழ்க்கைகளில் அமுலுக்குக் கொண்டுவந்து இருக்கிறார்கள். அதாவது, மேல்நாட்டார்களில் படித்தவர்கள் என்பவர்களாலேயே கர்ப்பம் தரிக்காமல் இருக்கத்தக்க அனேக வழிகள் கையாண்டுவரப் படுகின்றன. இதற்காகப் பல சாதனங்களையும் கண்டுபிடித்துப் பொதுமக்களுக்கு அறிவித்து, சில சாதனங்களை வினியோகித்தும் வருகின்றார்கள். ஆனால், சாதாரண

ஏழை ஜனங்களும் பாமர ஜனங்களும் இதன் உண்மைத் தன்மையை உணரவோ பயன் அடைய முடியாமலோ இருந்து வருகிறார்கள்.

உண்மையிலேயே, கர்ப்பத்தடை செய்துகொள்ளவேண்டியவர்கள் ஏழை மக்களே யாவார்கள். ஆனால், இவர்களோ இம் மாதிரியான—கருத்தரிக்காமல் இருப்பதற்கான காரியங்களைப்பற்றிப் பேசுவதுகூட நாகரிக விரோதமான பேச்சென்று கருதுகிறார்கள். அறிவில்லாத பொதுமக்களும் மதவிஷயத்திலும், கடவுள் விஷயத்திலும் கண்மூடித்தன மான மூடபக்தியுள்ளவர்களும் இதை மதவிரோதமானதென்றும் பாவகரமானதென்றும் கடவுள் கோபத்திற்கு இலக்கான காரியமென்றும் பேசி, இந்தத் தத்துவங்களை எதிர்த்து வருவதால், ஏழைமக்களும் பாமரமக்களும் இப்படி ஒரு மார்க்கம் இருக்கிறது என்று அறியக்கூட சவுகரியமில்லாமல் போய்விட்டது.

ஆனால், மேல்நாட்டில் டாக்டர். மாரீ ஸ்டோப்ஸ் என்கின்ற ஓர் ஆங்கிலப் பெண் தைரியமாக முன்வந்து, எவ்விதப் பழிக்கும்எதிர்ப்பிரச்சாரத்திற்கும் அஞ்சாமல் கர்ப்பத்தடையைப் பிரச்சாரம் செய்யத் துணிந்ததன் பயனாய், இப்போது இவ்விஷயம் எங்கும் சாதாரண மாய் ஆனதும் சகஜமானதுமான விஷயமாய்ப் பேசிக்கொள்ளும்படியாய்விட்டது. அது மாத்திரமல்லாமல், மேல்நாடுகளில் பல இடங்களில் பிள்ளைப்பேற்றைத் தடுக்கும்படியான வசதிகள் சம்பந்தமாகப் பல வைத்தியசாலைகள் ஏற்படுத்தப்பட்டும் இருக்கின்றன. கருத் தரிக்காமல் இருக்கவேண்டுமென்று ஆசைப்படுபவர்களுக்கு அம் மார்க்கங்களைக் கற்றுக் கொடுப்பதுடன், அதற்கு வேண்டிய சாதனங்களையும், கையாளும் முறைகளையும் போதிக்கின்றார்கள். மருந்து வியாபாரக் கடைகளில் கர்ப்பத்தடைக்கு அனுகூலமான மருந்துகளும் சாதனைக் கருவிகளும் விற்பனைசெய்யவும் ஏற்பாடுகள் செய்கிறார்கள்.

இதைச் சட்ட விரோதமென்றும் யாரும் சொல்லவில்லை. சட்ட விரோதமான காரிய மெல்லாம், அன்னியனுக்கும் தனக்கும் துன்பத்தையும் நஷ்டத்தையும் கொடுக்கக்கூடிய காரியங்களைத்தான் சொல்லலாம். இதனால் யாருக்கும் எவ்வித நஷ்டமோ கஷ்டமோ அதிருப்தியோ ஏற்படுவதில்லை.

அன்றியும், இந்தக் கர்ப்பத்தடை முறை என்பது கர்ப்பம் ஏற்படாமல் தடுப்பதற்கு உரியதே ஒழிய, கர்ப்பம் ஏற்பட்ட பிறகு அதைக் கலைப்பதற்காக அல்ல. அதற்கு இந்த முறைகள் பயன்படவும் மாட்டா. கர்ப்பம் ஏற்பட்ட பிறகு கரைப்பது என்பது தாயின் சரீர சக்திக்கும்—சில சமயங்களில் உயிருக்குமே ஆபத்தை விளைவிக்கக் கூடியதாயிருப் பதால், கண்டிப்பாக அந்த முறையை யாரும் கையாளக்கூடாது. கர்ப்பத்தைக் கலைக்கும் முறை எதுவானாலும் அது கண்டிப்பாக நீக்கப்படவேண்டியதேயாகும். தேசப் பொது நன்மையையும், சமூக நன்மையையும் மாத்திரமே உத்தேசித்து அறிஞர்கள் கர்ப்பத் தடையைக் கண்டுபிடிக்கவில்லை.

கர்ப்பத்தடை அவசியத்தை விளக்குவோமாயின், பெண்ணானவள் திட சரீரமில்லா மலும் காயலாவுடனும் சரியான அமைப்பு பொருந்திய சரீரமில்லாமலும் இருக்கின்ற சமயத்தில் கர்ப்பம் தரித்துப் பிள்ளைகளைப் பெறுவதென்பது அவளுக்கு மிக அபாயகர மானதாகும்.

சயரோகத்தாலும், நீரிழிவு வியாதியாலும், நெஞ்சுத் துடிப்பினாலும் பீடிக்கப் படுகின்ற பெண்களும், பிள்ளை பெறும் துவாரம் மிகச் சிறுத்து இருக்கும் பெண்களும் கர்ப்பம் தரிப்பது மிக்க ஆபத்தாகும்.

பிரசவத்தினால் சரீர மெலிவும் பலக்குறைவும் ஏற்படுகின்ற சுபாவ சரீரமுடைய வர்கள் மறுபடியும் மறுபடியும் கர்ப்பமானால் சரீரம் மிகவும் பலவீனமடைந்துவிடும். ஒரு பெண் ஒரு குழந்தையைப் பெற்று அது நன்றாகப் பால் குடித்து வளருவதற்கு

முன்னாலும், முதலில் பிள்ளை பெற்ற பலவீனம் நீங்குவதற்கு முன்பும் கர்ப்பமாகிவிட்டால் முதல் குழந்தை சவுகரியமில்லாமல் போவதோடு, மறு குழந்தையைப் பெறுவதற்கும் போதிய சக்தி இல்லாமல் போய்விடும்.

பெண்ணும் ஆணும் தகுந்த வயதடைவதற்குமுன், பெண் கர்ப்பம் தரித்துவிட்டால் அந்தக் குழந்தைகள் இளமைப்பருவத்தில் காய்ப்பாகி உறுதியற்ற உடற்கட்டுடையதாகி விடும். குடும்பத்திலும் போதிய வரும்படி இல்லாத நிலையில் பெண்கள் பிள்ளைகளைப் பெற்றுவிட்டால், தரித்திரமும் கஷ்டமும் அதிகமாகி வாழ்க்கை திருப்தியற்றதாகிவிடும்.

அன்றியும் பெண் ருதுசாந்தியானவுடன் பெண் கர்ப்பமாகிவிட்டால் கொஞ்சகாலமாவது தம்பதிகள் இயற்கை இன்பம், கலவி இன்பம் அடைவதற்குச் சாவகாசமில்லாமல் போய்விடும்.

இவ்வளவு விஷயங்களில் பெண்கள் கர்ப்பமாவது அசம்பாவிதமாயிருப்பதுடன், பெண்களின் சுதந்திர வாழ்வுக்கும் இந்தக் கர்ப்பமானது பெரிய இடையூறாயிருக்கின்றது. என்னவெனில், பெண்களுக்கு கர்ப்பத்தை உண்டாக்குகின்ற பொறுப்பு மாத்திரம் ஆணைச் சேர்ந்ததாயிருக்கின்றதே தவிர, மற்றபடி கர்ப்பமான நிமிடம் முதல் பிள்ளை பெறும்வரை அதன் பொறுப்பு முழுவதும், பிள்ளை பெறும்போது அடையும் பிரசவ வேதனையும், அதனால் உண்டாகும் ஆபத்துக்களும் பெண்களே அடைகின்றார்கள். பிள்ளையைப் பெற்ற பின்பும் தாயானவள்தான் தனது இரத்தத்தைப் பாலாக்கிக் குழந்தைகளுக்கு ஊட்டி வளர்க்கின்றாள். குழந்தைகளுக்கு வரும் வியாதிகளுக்கும் தானே பத்தியமிருக்கவேண்டியவளாகிறாள். அதைச் சுமந்து போஷிக்கும் வேலை முழுவதும் தாயே செய்ய வேண்டியவளாகிறாள்.

பெண்ணானவள் ஒன்றிரண்டு பிள்ளைகளைப் பெற்றவுடனே சகலவித சுகபோகங்களிலும் விரக்தியுடையவளாகி விடுகின்றாள். குழந்தை பெற்றவுடனே குழந்தையின் போஷணையையும் வளர்ச்சியையும் உத்தேசித்துத் தனது சுதந்திரத்தை விட்டு, புருஷனுக்கும் குடும்பத்திற்கும் அடிமையாக வேண்டியவளாகிறாள்.

புருஷன் தனக்கு இஷ்டமான பெண்ணை மணந்து கொள்வதற்கும், பெண்சாதி ஒரு புருஷனைத் தவிர வேறு எந்தப் புருஷனை எந்தக் காரணங்கொண்டும் மணந்துகொள்ள முடியாததற்கும் இக்குழந்தைகளைப் பெறுவதே பெருத்த தடையாயிருக்கிறது. பிள்ளைகளைப் பெறுவதாலேயே பெண்கள் சுதந்திரம், மானம், அறிவு எல்லாவற்றையும் விட்டுவிட நேரிடுகின்றது. சிறிதளவாவது சுயேச்சையுள்ள பெண்ணாய் விளங்குவதைவிட, பிள்ளைகளைப் பெறும் அடிமையான இயந்திரமாகவே இருக்க வேண்டியதாய் இருக்கின்றது. இதுவரை கூறிவந்தவைகளாலும் இன்னும் பல காரியங்களாலும் பெண்கள் கர்ப்பத்தடையை அனுசரிக்கவேண்டியது அவசியமாகும்.

['குடிஅரசு'—கட்டுரை—1-3-1931]

## 14. தனியுடைமையும் பெண்ணடிமையும்

பெரியோர்களே! தோழர்களே!

இத் திருமணத்தில் இரண்டு மாறுதல்கள் இருக்கின்றன. மணமக்கள் கலப்புத் திருமணம் என்ற பேரால் தமது வாழ்க்கை ஒப்பந்தத்தை நிறைவேற்றிக்கொண்டிருப்பதும், சாதாரணமாக நமது நாட்டில் நடைபெற்றுவரும் திருமணங்களில் காணப்படும் சடங்குகளில் அல்லாமல், பதிவு முறைத் திருமணம் செய்துகொண்டிருப்பதும் ஆகிய இவைதான் இரு முக்கிய மாறுதல்கள் ஆகும்.

முதலாவது மாறுதல் ஒரு முக்கியமான போலி உணர்ச்சி; இதிலொன்றும் கலப்பில்லை. மணமக்கள் இருவரும் ஒரே இனத்தை—அதாவது திராவிட இனத்தைச் சேர்ந்தவர்களே தவிர, மணமகன் நீக்ரோ வகுப்பைச் சேர்ந்தவரோ, மணமகள் ஆரிய வகுப்பைச் சேர்ந்தவரோ அல்லர். எனவேதான், கலப்பு என்பது வெறும் போலி உணர்ச்சி என்று குறிப்பிட்டேன். சட்டத்தின்படியும் சாஸ்திரத்தின்படியும் இவர்கள் ஒரே வகுப்பைச் சார்ந்தவர்கள்தான் என்றாலும்—இன்றைய நடைமுறைப் பழக்கவழக்கத்தில் இவர்கள் குடும்பங்கள் வெவ்வேறு குடும்பங்களாகவே கருதப்பட்டுவருகின்றன. இப்படி ஒரே இன மக்கள் வெவ்வேறு சாதியினராகப் பிரிந்து வாழ்வது தவறு. இப் பிரிவினைகளை எப்படியும் தகர்த்தெறிய வேண்டும் என்று திடசங்கற்பம் கொண்டு, அச் சங்கற்பத்தின் படியே, பல எதிர்ப்புக்களிடையேயும் தமது திருமணத்தை நடத்திக்கொண்டமைக்காக இம் மணமக்களை நாம் பாராட்ட வேண்டியதுதான்.

இம் மணமக்களுடைய பெற்றோர்களும் பணக்காரர்கள்தான். ஒருவரை ஒருவர் விரும்பிய இவர்கள், தம் விருப்பத்தைப் பெற்றோர்களுக்குத் தெரிவித்து அனுமதி கோரினர். மணமகளுடைய பெற்றோர்கள் சம்மதித்தார்கள்; மணமகனுடைய பெற்றோர்கள்—எங்கு தம் பெருமை குறைந்துவிடுமோ என்று ஒப்புதல் கொடுக்க மறுத்து விட்டனர். மணமகன் சற்றும் அதற்கு அஞ்சாமல் துணிகரத்துடனேயே பதிவு முறையில் திருமணம் செய்துகொண்டு, இரண்டு மாதகாலமாகவே தம் தந்தையார் ஒப்புதலை எதிர் பார்த்து, இரகசியமாகவே வைத்திருக்கிறார். இரண்டுமாதத் தவணையிலும் தமது தந்தையார் அனுமதி தராமல்போகவே, தாம் திருமணம் செய்துகொண்டதை வெளியிட வேண்டிய அவசியம் ஏற்பட்டு, இன்றைய தினத்தைத் தம் திருமணச் செய்தி வெளியீட்டு நாளாக ஏற்பாடு செய்திருக்கிறார். வேறு இதிலொன்றும் அதிசயமில்லை.

நான் பொது வாழ்க்கையில் ஈடுபட்டது முதற்கொண்டே இத் திருமண முறைகளைப் பற்றி ரொம்பவும் கவலை எடுத்துக்கொண்டு சிந்தித்து வந்திருக்கின்றேன். சிந்திக்கச் சிந்திக்க, இத் திருமண முறையையே ஒழித்துவிடலாமா என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. திருமணமுறை கூடாதது; ஒழிக்கப்பட வேண்டியது என்று ஒன்றிரண்டு கூட்டங்களில் பேசியதோடு, பத்திரிகையிலும் எழுதியிருக்கிறேன். திருமண சம்பந்தத்தைச் சிலர், மக்களின் நல்வாழ்வுக்கேற்ற சீர்திருத்த முறை என்று கருதுகிறார்கள். சிலர் இன முன்னேற்றத்திற்கு இன்றியமையாதது என்கிறார்கள். இப்படிக் கருதுவதற்கெல்லாம் ஆதாரமே இல்லை என்றும், பெண்களை என்றென்றும் அடிமைகளாக வைத்திருக்கச் செய்யப்பட்ட சூழ்ச்சிதான் இத்திருமண முறை என்றும் எடுத்துக்கூற ஆசைப்படுகிறேன்.

புருஷன்—மனைவி சம்பந்தமே, எஜமான் அடிமைச் சம்பந்தமே ஒழிய அன்பு முறைச் சம்பந்தமோ, நட்புமுறைச் சம்பந்தமோ அல்ல. ஒரு அரசனுடைய மகளாயினும், அவள் ஒரு வேலைக்காரனுக்கு வாழ்க்கைப்பட நேரிட்டால், அவளும் அடிபணிந்து நடந்துவர வேண்டியதுதான். தந்தை ஒரு நாட்டுக்கு அரசனாயிருக்கிறான் என்கிற அளவுக்குத்தான் பெருமை அடையலாமேயொழிய, மனைவி என்கிற முறையில் மற்ற பெண்களைப்போலவே அவளும் தன் கணவனுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டியவள் தான். ஒரு பெண்ணை, ஒரு ஆணுக்கு அடிமையாக்குவது தவிர்த்து—திருமண முறையில், புருஷன்–மனைவி முறையில் வேறு தத்துவம் இல்லவே இல்லை என்பதை உறுதியாகச் சொல்வேன். ஆரிய முறை மந்திரங்களின் அர்த்தங்களைப் படித்துப் பார்த்தால் இதன் உண்மை உங்களுக்கு நன்கு புலனாகும்.

உலகிலுள்ள எத்தனையோ வகை ஜீவராசிகளில் மனிதனும் ஒருவகை ஜீவராசி தான் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். அப்படியிருக்க, மற்ற எந்த ஜீவராசியிலும் காணப்படாத இத்திருமண முறை ஏன் மனித ஜீவராசியில் மட்டும் காணப்படுகிறது? மற்ற ஜீவராசிகளெல்லாம் இஷ்டப்பட்டபோது கூடித் தம் இனத்தைப் பெருக்கிவரும்போது,

மனிதன்மட்டும் ஏன் திருமணம் என்கிற கட்டுப்பாட்டுக்குட்பட்டுக் கலவி செய்து இனத்தைப் பெருக்கிவரவேண்டும்? ஒருத்தியை மணந்துகொண்ட ஒரு ஆண் மகன் தான் ஒருவனேதான் அவளுக்குப் புருஷனாக இருக்கவேண்டும்; அவளுடன் மாற்றார் யாரும் கலவி செய்யக்கூடாது என்று கருதிவருவதன் அடிப்படை நோக்கம்தான் என்ன?

அன்பர்களே! நீங்கள் இதைத் தப்பாக எடுத்துக்கொள்ளக்கூடாது. நீங்கள் எட்டிக் குதித்து, தவறான பாதையில் உங்கள் புத்தியைத் திருப்பிவிடக்கூடாது. ஒரு ஆண்மகன்—தான் ஒருவனே தன் மனைவிக்குக் கணவனாக இருக்கவேண்டுமென்று கருதுவதுபோல்—தானும் அவள் ஒருத்திக்கேதான் உரியவனே ஒழிய, பிற பெண்களுடன் கலவிசெய்ய உரிமையற்றவன் என்று நினைக்கின்றானா? அப்படி நினைக்காததன் தாத்பரியம் என்ன? ஒருத்தி ஒருவனைத்தான் மணக்கலாம்; அவனைத்தான் கூடலாம் என்றும்—ஒருவன் மட்டும் எத்தனை பெண்களையும் மணக்கலாம், எத்தனை பேரையும் கூடலாம் என்றும் விதியும், சம்பிரதாயமும் இருக்கக் காரணம் என்ன? ஒருவன் 60,000 பெண்களையும் மணக்கலாம்; அதற்கு மேல் இலட்சம் வைப்பாட்டிகளையும் வைத்துக் கொள்ளலாம்; ஆனால், ஒரு பெண் மட்டும் ஒருவனை மட்டுந்தான் மணக்கலாம்; அவன் ஒருவனோடுதான் கூடி வாழலாம் என்றால்—அது நியாயமாகுமா? நமது சாமிக்குக் கூட இரண்டு பெண்டாட்டிகள் உண்டு என்றாலும், அதோடு—அது தாசிவீட்டுக்குப் போகும் மாண்பும் நடந்துகொண்டுதான் வருகிறது. ஆண்களுக்கும் கடவுளுக்கும் இப்படிப்பட்ட நியதி இருக்கும்போது, பெண்களுக்கு மட்டும்—ஒருத்தி, தான் மணந்து கொண்ட ஒருவனோடுதான் கூடிவாழ்ந்து வரவேண்டும் என்கிற நியதி இருந்து வருவானேன்? இந்நியதி உடற்கூற்றையோ, சரீரக் கூற்றையோ ஒட்டி ஏற்பட்டதா? ஜீவ நுணுக்கத்தை ஒட்டி ஏற்பட்டதா? எதையொட்டி இவ்வடிமைத் தன்மை பெண்களுக்கு ஏற்பட்டது? என்று யாரேனும் சிந்தித்துப் பார்த்ததுண்டா?

“நீ என் மனைவி; நானே உனக்குக் கணவன்; நீ என்னைத்தவிர வேறு யார் மீதும் காதல் கொள்ளக்கூடாது” என்று ஒரு தலைமகன் கூறும் தத்துவத்தை—ஒரு தலைவி அப்படியே ஏற்றுக்கொள்வதாயிருந்தால், அது அடிமைப் புத்திதானே? பெண்களுக்கு உரிமை வேண்டுவோர் இத் தத்துவத்தைக் கொண்டுள்ள திருமண முறைகளை ஒழித்துக்கட்ட முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டாமா?

“திருமணத் தத்துவம் போய்விட்டால் ஒழுக்கம் போய்விடும்” என்று பூச்சாண்டி காட்டுகிறார்களே, ஆண்கள் விபசாரம் செய்ய முற்படாவிட்டால் பெண்கள் மட்டும் எப்படிக் கெட்டுப்போய் விடுவார்கள்? அறிவிருந்தும் ‘பெண்கள் ஏன் ஆண்களுக்கு அடிமைகளாயிருக்கவேண்டும்? பெண்கள் இத்திருமண முறையிலிருந்து விடுதலைபெறும் வரைக்கும், பெண்கள் ஆண்களிடமிருந்து விடுதலை பெறும்வரைக்கும் இந்நாடு சுதந்திரம் பெற்ற நாடாக ஆகவே முடியாது. எனவேதான், நாம் பெண்கள் விடுதலையை முக்கிய மாகக்கொண்டு பாடுபட்டு வருகிறோம். மத சம்பிரதாயமோ, கடவுள் சம்பிரதாயமோ, புராண சம்பிரதாயமோ—எது பெண்கள் விடுதலைக்கு விரோதமாயிருந்தாலும் அது ஒழிக்கப்பட வேண்டியதுதான். நாங்கள் 1929-ல் செங்கற்பட்டு சுயமரியாதை மாநாட்டின் போது பெண்கள் விடுதலைக்காகச் சில தீர்மானங்கள் கொண்டுவந்து நிறைவேற்றிய போது, பெண்கள் உலகமே அன்று ஆண்களைவிட அதிகமாகத் தூற்றியது.

பலதார மணமுறையைக் கண்டித்தும், பெண்களுக்கு விவாக ரத்து உரிமையைக் கோரியும் தீர்மானங்கள் அப்போதே நிறைவேற்றப்பட்டன. அத் தீர்மானங்களைப் பெண்கள் கூட்டமே வரவேற்கவில்லை என்றாலும், நாங்கள் எங்கள் முயற்சியைக் கைவிட்டோமில்லை. புருஷன் இருக்கும்போதே சில பெண்களுக்குக் கலியாணம் செய்வித்தோம்; சில விதவைகளுக்கும் கலியாணம் செய்வித்தோம். பலதாரத் திருமண முறை ஒழிக்கப்படாவிட்டால், ஒரே பெண்ணுக்கு இரண்டு மாப்பிள்ளைகளைக் கட்டிவைப்போம்

என்று கூப்பாடு போட்டோம். இப்படி எத்தனையோ சீர்திருத்தத் திருமணங்கள் நடைபெற்றபிறகுதான், சர்க்காருக்குப் புத்திவந்து, பெண்களுக்கும் புத்திவந்து இன்று ஒரு சில சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டுவர முன்வந்திருக்கிறார்கள். இதுகாறும் திருமண முறையில் பெண் அடிமையாக்கப்பட்டிருப்பதைக் கண்டோம். இனி, திருமண முறை எப்போது, எதற்காக ஏற்பட்டது எனக் காண்போம்.

ஆணின்மீது பெண்ணுக்கு எப்படி ஆதிக்கம் இல்லாமற்போய்விட்டது என்பது குறித்துச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். மக்கள் பூரண சுதந்திரர்களாக வாழ்ந்த பண்டைக்காலத்து இவ்வித அடிமைமுறைத் திருமணம் ஏற்பட்டிருக்கக் கூடுமென்று நம்மால் நினைக்க முடியவில்லை. தனிவுடைமைச் சுதந்திரம் இல்லாதபோது தனக்கே பிள்ளை பிறக்கவேண்டுமென்கிற நிர்ப்பந்தம் உதித்திருக்க இடமே இல்லை. என்றைக்குத் தனக்கென்று பொருள் சேமித்து வைத்துக்கொள்ள உரிமை ஏற்பட்டதோ, அதன் பிறகு தான் திருமணமுறையும் ஏற்பட்டிருக்க வேண்டும். பொருள்தேடிச் சேமித்துவைக்கும் உரிமை ஏற்பட்டபிறகுதான்—வெளியே பொருள்தேடிச் செல்லும்போது தான் சேமித்து வைத்துள்ள பொருளைப் பாதுகாக்கவும், தான் வந்தபோது தனக்குச் சிரமபரிகாரம் செய்யவும் ஒரு ஆள் தேவையாயிருந்தது. எந்த ஆணும் மற்றொரு ஆணுக்கு இவ்விதமான உதவிசெய்ய முன்வந்திருக்கமாட்டான். எனவே, இவ்வேலைக்கு ஒரு பெண்ணைத்தான் நாடவேண்டியிருக்கிறது. முதலில், பெண் ஒருவனது சொத்துக்குப் பாதுகாப்பாக அமைந்த பிறகு, அவனுக்குச் சொத்துமானாள். பிறகு அந்தச் சொத்துக்கு வாரிசு தேட வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. வாரிசு தேட ஆரம்பித்த காலத்தில்தான், தன் சொத்துக்கு வரும் வாரிசு தனக்கே பிறந்ததாக இருக்கவேண்டும் என்கிற காரணத்தால் அவளைத் தனக்கே உரிமையாக்கிக்கொள்ளவும், அவளைத் தன்னையன்றி வேறு புருஷனை நாடாமல் இருக்கும்படி செய்யவும் ஆன நிர்ப்பந்தம் ஏற்பட்டது. மனித சுபாவம் இப்படித்தான் இருக்கும். அதாவது, தான் தேடிய பொருளைத் தனது இறப்புக்குப் பிறகு அனுபவிக்கப்போகும் வாரிசு, தனக்கே பிறந்ததாக—தன் இரத்தத்திலிருந்து தோன்றியதாக இருக்கவேண்டும் என்று நினைப்பது இயற்கையின்பாற்பட்டதே ஆகும். எனவே பெண் அடிமையாக்கப்படவும், அவளது இயற்கை ஆதிக்கம் பறிமுதல் செய்யப்படவும்; ஆணுக்கு மட்டுமே சொத்துரிமை கொடுக்கப்பட்டதுதான் காரணமாகும். ஆணுக்குமட்டும் நிபந்தனை ஏதும் இல்லாமைக்கும் இதுவே காரணம்.

ஆணுக்கு எவ்வித நிபந்தனையும் இல்லாததால்தான், தன் மனைவி ஒருத்தியுடன் மட்டுமே கலவிசெய்து, வாழ்க்கை நடத்திவரக்கூடிய ஆண்களைக் காண்பது அரிதாக இருந்துவருகிறது. ஆனால், பெண் இனத்திலோ 100க்கு 90 பேராவது தன் கணவனைத் தவிர வேறு புருஷனைக் காதலிக்காமலே இருந்துவருகிறார்கள். காரணம், கணவன் மார்களின் நிர்ப்பந்தமும் அவர்களுக்குள்ள வசதிக் குறைவுந்தானே ஒழிய இயற்கை ஜீவ சுபாவத்தால் அல்லவே அல்ல.

இனவிருத்திக்காகவும் ஒருத்தி ஒருவனோடு கூடிவாழவேண்டுமென்கிற நிர்ப்பந்தம் இல்லை. மனித சுபாவமும்—தன் மனைவி எவ்வளவுதான் அழகாயிருந்தாலும், வேறு பெண்ணை நாடும் நிலையில்தான் இருக்கிறது. எனவேதான், அவனால் மனைவியைத் தவிர்த்து வேறு வைப்பாட்டிகளை வைத்துக்கொள்ளவும், ஒரு மனைவி இருக்கும்போதே பல பெண்களை மணந்துகொள்ளவும், ஒரு மனைவி இறந்த பிறகு, அவளுக்குக் கரும காரியம் நடத்தும்போதே வேறு பெண்களைப்பற்றிச் சிந்திக்கவும் முடிகிறது. இவற்றிலிருந்து, ஒருத்தி ஒருவனோடுதான் சேர்ந்து குடும்பம் நடத்திவரவேண்டுமென்று இயற்கை நியதி ஒன்றும் இல்லையென்று அதி திடமாய்ச் சொல்லலாம். மற்ற ஜீவராசிகளையும் எடுத்துக்கொண்டால் புறாக்களைப் போன்று சில—ஒரு ஆணும் ஒரு பெண்ணும் சேர்ந்தே வாழ்ந்துவர வேண்டிய நியதிக்குள்ளாக்கப்பட்டனவாகவும்; சில, ஒன்று இறந்து

விட்டால் மற்றொன்றும் இறந்துபடவேண்டும் என்ற நியதிக்குள்ளாக்கப்பட்டனவாகவும்; பெரும்பான்மையானவை ஆடு, மாடுகளைப்போல் சமயம் நேர்ந்தபோது கூடிப் பிரிந்து வாழ்ந்துவரக்கூடியனவாகவும் காணப்படுகின்றன. மனித ஜீவனும் ஒருவன் ஒருத்தி யோடுதான் வாழ்ந்துவரவேண்டுமென்ற நியதிக்குள்ளாக்கப்பட்டு இருந்தால் தாசி வீடுகள் இருக்க நியாயமே இல்லை.

ஆகவே, ஏதோ சில நிர்ப்பந்தங்களுக்காகத்தான் இத் திருமணமுறை ஏற்பட்டிருக்க வேண்டுமென்பது பெறப்படுகிறது. திருமணமுறை வந்ததெப்போது? உடைமை எல்லாம் ஆணுக்குத்தான் என்கிற நிலை ஏற்பட்ட பிறகுதான் இத்திருமண முறையும் வந்திருக்க வேண்டும். ஆணுக்குத்தான் சுதந்திரம்; ஆணுக்குத்தான் சொத்து; ஆணுக்குத்தான் வீடும் வாழ்க்கையும் என்று சம்பிரதாயம் ஏற்பட்ட பிறகு இதற்கேற்பத்தான் சமுதாயத்தையும் அமைக்கவேண்டியதாயிற்று.

இயற்கை இன்பத்துக்காக ஒரு பெண்ணுடன் கலவி செய்வது என்பது போய், தனக்கு ஓர் வாரிசு உண்டாக்கிக்கொள்வதற்காக ஒருத்தியோடு கூடவேண்டியது அவசியம் என்கிற நிலை ஏற்பட்டது. தான் பாடுபட்டுத் தேடிய பொருள், தான் சிறுகச் சிறுகச் சேமித்துவைத்த பொருள், தான் இறந்தபிறகு யாருக்குச் சேருவது என்கிற கவலை ஏற்படுவதும், அது தன் வாரிசுக்கே சேரவேண்டுமென்று நினைப்பதும் இயற்கையின் பாற்பட்ட ஆசையே என்று முன்னமே கூறினோம்.

இதன் காரணமாகத்தான், தன் மனைவியைப் பிறர் புணரக்கூடாது என்று ஒருவன் நினைக்கிறானே யொழிய, தான் தொடும் ஒரு பொருள் பிறரால் தொடப்படாமல் பரிசுத்தமாயிருக்கவேண்டும் என்ற ஆசையில் அல்ல. அப்படிப்பட்ட ஆசை உடையவனா யிருந்தால், ஒருவன் ஹோட்டலுக்கும் செல்லமாட்டான்; மார்க்கெட்டையும் எட்டிப் பார்க்க மாட்டான்; பிறர் தொடாத பொருள் அங்கு கிடைக்காது என்று கருதித்தான் புரோகிதன் நம் வீடுகளில் புகுந்தான்.

சொத்துக்காக ஒரு பிள்ளை பெறவேண்டுமென்கிற அவசியம் ஏற்பட்டபிறகு, கடவுளையும் நரகத்தையும் காட்டி, பணக்காரன் பொருளைப் பிற ஏழை மக்கள் அபகரிக்காமலிருக்கப் பார்த்துக்கொள்ளும் பார்ப்பனர்கள், அப் பணத்தில் தாமும் ஒரு பங்கடைவது அவசியம் என்று கருதி, பணத்திற்காக வாரிசு இருப்பது அவசியம் என்பது ஒருபுறம் இருந்தாலும், ஒருவன், தான் இறந்தபிறகு தன் பேரைச் சொல்லித் தனக்காகக் கருமம் செய்யப் பிள்ளையைப் பெற்றுவிட்டுச்செல்வது அவசியமென்றும், பிள்ளைப்பேறில்லாதவர்களால் மோட்சலோகத்திற்குச் செல்ல இயலாதென்றும் கூறிப் பிள்ளைப்பேற்றை மிகமிக அவசியமாக்கிவிட்டனர். லவுகீகத்திற்காக, சொத்துரிமைக்காக ஒரு பிள்ளை பெறுவது அவசியமாக்கப்பட்டதைவிட—வைதீகத்திற்காக, தனக்கென்று பார்ப்பானிடம் அரிசி, பருப்பு அழ ஒரு பிள்ளை பெறவேண்டிய அவசியம் அதிகமாக வற்புறுத்தப்பட்டுவிட்டது. லவுகீகத்திற்காக மட்டுமே என்றால்—எங்கு ஒருவன் தன்னால் பிள்ளைப்பேறு அடையமுடியவில்லை என்பதற்காகக் குழந்தை இல்லாமலேகூட இறந்துபட்டுவிடுவானோ, அப்படியானால் அவனுக்குக் கருமம், திவசம் செய்வது இவற்றால் அடையக்கூடிய பணம் போய்விடுமே என்று அஞ்சி, 'உன்னால் பிள்ளைப்பேறு அடைய முடியாவிட்டாலும், உன்னுடைய ஒப்புதலின்பேரில் உன்னுடைய பேரைச் சொல்ல, உன் மனைவி வேறு ஒருவனுடனாவது கூடி ஒரு பிள்ளையைப் பெறட்டும்' என்று கூறிவிட்டனர். இவ்விதமாகத் திருமணமுறை நாளுக்குநாள் நிர்ப்பந்தமாகிவந்து, கடைசியில் பெண்களை மீளா அடிமைத்தனத்தில் ஆழ்த்தும் நிலைக்கு வந்துவிட்டது. அதனால்தான், பெண்களுக்குக் கடவுளைத் தொழும் உரிமைகூட மறுக்கப்பட்டு விட்டது—தன் கணவனேதான் ஒருத்திக்குக் கடவுள் என்று கூறப்பட்டுவிட்டது. எனவே, இத் தீங்குகளுக்கெல்லாம் காரணமாயமைந்த தனிஉடைமை ஒழியும்வரை—பெண்ணடிமையும் நீங்காது.

உதாரணமாக, தனிஉடைமை இல்லாத ரஷ்யா போன்ற நாடுகளில் பெண்கள் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்திருப்பதை நாம் பார்க்கலாம். தனிஉடைமையில்லாத நாட்டில் திருமணமுறை இருக்காது; வாழ்க்கை ஒப்பந்தந்தான் இருக்கும். இன்றையப் பெண்கள் வெறும் அலங்காரத்தோடு திருப்தியடைந்துவிடுகிறார்கள்; அல்லது திருப்தி செய்யப்பட்டுவிடுகிறார்கள். எனவே, இவர்களுக்கு விடுதலை வேட்கை பிறப்பது கஷ்டமாயிருக்கிறது. இன்றையப் பெண்களின் மனோநிலை பெரிதும் மாறுதல் அடைய வேண்டும். விபச்சாரம் பெண்களுக்குத்தானேயொழிய ஆண்களுக்கு ஏன் இல்லை என்று இவர்கள் சிந்திக்கவேண்டும். ஆணுக்கு மட்டும் ஏன் விபச்சார தோஷம் இல்லை; விபச்சாரம் என்றால் திருட்டு என்றுதானே பொருள்; திருட்டு என்றால் பிறருக்குரிய பொருளை வேறு ஒருவன் அடைவது, அல்லது உரிமையாக்கிக்கொள்வது என்றுதானே அர்த்தம்! ஒருவனுக்கு உடைமையாக்கப்பட்டுவிட்ட பெண்ணை மற்றொருவன் அனுபவிக்க முயற்சிப்பதைத்தானே நாம் விபச்சாரம் என்று கருதி வருகிறோம்?

உதாரணமாக, ஒருவருக்கும் உரிமைப்படாத தாசியை ஒருவன் அனுபவித்தால் அதைத் திருட்டு என்று கூறுகிறோமா? அதைப் போகம் அல்லது 'என்ஜாய்மென்ட்' என்றுதானே கருதிவிடுகிறோம்? அவளை மட்டும் சமுத்திரத் தண்ணீர்போலவும், ஆற்று மணல்போலவும் கருதி யாரும் அனுபவிக்கலாம்—அது விபச்சாரம் ஆகாது; ஆனால், 'ஒருவனுடைய வீட்டு உப்பு, மிளகாய், புளியை அபகரிக்க நினைப்பது எப்படித் திருட்டாகுமோ, அதுபோல் அவனுடைய மனைவியையும் அபகரிக்க நினைப்பது திருட்டு ஆகும்' என்று நினைத்து, அவளை அனுபவிக்க மனத்தாலும் நினைக்கக்கூடாதாம்! என்னே அடிமைத்தனம்! உப்பு, மிளகாயா பெண்கள்? கேவலம் பெண்கள் இப்படியா ஒருவனுடைய வீட்டு உப்பு, மிளகாயைப்போல் தனிஉடைமைச் சொத்து ஆகிவிடுவது? நாட்டின் பொதுநலன் கருதி, பெண்களின் முன்னேற்றங்கருதி அவசியமான மாறுதல்களைச் செய்யவேண்டாமா? சமுதாயத்தின் சரிபாதி ஆகிய பெண்கள் சமூகம் எவ்வித முன்னேற்றமுமின்றி இப்படி அடிமைப்பட்டுக்கிடத்தல் நியாயமா? இப்போது ஒருசில பெண்கள் ஏதோ முன்னேற்றமடைந்துள்ளார்கள் என்றால், நாம் தனிமையாகப் போராடிப் பெற்ற உரிமையால்தானேயொழிய, சமுதாயச் சட்டப்படிப் புதிதாக வழங்கப்பட்ட உரிமைகளால் அல்லவே! தமக்குள்ள உரிமையோடு தமது வாழ்க்கை ஒப்பந்தத்தை மணமக்கள் நிறைவேற்றிக்கொண்டார்கள் என்பதுதானே புதுமுறைத் திருமணத்தின் பெருமை! பெற்றோர்களின் முயற்சியில்லாது இவர்களுடைய திருமணம் நடைபெற்றவரை இவர்களுடைய அடிமைத் தளை ஒழிந்தது. மணமகனுக்கு இத் தளை ஒழிந்தது ஒன்றும் அதிசயமில்லை; மணமகளுக்கும் ஒழிந்ததுதான் அதிசயம். இருவருக்கும் சம உரிமை வழங்கக்கூடிய பதிவு முறையில் இவர்கள் திருமணம் நடைபெற்றிருப்பது போற்றத்தக்கது. இப்படித் தாமாக ஒருவரை விரும்பி ஏற்கப் பெண்கள் முன்வருவது நம் நாட்டைப் பொறுத்தவரை மிக்க கஷ்டமேயாகும்.

நாம் பெண்களை முட்டாள்களாக்கிவிட்டோம். பெற்றோர்களை மீறியும், சமூகக் கட்டுப்பாடுகளைப் பற்றியும் ஆண்கள் காரியம் ஆற்ற முன்வருவதுபோல் பெண்கள் முன்வருவதில்லை. வயதுவந்த பிறகு தகப்பன் சொல் கேட்கவேண்டிய அவசியம் என்ன என்று—ஆண்கள் சுலபத்தில் தீர்மானித்துவிடுகிறார்கள். ஆனால், பெண்களில் 100க்கு ஒருவர்—ஆயிரத்துக்கு ஒருவர்கூட அப்படி முன்வருவது கஷ்டமாயிருக்கிறது. பெண்களுக்கு விடுதலை பற்றிய அறிவு போதவில்லை. அவர்களுக்கு விடுதலை உணர்ச்சி உண்டாக்க எவ்வித முயற்சியும் இதுகாறும் செய்யப்படவில்லை. அவர்களுக்குச் சுதந்திரமாகச் சிந்திப்பதற்கான வசதி கொடுக்கப்படவில்லை. ஒரு வயது வந்த பெண்ணை, 'உனக்கு எப்போதம்மா கலியாணம்?' என்று கேளுங்கள். அவள் நாணிக் கோணி—'அதெல்லாம் எனக்கென்ன தெரியும்? எங்கள் அப்பா அம்மாவைக் கேளுங்கள்' என்று

தான் கூறுவாளேயல்லாது, வேறுவிதமாகப் பதில் கூறமாட்டாள். அந்த மாதிரிப் பக்குவத்தில்தான் நாம் அவர்களை வளர்க்கிறோம்.

பெண்களை வெளியில் செல்ல விடுவதில்லை; பிறருடன் தாராளமாகப் பழக அனுமதிப்பதில்லை. 'சன்னலின் அருகே நிற்காதே! 'வாசலில் யார் போகிறார்கள் என்று எட்டிப் பாராதே! ஆண்கள் வந்தால் அடுப்பங்கரைப் பக்கம் ஓடிவிடு' என்றெல்லாம் கூறி அவர்களை ஒன்றும் தெரியாத முட்டாள்களாக்குகிறோம். இவை மாய்ந்துபோய், பெண்களுக்கு உண்மையான விடுதலை வரவேண்டும். தற்காலத்தில் தங்களை நாகரிக நாரீமணிகள் என்று கருதிக்கொள்ளும் பெண்களெல்லாம்கூட நல்ல முறையில் ஆடை அலங்காரம் செய்து கொள்வதையும், நைசான நகைகள் போட்டுக் கொள்வதையும், சொகுசாகப் பவுடர் பூசிக்கொள்வதையும்தான் நாகரிகம் என்று கருதி வருகிறார்களே தவிர—ஆண்களுக்குச் சரிநிகர் சமானமாக வாழ்வதுதான் நாகரிகம் என்பதை உணர்ந்திருக்கவில்லை. போதிய உரிமை வேட்கையுடைய பெண்களும் தம்மை எங்கு உலகம் தூற்றுமோ என்று அஞ்சி பேசாமல் இருந்துவிடுகிறார்கள். இது தீது. ஆணுக்கும் பெண்ணுக்கும் எந்த விதத்திலும் வேற்றுமை இருக்கக்கூடாது. பெண்கள் வெறும் மிருக இனம்போல் நடத்தப்படும் இந்நிலை ஒழிந்தேயாகவேண்டும்; தாமாக ஒழித்துக்கொள்ள முயற்சிக்கமாட்டார்கள்; முன்வரமாட்டார்கள். ஆண்கள்தான் முன்வந்து, விட்டுக் கொடுத்து, பெண்களைச் சமநிலைக்குக் கொண்டுவரவேண்டும். தாய் தந்தையர், ஆண்களைவிட மேலாகப் பெண்களுக்குத்தான் அதிகப் படிப்புச் சொல்லிக்கொடுக்க வேண்டும். 'சுதந்திரம் கொடுத்தால் பெண்கள் கெட்டுப்போய்விடுவார்கள்' என்று நினைத்து அவர்களை எந்நாளைக்குமே அடிமைத் தளையில் கட்டிப்போட்டு வைத்திருப்பது என்பது முடிவில் பெருங் கேட்டையே விளைவிக்கும். வீட்டில் பெண்களை இருளில் அடைத்துவைத்திருந்துவிட்டு வெளியில் கடைத்தெருவுக்கு அழைத்துச் சென்றால், அவர்கள் வெளிச்சத்தில் நன்றாகப் பார்க்க ஆரம்பிக்கிறார்கள். பார்த்துப் பழக்கம் இராததால் அவர்கள் மிரட்சியோடு பார்க்க வேண்டியிருக்கிறது.

நம் வீட்டு நாய்களையே எடுத்துக்கொள்வோம். சில நாட்கள் விடாப்பிடியாகக் கட்டிப்போட்டு வைத்திருந்து பிறகு அவிழ்த்துவிட்டால், காரணமின்றியே சந்தோஷத்தால் இங்கே ஓடும், அங்கே ஓடும்; குதிக்கும்; ஒரு நிமிஷங்கூடச் சும்மா இருக்காது. கட்டு ஒழிந்ததில் அதற்குள்ள ஆனந்தம் அவ்வளவு! இதுதான் இயற்கை. எனவே, நம் பெண்களை உலகத்தினின்றும் மறைத்துவைப்பதும், அவர்களை உலக ஞானத்தை அடையவொட்டாமல் தடுத்துவைப்பதும் மிகமிகக் கேடானதாகும். பெண்களைச் சுதந்திரமாக நடந்துகொள்ளத் தகுதியுடையவர்களாக நாம் ஆக்குவதில்லை. சிலர் பெண்களைப் படிக்க அனுமதிப்பார்கள்; ஆனால், பிறருடன் பழக அனுமதியார்கள். பெண்களுக்கு வேண்டியது புத்தகப் படிப்பு மட்டுமல்ல; உலக அறிவும்தான் வேண்டும்; நல்லது, கெட்டது ஆராய்ந்தறியும் அறிவு வேண்டும். பெண்களைப் பழகவிடாமல் தடுத்துவிட்டு—'உனக்கு யாரையம்மா, மணந்துகொள்ள விருப்பம்?' என்று கேட்டால், அது யாரை விரும்பும்? சினிமாக்காரனைப்போல், வேஷக்காரனைப்போல் பவுடர் பூசி அழகாகக் காட்சியளிக்கும் ஆடவனைத்தானே அவள் விரும்புவாள்! உலகம் அறியா மங்கைக்குத் தெரியுமா—பவுடர் கலைந்தால் அதனடியே பல வடுக்கள் இருக்குமென்பது? ஒருவரையொருவர் நன்கு தெரிந்துகொள்ள வாய்ப்பளிக்கப்படாத நிலையில் தன் கணவனைத் தெரிந்துகொள்ளும் உரிமையைமட்டும் பெண்களுக்குக் கொடுத்தென்ன பயன்? அப்பெண் பிறர் கூறும் உபதேசத்தைத்தானே கேட்கவேண்டி நேரிடும்? அப்படி உபதேசம் செய்பவர்களின் தன்மையையாவது அதனால் அறிந்துகொள்ள இயலுமா?

'காதல், காதல்' என்று இப்போது எங்கு பார்த்தாலும் பேச்சாக இருக்கிறதே! ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்துகொள்ளாத வரை காதல் எப்படிப் பிறக்கும்? இவரை

மணந்தால் இன்ன இலாபம் பெறலாம் என்ற தன்மையால்தானே காதலின் தோற்றுவாய் சிக்கியிருக்கிறது! காதல் தெய்வீகமானது என்கிறார்களே! எப்படி அது தானாகவே தோன்றிவிடும்? 'அவன் பெரிய புத்திசாலி; அவன் ஒப்பிலா அழகன்; அவன் பெரிய செல்வந்தன்; அவன் பெரிய கொடையாளி; பெருமை மிக்கோன்' என்றெல்லாம் கேள்விப் பட்டுத்தானே பிறகு காதல் பிறக்கிறது. செல்வந்தன் என்று கேள்விப்பட்டுக் காதல் கொண்ட ஒரு மங்கையின் காதல், 'அவன் ஒரு 'இன்சால்வென்ட்.' பேர்வழி' என்று— மணந்த பிறகு அறிய நேர்ந்தால், அவள் காதல் போனதுதானே? அழகன் என்று காதல் கொண்டு மணந்த மங்கையின் காதல் 'அவனுக்கு ஒரு காது செவிடு' என்று பிறகு அறிய நேர்ந்தால் அழிந்துபட வேண்டியதுதானே! தான் நினைத்ததுபோல் இல்லையென்றால் ஏமாற்றந்தானே! ஏமாற்றமடைந்த காதலில் சுவையிருக்குமா? எனவே, காதலுக்கு ஏது இயற்கைச் சக்தி? கண்டதும் காதல் என்பதும், காதல் மாறக்கூடாதது என்பதும் காதலின் தோற்றுவாய் தெரியாமல் எழுந்த நினைப்புகள்தானே?

"காதலும், கடவுளும் ஒன்று" என்பதிலிருந்தே இரண்டும் பித்தலாட்டங்கள் என்பது விளங்கவில்லையா? எல்லா மக்களும் மிகமிக மாற்றமடைந்தாக வேண்டும். சின்னப் புத்தியால் தோன்றும் தீய கருத்துக்களை அறவே ஒழித்து ஒதுக்கிவிட்டு—ஏன், எதற்காக இப்படிச் சொல்லுகிறோம் என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

[சென்னை விக்டோரியா மண்டபத்தில், 30-9-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 11-10-1948]

## 15. சொத்துரிமை

இந்திய நாட்டில், பெரும்பாலும் உலகத்தின் வேறு எங்குமில்லாததும், மனிதத் தன்மைக்கும் நியாயத்திற்கும் பகுத்தறிவிற்கும் ஒவ்வாததுமான கொடுமைகள் பல இருந்து வந்தாலும், அவற்றுள் அவசரமாய்த் தீர்க்கப்பட வேண்டியதும், இந்தியர்கள் காட்டு மிராண்டிகளல்லர் எனவும்—மனிதத் தன்மையும் நாகரிகமுமுடையதான சமூகம் எனவும் உலகத்தாரால் மதிக்கப்படவும் மற்றும் உலகிலுள்ள பெரும்பான்மையான நாட்டார்களைப் போலவே அன்னிய நாட்டினர்களின் உதவியின்றித் தங்கள் நாட்டைத் தாங்களே பாதுகாத்துக் கொள்ளவும், ஆட்சி நிர்வாகம் செய்யவும் தகுதியுடையவர்கள் என்று சொல்லிக்கொள்ளவும் வேண்டுமானால்—முக்கியமாகவும் அவசரமாகவும் ஒழிக்கப்பட வேண்டியதாகவுமிருக்கும் கொடுமைகள் இரண்டு உண்டு.

அவைகளில் முதலாவது எதுவென்றால், இந்திய மக்களிலேயே பலகோடி ஜன சங்கியையுள்ள பல சமூகங்களைப் பிறவியிலேயே தீண்டாதவர்கள் என்று கற்பித்து, அவர்களைப் பகுத்தறிவற்ற மிருகங்களினும் கேவலமாகவும், உணர்ச்சியற்ற பூச்சி புழுக் களினும் இழிவாகவும் நடத்துவதாகும்.

இரண்டாவது எதுவென்றால், பொதுவாக இந்தியப் பெண்கள் சமூகத்தையே அடியோடு பிறவியில் சுதந்திரத்திற்கு அருகதையற்றவர்களென்றும், ஆண்களுக்கு அடிமையாகவே இருக்கக் 'கடவுளாலேயே' சிருஷ்டிக்கப்பட்டவர்களென்றும் கற்பித்து, அவர்களை நகரும் பிணங்களாக நடத்துவதாகும். ஆகவே, மேற்கண்ட இந்த இரண்டு காரியங்களும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்தியாவில் இனி, அரைக்கணம்கூட இருக்கவிடாமல் ஒழித்தாகவேண்டியவைகளாகும்.

மேலும், மேற்கண்ட இரண்டு கொடுமைகளும் அழிக்கப்படாமல், இந்தியாவுக்குப் பூரண சுதந்திரம் கேட்பதோ, இந்தியாவின் பாதுகாப்பையும், ஆட்சி நிர்வாகத்தையும் இந்திய மக்கள் தாங்களே பார்த்துக்கொள்ளுகிறோம் என்று சொல்லுவதோ ஆகிய காரியங்கள் முடியாதென்றும், முடியுமென்று யாராவது சொல்வதானால் அது சுத்த

அறியாமைத்தனமானதென்றும், இல்லாவிட்டால்—சுயநல சூழ்ச்சியே கொண்ட நாணயத் தவறான காரியமாகுமென்றும் நாம் சொல்லி வருகிறோம் என்பதோடு, இப்படிச் சொல்லும் விஷயத்தில் நமக்குப் பயமோ, சந்தேகமோ கிடையாதென்றும் சொல்லுவோம். ஆதலால் தான், இவ்வித முட்டாள்தனமானதும் சூழ்ச்சியானதுமான முயற்சிகளை நாம் எதிர்க்க வேண்டியவர்களாயுமிருக்கிறோம்.

ஏனெனில், நம்மில் ஒரு கூட்டத்தாரையே நாம் நமது சமூகத்தாரென்றும், நமது சகோதரர்களென்றும் ஜீவகாருண்யமென்றுங்கூடக் கருதாமல், நம் மக்களுக்கே நாம் விரும்பும் சுதந்திரமளிக்காமல், அவர்களை மனிதர்கள் என்று கூடக் கருதாமல் அடிமைப் படுத்தி, கொடுமைப்படுத்தி, இழிவுபடுத்தித் தாழ்த்தி வைத்திருக்கிறோம். ஆதலால், அத் தாழ்த்தப்பட்ட மக்களின் நலத்தையோ, விடுதலையையோ நம்மிடம் ஒப்புவிப்ப தென்றால், கசாப்புக் கடைக்காரரிடம் ஆடுகளை ஒப்புவித்ததாகுமே தவிர, வேறல்ல என்று கருதுவதால் தானேயொழிய வேறல்ல.

இந்தத் தத்துவமறியாத, சில தீண்டப்படாதவரென்ற சில தாழ்த்தப்பட்ட மக்களும், சுதந்திரம் அளிக்கப்படாதவர்கள் என்ற அடிமைப்படுத்தப்பட்ட பெண்களும் தங்களுக்கு மற்றவர்களால் இழைக்கப்பட்ட கொடுமையையும் இழிவையும் கருதிப்பாராமல், இந்திய சுதந்திரம், 'விடுதலை' என்கின்ற கூப்பாடுகளில் இவர்களும் கலந்துகொண்டு தாங்களும் கூப்பாடு போடுவதைக் காண்கிறோம். ஆனாலும், அதற்குக் காரணம், அவர்களுக்கு உண்மைச் சுதந்திரம், விடுதலை என்பவைகளின் பொருள் தெரியாததாலும், தெரிய முடியாமல் வைத்திருந்த வாசனையினாலும் இவ்வாறு அறியாமல் திரிகின்றார்களே தவிர வேறில்லை.

தீண்டாமை என்னும் விஷயத்திலிருக்கும் கொடுமையும் மூடத்தனமும் மூர்க்கத் தனமும் யோசித்துப் பார்த்தால், அதை மன்னிக்கவோ, அலட்சியமாய்க் கருதவோ, 'நாளை பார்த்துக்கொள்ளலாம், இப்போது அதற்கு என்ன அவசரம்?' என்று காலந் தள்ளவோ சிறிதும் மனம் இடந்தருவதில்லை. ஒருவனை—அதாவது, பிறரைத் தீண்டாதார் எனக் கருதிக் கொடுமைப்படுத்துகின்றவர்களை அத்தீண்டாதார்களுக்கு இருக்கும் உண்மையான கஷ்டத்தை உணரச்செய்ய வேண்டுமானால், இப்போதைய வெள்ளைக்கார அரசாங்கத்தின்கீழ் அனுபவிக்கும் மனுதர்மக் கொடுமைகள் என்பவைகள் போதாதென்றும், சிறிதும் சுதந்திரமும் சமத்துவமற்றதும், சதா இராணுவச் சட்டம் அமுலில் இருப்பதுமான ஏதாவது ஒரு கொடுங்கோல் ஆட்சி இருந்தால்தான் இம்மாதிரிக் கொடுமைப்படுத்துகின்ற மக்களுக்கு உணர்ச்சி வரும்; புத்தி வரும் என்றும் நமக்குச் சிற்சில சமயங்களிலே தோன்றுவதுமுண்டு.

ஆனால், இந்தியாவை இம்மாதிரி மூர்க்கத்தனமும், நாணயக் குறைவும் மாத்திரம் சூழ்ந்து கொண்டிருக்காமல், மூடத்தனமும் சேர்ந்து கட்டிப்பிடித்துக் கொண்டிருப்பதால், இன்னமும் எவ்வளவு இழிவும் கொடுமையும் ஏற்பட்டாலும் இம்மாதிரியான மக்களுக்கு உண்மையான துன்பத்தை உணரத்தக்க நிலைமை ஏற்படுவது கஷ்டமாக இருக்கு மென்றாலும், இந்நிலை மாறுதலடையக்கூடும் என்ற உறுதியை உண்டாக்கத் தக்க நம்பிக்கை கொள்வதற்கு இடமில்லாமல் போகவில்லை.

இனி, பெண்கள் விஷயத்திலும் இது போலவேதான் அவர்களுடைய சுதந்திரத்தை யும் உணர்ச்சியையும் கட்டிப்போட்டிருக்கும் கொடுமையானது, இந்தியர்களுக்குச் சுதந்திர உணர்ச்சியேயில்லை என்பதைக் காட்டவும், அவர்கள் அடிமைகளின் குழந்தைகள் என்பதை ஒப்புக்கொள்ளவும் ஆதாரமானதென்றுதான் சொல்லவேண்டும்.

எப்படியெனில், இவ்விரண்டைப்பற்றி இந்திய விடுதலைவாதிகள், சுதந்திர வாதிகள், சுயேச்சைவாதிகள், தேசியவாதிகள், மக்கள் நல உரிமைவாதிகள் என்கின்ற

கூட்டத்தார்கள் ஆகியவர்களுக்குச் சிறிதும் உண்மையான கவலையில்லாவிட்டாலும், மேற்கண்ட கூட்டத்தார்களில் 100க்கு 90 பேர்களுக்கு மேலாகச் சுயநலங்கொண்ட நாணய மற்றவர்களாகவே காணப்படினும், இவர்களது முயற்சி இல்லாமலும் சில சமயங்களில் மேற்கண்ட சுயநல சூழ்ச்சிவாதிகளின் எதிர்ப்பிற்கும் இடைஞ்சலுக்கும் இடையிலும் கொடுமைகள் அனுபவிக்கும் மேற்கண்ட இருவகையாருக்கும் விமோசனம் ஏற்படுவதற்கு அறிகுறிகள் ஆங்காங்கு வேறு ஒரு வழியில் காணப்படுகின்றதைப் பார்க்கச் சிறிது மகிழ்ச்சியடைகின்றோம். அதாவது, இந்திய சுதேச சமஸ்தானங்கள் என்று சொல்லப்படும் மைசூர், பரோடா, காஷ்மீர், திருவனந்தபுரம் முதலிய சமஸ்தானங்கள் பிரிட்டிஷ் இந்திய ராஜ்யத்தைவிட—பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள சீர்திருத்தக்காரர்களைவிட இந்தக் கொடுமைகளை ஒழிக்க, ஒவ்வொரு துறையில் ஒவ்வொன்றுமாக முன் வந்திருக்கின்றன என்பதாகும்.

காஷ்மீர் சமஸ்தானத்தில் எந்த விஷயத்திலும் தீண்டாமையைப் பாவிக்கக் கூடாதென்றும், தீண்டப்படாதார் என்னும் வகுப்பாருக்கு மற்றவர்களைப்போல் சகல உரிமைகளும் அளிக்கப்பட்டிருப்பதோடு, கல்வி விஷயத்தில் அவர்களுக்குச் சாப்பாடு போட்டும் இலவசமாய்க் கற்றுக் கொடுக்கவேண்டுமென்றும் தீர்மானமாயிருக்கும் விஷயம் முன்பே தெரிவித்திருக்கிறோம்.

மற்றும், திருவாங்கூர் சமஸ்தானத்தில் தீண்டப்படாத மக்கள் என்பவர்களுக்குக் கோவில்கள், தெருக்கள், குளங்கள் ஆகியவை தாராளமாகத் திறக்கப்பட்டு, இவ்விஷயங்களில் மற்றவர்களுக்குள்ள சுதந்திரங்கள் அளிக்கப்பட்டிருப்பதோடு, பெண்களைக் கடவுள் பேரால் விபச்சாரிகளாக்கிக் கோவில்களின் ஆதரவுகளைக் கொண்டு, அவ் விபச்சாரத் தன்மையை நிலைநிறுத்துவதையும், அஃதன்றி நடந்துவரும் விபச்சாரத்தையும் ஒழிக்கச் சட்டம் நிறைவேற்றி அமுலுக்குக்கொண்டு வந்ததையும் முன்னமே தெரிவித்திருக்கின்றோம்.

இப்போது மைசூர் சமஸ்தானத்தில் பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கும் விஷயமாக யோசனை செய்யப்பட்டு, அந்த யோசனையை அரசாங்கமும் ஜனப் பிரதிநிதிகளும் ஒப்புக்கொண்டு, அதற்காக ஒரு கமிட்டியும் நியமித்து, அக் கமிட்டியார் பெண்களுக்குச் சொத்துரிமை அளிக்கலாம் என்ற தத்துவத்தை ஒப்புக்கொண்டு, ஏகமனதாக ரிப்போர்ட் அனுப்பியிருப்பதாய் எல்லாத் தினசரிப் பத்திரிகைகளிலும் வெளியாக்கப் பட்டிருக்கிறது.

அதன் முக்கிய பாகம் என்னவென்றால் :—

1. பெண்கள் வாரிசு சொத்துரிமை அனுபவிக்கத் தகுதி யுடையவர்கள் அல்ல என்பது கொடுமையும் அநீதியுமாகும்.
2. பெண்கள், சீதனம், நன்கொடை முதலிய சொத்துக்களை அடைந்து, அவைகளை வைத்து நிர்வகித்து வரத் தக்கவர்கள் என்ற உரிமையும் வளமையும் இருக்கும்போது, வாரிசான சொத்தை அடைய ஏன் தகுதி யுடையவர்களாக மாட்டார்கள் ?
3. பெண்களுக்கு வாரிசு சொத்துரிமை இல்லை யென்பது பெண்கள் முன்னேற்றத்திற்குத் தடையா யிருப்பதோடு, பொதுவாக இந்து சமூக முன்னேற்றத்திற்கே கேடாயிருக்கிறது.
4. ஆகவே, இவற்றிற்கான சட்டம் செய்ய வேண்டியதும், பெண்கள் என்கிற காரணத்திற்காக அவர்களுக்கு எவ்வித சிவில் உரிமையையும் தடுப்பது கூடாதென்று திட்டமாய் முடிவு செய்துவிட வேண்டியதுமான காலம் வந்துவிட்டது.
5. எந்தவிதமான சீதன சொத்தையும் பெண்கள் தங்களிஷ்டப்படி விநியோகித்துக் கொள்ளலாம் என்பவைகளாகும்.

இவைகள் ஒருபுறமிருக்க, மற்றொரு விஷயத்திலும் பெண்களுக்குச் சில சுதந்திரங்கள் அளிக்க அக் கமிட்டி சிபாரிசு செய்திருப்பது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.

அவை என்னவெனில் :—

"புருஷன் மேக வியாதிக்காரனாகவாவது, கொடிய தொத்து வியாதிக்காரனாக வாவது இருந்தாலும், வைப்பாட்டி வைத்திருந்தாலும், தாசி, வேசி, வீடுகளுக்குப் போய்க் கொண்டிருப்பவனா யிருந்தாலும், மறு விவாகம் செய்துகொண்டவனா யிருந்தாலும், கொடுமையாய் நடத்தினாலும், வேறு மதத்திற்குப் போய்விட்டாலும் புருஷனை விட்டுப் பிரிந்திருக்கவும், புருஷனிடம் ஜீவனாம்சம் பெறவும் மனைவிக்குப் பூரண உரிமை உண்டு என்பதாகும்.

அதோடு, மேற்படி விஷயங்களை அனுசரித்து ஒரு மசோதாவும் தயாரிக்கப்பட்டிருக்கின்றதாகவும் காணப்படுகின்றது.

ஆகவே, இந்தச் சட்டம் அனேகமாகக் கூடிய சீக்கிரம் மைசூர் சமஸ்தான சட்ட சபையில் நிறைவேறி சட்டமாக்கப்படுமென்றே நம்பலாம். இவற்றில் சொத்துக்களின் அளவு விஷயங்களில் ஏதாவது வித்தியாசமிருந்த போதிலும் பெண்களுக்குச் சொத்துரிமைக் கொள்கையும், பெண்கள் புருஷனை விட்டு விலகி இருந்து கொள்ளும் கொள்கைகளும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் விஷயம் கவனித்துப் பாராட்டத் தக்கதாகும்.

இவை போன்று பல காரியங்களில், இந்தியாவிலுள்ள சுதேச இந்து சமஸ்தானங்களெல்லாம் ஒவ்வொரு துறையிலும் முன்வந்து சட்டம் செய்துகொண்டு வரும்போது, பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள தேசியவாதிகளுக்கும், பூரண சுயேச்சைவாதிகளுக்கும், பொதுஜன நலஉரிமைவாதிகளுக்கும் மாத்திரம் இக் கொள்கைகள் அவசியமானவைகள் என்றோ, சட்டம் செய்யத் தக்கது என்றோ தோன்றப்படாமலிருப்பதானது—இக் கூட்டத்தார்களின் நாணயக் குறைவையும், பொறுப்பற்ற தன்மையையும் நன்றாகக் காட்டுவதற்கு ஒரு அறிகுறியாகும்.

சாரதா சட்டம் (குழந்தை மணத் தடுப்புச் சட்டம்) என்கிற ஒரு சட்டம் பிரிட்டிஷ் சர்க்கார் தயவினால் 'பாசா'கியும், இந்திய தேசியவாதிகளாலும், "பூரண சுயேச்சை வாதி"களின் முயற்சியாலும் அது சரியானபடி அமுலுக்கு வர முடியாமல் முட்டுக்கட்டை போடப்பட்டு வருவதும், அச் சட்டம் கூடாதென்று வாதாடி ஒழிப்பதாகத் தெரியப்படுத்தினவர்களை ராஜாங்க சபைக்கும், மாகாண சபைக்கும் நமது பிரதிநிதிகளாக அனுப்பியதும் நம்மவர்களுக்கு மிகமிக மானக் கேடான காரியமாகும்.

நமது தேசியவாதிகள் என்னும் அரசியல்வாதிகள், இம் மாதிரிக் காரியங்களைச் சிறிதும் கவனியாமல் இருப்பதோடு, நாம் ஏதாவது இவற்றிற்காகப் பிரச்சாரம் செய்தால், "இது தேசியத்திற்கு விரோதம், சுய ராஜ்யம் கிடைத்துவிட்டால், பிறகு சட்டம் செய்து கொள்ளலாம்" என்று சொல்வதும், வேறு யாராவது இவைகளுக்காகச் சட்டம் செய்ய சட்டசபைக்கு மசோதாக்கள் கொண்டு போனால், "சீர்திருத்தங்கள் சட்டங்கள் மூலம் செய்துவிட முடியாது; பிரச்சாரத்தின் மூலம்தான் செய்ய வேண்டும்" என்று சொல்லுவதுமான தந்திரங்களினால் மக்களை ஏமாற்றிக் காலம் தள்ளிக்கொண்டு வருகிறார்கள்.

ஆகவே, இந்த நிலைமையில் முதலில் நமது கடமை யென்னவென்பதை யோசித்துப் பார்த்தால், இம் மாதிரியான காரியங்களுக்கு ஆண்கள்தாம் முயற்சிக்க வேண்டியவர்கள் என்ற உரிமை முதலில் நீக்கப்பட வேண்டும். நம் பெண்மணிகள் இக் காரியங்களில் வரிந்து கட்டிக்கொண்டு இறங்கவேண்டும். பெண்கள் கிளர்ச்சி—முதலாவதாக, ஆண்களைப் போன்ற சொத்துரிமை பெறுவதற்கே செய்யப்பட வேண்டும். பெண்களுக்குச்

சொத்துரிமை யிருந்துவிட்டால், அவர்களுக்கு இருக்கும் எல்லாவிதமான அசவுகரியங்களும் ஒழிந்து போகும். கேவலம் தாசிகளுக்குச் சொத்துரிமை இருப்பதால் அவர்கள் தங்கள் குடும்பங்களில், தங்கள் சமுதாயத்தில் எவ்வளவு சுதந்திர முடையவர்களாக இருக்கிறார்கள் என்று பார்த்தால், குடும்ப ஸ்திரீகளுக்குச் சொத்துரிமை யிருந்தால் எவ்வளவு மேன்மையாய் வாழ்க்கை நடத்துவார்கள் என்பது விளங்கும். அன்றியும், பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்படாததற்குக் காரணம் இதுவரை யாரும் சொன்னதே கிடையாது.

பெண்களுக்குப் படிப்பு, தொழில் ஆகிய இவை இரண்டும் பெற்றோர்களால் கற்பிக்கப்பட்டுவிட்டால், சொத்து சம்பாதிக்கும் சக்தி வந்துவிடும். பிறகு, தங்கள் கணவன்மார்களைத் தாங்களே தெரிந்தெடுக்கவும், அல்லது பெற்றோர்களால் தெரிந்தெடுக்கப்பட்டாலும் கணவனோடு சுதந்திரமாய் வாழ்க்கை நடத்தவும் கூடிய தன்மை உண்டாகிவிடும். பெண்ணடிமை என்பதற்குள்ள காரணங்கள் பலவற்றில் சொத்துரிமை இல்லாதது என்பதே மிகவும் முக்கியமான காரணம் என்பதே நமது அபிப்பிராயம். ஆதலால், பெண்கள் தாராளமாகவும் துணிவுடனும் முன்வந்து சொத்துரிமைக்குக் கிளர்ச்சி செய்ய வேண்டியது மிகவும் அவசியமும் அவசரமுமான காரியமாகும்.

[' பெண் ஏன் அடிமையானாள் ?' என்ற புத்தகத்திலிருந்து. 11-ம் பதிப்பு–1971

## 16. விபச்சாரம்

விபச்சாரம் என்னும் 'வார்த்தை, அனேகமாய் ஆண்–பெண் சேர்க்கை சம்பந்தப்பட்டதற்கே உபயோகப்பட்டு வருகின்றது. அதாவது, ' விபச்சாரம் ' என்பது தனக்குக் கணவன் என்றோ, தன்னை வைத்துக்கொண்டிருக்கிறவன் என்றோ, வேசித் தொழிலில் இருப்பவளானாலும் யாராவது ஒரு புருஷனிடம் தற்கால சாந்தியாய் தன்னைக் குத்தகையாய் அனுபவிப்பவன் என்றோ சொல்லப்படும்படியான அந்தக் குறிப்பிட்ட ஆண் மகனைத் தவிர, மற்றவரிடமோ, பல பேர்களிடமோ சேர்க்கை வைத்துக்கொண்டிருப்பதற்கே கணவனாலும், வைப்புக்காரனாலும், குத்தகைக்காரனாலும் மற்றும் பொது மக்களாலும் சொல்லப்படுகின்ற—அதாவது ஒரு பெரிய குற்றம் சாட்டுவதற்கும், பழி சுமத்துவதற்கும் உபயோகிக்கும் ஒரு சொல்லாகும். ஆனால், அதே பெண்ணை அந்தக் கணவனோ, வைப்புக்காரனோ மற்றொருவனுக்குத் தன் சம்மதத்தின் பேரில் கூட்டிவிடுவானானால் அதை அவர்கள் விபச்சாரம் என்று சொல்லுவதில்லை. இந்தச் சங்கதி பொதுஜனங்களுக்குத் தெரிந்தாலும் கணவனைத்தான் அவர்களும் வசை கூறிக் குற்றம் சொல்லுவதே தவிர, பெண்ணை விசேஷமாக முன் சொல்லப்பட்ட விபச்சாரி என்கிற முறையில் அனேகமாகக் குற்றம் சொல்லுவதில்லை. அன்றியும், இம் மாதிரிக் குற்றச்சாட்டுதலும், வசவுக்கும் பழிப்புக்கும் உபயோகப்படுத்துதலும் ஆண்களுக்குக் கிடையாது. அன்றியும் ஆண்களை ' விபச்சாரன் ' என்று வைகின்ற வழக்கமும் கிடையாது. அப்படிச் சொன்னாலும் எந்த ஆணும் கோபித்துக்கொள்வதும் கிடையாது.

எனவே, விபச்சாரம் என்பது பெண்கள் அடிமைகள் என்பதைக் காட்டும் ஒரு குறிப்பு வார்த்தையே. ஏனெனில், விபச்சார தோஷம் என்பதும், விபச்சாரம் செய்வதால் ஒழுக்கக் குறைவு என்பதும் வழக்கத்தில் பெண்களுக்குத்தான் உண்டே யொழிய ஆண்களுக்குக் கிடையாது.

உதாரணமாக, விபச்சாரம் செய்யும் பெண்களைத்தான் குற்றம் சொல்லி சாதியை விட்டுத் தள்ளிவைத்தும், வீட்டை விட்டுத் துரத்தியும், அடித்தும் உதைத்தும் வைதும் துன்பப்படுத்துகின்றார்களே ஒழிய—சில சமயங்களில் கொலையுங்கூட செய்கின்றார்களே ஒழிய—ஆண்களை இப்படிச் செய்ததாகக் கண்டதோ கேட்டதோ இல்லை.

சில இடங்களில் விபச்சாரம் ஆண்களுக்குத் தற்பெருமையாகவும், கீர்த்தியாகவும் கூட இருக்கின்றதைப் பார்க்கின்றோம். சில ஆண்கள் அதைப் பெருமையாய்ச் சொல்லிக் கொள்வதையும் கேட்கிறோம். மக்களும் விபச்சாரி மகன் என்று சொன்னால் கோபப்படுகின்றார்களே ஒழிய-விபச்சாரனுடைய மகன் என்றால் கோபிப்பது இல்லை. ஆனால், எந்தச் சமயத்தில் ஆண்கள் கோபித்துக்கொள்கின்றார்கள் என்றால், தங்கள் மனைவிகள், வைப்பாட்டிகள், குத்தகைத் தாசிகள் விபச்சாரம் செய்தார்கள் என்று சொன்னால் மாத்திரம்-உடனே கோபித்துக்கொள்ளுகின்றார்கள்; மேலும், மிகவும் அவமானம் ஏற்பட்டு விட்டதாகவும் பதறுகிறார்கள். மற்றும் தங்கள் பெண்களைத் தங்களுடைய சம்மதத்தின் பேரில் தங்களுடைய சுயநலத்திற்காக விபச்சாரத்திற்கு விட இணங்குகிறான் என்றோ, பெண்ணை அடக்கமுடியாமல் 'ஊர் மேல்' விட்டுவிட்டான் என்றோ சொல்லுகின்றபோது, அதிகமாய்க் கோபித்துக்கொள்கின்றார்கள். ஆகவே, விபச்சாரம் என்ற வார்த்தையின் தத்துவம்-பெண்கள் ஆண்களின் அடிமைகள் என்றும், ஆண்களுடைய போக போக்கியப் பொருள் என்றும், விலைக்கு விற்கவும், வாடகைக்கு விடவும் கூடிய வஸ்து என்றும் கருதி இருக்கின்றார்கள்.

அதாவது, விபச்சாரம் என்னும் வார்த்தை வழக்கத்தில் ஏன் பெண்களை மாத்திரம் சொல்லப் பயன்படுத்தப்பட்டது? ஆண்களைச் சொல்லுவதற்கு ஏன் அது பயன்படுத்தப் படவில்லை? விபச்சாரம் என்று சொல்லப்படுவது சுபாவத்தில் உண்மைக் குற்றமுள்ள வார்த்தையாக இல்லை. எப்படிக் 'கற்பு' என்னும் வார்த்தையையும் அதைப் பயன் படுத்தும் முறையையும் புரட்டானது என்றும், பெண்ணடிமை கொள்ள உத்தேசித்து ஏற்படுத்தியதாகுமென்றும் சொல்லுகிறோமோ-அதுபோலவே, 'விபச்சாரம்' என்னும் வார்த்தையும் அதன் பிரயோகமும் புரட்டானதும் பெண்களை அடிமை கொள்வதற்கென்றே ஏற்படுத்தப்பட்டதென்றும் காணப்படுவதோடு-அது இயற்கைக்கு விரோதமானதென்றுங் கூடச் சொல்லலாம். இவ்விரு வார்த்தைகளும் தேவையில்லாதவைகளாகும். வாழ்க்கை ஒப்பந்த நிபந்தனைக்கு மாத்திரம் இவை தேவையாய் இருக்கலாம். ஆனபோதிலுங்கூட, அவையும் இயற்கைக்கு முரணானவை என்பதை யாரும் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். அதற்கு ஆதாரம்-இவ்விரண்டு வார்த்தைகளின் தத்துவங்களும் பெண்கள் மீது மாத்திரம் சுமத்தப்பட்டு ஆண்கள்மீது சுமத்தப்படாமையும், ஆண்கள் அவற்றிற்குக் கட்டுப்படாமையும்-அதைப்பற்றி இலட்சியம் செய்யாமையுமேயாகும்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் 'கற்பு தவறுதலும்', 'விபச்சாரத்தனமும்' கூடாது என்று பலர் கற்பித்தும், பல நிபந்தனைகளைக்கூட ஏற்படுத்தியும்-மற்றும் எவ்வளவோ பயங்களைக் காட்டியும் அதனால் சிலராவது அடிதடி, விரோதம், கொலை, உடல்நலிவு முதலியவைகளால் துன்பப்படுவதை நேரில் காணக்கூடிய சந்தர்ப்பங் களிருந்தும், இவ்வளவையும் மீறி கற்புக்கு விரோதமாகவும், விபச்சாரத்திற்கு அனுகூல மாகவும் உணர்ச்சியும் ஆசையும் ஏன் உண்டாக வேண்டுமென்பதைக் கவனித்தால், அது தானாக விளங்கும். இயற்கையோடியைந்த வாழ்வு எது என்பதையும், இயற்கைக்கு மாறு பட்ட வாழ்வு எது என்பதையும் எவ்வித நாட்டுப்பற்று, நடப்புப்பற்று, பிறப்புப்பற்று என்பதில்லாமல் நடுநிலையிலிருந்து-தன் அனுபவத்தையும் தன் மனத்தில் தோன்றிய-தோன்றும் உணர்ச்சிகளையும் ஆசைகளையும் ஒரு உதாரணமாக வைத்துக்கொண்டு, பரிசுத்தமான உண்மையைக் காணுவானேயானால், அப்போதும் 'கற்பு', 'விபச்சாரம்' என்னும் வார்த்தைகள் வெறும் புரட்டு என்பதும், மற்றவர்களை அடிமையாகக் கட்டுப் படுத்த உண்டாக்கப்பட்ட சுயநல சூழ்ச்சி நிறைந்தவை என்பதும் தாமாகவே விளங்கி விடும். மற்றும், விபச்சாரம் என்பது ஒருவனுடைய பாத்தியதைக்கும், ஏற்படுத்திக் கொள்ளும் கட்டுப்பாட்டிற்கும் மாத்திரம் விரோதமே தவிர, உண்மையான ஒழுக்கத்திற்கு விரோதமல்ல என்பதற்கு மற்றொரு உதாரணம் கூறுவோம்,

மலையாள நாட்டில் இரண்டு, மூன்று ஆண்கள் ஒரு பெண்ணை மனைவியாக ஏற்படுத்திக்கொள்ளும் வழக்கம் உண்டு. ஆனால், அந்தப் பெண் மற்ற ஆண்களிடம்—அதுவும் தங்களுக்கு மனைவியாயிருக்கும் காலத்தில்—பிற ஆண்களிடம் சம்பந்தம் வைத்துக்கொண்டால் மாத்திரந்தான் அதை விபச்சாரமாகக் கருதி சில சமயங்களில் கொலைகள் கூட நடக்கின்றன. மற்றும் சில வகுப்புகளில் தங்கள் இனத்தார் தவிர மற்ற இனத்தாரிடம் சகவாசம் செய்தால் மாத்திரம் விபச்சாரமாய்க் கருதப்படுகின்றது. நமது நாட்டிலும் சில வகுப்புகளில் தம் குடும்பத்தைச் சேர்ந்த 'மச்சாண்டார்', 'கொழுந்தனார்', 'மாமனார்' ஆகியவர்கள் சம்பந்தமானது விபச்சாரத்தனமாய்க் கொள்ளப்படுவதில்லை. இவைகளையெல்லாம் கவனித்தால், விபச்சாரம் என்பது ஒரு குறிப்பிட்ட கொள்கைமீது—பொதுவான ஒழுக்கக்குறைவு என்கிற தத்துவத்தில் எப்போதும் பழக்கத்தில், அமுலில் இல்லை என்பது விளங்கும்.

மனித சமூகத்திற்குச் சில கட்டுப்பாடுகளும் ஒழுங்கும் வாழ்க்கைக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதை மறுக்கவில்லை. பொது வாழ்க்கைக்கு ஏற்படுத்தப்படும் கொள்கைகள் பொதுஜனங்களில் யாருடைய தனிச் சுதந்திரத்திற்கும் பாதகமில்லாமலும் பிரயோகத்தில் உயர்வு–தாழ்வுத் தத்துவம் இல்லாததாகவுமிருக்கவேண்டும்; முக்கியமாக, இயற்கையோடியைந்ததாக இருக்கவேண்டும். அவைகளும் மற்றவர்களுடைய நியாயமான உரிமைக்கும் சுதந்திரத்திற்கும் சிறிதும் பாதகம் உண்டுபண்ணாததாக இருக்கவேண்டும். அன்றியும் அறிவுக்கும் சாத்தியத்திற்கும் அனுபவத்திற்கும் ஏற்றதாகவும், அவசியம் கொண்டதாகவும் இருக்கவேண்டும்.

இப்படி இல்லாமல், வெறும் நிர்ப்பந்தத்திற்கு நாணயமற்றதும், அறிவுக்கும் அனுபவத்திற்கும் ஒவ்வாததுமான விஷயங்களுக்காக வலுத்தவர்கள், தந்திரக்காரர்கள் தங்களுக்குத் தோன்றினபடிக்கெல்லாம் கட்டுப்பாடுகள் செய்துகொண்டு போவதானது—எவ்வித பயனையும் தராது; அது மனித சமூகத்திற்கு வீண் கஷ்டத்தை உண்டாக்கும்.

பொது வாழ்க்கையில் ஒருவன் செய்யக்கூடாது என்பதாக ஏற்பாடு செய்திருக்கும் 'திருட்டு' என்பதானது, ஒரு மனிதனுக்கு—அதாவது திருட்டுக் கொடுத்தவனுக்குக் கஷ்டத்தையும் மன வருத்தத்தையும் கொடுக்கக்கூடியதாயிருக்கின்றது. எதனால் அந்த நஷ்டமும் சங்கடமும் ஏற்படுகிறதென்றால், திருட்டுக்கொடுத்தவன் திருட்டுப்போன சொத்தைத் 'தன்னுடையது' என்றும், அது 'தனக்கே உரியது' என்றும் எண்ணியிருப்பதால் தான். உலகில் பொருளியல் சமத்துவம் ஏற்படுகின்றவரை திருட்டு என்னும் குணமானது குற்றமாகத்தான் பாவிக்கப்படும். இன்று உலகத்தில், சிறப்பாக நமது நாட்டில் இருந்து வரும் கட்டுப்பாடு, ஒழுக்கம் முதலியவைகள் எல்லாம் பெரிதும் இயற்கைக்கு எதிராகவும்–அடிமைத்தனத்திற்கு ஆதரவாகவும்–தனிப்பட்டவர்கள் சுயநலத்திற்கேற்ற சூழ்ச்சிகளுமாகவே இருக்கின்றன. ஜீவ சுபாவம் என்னவென்றால், உணர்ச்சியும் இந்திரியச்செயலும் ஆசையுமேயாகும். உணர்ச்சியின் காரணமாய்ப் பசி, நித்திரை, புணர்ச்சி மூன்றும் முக்கிய இயற்கை அனுபவம். இந்திரியங்களின் காரணமாய்ப் பஞ்சேந்திரியங்களும் (உடல், வாய், கண், மூக்கு, காது) அவற்றின் செயல்களையும் முக்கியமான இயற்கை அனுபவமாய்க் காண்கிறோம். பொது உணர்ச்சியும், இந்திரியச் செயலும் மனிதனுக்கு ஆசையை உண்டாக்கிக்கொண்டே இருக்கின்றது. ஆசையின் காரணமாய் எதையும் ஆசைப்படுவதும், அதுவும் அளவுக்கடங்காமல் மேலும் மேலும் போய்க்கொண்டிருப்பதும் சுபாவமாகவே இருக்கிறது. ஆகவே உணர்ச்சியும், இந்திரியச் செயலும், ஆசையும் மனிதனால் கட்டுப்படுத்த எளிதில் முடிவதில்லை; கட்டுப்படுத்தியவர்கள் பல இலட்சத்திற்கு ஒருவர் இருப்பாரோ என்னவோ? அந்தப்படி இல்லாத சாதாரண மனித ஜீவனின் உணர்ச்சியையும் இந்திரியச் செயலையும் ஆசையையும் கட்டுப்படுத்தும்படியானதாகக் கொள்கைகளை–கட்டுப்பாடுகளை ஏற்படுத்தினால் அவை செலாவணியாகுமா? பொய் சொல்லக்கூடாது

என்று வாயால் சொல்லிவிடுகிறோம். ஆனால் தொழில் முறைக்காக, பொய்யை அவசிய மாக வைத்து, அதனால் பிறருக்கு நஷ்டத்தையும் கஷ்டத்தையும் கொடுத்துவரும் வக்கீல் களையும், வியாபாரிகளையும் மனித சமூகத்தில் எவ்வித இழிவின்றி ஏற்றுக்கொண்டிருக் கிறோம். அத்தொழிலால் சம்பாதித்த செல்வத்தைக்கொண்டு அம் மக்களைக் கவுரவமாக நடத்துகிறோம்–மதிக்கின்றோம். ஆனால், அதுபோலவே நடக்கும் மற்றொரு தொழில் காரரை (தேவதாசிகள்) இழிவாகக் கருதுகிறோம்.

பொதுவாக, இம்மூன்று பேர்களாலும் சமூகத்திற்குக் கஷ்டமும் நஷ்டமும் இருந்து–இருவரை ஏற்றுக்கொண்டு ஒருவரைத் தள்ளுவதானது கேவலமும், சூழ்ச்சியும், சுய நலமுமேயல்லாமல் இதில் நியாயம் இருப்பதாகச் சொல்ல முடியுமா?

இப்போது நடைமுறையிலிருக்கும் 'விபச்சாரம்' என்பதும் அதன் தத்துவமும் பெண்களை அடிமைப்படுத்துவதற்காக—பெண்கள் அடிமைகள் என்னும் கருத்தின்மீது ஏற்பட்டவைகளாதலாலும், அவை ஆண்களுக்குச் சிறிதும் சம்பந்தமில்லாமலிருப்பதாலும் அவை ஒப்புக்கொள்ளமுடியாததாய்க் காணப்படுவதோடு, பெண்கள் சுதந்திரம் என்னும் காரியத்திற்காக நடைபெறும் காரியங்களில் 'விபச்சாரம்' என்னும் காரியம் வந்து முட்டுக் கட்டை போடுமானால்—அதைத் தைரியமாய் எடுத்தெறிந்துவிட்டு முன்னோக்கிச் செல்ல வேண்டியது உண்மையான உழைப்பாளிகளின் கடமையாகும்.

['குடிஅரசு'–தலையங்கம்—26–10–1930]

## 17. தேவதாசி ஒழிப்புச்சட்டம்

கோயில்களில் பெண்களைப் பொட்டுக்கட்டுவதைத் தடுக்கச் சட்டம் செய்யவேணு மாய்த் திருமதி. முத்துலட்சுமி அம்மாள் அவர்களால் சட்டசபைக்கு அனுப்பப்பட்டிருக்கும் சட்டத்தைச் சர்க்கார் நமக்கு அனுப்பி அதன்மீது நமது அபிப்பிராயம் கேட்டிருக்கின்றார்கள்.

இதற்காகச் சர்க்கார் பொதுஜனங்களின் அபிப்பிராயம் கேட்பது என்பது கோமாளித் தனம் என்பதே நமது அபிப்பிராயம். ஏனெனில், கோவில்களில் கடவுள்கள் பெயரால் பெண்களுக்குப் பொட்டுக்கட்டி, அவர்களையே பொதுமகளிர்களாக்கி, நாட்டில் விபச்சாரி தனத்திற்குச் செல்வாக்கும் மதிப்பும், சமய சமூக முக்கிய ஸ்தானங்களில் தாராளமாய் இடமும் அளித்துவரும் ஒரு கெட்ட வழக்கம் நமது நாட்டில் வெகு காலமாய் இருந்துவரு கின்றது. அன்றியும், நாளாவட்டத்தில் இது ஒரு வகுப்பிற்கே உரியது என்பதாகி, இயற்கை யுடன் கலந்த ஒரு தள்ளமுடியாத கெடுதியாய் இந்த நாட்டில் நிலைபெற்றும் விட்டது. ஒரு நாட்டில் நாகரிகமுள்ள அரசாங்கமாகவாவது அல்லது நாட்டின் சுயமரியாதையையோ, பிரஜைகளுடைய ஒழுக்கத்தையோ, நலத்தையோ கோரின அரசாங்கமாகவாவது ஒன்றிருந் தால், இந்த இழிவான கெட்ட பழக்கம், கடவுள் பேராலும் மதத்தின் பேராலும் சமூகத்தின் பேராலும் தேசிய வழக்கத்தின் பேராலும் இருந்துவர ஒருகண நேரமும் விட்டுக்கொண்டு வந்திருக்காது என்றே சொல்லுவோம்.

ஆனால், நமது இந்தியாவில் வெள்ளைக்கார ஆட்சி குடிபுகவும், நிலைபெறவும் நம் நாட்டுச் சுயநலப் பார்ப்பனர்கள் உளவாளிகளாகவும் உதவியாகவும் இருந்து வந்ததால், அப் பார்ப்பனர்களுக்கு அனுகூலமாக வெள்ளைக்காரர்களும் இருக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டு இருந்ததால், அந்தப் பார்ப்பனர்கள் சொல்லுகின்றபடியே நடந்து வெள்ளைக் காரர்கள் தங்கள் காரியத்தைச் சாதித்துக்கொள்ளவேண்டிய அவசியத்தில் பட்டுவிட்டார்கள். இந்தக் காரணங்களால் அவர்கள் பார்ப்பனர்களுக்கு விரோதமாய்ச் சீர்திருத்தத் துறையி லாவது, மனிதத் தன்மைத் துறையிலாவது இதுவரை ஒருவித முற்போக்கான காரியமும் செய்யாமலே இருக்கவேண்டியவர்களாகி விட்டார்கள். ஆனால், இப்போது கொஞ்ச

காலமாய் அப் பார்ப்பனர்களின் தந்திரத்தையும் சூழ்ச்சியையும் கண்டுபிடித்த, அவர்களது யோக்கியதைகளை அடியோடு வெளியாக்கி, சீர்திருத்தங்களை உத்தேசித்து நாமும் வெள்ளைக்காரர்களை மிரட்டக்கூடிய சமயம் மிரட்டியும் ஆதரிக்கக்கூடிய சமயம் ஆதரித்தும், பார்ப்பனர்களின் செல்வாக்கை ஒழித்து நமது சக்தியையும், தீவிர ஆசையையும் காட்ட ஆரம்பித்துவிட்டதால், இப்போது ஏதோ சிறிது அளவிற்காவது சர்க்கார் சீர்திருத்தத் துறையில் நமது இஷ்டத்திற்கும் இணங்கும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கின்றது. இந்த நிலைமையின் பலனேதான் இப்போது நமது கொள்கைகள் சிலது, நாட்டில் பிரச்சாரம் செய்யவும், செல்வாக்குப் பெறவும் இடம் ஏற்பட்டதும்; சட்டசபையில் இதுசமயம் ஒரு முடிவைப் பெற்றுத்தீர வேண்டிய அவசியம் ஏற்பட்டுப் பொதுஜன அபிப்பிராயத்திற்கு வரநேர்ந்ததுமாகும்.

நிற்க, இப்போது திருமதி டாக்டர். முத்துலட்சுமி அம்மாள் அவர்களால் சென்னை சட்டசபைக்கு அனுப்பப்பட்டிருக்கும் 'பொட்டுக்கட்டுவதை ஒழிக்கும்' இந்த மசோதா வானது வெகுகாலமாகவே ஜனப்பிரதிநிதிகள் என்பவர்களால் பொதுக்கூட்டங்களிலும் பொது மகாநாடுகளிலும் கண்டித்துப் பேசப்பட்டிருப்பதுடன், இம் மாதிரி ஒரு சட்டம் செய்யவேண்டும் என்று இந்திய சட்டசபைக் கூட்டங்களிலும் அடிக்கடி பிரஸ்தாபிக்கப் பட்டு வந்திருக்கின்றது. இது சம்பந்தமாக திருமதி டாக்டர். முத்துலட்சுமி அம்மாள் அவர்கள் ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டு இருக்கிறார். அதன் சுருக்கமாவது :

### தேவதாசி மசோதா :

இந்தச் சமூகக் கொடுமையை ஒழிக்க ஆரம்பித்த கிளர்ச்சியானது 1868 வருடம் முதல் நடைபெற்று வருகிறது. 1906, 1907 வருடம் உலக தேசீய மகாநாட்டில் இந்தக் கொடிய கெட்ட வழக்கத்தை ஒழிப்பதற்காகப் பல மாகாண சர்க்கார் அபிப்பிராயங்களையும் அறிந்து தம்மால் கூடியவரை ஒழிப்பதென முடிவு செய்ததினின்று இந்திய கவர்ன் மெண்டும் இந்தத் தேவதாசி மசோதாவில் அதிகச் சிரத்தைக்காட்டி வந்தது.

1912-ம் வருடம் பழைய இம்பீரியல் சட்ட நிருபணச் சபையில் மூன்று இந்திய அங்கத்தினர்கள்—கனம் மாணிக்ஜி தாதாபாய், முதோல்கர், மேட்கித் ஆகியவர்கள்—இந்தக் கொடிய பழக்கத்தை ஒழிப்பதற்கு இதே எண்ணத்தோடு வேறே மூன்று மசோதாக்கள் கொண்டுவந்தனர். இந்திய சர்க்கார் இந்த மசோதாவை உள்நாட்டுச் சர்க்காருக்கு அனுப்பி, அவர்களது அபிப்பிராயம் தந்தவுடன் 1913-ம் வருடம் செப்டம்பர் மாதம் தாங்க ளாகவே ஒரு மசோதாவைக் கொண்டுவந்தார்கள். மீண்டும் அம் மசோதா ஒரு செலக்ட் கமிட்டிக்கு அனுப்பப்பட்டு அவர்களது ரிப்போர்ட்டையும் 1914-ம் வருடம் மார்ச் மாதம் பெற்றார்கள். அந்த ரிப்போர்ட் மறுபடியும், இப்போதைப்போலவே பொதுஜன அபிப்பிராயத்திற்கு விடப்பட்டது. இம் மசோதாவை நிறைவேற்றுவதில் எல்லோருக்கும் பூரண எண்ணம் இருந்தபோதிலும், அத்தகைய பெண்களை எவ்வாறு காப்பாற்றுவது என்பது போன்ற சில சில்லரை விவாதங்கள் கிளப்பிவிடப்பட்டதால் அம் மசோதா தானாகவே அதுசமயம் மறைந்துவிட்டது.

அதன்பின்னர், மகா யுத்தக்கிளர்ச்சியினால் அது கவனிக்கப்பட முடியாமல் போயிற்று. பிறகு 1922-ம் வருடம் டாக்டர் கோர் மீண்டும் அதை இந்தியச் சட்டசபையில் கொண்டுவந்தார். மேற்படி தீர்மானத்தின்மேல் விவாதம் நிகழ்ந்து கடைசியாக அது மறுபடியும் பொதுஜன அபிப்பிராயத்திற்கு பிரசுரிக்கப்பட வேண்டுமென்ற பிரேரேபனை அதிகப்படியான வோட்டுக்களால் தோற்கடிக்கப்பட்டது. பிறகு மேற்படி 1922-ம் வருடத்திய தீர்மானத்தின்மீது, 1924-ம் வருடம் அதைச் சட்டமாக்கப்பட்டதோடு, அதை அனுசரித்து இந்தியன் பினல்கோடு 372, 373 செக்ஷன்கள் திருத்தப்பட்டன. அதன் சட்டம் 1925-ம் வருடம் ஜனவரி மாதம் முதல்தேதியினின்று அமுலுக்கு வந்தது. அதில் 14 வயதிற்கு

மேற்பட்ட பெண்களுக்கு பொட்டுக்கட்டுதல் கூடாது என்றே சாத்திரத்தால் தடுக்கப்பட்டு இருக்கிறது. ஏனெனில், பொட்டுக்கட்டப்படவேண்டிய பெண் சாத்திரப்படி கன்னிகையாய் இருக்கவேண்டுமாதலால், 14 வயதிற்குள்தான் இந்தச் சடங்கு செய்வது வழக்கமாக இருந்து வந்தது. அதாவது, எந்தப் பெண்ணையும் 14 வயதிற்குமேல் பொட்டுக்கட்ட எந்தக் கோயில் அதிகாரியும் அனுமதிப்பதில்லை. ஆனால், மேற்படி சட்டம் வந்தபிறகு 16 வயதிற்கு கீழ்ப்பட்ட பெண்களுக்குப் பொட்டுக்கட்டப்பட்டால், கோயில் அதிகாரிகள் குற்றவாளிகளாவதோடு அந்த விதமாக அனேக கேஸ்கள் நடந்து, அந்த 25-வது சட்டப்படி தண்டனை பெற்றிருக்கிறார்கள். ஆகவே, வைதீகர்களது அபிப்பிராயப்படிப் பார்த்தாலுங் கூட, சாத்திரப்படி 18 வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்குக் கோயில்களில் பொட்டுக்கட்ட அனுமதிப்பதில்லை என்று தெரிகிறது.

இந்தியன் பினல்கோடுப்படி, ஒரு மைனர் பெண்ணைப் பொட்டுக்கட்டுவது குற்றம் என்றாலும், பேராசையுள்ள பெற்றோர்கள் சிலர் தங்கள் பெண்களுக்குப் பொட்டுக்கட்டிக் கோவிலிடமிருந்து உத்திரவு பெற்றுவிடுகின்றார்கள். இது விபச்சாரத்திற்கு அனுமதி கொடுத்ததாகுமேயன்றி வேறில்லை. பொதுஜன அபிப்பிராயம் இதைச் சட்டமாக்க அனுகூலமாகி இருக்கிறது. பத்திரிக்கைகளில் இதை ஆதரித்தெழுதியும் பொதுக்கூட்டங் களில் ஆதரித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியும் சுமார் 13 வருடத்திற்கு மேற்பட்ட ஆண் பெண் சங்கங்களில் அதை ஆதரித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியும் இந்தக் கொடிய பழக்கத்தினால் அல்லலுறும் சமூகத்தினரே இதைச் சட்டமாக்க வற்புறுத்தி எழுதியும் இருக்கின்றனர். டிஸ்டிரிக்டு போர்டு, முனிஸிபாலிடிகளிலும் தங்களது ஆதரவைத் தெரிவித்து இருக்கின்றார்கள். இவ்வாறெல்லாம் இருக்க, இச் சட்டத்திற்குப் பொதுஜன அபிப்பிராயத்தை அறிய விரும்புவானேன், என்பது விளங்கவில்லை.

இந்த நாள்பட்ட கொடிய சமூகக் கொடுமையை ஒழிக்க யாருக்கும் ஆட்சேபமோ எதிர் அபிப்பிராயமோ இருக்கமுடியாது. இந்தியத் தலைவர்கள் கூறியிருப்பதுபோல், 'தேவதாசி' என்று ஒரு வகுப்பு இருப்பது இந்து சமூகத்திற்கே இழிவானதும் அல்லாமல், இந்து மதத் திற்கே பெரும் பழியுமாகும். ஒரு தனிப்பட்ட பெண்ணுக்கு ஏற்படும் இழிவு பெண்ணுல கிற்கே ஏற்பட்டதாகுமாகையால், இவ்வழக்கம் பெண்களின் அந்தஸ்தையும் கவுரவத்தையும் பெரிதும் பாதிக்கக்கூடியதாய் இருக்கின்றது. அன்றியும் ஒரு குறிப்பிட்ட சாதியையோ சமூகத்தையோ விபச்சாரத்திற்கு அனுமதி கொடுப்பதும் பின்னர் அவர்களை இழிந்த சமூகமாகக் கருதுவதும் பெரும் சமூகக் கொடுமையாகும். சிறு குழந்தைகளில் இருந்தே துராச்சார வழிகளில் பயிற்றுவிப்பது ஜனசமூக விதிகளையே மீறியதாகும்.

எனவே இப்படிப்பட்ட நிலைமையில் இனி இதைப்பற்றிப் பொது ஜனங்களுடைய அபிப்பிராயத்தைத் தெரியவேண்டிய அவசியமே இல்லை.

தவிர, இது விஷயத்தில் சாத்திர சம்பந்தமான வைதீகர்களின் ஆட்சேபத்துக்கும் இடமில்லை. ஏனெனில், சாத்திரத்தில் 14 வயதுக்குமுன் கன்னிப் பெண்ணாய் இருக்கும் போதுதான் பொட்டுக்கட்டவேண்டும் என்று இருக்கின்றது. இந்தியன் பினல்கோடு 372, 373 செக்ஷன்களின் படியோ 18 வயதுக்குள் பொட்டுக்கட்டக்கூடாது என்றும், கட்டினால் ஒரு வருஷக் கடினக் காவல் தண்டனையும் அபராதமும் என்றும் இருக்கின்றது. ஆகவே, இது விஷயத்தில் வைதீகமும், இந்து மதமும் 1924-ம் வருஷத்திலேயே ஒழிந்துவிட்டது. இந்நிலையில் இப்போதைய வைதீகர்கள் என்பவர்கள் இதை ஆட்சேபிப்பதானால்—ஒன்று அவர்களது சாத்திரம் அவர்களுக்குத் தெரியாமல் இருக்கவேண்டும் ; அல்லது தாசிகள் மூலம் தங்கள் வகுப்பார்களில் சிலர் வயிறு வளர்ப்பது கெட்டுப் போகுமே என்கின்ற சாதி அபிமானமாக இருக்கவேண்டும்.

அடுத்தாற்போல், பொதுஜனங்கள் எந்தவிதத்திலாவது இந்தச்சட்டத்தை ஆட்சேபிப் பார்களா என்று எண்ணுவதும்—ஒன்று, முட்டாள்தனமாகவோ அல்லது யோக்கியப்

பொறுப்பற்ற தன்மையாகவோதான் இருக்கவேண்டும். ஏனெனில், இந்து சமூகத்தில் கடவுள் பேரால், மதத்தின் பேரால் விபச்சாரிகளை ஏற்படுத்தவேண்டுமென்று எந்த சமூகத்தாரோ, தேசத்தாரோ கருதுவார்களானால் அவர்களைப் போல் காட்டுமிராண்டிகளோ கெட்டவர்களோ இருக்கவே முடியாது. மற்றபடி, எந்த சமூகமாவது இம் மாதிரியான தொழில் தங்கள் வகுப்புக்கு இருக்கவேண்டுமென்று கேட்பார்களேயானால், அவர்களைப் போல் சுயமரியாதையற்றவர்களும் இழிகுல மக்களும் வேறுயாரும் இருக்கமுடியாது. எந்தப் பெண்களாவது இந்தத் தொழிலில் ஜீவிக்கலாம் என்று கருதி அதற்காகச் சுவாமியையும் மதத்தையும் உதவிக்கு உபயோகப்படுத்த நினைத்தால், அவர்களைப்போல் ஈனப் பெண்கள் வேறு எங்குமே இருக்கவே முடியாது.

ஆகவே, இந்தச் சட்டம் சென்ற சட்டசபைக் கூட்டத்திலேயே நிறைவேற்றப் பட்டிருக்க வேண்டியது மிக்க அவசியமும் யோக்கியமுமான காரியமாகும். ஆனால், அந்தப்படி நிறைவேற்றப்படாமல் இருக்க, சட்டமெம்பர் ஆட்சேபணைகளைக் கிளப்பி, இதைப் பொதுஜன அபிப்பிராயத்திற்கு அனுப்புவது என்னும் பேரால் தடைப்படுத்தி விட்டது மிகவும் வருந்தத் தக்கதாகும். அதற்கு அனுகூலமாய் ஜஸ்டிஸ் கட்சி அங்கத்தினர்கள் வோட்டு கொடுத்தது மிகுதியும் மானக்கேடான காரியமாகும். அக் கட்சியார்கள் இந்தக் காரியத்தைக்கூடச் செய்ய முடியவில்லையானால், பின் என்ன வேலை செய்யத்தான் அந்தச் சட்டசபையை நடத்திக்கொண்டிருக்கிறார்கள் என்பது நமக்குப் புலனாகவில்லை. 'காங்கிரஸ்காரர்கள் சட்டசபையில் இல்லாததால் இச்சட்டம் நிறைவேறாமல் போயிற்று' என்று திருமதி டாக்டர். முத்துலட்சுமி நமக்கு எழுதியிருப்பதைப் பார்க்க, நமக்குத் தாங்க முடியாத அவமானமாகவே இருந்தது.

எப்படியானாலும், அடுத்த சட்டசபைக் கூட்டத்திலாவது இச்சட்டம் நிறைவேறாமல் போகுமேயானால் சர்க்காரின் யோக்கியத்திலும் ஜஸ்டிஸ் கட்சியாரின் சுயமரியாதையிலும் தெருவில் போகின்றவனுக்குக்கூட மதிப்பும் நம்பிக்கையும் இருக்காது என்றே சொல்லுவோம்.

['குடிஅரசு'–தலையங்கம்—23-3-1930]

## 18. பெண்டிர் கடமை

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

சகோதரிகளே! நீங்கள் தற்போது தழுவி நிற்கும் இந்துமத வருணாசிரம தர்மப்படி நீங்கள் சூத்திரச்சிகள்; பார்ப்பனனின் தாசிகள் என்பதை முதலில் உணர்ந்து கொள்ளுங்கள். கடவுள்களுக்கும் நீங்கள்தாம் தாசிகள். எந்தக் கடவுளும் சூத்திரச்சிகளுடன்தான் லீலை செய்ததாகப் புராணக்கதைகள் கூறுகின்றனவே ஒழிய, எந்தக் கதையும் கடவுள் பார்ப்பனத்திகளோடு லீலை செய்ததாகக் கூறக் காணோம். கடவுள் அவதாரமெல்லாம் நம் பெண்களின் கற்பைத்தான் சோதித்ததாகக் கதைகளில் கூறப்படுகிறதே ஒழிய—நம்மவரின் பெண்களைத்தான் கையைப் பிடித்து இழுத்துக் கற்பழித்ததாகக் கூறப்படுகிறதே ஒழிய—எந்தக் கதையிலும் பார்ப்பனப் பெண்கள் கடவுளால் கற்பழிக்கப் பட்டதாகக் கூறப்படக்காணோம். அவ்வளவு இழிவு படுத்திவிட்டார்கள் இந்த அன்னக் காவடிப் பார்ப்பனர்கள், நம்மை! இதை அறியாமல் நீங்கள் இன்னும் அவன் காலடியில் வீழ்ந்து காசு பணம் அழுதுவருகிறீர்கள்.

இனி நீங்கள் ஒரு காசுகூட, எந்தப் பார்ப்பானுக்கும் அழக்கூடாது. உங்கள் வீட்டு நல்ல காரியங்களுக்கோ, கெட்ட காரியங்களுக்கோ அவனை ஒரு நாளும் அழைக்கக்கூடாது. நீங்கள் கோயிலுக்குப் போகக்கூடாது; போவதாய் இருந்தாலும் பார்ப்பான்தான் பூசை செய்யவேண்டும் என்கின்ற கட்டுத்திட்டம் உள்ள கோயிலுக்கோ—இரண்டு பெண்டாட்டிகளைக் கட்டிக்கொண்டு, அதோடு ஒரு வைப்பாட்டியையும் வைத்திருக்கும் சாமிகளும் உள்ள கோயிலுக்கோ நீங்கள் கட்டாயம் போகக்கூடாது.

அப்படிப் போவதானால், போகும்போது ஒரு தடி எடுத்துக்கொண்டு போங்கள்— தேங்காய் வெற்றிலை பாக்குக்குப் பதிலாக! அந்தத் தடியால் அடித்துக் கேளுங்கள், அந்தச் சாமியை! 'நான் தடியால் அடிக்கிறேன்; நீ அழாமல் இருக்கிறாயே! உனக்கு உயிர் கிடையாது; நீ வெறும் குழவிக் கல் சாமி; அதனால்தான் நான் அடிப்பது உனக்குத் தெரியவில்லை. அப்படி இருக்க, உனக்கு ஏன் பெண்டாட்டி? அப்படித்தான் பெண்டாட்டி வேண்டுமென்றால், ஒரு பெண்டாட்டி போதாதா? இரண்டு பெண்டாட்டிகள் ஏன் உனக்கு? இரண்டு பெண்டாட்டிகள் தான் இருந்து தொலையட்டும்–ஒரு தடவை மட்டும் அவர்களைக் கலியாணம் செய்து கொண்டால் போதாதா? வருடா வருடம் ஏன் உனக்குக் கலியாணம் நடக்க வேண்டும்? அதுவும் போதாதென்று வைப்பாட்டிகள் வேறு வேண்டுமென்று கேட்கிறாயே! இது நியாயமா? இத்தனையும் வேண்டுமானால் வைத்துக்கொள்! அண்டங்களையெல்லாம் படைத்த உனக்கு நாங்கள் படி அளக்க வேண்டுமா? உனக்கு வேண்டியதை உன்னால் தேடிக்கொள்ள முடியவில்லையா? நீயா எங்களுக்குப் படியளக்கப் போகிறாய்? ஏன் சாமி, மவுனம் சாதிக்கிறீர்கள்? கல்லில்லையானால்—நீர் உண்மையில் கடவுளானால்—நாங்கள் தரும் பொருள் உனக்குச் சேர்வதில்லையானால்—உன் பேரால் எங்களைக் கொள்ளையடித்துவாழும் இந்த அன்னக் காவடிகளான பார்ப்பனர்களை ஏன் தண்டிக்கக் கூடாது?' என்று தடியால் அடித்துக் கேளுங்கள். பதில் இல்லையானால், நாங்கள் கூறுவது போல்—அது வெறும் குழவிக் கல் என்பதை அறிந்துகொண்டு வீடு திரும்புங்கள். பிறகு உங்களை ஒரு வார்த்தை பேசுவார்களா உங்கள் கணவர்கள்?

தாய்மார்களே! நீங்கள் எதையும் பகுத்தறிந்து பார்க்கவேண்டும். கல்லே கடவுள் என்று நம்புவதையும் பார்ப்பானைக் கடவுள் அவதாரம் என்று நம்பி அவனுக்கு அரிசி பருப்பு அழுவதையும் அறவே விட்டொழிக்க வேண்டும். சாணி, மூத்திரத்தைக் கலக்கிக் குடிப்பது மதம் அல்ல. மக்களுக்கு ஒழுக்கத்தைக் கற்பிப்பதுதான் மதம்—மனிதனை மனிதனாக மதித்து நடத்துவதுதான் மதம்—என்பதை நீங்கள் உய்த்துணர வேண்டும். புராண சம்பந்தமான நாடகங்களுக்கோ, சினிமாக்களுக்கோ, புண்ணிய ஸ்தலங்களுக்கோ நீங்கள் கட்டாயம் போகக்கூடாது. இவையாவும் பார்ப்பனர்கள் உங்கள் காசைப் பறித்துச் சுகபோக வாழ்வு வாழ்வதற்கு வகுத்துக்கொண்ட வழிகள். நீங்களும் மேல்நாட்டுப் பெண்களைப்போல் சகல உரிமைகளையும் பெற்று, இன்ப வாழ்வு வாழ வேண்டும். அதற்கு நீங்கள் ஆண்களைப் போல் படிக்கவேண்டும். உங்களுக்குச் சட்டத்தின் மூலம் பல உரிமைகள்—சொத்துரிமை, விவாகரத்து உரிமை ஆகிய உரிமைகள் வரக் காத்திருக்கின்றன. அவ்வுரிமைகளை அனுபவிக்க உங்களுக்குக் கல்வி அறிவு அவசியமாகும். நகைகளிலோ, சேலைகளிலோ உங்களுக்குள்ள பிரியத்தை ஒழித்துவிடுங்கள்! இவற்றில் பிரியம் வைத்துக்கொண்டு இருப்பீர்களானால், ஜவுளிக் கடையிலும் நகைக் கடையிலும் சேலை விளம்பரத்திற்காக அவ்வப்போது வெவ்வேறு சேலை உடுத்தி வெவ்வேறு நகை மாட்டி வெளியே நிறுத்திவைக்கும் வெறும் பொம்மைகள் போலத்தான் நீங்கள் ஆக வேண்டும்.

ஆகவே, அவ்விருப்பங்களை விட்டு, கல்வி அறிவில் விருப்பம் கொள்ளுங்கள். வீரத் தாய்மார்களாக ஆக விருப்பப்படுங்கள்! நீங்கள் மாறினால் உங்கள் கணவன்மார்களும் மற்ற ஆண்களும் மாற்றம் அடைவது வெகு சுலபம். ஆண்கள் உங்களைத்தான் பிற்போக்காளிகள் என்று உங்கள்மீது பழிசுமத்தி வருகிறார்கள். அப்படிச் சொல்லுக்கு ஆளாகாதீர்கள். எதிர்காலத்தில்—'இவள் இன்னாருடைய மனைவி' என்று அழைக்கப்பட மாட்டாது; 'இவர் இன்னாருடைய புருஷர்' என்ற அழைக்கப்படவேண்டும். அந்த நிலைக்கு உங்களைக் கொண்டுவர அனுதினமும் பாடுபட்டுவரும் திராவிடர் கழகத்தை நீங்கள் அனைவரும் ஆதரித்து வரவேண்டும்.

[தூத்துக்குடியில் 8, 9-5-1948-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 5-6-1948]

# 19. திருமணம் வேண்டாதது

உலகில் அர்ச்சகன், மாந்திரிகன், ஜோதிடன் இவர்களை விடப் பித்தலாட்டத்தில் கைதேர்ந்தவர்கள் கிடையாது.

மதமும் கடவுள் சங்கதியும் மனித சமூகத்தின் வளர்ச்சியைப் பெரிதும் தடுத்து நிறுத்திவிட்டன. குறிப்பாகப் பெண்கள் சங்கதியை எடுத்துக்கொள்ளுங்கள். பார்ப்பான் நம்மை எப்படிக் கீழ்சாதி என்று கூறி அடிமை வேலை வாங்குகிறானோ, அதைப்போலத் தான் மக்களில் சரிபகுதி எண்ணிக்கையுள்ள பெண்களை நடத்தி வருகிறோம். பெண்கள் என்றால் வெறும் குட்டி போடும் கருவி என்றுதான் நடத்தி வருகிறோம். பெண்களும் கணவன்மார்கள் நகை, நட்டு வாங்கிக்கொடுத்தால் போதும்—நல்ல துணிமணி வாங்கிக் கொடுத்தால் போதும் என்கிற அளவுக்குத் தங்களைக் குறுக்கிக்கொண்டு விட்டார்கள்.

பிராமணன்–சூத்திரன் என்ற அமைப்புக்கும் பேதத்திற்கும், புருஷன்–பெண்டாட்டி என்ற விகிதத்துக்கும் எந்தவித வேறுபாடும் கிடையாதே! உலகத்திற்குப் பயன் படும்படியான பேர்பாதி மனித சக்தியை, பெண்ணடிமை மூலம் நாம் விரயப்படுத்திக் கொண்டு இருக்கிறோம்.

இதற்கு ஒரு பரிகாரம் என்ன என்றால் 'கலியாணம்' என்பதையே சட்ட விரோதமாக ஆக்க வேண்டும். இந்தக் 'கலியாணம்' என்ற அமைப்பு முறை இருப்பதால் தான் கணவன்-மனைவி என்ற உறவும், பெண் அடிமைத் தன்மையும் உருவாகிறது. மனைவியாகிவிட்டால் அதோடு சரி—அவள் ஒரு சரியான அடிமை! அதுமட்டுமல்ல— இந்தக் கலியான முறை இருப்பதால்தானே குழந்தை குட்டிகள்—அவற்றுக்குச் சொத்துக்கள் சம்பாதிப்பது—அதுவும் எதைச் செய்தாவது சம்பாதிப்பது என்ற சமுதாய ஒழுக்கக் கேடுகள் எல்லாம் ஏற்படுகின்றன.

மந்திரி ஆகிறவன்கூட, கலெக்டர் ஆகிறவன்கூட பெண்டாட்டி பிள்ளையைக் காப்பாற்றத்தானே இருக்கிறான். இந்த வகையில் அமைப்பு முறை என்றால், உலகத்தைப் பற்றியோ சமுதாயத்தைப் பற்றியோ எவன் கவலைப்படுவான்? பொது உணர்ச்சி எப்படி ஏற்படும்? அவனவன் அவனவன் சொந்த வாழ்க்கைப் பிரச்சினைக்கே ஈடு கொடுத்துக் கொண்டு இருப்பதென்றால், சமுதாய உணர்ச்சி எப்படி ஏற்பட முடியும்?

இந்தக் கலியாண முறையை இந்த நாட்டில் ஏற்படுத்தியதே பார்ப்பான்தான். சாத்திரங்களில் சூத்திரனுக்குக் கலியாண முறையே இல்லையே!

தொல்காப்பியத்திலே கூறப்பட்டு இருக்கிறதே "பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர் அய்யர் யாத்தனர் கரணம் என்ப" என்று இருக்கிறதே! "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் கீழோர்க் காதிய கரணமும் உண்டே" என்றும் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளது. இவற்றில் இருந்தெல்லாம் சூத்திரர்களுக்குத் திருமணம் என்ற அமைப்பே இல்லாதிருந்தது என்பதுதான் தெளிவாகத் தெரிகிறது.

பெரும் பகுதி மக்களைச் சூத்திரனாக்க—உடலுழைப்புக்காரனாக்க எப்படிப் பார்ப்பான் சாத்திரங்கள் செய்தானோ அதைப் போலத்தான்—பெண்களை அடிமையாக்க 'கலியாணம்' என்ற முறையும் ஏற்படுத்தப்பட்டது.

தவம், சூத்திர சம்புகன் எப்படிச் செய்யக்கூடாது என்று இராமாயணத் தத்துவம் கூறுகிறதோ அதை அடிப்படையாக வைத்துத்தான், வள்ளுவனும் பெண்கள் கடவுளைத் தொழாமல் கணவனையே தொழ வேண்டும் என்று எழுதி வைத்து இருக்கிறான்.

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" என்ற குறள் அதுதான்.

இந் நாட்டிலே ஒரு பெண்ணானவள் பதிவிரதையாக இருக்க வேண்டும் என்றால், அவள் எவ்வளவுக்கு எவ்வளவு அடிமை உணர்வோடு இருக்கிறாளோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவள் உயர்ந்த பதிவிரதையாகப் பாவிக்கப்படுகிறாள்.

இதைத்தான் நமது இதிகாசங்களும் புராணங்களும் சாஸ்திரங்களும் வலியுறுத்துகின்றன.

வள்ளுவனிலிருந்து ஒவ்வொரு பெரிய மனிதனும் பெண்ணை அடிமைப் பொருளாகத்தான் கருதி இருக்கிறானே தவிர ஆண்களோடு சரி சமானமான உரிமை யுடையவர்களாகக் கூறவில்லையே!

ஆணும் பெண்ணும் சம உரிமை இல்லாத உலகில் சுதந்திரத்தைப்பற்றிப் பேச எவனுக்கு யோக்கியதை இருக்கிறது?

முஸ்லிமை எடுத்துக்கொண்டால் பெண்களை உலகத்தைக்கூடப் பார்க்கவிடமாட்டேன் என்கிறானே! முகத்தை மூடி அல்லவா சாலையில் நடமாடவிடுகிறான். இதை விடக் கொடுமை உலகில் ஒன்று இருக்க முடியுமா?

நம் நாட்டு யோக்கியதைதான் என்ன? ஏழு வயதிலேயே பெண்களைக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டு அன்றைக்கு இரவே சாந்தி முகூர்த்தம் வைத்துவிடுவானே!

சாந்தி முகூர்த்தம் நடந்த மறுநாளே அந்தப் பெண் ஆஸ்பத்திரிக்குப் போய் விடுவாள்—இவ்வளவு காட்டுமிராண்டுத் தனங்களும் பெண்கள் மீது சுமத்தப்பட்டு இருந்தனவே!

பெண்களுக்காவது உணர்ச்சி வர வேண்டாமா? சிங்காரிப்பது—ஜோடித்துக் கொள்வது—சினிமாவுக்குப் போவது என்பதோடு இருந்தால் போதுமா? தாங்களும் சம உரிமை உடையவர்கள் என்ற உணர்ச்சி வர வேண்டாமா?

உலகிலே மற்ற நாட்டுக்காரன் எல்லாம் எப்படி எப்படி முன்னேறி வருகிறான். வெள்ளைக்காரன் என்ன நம்மைவிடப் புத்தியுள்ளவனா? இயற்கையிலே நம்மைவிட அவன் அறிவில் குறைந்தவன்தானே—அவனோ குளிர் தேசத்துக்காரன்; நாமோ உஷ்ண தேசத்துக்காரன். பாம்புக்குக்கூட உஷ்ண தேசத்துப் பாம்புக்குத்தான் விஷம் அதிகம். பூவில்கூட உஷ்ண தேசத்துப் பூவுக்குத்தான் மணமும் மதிப்பும் அதிகம். அந்த இயற்கை அமைப்புப்படி, நாம் இயற்கையிலேயே அவர்களைவிட அறிவாளிகள்தான். இருந்தாலும் அவர்களின் முன்னேற்றம் எங்கே? நம் நிலை எங்கே? காரணம்—அவன் அறிவைப் பயன்படுத்தினான்—நாமோ பயன்படுத்தத் தவறிவிட்டோம். அறிவைப் பயன்படுத்தினால் நாமும் அவனைவிட வேகமாக முன்னேற்ற மடையலாம்.

"நான் 1932-ல் ஜெர்மனி சென்றிருந்தேன். அப்போது ஒரு வீட்டில் தங்கியிருந்தேன். அந்த வீட்டுக்காரர்களை விசாரித்தேன். அவர்கள் தங்களை, "Proposed Husband and Wife" என்றார்கள். அப்படி என்றால், என்ன அர்த்தம்? என்று கேட்டேன். "நாங்கள் உண்மையான கணவன்-மனைவியாகத் திருமணம் செய்துகொள்வதற்கு முன்பு—ஒருவரை ஒருவர் நன்றாகப் புரிந்துகொள்ள, நாங்கள் பயிற்சி பெறுகிறோம்" என்றார்கள். "எவ்வளவு காலமாக" என்று கேட்டேன். "எட்டு மாதமாக" என்றார்கள். எப்படி இருக்கிறது பாருங்கள்? அந்த நாடு முன்னேறுமா? 'பதிவிரதம்' பேசி, பெண்களை அடிமை யாக்கும் இந்த நாடு முன்னேறுமா?

[பெங்களூரில், 23, 24-6-73-ல் சொற்பொழிவு—'விடுதலை' 28-6-1973]

# 4. வாழ்க்கை ஒப்பந்தம்

## 1. காதல்

அன்பு, ஆசை, நட்பு என்பவற்றின் பொருளைத் தவிர வேறு ஒரு பொருளைக் கொண்டதென்று சொல்லும்படியான 'காதல்' என்னும் ஒரு தனித் தன்மை ஆண், பெண் சம்பந்தத்தில் இல்லை என்பதை விவரிக்கவே இவ்வியாசம் எழுதப்படுவதாகும். ஏனெனில், உலகத்தில் காதல் என்பதாக ஒரு வார்த்தையைச் சொல்லி, அதனுள் ஏதோ பிரமாதமான தன்மை ஒன்று தனிமையாக இருப்பதாகக் கற்பித்து, மக்களுக்குள் புகுத்தி, அநாவசியமாய் ஆண்-பெண் கூட்டு வாழ்க்கையின் பயனை மயங்கச் செய்து, காதலுக்காக என்று இன்பமில்லாமல்—திருப்தி இல்லாமல்—தொல்லைப் படுத்தப்பட்டு வரப்படுகின்றதை ஒழிக்க வேண்டுமென்பதற்காகவேயாகும்.

ஆனால், காதல் என்றால் என்ன? அதற்குள்ள சக்தி என்ன? அது எப்படி உண்டாகின்றது? அது எதுவரையில் இருக்கின்றது? அது எந்த எந்தச் சமயத்தில் உண்டாவது? அது எவ்வப்போது மறைந்து விடுகிறது? அப்படி மறையக் காரணம் என்ன?

ஆழ்ந்து யோசித்தால், காதல் என்பதின் சத்தற்ற தன்மை, பொருளற்ற தன்மை, உண்மையற்ற தன்மை, நித்தியமற்ற தன்மை, அதைப் பிரமாதப்படுத்துவதின் அசட்டுத் தனம் ஆகியவைகள் எளிதில் விளங்கிவிடும்.

ஆனால், அந்தப்படி யோசிப்பதற்கு முன்பே, இந்தக் காதல் என்கின்ற வார்த்தையானது இப்போது எந்த அர்த்தத்தில் பிரயோகிக்கப்படுகின்றது? உலகவழக்கில் அது எப்படிப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது? இவற்றிற்கு என்ன ஆதாரம்? என்பவைகளைத் தெரிந்து ஒரு முடிவு கட்டிக்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

இன்றையதினம் காதலைப்பற்றிப் பேசுகிறவர்கள் காதல் என்பது அன்பு அல்ல, ஆசை அல்ல, காமம் அல்ல; அன்பு, நேசம், ஆசை, மோகம், காமம் என்பவை வேறு; காதல் வேறு, நட்பு வேறு என்றும்; அது ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் தங்களுக்குள் நேரே விவரித்துச் சொல்லமுடியாத ஒரு தனிக் காரியத்திற்காக ஏற்படுவதாகும்; அதுவும் இருவருக்கும் இயற்கையாய் உண்டாகக் கூடியதாகும்; அக் காதலுக்கு இணையானது உலகத்தில் வேறு ஒன்றுமே இல்லை என்றும்; அது, ஒரு ஆணுக்கு ஒரு பெண்ணிடமும், ஒரு பெண்ணுக்கு ஒரு ஆணிடமும் மாத்திரந்தான் இருக்க முடியும். அந்தப்படி ஒருவரிடம் ஒருவருக்குமாக இருவருக்கும் ஒரு காலத்தில் காதல் ஏற்பட்டு விட்டால் பிறகு எந்தக் காரணங்கொண்டும், எந்தக் காலத்திலும் அந்தக் காதல் மாறவே மாறாது என்றும்; பிறகு வேறு ஒருவர் இடமும் அந்தக் காதல் ஏற்படாது; அந்தப்படி மீறி அந்தப் பெண்ணுக்கோ ஆணுக்கோ வேறு ஒருவரிடம் ஏற்பட்டு விட்டால் அது காதலாயிருக்க முடியாது. அதை விபசாரம் என்றுதான் சொல்ல வேண்டுமே யொழிய அது ஒருகாலும் காதல் ஆகாது என்றும்; ஒரு இடத்தில் உண்மைக் காதல் ஏற்பட்டுவிட்டால் பிறகு யாரிடமும் காமமோ, விரகமோ, மோகமோ ஏற்படாது என்றும் சொல்லப்படுகின்றது.

மேலும், இந்தக் காதல் காரணத்தாலேயே ஒரு புருஷன் ஒரே மனைவியுடனும் ஒரு மனைவி ஒரே புருஷனுடனும் மாத்திரம் இருக்கவேண்டியது என்றும் கற்பித்து, அந்தப்படி கட்டாயப் படுத்தியும் வரப்படுகின்றது.

ஆனால், இந்தப்படி சொல்லுகின்றவர்களையெல்லாம் உலக அனுபோகமும் மக்களின் அனுபவஞானமும் இல்லாதவர்கள் என்றோ, அல்லது இயற்கையையும் உண்மையையும் அறியாதவர்கள் என்றோ, அல்லது உண்மையை அறிந்தும் வேறு ஏதோ ஒரு காரியத்திற்காகவேண்டி வேண்டுமென்றே மறைக்கின்றவர்கள் என்றோதான் கருதவேண்டியிருக்கிறது.

அன்றியும், இம் மாதிரி விஷயங்களைப்பற்றி நாம் சொல்லும் மற்றொரு விஷயம் என்ன வென்றால், ஓர் ஆணின் அல்லது ஒரு பெண்ணின் அன்பு, ஆசை, காதல், காமம், நட்பு, நேசம், மோகம், விரகம் முதலியவைகளைப்பற்றி மற்றொரு பெண்ணோ ஆணோ மற்ற மூன்றாமவர்கள் யாராவதோ பேசுவதற்கோ, நிர்ணயிப்பதற்கோ, நிர்ப்பந்திப்பதற்கோ சிறிதுகூட உரிமையே கிடையாது என்றும் சொல்லுகிறோம்.

இன்னும் திறந்து வெளிப்படையாய்—தைரியமாய்—மனித இயற்கையையும் சுதந்திரத்தையும் சுபாவத்தையும் அனுபவத்தையும் கொண்டு பேசுவதானால், இவை எல்லாம் ஒரு மனிதன் தனக்கு இஷ்டமான ஓர் ஓட்டலில் சாப்பிடுவது போலவும், தனக்குப் பிடித்த பலகாரக்கடையில் பலகாரம் வாங்குவது போலவும், சாமான் கடைகளில் சாமான் வாங்குவது போலவும் அவனவனுடைய தனி இஷ்டத்தையும் மனோபாவத்தையும் திருப்தியையும் மாத்திரமே சேர்ந்ததென்றும், இவற்றுள் மற்றவர்கள் பிரவேசிப்பது அதிகப் பிரசங்கித்தனமும், அநாவசியமாய் ஆதிக்கம் செலுத்துவதுமேயாகும்.

இப்படிச் சொல்லப்படுவதுகூட, இவ்வளவு பெருமையையும் அணியையும் அலங்காரத்தையும் கொடுத்துப் பேசப்பட்ட காதல் என்பதை முன்குறிப்பிட்டபடி அது என்ன, அது எப்படி உண்டாகின்றது என்பதை யோசித்துப் பார்த்தால், யாவருக்கும் சரி என்று விளங்கிவிடும். காதல் என்கின்ற வார்த்தை தமிழா, வடமொழியா என்பது ஒருபுறமிருந்தாலும்—தமிழ்மொழியாகவே வைத்துக் கொண்டாலும்—அதற்கு ஆண் பெண் கூட்டுத் துறையில் அன்பு, ஆசை, ஆவல், நட்பு, நேசம், விரகம் என்பவைகளைத் தவிர வேறு பொருள்கள் எங்கும் எதிலும் காணப்படவில்லை; அதில் வேறுவிதமான பிரயோகமும் நமக்குத் தென்படவில்லை.

அன்றியும், அகராதியில் பார்த்தாலும் மேற்கண்ட பொருளைத்தவிர—வடமொழி மூலத்தை அனுசரித்துக் காதல் என்பதற்கு கொலை, கொல்லல், வெட்டுதல், முறித்தல் என்கின்ற பொருள்கள்தான் கூறப்பட்டிருக்கின்றன. மற்றபடி, தனித்தமிழ் மொழியில் பார்த்தாலும், ஆண்–பெண் கூட்டு சேர்க்கை முதலியன சம்பந்தமான விஷயங்களுக்கும் அன்பு, ஆசை, நட்பு, நேசம் என்பவைகளைத் தவிர வேறு தமிழ் மொழியும் இல்லை. இவைகளுடன் காதல் என்பதைச் சேர்த்துக் கொண்டால், இக் கருத்துக்களையேதான் மாற்றி, மாற்றி ஒன்றுக்கு மற்றொன்று கூறப்படுகின்றதே தவிர காதலுக்கு என்று வேறு பொருளில்லை. ஆதலால், இவைகளின்றிக் காதல் என்பதற்கு வேறு தனி அர்த்தம் சொல்லுகின்றவர்கள் அதை எதிலிருந்து கண்டு பிடித்தார்கள் என்று தெரியவில்லை.

நிற்க, இப்படிப்பட்ட காதலானது ஒரு ஆணுக்கோ, பெண்ணுக்கோ எப்படி உண்டாகிறது? இது தானாகவே உண்டாகின்றதா? அல்லது மூன்றாவது மனிதனுடைய பிரவேசத்தைக் கொண்டு உண்டாகின்றதா? ஒரு சமயம் தானாகவே உண்டாவதாயிருந்தால், எந்தச் சந்தர்ப்பத்தில்—எந்த ஆதாரத்தின்மீது—என்பவைகளைக் கவனித்தால் பெண் ஆணையோ, ஆண் பெண்ணையோ தானே நேரில் பார்ப்பதாலும், மூன்றாவது மனிதர்களால் கேள்விப்படுவதாலும் உருவத்தையோ, நடவடிக்கையையோ யோக்கிதையையோ வேறு வழியில் பார்க்கவும் கேட்கவும் நேரிடுவதாலுமேதான் உண்டாகக்கூடுமே தவிர வேறுவழியாக இல்லை.

இப்படியும் கூட ஓர் ஆணுக்கு ஒரு பெண்ணிடத்தில் காதல் ஏற்பட்டு அந்தப் பெண்ணுக்கு அந்த ஆணிடம் காதல் ஏற்படாமல் போனாலும் போகலாம். இந்தப்படியே, ஒரு பெண்ணுக்கு ஓர் ஆணிடம் காதல் ஏற்பட்டு அந்த ஆணுக்கு அந்தப் பெண்ணிடம் காதல் ஏற்படாமல் போகலாம். எப்படியும் ஒரு மனிதன் ஒரு பொருளைப் பார்த்த மாத்திரத்தில், கேட்ட மாத்திரத்தில், தெரிந்த மாத்திரத்தில் அந்த வஸ்து தனக்கு இருக்கலாம்—வேண்டும் என்பதாக ஆசைப்படுகின்றானோ, ஆவல் கொள்கின்றானோ—அது போல்தான்

இந்த 'காதல்' ஏற்படுகின்றதே தவிர, வேறு எந்த வழியிலாவது ஏற்படுகின்றதா என்பது நமக்குப் புலப்பட வில்லை.

எப்படிப்பட்ட காதலும் ஒரு சுயலட்சியத்தை—தனது இஷ்டத்தை—திருப்தியைக் கோரித்தான் ஏற்படுகின்றதே தவிர வேறில்லை என்பதும், காதலர்கள் என்பவர்களின் மனோபாவத்தைக் கவனித்தால் விளங்காமல் போகாது.

அதாவது, அழகைக் கொண்டோ, பருவத்தைக் கொண்டோ, அறிவைக் கொண்டோ, ஆஸ்தியைக் கொண்டோ, கல்வியைக் கொண்டோ, சங்கீதத்தைக் கொண்டோ, சாயலைக் கொண்டோ, பெற்றோர் பெருமையைக் கொண்டோ, போக போக்கியத்திற்குப் பயன் படுவதைக் கொண்டோ அல்லது மற்றும் ஏதோ ஒரு திருப்தியை அல்லது தனக்குத் தேவையான ஒரு காரியத்தையோ, குணத்தையோ கொண்டேதான்—யாரும், எந்தப் பெண்ணிடமும் ஆணிடமும் காதல் கொள்ளமுடியும். அப்படிப்பட்ட காரியங்களுக் கெல்லாம் ஒருவன் காதல் கொள்ளும் போது இவன் அறிந்தது உண்மையாகவும் இருக் கலாம்; அல்லது அங்கு இருப்பதாக அவன் நினைத்துக் காதல் கொண்டு இருந்தாலும் இருக்கலாம்; அல்லது வேஷமாத்திரத்தில் காட்டப்பட்ட ஒன்றினால் இருந்தாலும் இருக்கலாம்.

உதாரணமாக, ஒரு நந்தவனத்தில் ஒரு பெண் உல்லாசமாய் உலாத்துவதை ஒரு ஆண் பார்க்கின்றான். பார்த்தவுடன் அந்தப் பெண்ணும் பார்க்கின்றாள். இரண்டு பேருக்கும் இயற்கையாய் ஆசை உண்டாகி விட்டது. பிறகு 'நீ யார்' என்று இவர்களில் யாரோ ஒருவர் கேட்கிறார்கள். பெண் தன்னை ஓர் அரச குமாரத்தி என்று சொல்லு கிறாள். உடனே ஆண் காதல் கொண்டு விடுகிறான். அவனை யார் என்று அவள் கேட் கிறாள். அவன் ஒரு சேவகனுடைய மகன் என்று சொல்லுகிறான். உடனே அவளுக்கு அசிங்கமும் வெறுப்பும் ஏற்பட்டுப் போய்விடுகிறது. இது சாதாரணமாக நிகழும் நிகழ்ச்சி. இங்கு ஏற்பட்ட காதல் எதை உத்தேசித்தது?

நிற்க, அவன் தன்னை சேவகன் மகன் என்று சொல்லாமல் தானும் ஒரு பக்கத்து தேசத்து அரசகுமாரன் என்று சொல்லிவிட்டால் அவளுக்கு அதிக காதல் ஏற்பட்டு மறு ஜென்மத்திலும் அவனை விட்டுப் பிரியக்கூடாது என்று கருதி விடுகிறாள்.

நான்கு நாட்கள் பொறுத்த பின்பு தான் காதல் கொண்டவன் அரசகுமாரன் அல்லன் என்றும் சேவகன் மகன் என்றும் அறிகிறாள் என்று வைத்துக் கொள்வோம். அந்த நிலையில் அந்தக் காதல் அப்படியே இருக்குமா? அல்லது இருந்தாக வேண்டுமா? என்று யோசித்துப் பார்த்தால், காதல் ஏற்படும் தன்மையும் மறுக்கும் தன்மையும் விளங்கும். இந்தப் படிக்கே, ஒரு பெண்ணை நோயில்லாதவள் என்று கருதி ஒருவன் காதல் கொண்ட பின் நோயுடையவள் என்று தெரிந்தது; அல்லது மற்றவனுடைய மனைவி என்று தெரிந்தது; அல்லது ஒரு தாசி என்று தெரிந்தது; அல்லது மோசம் செய்து தன்னிடம் உள்ள பொருளை அபகரிக்க வந்தவள் என்று தெரிந்தது; அல்லது தான் முதலில் நினைத்ததற்கு மாறாகவோ அல்லது தனது நன்மைக்கும் திருப்திக்கும் இஷ்டத்திற்கும் விரோதமாய், தான் எதிர்பார்க்காத கெட்ட காரியத்திற்கு அனுகூலமாகவோ ஏற்பட்டு விட்டால் அந்தக் காதல் பயன்படுமா? அதை எவ்வளவுதான் கட்டிப் போட்டாலும் அது இருக்க முடியுமா? என்பவைகளை யோசித்தால், உண்மைக் காதலின் நிலையற்ற தன்மை விளங்கும்.

நிற்க, உண்மைக் காதல் என்பது ஒருவரை ஒருவர் பார்த்தவுடன் உண்டாகுமா? அல்லது கொஞ்ச நாளாவது பழகியவுடன் உண்டாகுமா? பார்த்ததும் ஏற்பட்ட காதல் உயர்வானதா? பழகியபின் ஏற்படும் காதல் உயர்வானதா? சரீரத்தைக்கூடச் சரியாய்த் தெரிந்துக் கொள்ளாமல் தூர இருந்து பார்ப்பதாலேயே ஏற்படும் காதல் நல்லதா? அல்லது

சரீரத்தின் நிலை முதலியவைகள் தெரிந்து திருப்தி அடைந்த காதல் நல்லதா? என்பவை களைக் கவனிக்கும் போது, சரீரமாறுபாடாலும், பொருத்த மின்மையாலும், ஏன் எப்படிப் பட்ட உண்மைக் காதலும் மாற முடியாது என்பதற்கு என்ன விடை பகரமுடியும்? அல்லது உண்மையாகவே ஒருவன் ஒருத்தியுடன் காதல் கொண்டு விட்டால், ஆனால் அவள் வேறு ஒருவனிடம் காதல் கொண்டு விட்டதாய்க் கருத நேர்ந்தால்—அது பொய்யாகவோ, மெய் யாகவோ இருந்தாலும்—தன் மனத்துக்கு சந்தேகப்படும்படி ஆகிவிட்டால் அப்போது கூட காதல் மாறாமல் இருந்தால்தான் உண்மைக் காதலா? அல்லது தன் மனம் சந்தேகப்பட்டால் —அதிருப்தி அடைந்தால் நீங்கி விடக்கூடிய காதல் குற்றமான காதலா என்பதற்கு என்ன மறுமொழி பகரமுடியும்?

காதல் கொள்ளும்போது காதலர்கள் நிலைமை, மனப்பான்மை, பக்குவம், இலட்சியம் ஆகியவைகள் ஒரு மாதிரியாக இருக்கலாம். பிறகு கொஞ்ச காலம் கழிந்தபின் இயற்கையாகவே பக்குவம், நிலைமை இலட்சியம் மாறலாம். இந்த மாதிரிச் சந்தர்ப்பங் களிலும் காதலுக்காக ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்துக் கொண்டு சதா அதிருப்தியில்— துன்பத்தில் அழுந்தவேண்டியதுதானா என்று பார்த்தால் அப்போதும் காதலுக்கு வலுவில்லாததையும் அது பயன்படாததையும் காணலாம்.

ஒரு ஜதை காதலர்களில் அவ்விருவரும் ஞானிகளாய், துறவிகளாய்விட்டார் களானால் இந்தச் சந்தர்ப்பத்தில் ஒருவரை ஒருவர் பிரிவதும், வெறுப்பதும் காதலுக்கு விரோதமாகுமா? விரோதமானால் அப்படிப்பட்ட காதல் பயன்படுமா? விரோதமில்லை யானால் ஒருவர் ஞானியாகி, துறவியாகிவிட்டதால் மற்றவரை விட்டுப் பிரிந்துகொள்ளுவது காதலுக்கு விரோதமாகுமா? என்பதும் கவனித்தால் காதலின் யோக்கியதை விளங்காமல் போகாது. பொதுவாக மனித ஜீவன் ஒன்றைப் பார்த்து நினைத்து ஆசைப்படுவதும், ஒன்றினிடம்—பலவற்றினிடம் அன்பு வைப்பதும் நேசம் காட்டுவதும் இயற்கையேயாகும்.

அதுபோலவே, மனிதனுக்குத் தானாகவே எதிலும் விரக்தி வருவதும், வெறுப்புக் கொள்வதும் பிரிவதும் இயற்கையேயாகும். பலஹீனமாய் இருக்கும்போது ஏமாந்து விடுவதும், உறுதி ஏற்பட்டபின்பு தவறுதலைத் திருத்திக்கொள்ள முயற்சிப்பதும், அனுபவ ஞானமில்லாதபோது கட்டுப்பட்டுவிடுவதும் அனுபவம் ஏற்பட்ட பிறகு விடுதலை செய்து கொள்ளுவதும் இயற்கையேயல்லவா?

உதாரணமாக, ஒரு வாலிபன் ஏமாந்து ஒரு தாசியிடம் காதல்கொண்டு சொத்துக்களையெல்லாம் கொடுத்துவிடுவதைப் பார்க்கின்றோம். அந்த வாலிபனுக்கு அந்தத் தாசியிடம் ஏற்பட்டது காதல் என்பதா? அல்லது காமம் என்பதா? அதே தாசி சில சமயத்தில் தனக்குத் தாசித்தொழில் பிடிக்காமல் இந்த வாலிபனிடமே நிரந்தரமா யிருந்து காலத்தைக் கழிக்கலாம் என்று கருதிவிடுவதைப் பார்க்கின்றோம். ஆகவே, தாசி கொண்டது காதலா அல்லது வாழ்க்கைக்குச் சவுகரியமான ஒரு வழியா? இதை வாலிபன் அறியாமல் நேசத்தை வளர்த்துக்கொண்டே வந்தால் இது ஒத்த காதலாகிவிடுமா? இப்படி யெல்லாம் பார்த்தால், காதல் என்பது ஆசை, காமம், நேசம், மோகம், நட்பு என்பவைகளை விடச் சிறிதுகூடச் சிறந்தது அல்லவென்பது விளங்கும்.

அதற்கு ஏதேதோ கற்பனைகளைக் கற்பித்து ஆண்—பெண்களுக்குள் புகுத்திவிட்ட தால், ஆண்—பெண்களும் தாங்கள் உண்மையான காதலர்கள் என்று காட்டிக்கொள்ள வேண்டுமென்று கருதி—எப்படி பக்திமான் என்றால் இப்படி எல்லாம் இருப்பான் என்று சொல்லப்பட்டதால் அனேகர் தங்களை பக்திமான்கள் என்று பிறர் சொல்ல வேண்டுமென்று கருதி பூச்சுப் பூசுவதும், பட்டை நாமம் போடுவதும், சதா கோவிலுக்குப் போவதும், பாட்டுகள் பாடி அழுவதும், வாயில் 'சிவ, சிவ' என்று சொல்லிக்கொண்டிருப்பதான காரியங்களைச் செய்தும் தங்களைப் பக்திமான்களாகக் காட்டிக்கொள்கின்றார்களோ— அதுபோலும்; எப்படிக் குழந்தைகள் தூங்குவதுபோல் வேஷம் போட்டுக் கண்களை

மூடிக்கொண்டிருந்தால் பெரியவர்கள் குழந்தைகளின் தூக்கத்தைப் பரிசோதிப்பதற்காக 'தூங்கினால் கால் ஆடுமே' என்று சொன்னால், அந்தக் குழந்தை தன்னைத் தூங்குவதாக நினைத்துக்கொள்ள வேண்டுமென்று கருதி காலைச் சிறிது ஆட்டுமோ—அது போலும்; எப்படிப் பெண்கள் இப்படி, இப்படி இருப்பதுதான் கற்பு என்றால் பெண்கள் அதுபோ லெல்லாம் நடப்பதுபோல் நடப்பதாய்க் காட்டித் தங்களைக் கற்புள்ளவர்கள் என்று காட்டிக் கொள்ளுகின்றார்களோ—அதுபோலும்; உண்மையான காதலர்களானால் இப்படியல்லவா இருப்பார்கள் என்று சொல்லிவிட்டால், அல்லது அதற்கு இலக்கணம் கற்பித்துவிட்டால் அதுபோலவே நடந்து காதலர்கள் என்பவர்களும் தங்கள் காதலைக் காட்டிக்கொள்ளு கின்றார்கள். இதற்காகவே அவர்கள் இல்லாத வேஷத்தை எல்லாம் போடுகிறார்கள்.

ஆகவே, ஆசையைவிட, அன்பைவிட, நட்பைவிடக் காதல் என்பதாக வேறு ஒன்றும் இல்லை என்றும் அவ்வன்பு, ஆசை, நட்பு ஆகியவைகள்கூட மக்களுக்கு அஃறிணைப் பொருள்கள் இடத்திலும் மற்ற உயர்திணைப் பொருள்கள் இடத்திலும் ஏற்படுவது போலத்தானே ஒழிய வேறில்லை என்றும்; அதுவும் ஒருவருக்கொருவர் அறிந்துகொள்வதி லிருந்து, நடவடிக்கையிலிருந்து, யோக்யதையிலிருந்து, மனப்பான்மையிலிருந்து தேவையிலிருந்து, ஆசையிலிருந்து உண்டாவதென்றும்; அவ்வறிவும், நடவடிக்கையும், யோக்கியதையும், மனப்பான்மையும், தேவையும், ஆசையும் மாறக்கூடியவைதான் என்றும் கருதுகிறோம்.

ஆகவே, இதிலிருந்து நாம் யாரிடமும் அன்பும் ஆசையும் நட்பும் பொருளாகக் கொண்ட காதல் கூடாதென்றோ அப்படிப்பட்டது இல்லை என்றோ சொல்லவரவில்லை.

ஆனால், அன்பும் ஆசையும், நட்பும் மற்றும் எதுவானாலும் மன இன்பத்திற்கும், திருப்திக்குமே ஒழிய, மனத்திற்குத் திருப்தியும் இன்பமும் இல்லாமல் அன்பும் ஆசையும் நட்பும் இருப்பதாய்க் காட்டுவதற்காக அல்ல என்பதை எடுத்துக்காட்டுவதற்காகவே இதை எழுதுகின்றோம். ஏனென்றால், மற்றவர்கள் திருப்தியிலும் சந்தோஷத்திலும் நுழைந்து கொண்டு, தொட்டதற்கெல்லாம் 'இது காதலல்ல', 'இது காதலுக்கு விரோதம்', 'இது காம இச்சை', 'இது மிருக இச்சை', 'இது விபச்சாரம்' என்பது போன்ற அதிகப் பிரசங்கித்தனமான வார்த்தைகளை—ஒருவிதப் பொறுப்பும் இல்லாதவர்கள் எல்லாம் கூறுவதால் இதை எழுதினோம்.

['குடி அரசு'—தலையங்கம்—18–1–1931]

## 2. திருமணமும் ஒப்பந்தமும்

தலைவரவர்களே! தோழர்களே!

விவாகம் அல்லது திருமணம் என்று சொல்லப்படுவதெல்லாம் ஒரு பெண்ணும் ஆணும் சேர்ந்து ஒருவருக்கொருவர் கட்டுப்பட்டு, அவர்களது வாழ்க்கையைக் கூட்டுப் பொறுப்பில் நடத்துவதற்குப் பலர் அறியச்செய்யச் செய்துகொள்ளும் காரியமேயாகும். இதைச் சிலர்—அதாவது பழைய முறைக்காரர் சடங்கு என்கிறார்கள்; புதிய முறைக்காரர் ஒப்பந்தம் என்கிறார்கள். சடங்கு என்று சொல்லுகின்றவர்கள் உண்மையிலேயே சடங்காகவே கருதிக் காரியங்களில் இலட்சியமில்லாமல் நடத்துகிறார்கள். அதாவது, கலியாணத்தில் மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் எவ்வித உரிமையும் இல்லை. அது போலவே சடங்கிலும் கலியாணக்காரருக்கும் சடங்குக்கும் யாதொரு உரிமையும் இல்லை. எப்படி என்றால், தம்பதிகளின் பெற்றோர்களோ அல்லது இந்தப் பெற்றோர்களுக்கு வேண்டியவர்களோ பார்த்து, இன்ன பெண்ணுக்கு இன்ன மாப்பிள்ளை என்று தீர்மானித்துவிட்டால், அதை மணமக்கள் ஆட்சேபிக்கமுடியாது. அதுமாத்திரமல்லாமல் இன்னொரு அநியாயம் என்னவென்றால், திருமணம் நடக்கும் நிமிடம்வரையில்

மாப்பிள்ளை பெண்ணைப் பார்த்திருக்கமாட்டார்; பெண் மாப்பிள்ளையைப் பார்த்திருக்க மாட்டாள். அங்க இலட்சணம், அறிவு இலட்சணம், யோக்கிய இலட்சணம் ஆகிய எதையும் பார்க்காமலும், தெரியாமலும்தான் திருமணம் தீர்மானிக்கப்படுகிறது. இவர்கள் இருவர் விஷயத்தில் ஏதாவது ஒன்று கவனிக்கப்படுகிறதா என்றால், இருவர் பிறந்த நேரம் என்று சொல்லப்படும்—அது சரியான நேரமோ தப்பான நேரமோ என்பதைப்பற்றிக் கவலையில்லாமல்—ஒரு பொறுப்பற்ற நபரால் இருவருக்கும் பொருத்தம் உண்டா இல்லையா என்பது முடிவுசெய்யப்பட்டுவிடும். சில சமயங்களில் பிறந்த கால நேரங்கள்கூட கவனிக்கப்படாமல், பெண்ணின் பெயரின் முதல் எழுத்தையும் மாப்பிள்ளையின் பெயரின் முதல் எழுத்தையும் ஆதாரமாக வைத்துப் பொருத்தம் முடிவுசெய்யப்பட்டுவிடும். மற்றும் சில சமயங்களில் அதுகூட இல்லாமல், கோவிலில் பூ வைத்துக் கேட்பதுமூலமோ, கருடன் பறப்பது மூலமோ, பல்லி கத்துவதின் மூலமோ, இருவர் பெயர் எழுதப்பட்ட சீட்டுகளின் மீது ஈ உட்காருவதின்மூலமோ, அல்லது கோவில்களில் ஏதாவது ஒருவன் சாமி ஆடி வாக்குச்சொல்வதின் மூலமோ கலியாணம் தீர்மானிக்கப்பட்டுவிடும். எவ்வளவு காட்டுமிராண்டித்தனமான வாழ்வில் நமது மக்கள் இருந்துவருகிறார்கள் என்பதற்கு இதைவிட வேறு என்ன உதாரணம் வேண்டும்?

இதுபோலவே, சடங்குகள் விஷயத்திலும் இந்தச் சடங்குகள் எதற்காக என்றாவது, இந்தச் சடங்கின் அர்த்தம் என்ன என்றாவது, இச் சடங்குகளுக்கு அவசியமோ ஆதாரமோ, ஆரம்ப காலமோ, பொருத்தமோ என்ன என்றாவது மணமக்களுக்கோ, பெற்றோர்களுக்கோ, மற்றும் உறவினர்களுக்கோ யாருக்குமே தெரியாது.

ஆனால், சுயமரியாதைத் திருமணம் என்பது அப்படி அல்ல. மணமக்கள் ஒருவரை ஒருவர் அறிந்து, தங்களுக்குள்ளாகவே ஒருவரை ஒருவர் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும் என்பதும், அர்த்தமும் பொருத்தமும் அவசியமும் இல்லாமல் வெறும் சடங்கு, பழக்க வழக்கம் என்பதற்காக மாத்திரம் ஒன்றையும் செய்யக்கூடாது என்பதுமேயாகும்.

இவை மாத்திரமல்லாமல், திருமணம் சம்பந்தமாக செலவு, மெனக்கெடு, வீண் கஷ்ட நஷ்டம் ஆகியவைகளைப்பற்றிப் பழைய முறைக் கலியாணங்களில் இலட்சியமே செய்யப்படுவதில்லை. ஆடம்பரத்துக்காகவே வீண் செலவுகளைத் தகுதிக்கு அதிகமாகக் கடன் வாங்கியாவது செய்யப்பட்டு வருகிறது. திருமணத்திற்காக மூன்று நாள், நான்கு நாள், ஏழு நாள் கூட மெனக்கெட்டு வெளியூர் உறவினர்களையும் தருவித்து—மெனக்கெடச் செய்து அய்ந்து நாள் விருந்து, பத்து நாள் விருந்து என்று சாப்பாட்டுச் செலவும்; பந்தல், மேளம், சங்கீதம், ஊர்வலம், வாணம் என்பதாக வீண் காரியங்களும்—குடிகாரர்கள் குடித்த போதையில் தாறுமாறாய் நடப்பதுபோல்—கலியாண போதையில் சிக்கி பணங்கள், நேரங்கள், கஷ்டங்கள் ஆகியவைகள் தாறுமாறாகச் செலவாக்கப்பட்டுவருகின்றன. இரண்டு மூன்று நாட்களுக்காக—சிலர் பார்த்துப் புகழுவதற்காக என்று செய்யப்படும் இப்படிப்பட்ட தாறுமாறான ஆடம்பரச் செலவுகள் கலியாண தம்பதிகள் தலையிலோ அல்லது குடும்பத்தார் தலையிலோ விழுந்து, கலியாணக் கடன்களால் வெகு நாளைக்கு அவதிப்பட வேண்டியிருப்பதால்—சில குடும்பங்கள் கலியாணச் செலவாலேயே 'பாப்பர்' ஆகி, மீளாக் கடன்காரர்களாகக்கூட ஆகவேண்டியதாகிவிடுகின்றன. இப்படிப்பட்ட கொடுமைகளும் முட்டாள்தனமான காரியங்களும் கூடாது என்பதுதான் சுயமரியாதைக் கலியாணம் என்பதின் முக்கிய அம்சமாகும்.

மற்றும், கலியாணம் செய்துகொள்ளும் விஷயத்தில் தம்பதிகளைவிட மூன்றாவதானவர்களுக்கே சகல சுதந்திரமும் இருந்துவருகிறது. செய்துவைப்பதற்கு ஒரு புரோகிதன் வேண்டும். இன்னின்ன மாதிரி செய் என்பதற்குப் பெற்றோர்கள், உறவினர்கள் வேண்டும். இவர்கள் சொன்னபடிஎல்லாம் தம்பதிகள் நடக்கவேண்டும்.

சுயமரியாதைக் கலியாணம் என்பதில் இந்த முறையில்லை. மணமக்கள் தங்கள் ஒப்பந்தங்களை ஒருவருக்கொருவர் சொல்லி சம்மதித்ததற்கு அறிகுறியாக மாலையிட்டுக் கொள்வது என்பதுடன் முடிவு பெற்றுவிடுகின்றது.

மற்றும் இவற்றையெல்லாம்விட ஒரு முக்கிய விவரம் என்ன என்றால், கலியாண விஷயத்தில் மணமக்களின் வாழ்க்கைச் சம்பந்தம் முக்கியமானது—இலட்சியமானது அல்லவென்றும், அதில் ஏதோ ஒரு தெய்வீக சம்பந்தம் இருக்கிறதென்றும், அதுவேதான் திருமணத்தின் இலட்சியமென்றும், ஆதலால் அப் பெண்ணும் மாப்பிள்ளையும் அத் தெய்வீக சம்பந்தத்திற்காக ஒருவர் குற்றங்களையும் அநீதிகளையும் மற்றவர்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும் என்றும், அதிலும் சிறப்பாக மாப்பிள்ளை செய்யும் கொடுமையையும் அநீதியையும் பெண் பொறுத்துக்கொண்டு வாழ்நாள் முழுதும் மாப்பிள்ளைக்குப் பெண் அடிமையாய், பக்தியாய் இருக்க வேண்டும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

ஆனால், சுயமரியாதைக் கலியாணம் என்பது அப்படியில்லை. திருமணம் என்பது பெண்ணும் ஆணும் சேர்ந்து வாழ்க்கையை நடத்த ஏற்படுத்திக்கொள்ளும் ஒப்பந்தம் என்றும், அந்த ஒப்பந்த விஷயம் பெண்ணையும் ஆணையும் மாத்திரமே பொறுத்ததே ஒழிய வேறு எவ்விதத் தெய்வீகத்திற்கோ அல்லது எவ்விதக் கட்டுப்பாட்டிற்கோ சம்பந்தப்பட்டதில்லையென்பதுமே ஆகும். மேலும், பழைய முறைக் கலியாணமானது ஆணுக்கும் பெண்ணுக்கும் கலியாணம் ஏற்பட்ட பிறகுதான் ஒருவர்மீது ஒருவர் ஆசை கொள்வதோ, காதல் கொள்வதோ ஏற்படவேண்டுமேயொழிய, அதற்கு முன்னால் ஒருவர்மீது ஒருவருக்கு ஆசையும் காதலும் ஏற்படுதல் கூடாதென்றும், குற்றமென்றும் அது விபச்சாரத்திற்குச் சமமானதென்றும் கூறப்படுகின்றது.

சுயமரியாதைக் கலியாணத்திலோ, கலியாணத்துக்கு முன்பாகவே ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் ஆசை ஏற்பட்டு, அதன் பின்னரே கலியாணம் நடக்க வேண்டும் என்றும், மற்றபடி கலியாணம் ஆனபிறகு ஆகிவிட்டதே என்கின்ற காரணத்திற்காக அங்க ஈனராய் இருந்தாலும், வியாதியஸ்தராக இருந்தாலும், கொடியவராய் இருந்தாலும் ஒருவருக்கொருவர் ஆசை கொண்டுதான் ஆகவேண்டும் என்றும் சொல்வதைக் கண்டிப்பாய் ஒப்புக்கொள்வதில்லை.

மற்றும், பழையமுறைக் கலியாணங்கள் ஒரு தடவை கலியாணம் ஆகிவிட்டால், எக் காரணத்தைக்கொண்டும் மறுபடியும் பிரியக்கூடாதென்றும், இப்படிக் கூறாவிட்டாலும் ஆணுக்குப் பிரித்துவிடவோ பிரிந்துகொள்ளவோ உரிமையுண்டு (ஆனால் பெண்ணுக்குத் தான் உரிமையில்லை) என்றும், மனைவி இறந்துபோனால் கணவன் மறுவிவாகம் செய்து கொள்ளலாம் என்றும் மனைவி உயிருடன் இருக்கும்போதே கணவன் மாத்திரம் பல பெண்களைக் கலியாணம் செய்துகொள்ளலாம் என்றும்—பெண்கள் மாத்திரம் எந்தக் காரணம் கொண்டும் புருஷன் எவ்வளவு கொடியவனாகவும், மனிதத்தன்மை அற்றவனாகவும், எந்த விஷயத்துக்கும் பொருத்தமில்லாமல் கொடுமையும் சித்திரவதை போன்ற கஷ்டத்தையும் கொடுப்பவனானாலும் புருஷனை விட்டுப் பிரியக்கூடாதென்றும் வேறு கலியாணம் செய்துகொள்ளக் கூடாதென்றும், புருஷன் தான்பக்குவமாவதற்கு முன் தனது அய்ந்தாவது பத்தாவது வயதிலேயே இறந்துபோனாலும் வேறு புருஷனைக் கலியாணம் செய்துகொள்ளாமல், விதவை என்னும் பெயருடன் உலக சுகபோகங்கள் எல்லாவற்றையும் வெறுத்து, மக்கள் கண்ணுக்கும் மனத்துக்கும் வெறுப்புத் தோன்றும் தன்மையாய் வாழ வேண்டும் என்றும் சொல்கின்றது.

சுயமரியாதைக் கலியாணத்தில் இவ்வித அக்கிரமும் அயோக்கியத்தனமும் அறியாமையும் கொடுமையும் மூர்க்கத்தனமும் காட்டுமிராண்டித்தனமும் இல்லை. வாழ்க்கைக்கும் மனத்துக்கும் ஏற்ற தம்பதிகளானால் கூடி வாழலாம். அவைகளுக்கு

ஒவ்வாத—வாழ்க்கையே நரகம்போன்றதான—தம்பதிகளானால் பிரிந்து மனத்திற்கு ஏற்ற வர்களை மணந்து இன்ப சுகவாழ்வு வாழ உரிமை உண்டு என்பதோடு, புருஷனோ மனைவியோ யார் இறந்துபோனாலும் மறுவிவாகம் செய்துகொள்ளலாம் என்றும் கூறுகிறது.

பழைய முறைக் கலியாணப்படி பெண்களுக்குச் சொத்துரிமை இல்லை; வாழ்க்கையில் சரிபங்கு ஆதிக்க உரிமை இல்லை. சுயமரியாதைக் கலியாணத்தில் சொத்திலும் வாழ்க்கை ஆதிக்கத்திலும் பெண்ணுக்கு ஆணைப்போலவே சரிபங்கு உரிமை இருக்கிறது என்பதுடன், இவைகளே கலியாண ஒப்பந்தத்தின் சரத்துக்களாகும். அனேகமாய்க் கலியாணத் தத்துவம் பழையதும் புதியதும் ஒரே மாதிரிதான். எப்படியெனில், இங்கு ஒரு ஆணும் பெண்ணும் சேர்ந்துதான் கலியாணம் செய்துகொண்டார்களே ஒழிய, ஆணும் ஆணும் சேர்ந்தோ பெண்ணும் பெண்ணும் சேர்ந்தோ கலியாணம் செய்துகொள்ளவில்லை.

ஆதலால், இவ்விதத் திருமணத்தைப்பற்றிக் கவலையோ, ஆத்திரமோ படவேண்டிய தில்லை. பெண்மக்களில் பலருக்கு இவ் விஷயத்தில் மன சஞ்சலம் இருந்தாலும் இருக்கலாம். ஆண்களில் படித்தவர்கள், வித்துவான்கள் என்று சொல்லப்படுபவர்களிலேயே சில அழுக்கு மூட்டைகள் இருந்துகொண்டு விஷமப் பிரச்சாரம் செய்துவரும்போது, பெண்களில் இது விஷயமாய் அதிருப்தி உள்ளவர்கள் இருப்பது அதிசயமல்ல. ஏனெனில், பெண்களை நாம் எப்படி வைத்திருக்கிறோம்? அவர்களில் 100க்கு 99 பேர்களுக்கு அடுப்பாங்கரையையும், படுக்கை வீட்டையும் மாத்திரமே காட்டி—நகை மாட்டுகின்ற ஸ்டாண்டுபோல், நகைகளை மாட்டி—இது என் பெண்சாதி; இது உன் பெண்சாதி என்று கண்காட்சி காட்டுகின்றோமே ஒழிய வேறு அவர்களுக்கு என்ன கற்றுக்கொடுத்திருக்கிறோம்? வேண்டுமானால் கண்ணை மூடிக்கொண்டு, பல்லைக் கடித்துக்கொண்டு, கணக்கு வழக்குப் பார்க்காமல் பிள்ளைகளைப் பெறுவார்கள். இதற்குமட்டும் ஒரு உபாத்தியாயரோ அறிவோ வேண்டிய தில்லை. எவ்வளவுக் கெவ்வளவு மடமை உண்டோ அவ்வளவுக் கவ்வளவு பிள்ளைகள் பிறந்துவிடும். எவ்வளவுக் கெவ்வளவு அடிமைத் தன்மையில் மோகம் உண்டோ அவ்வளவுக் கவ்வளவு நகைகளை மாட்டிக் கொள்வார்கள். தங்களை விகாரமாய்ச் சிங்காரித்துக் கொள்வார்கள். இவைகளையும் இவை போன்றவைகளையும்தான் நாம் அவர்களுக்குத் தாய் தந்தையர்கள் என்ற முறையில் கற்றுக் கொடுத்திருக்கிறோம். ஆகவே, இப்படிப்பட்ட பெண்களிடம் நாம் வேறு எதை எதிர்பார்க்க முடியும்? இன்றையப் பெண் எவ்வளவோ கல்வியும் செல்வமும் நாகரிக அறிவும் கவுரவமும் உள்ள சுற்றத்தாருக்குள்ளும், சகவாசத் துக்குள்ளும் இருந்துவந்தும்—நிரம்பவும் கர்நாடக முறையில் பட்டிக்காட்டுக் கிராமவாசிப் பெண்களைவிட—இளப்பமாய் நடந்துகொள்வதைப் பார்த்தால், நமக்கு எவ்வளவு சங்கட மாய் இருக்கிறது! இப்படிப்பட்ட பெண்கள் வயிற்றில் பிள்ளைகள் பிறந்து இவர்களால் வளர்க்கப்பட்டால், அவற்றிற்கு மனிதத் தன்மை எப்படி ஏற்படும் என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்! நமது மக்களுக்கு ஏன் மனிதத் தன்மை இல்லை, சுயமரியாதை யில்லை என்றால் அவற்றிற்கெல்லாம் முக்கியத்திலும் முக்கியமான காரணம்—இப்படிப்பட்ட தாய்மார்களால் பெறப்பட்டு வளர்க்கப்பட்டதேயாகும்.

கலியாணமானவுடன் பெற்றோர்கள் பிள்ளைகளை எதிர்பார்ப்பார்கள். சுற்றத்தார் எத்தனை ஆயிற்றென்று கணக்குக் கூட்டி வருவார்கள். தம்பதிகள் பிள்ளைகளைப் பெறு வதினால் படும் கஷ்டம், காயலா, அசவுகரியம், வாலிபம் பாழாவது, தரித்திரம், துன்பம், வியாகூலம், விசாரம், மானம் கெட நேருவது, சுயமரியாதை இழந்தாவது வாழ ஆசைப் படுவது ஆகிய காரியங்களைப்பற்றி எவரும் சிந்திக்கமாட்டார்கள். யாதொரு பொறுப்பும் அறிவும் அற்று, இன்று மணமக்களைப் பார்த்து 'பதினாறு பிள்ளைகள் பெற்று பெருவாழ்வு வாழவேண்டும்' என்று சொல்கிறவர்கள்—நாளைக்கு ஒரு குழந்தைக்கு அரைச்சங்கு பால் வார்க்கக்கூடச் சம்மதிக்கமாட்டார்கள். ஏதாவது கஷ்டம் வந்தால்கூட, பக்கத்து வீட்டில்

குடியிருந்துகொண்டு கணக்குக் கூட்டிப் பார்த்து அசூயையும் வெறுப்பும் அடைவார்களே தவிர, சிறிது பரிதாபம்கூடக் காட்டமாட்டார்கள். ஆதலால், மணமக்கள் குழந்தைகளைப் பெறும் விஷயத்தில் சிறிது ஜாக்கிரதையாகவும் அறிவுடைமையாகவும் இருக்கவேண்டும்.

[சென்னை சவுகார்பேட்டையில், 8-6-1934-ல் சொற்பொழிவு—'புரட்சி' 17-6-1934]

40 வருஷங்களுக்கு முன்னால் நடந்த எனது திருமணமும் என் தகப்பனாருக்கு இஷ்டமில்லாமல் நடந்ததாகும். எனக்குப் பிடித்த மனைவியை நான் மணக்க என் தந்தைக்கு இஷ்டமில்லாததால், அவர் எனது திருமணத்தன்று சாப்பாட்டு இடத்திலேயே இருந்துகொண்டு தனது வெறுப்பைக் காட்டிக்கொண்டு இருந்தாரே ஒழிய மணக் கொட்டகைக்கு வரவே இல்லை. மற்றபடி செலவு விஷயத்தில் அவர் எதுவும் குறுக்கிடவே இல்லை. அய்ரோப்பியர் வந்தபோது மாத்திரம் வரவேற்க வந்ததைத் தவிர மற்றபடி எந்தக் காரியத்தையும் கவனிக்கவில்லை. பிறகு என் மனைவி விஷயத்தில் மிக பட்சமாக இருந்தார். ஒவ்வொன்றுக்கும் மனைவிக்காகச் சிபாரிசுக்கு வந்து என்னைக் கண்டித்தார்.

(நீடாமங்கலத்தில், 5-5-1935-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 12-5-1935]

## 3. சுயமரியாதை—புராண மரியாதை

தலைவரவர்களே! தோழர்களே!

இன்று நடக்கும் இத் திருமணத்திற்குச் சுயமரியாதைத் திருமண மென்றும் சீர்திருத்தத் திருமணமென்றும் சொல்லப்படுகிறது. சுயமரியாதைத் திருமணம் என்றால் சிலருக்குப் பிடித்தமில்லாமல் இருக்கலாம் என்று சீர்திருத்தத் திருமணமெனச் சொல்லப் படுகிறது.

எப்படி இருந்தாலும் ஒன்றுதான். சீர்திருத்தம் என்றால் என்ன? இருக்கின்ற நிலைமையிலிருந்து மாற்றம் செய்வதையே சீர்திருத்தம் என்றும், நாகரிகமென்றும் சொல்லுகிறோம். என்றாலும், இந்தச் சீர்திருத்தமும் நாகரிகமும் வெறும் மாறுதலுக்காகவே ஏற்படுவதும் உண்டு. மற்றும் பல விஷயங்களில் சவுகரியத்தையும் நன்மையையும் அவசியத்தையும் பகுத்தறிவையும் உத்தேசித்து மாற்றப்படுவதும் உண்டு. மாறுதலும் சீர்திருத்தமும் மக்களுக்கும் உலகத்துக்கும் புதிதல்ல. உலகம் தோன்றிய நாள்முதல் ஒவ்வொரு துறையிலும் எவ்வளவு மாறுதல் அடைந்து வந்திருக்கிறது என்பதைச் சரித்திரங்களையும், பழைய சின்னங்களையும் பார்த்து வந்தால் நன்றாய் விளங்கும். அதுபோலவே, மனித சமூகமும் சகல துறைகளிலும் எவ்வளவு மாறுதல் அடைந்து வந்திருக்கின்றது என்பதும், வாழ்க்கையில் எவ்வளவு மாறுதல் அடைந்து வந்திருக்கின்றது என்பதும் நம் குறைந்த கால ஆயுளின் அனுபவத்தைப் பார்த்தாலே தெரியவரும்.

மாறுதல் என்பது இயற்கையேயாகும். மாறுதல் இல்லாமல் எந்த நாடும், எந்த சமூகமும் எந்த வஸ்துவும் இருக்கமுடியாது.

இந்தக் கலியாணம் சுயமரியாதைக் கலியாணம் என்றும், இதில் பழக்க வழக்கங்கள் சாஸ்திரங்கள், சம்பிரதாயங்கள் ஒன்றும் கவனிக்கப்படுவதில்லை என்றும் இதைப் புராண மரியாதைக்காரர்களும், வைதிகர்களும் குற்றம் சொல்லலாம்.

சாதாரணமாக இந் நாட்டில் நடைபெறும் வைதிகக் கலியாணம், புராண முறைப்படி நடக்கும் கலியாணம் ஆகியவைகளைப்பற்றிச் சிந்தித்துப் பாருங்கள். வைதிகப் பிரசாரத்துக்கும் வைதிகத்துக்காகவே உயிர் வாழ்வதாய் சொல்லிக்கொள்ளும் பார்ப்பன சமூகத்தையே எடுத்துக்கொள்ளுங்கள். அவர்களுடைய கலியாணங்களில் இப்போது எவ்வளவு சீர்திருத்தம், எவ்வளவு மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை நீங்கள் கவனித்துப்

பாருங்கள். காலை 7 மணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்டுத் தூரத்திலுள்ள கோயில்களுக்குப் போய் அங்குக் கலியாணம் செய்துகொண்டு, பகல் சாப்பாடு சாப்பிட்டுவிட்டு மாலை 6 மணிக்குப் புறப்பட்டு வீடுவந்து சேர்ந்துவிடுகிறார்கள். 3 நாள், 5 நாள், 7 நாள் அவ்பாசனங்கள், சடங்குகள் என்பவைகள் எல்லாம் எங்கே போய்விட்டன? பெரும் செலவுகள், ஆடம்பரங்கள், பல வகைப்பட்ட விருந்துகள் எல்லாம் எங்கே போய்விட்டன?

மற்றும், குருட்டு நம்பிக்கையும் மூட பக்தியும் பிறந்த ஊராகிய சென்னை முதலிய இடங்களில் நாயுடு, முதலியார், செட்டியார் என்று சொல்லப்படும் சாதிகளும் வைதீக சிகாமணிகளும் சடங்குகளினாலும் வேஷங்களினாலும் தங்களைப் பெரிய சாதியார் என்று சொல்லிக்கொள்ளுகிறவர்களுமான மக்கள்—இன்று தங்கள் தங்கள் வீட்டிலேயே ஒரே நாளில்—ஒரு பகலில்—ஒரு விருந்தில்—கலியாணங்களை முடித்துவிடுகின்றார்கள். இவைகள் எல்லாம் மாறுதல் அல்லவா, சீர்திருத்தம் அல்லவா என்று யோசித்துப் பாருங்கள். மனிதனில் எவனும் மாறுதலுக்கு ஆளாகாமல் இருக்க முடியாது.

காசிக்கும் இராமேஸ்வரத்துக்கும் நடந்துபோனால்தான் புண்ணியம் என்று நம்பின மனிதன்—இன்று காளை வண்டியில் போய், குதிரை வண்டியில் போய்—இரயிலில் போய், மோட்டாரில் போய், ஆகாயக் கப்பலில் மணிக்கு 300 மைல் போகக்கூடிய நிலைமையை அடைந்துவிட்டான். இவனிடம் புராணத்தையும் வைதிகத்தையும் பேசினால் செல்லுமா என்று யோசித்துப் பாருங்கள். அதுபோலவே, சக்கிமுக்கிக் கல்லின்மூலம் விளக்கு வெளிச்சத்தை உண்டாக்கிக்கொண்டிருந்த மனிதன்—விளக்காகி, பந்தமாகி, பவர் லைட்டாகி, கியாஸ் லைட்டாகி, இன்று எலெக்ட்ரிக் லைட்—அதாவது ஒரு பொத்தானை அமுக்கினால் 'இலட்சம் விளக்கின் வெளிச்சம்' போன்ற பிரகாசத்தைக் கண்டுபிடித்து அனுபவித்து வருகிறான். இந்தக் காரியங்களையெல்லாம் புராணமும் வைதீகமும் தடுத்துவிடக்கூடுமா என்று பாருங்கள்.

அதுபோலவே, இந்தத் திருமணம் என்னும் விஷயத்திலும் முற்போக்கு ஏற்பட்டுத்தான் தீரும். அதை நீங்கள் தடுத்துவிட முடியாது. திருமணத்துக்கு 1000 சாஸ்திரமும் புராணமும் இருந்தாலும் அதை இனி மக்கள் நம்பிக்கொண்டும், ஏற்றுக்கொண்டும் இருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. கால தேச வர்த்தமானத்திற்குத் தகுந்தபடி மாறிக்கொண்டுதான் வரும். அனேக தேசங்களில் கலியாணம் என்கிற பேச்சே இப்போது அமுலில் இல்லை. ஆணும் பெண்ணும் ஒன்றாகக் கூடித்தான் வாழ வேண்டும் அல்லது வாழ்க்கை நடத்த வேண்டும் என்கின்ற முறையும் இல்லை. இஷ்டப்பட்டால் இரண்டு பேர் கூட்டு வியாபாரம் செய்வதுபோல் சேர்ந்து ஒரு குடும்பத்தை நடத்துகிறார்கள். இஷ்டம் இல்லாவிட்டால் தனித்தனியாகக் குடும்பத்தை நடத்துகிறார்கள். மேலும் குடும்பம் என்கின்ற தொல்லையே இல்லாமல் சுதந்திர மக்களாகவே இருக்கிறார்கள்.

ஒரு ஆணும் பெண்ணும் சேர்ந்து அனுபவிக்கும் இன்பத்தையும், உணர்ச்சி பரிகாரத்தையும் இரு சிநேகிதர்கள் அனுபவிக்கும் சிநேக இன்பத்தைப் போலவும், இயற்கைக் கூட்டைப் போலவும் கருதி வாழுகின்றார்கள். இவைகள் எல்லாம் மனிதன் அனுபவத்தினாலும், நாளுக்கு நாள் மனிதனுடைய கஷ்டமும் கவலையும் தொல்லையும் குறைக்கப்பட்டு வரவேண்டும் என்கின்ற முயற்சியினாலும், தத்துவ விசாரத்தினாலும் ஏற்படும் காரியங்களேயாகும்.

ஆதலால், சுயமரியாதை என்கின்ற வார்த்தையைக் கண்டு யாரும் பயப்பட வேண்டியதில்லை. மனிதனுடைய பகுத்தறிவுக்கு மரியாதை கொடுப்பதுதான் சுயமரியாதையின் முக்கிய தத்துவம் என்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் பகுத்தறிவினாலும் உங்கள் அனுபவ உண்மையாலும் உங்களுக்கு ஒன்று தோன்ற—உலகப் பழக்க வழக்கத்துக்கு——சாஸ்திரத்துக்கு—மதக் கட்டுப்பாட்டுக்கு என்கின்ற நிர்ப்பந்தத்தின்மீது, அதற்கு

மாறாய் நீங்கள் நடக்க வேண்டிய அடிமைத்தன்மை ஏற்பட்டால், அதைத்தான் சுயமரியாதைக்கு விரோதம் என்று சொல்லுகிறோம். அதைத்தான் அடிமைத்தனம், சுதந்திர மற்ற தனம் என்று சொல்லுகின்றோம்.

ஆதலால், எந்தக் காரியத்தையும் உங்கள் பகுத்தறிவையும் அனுபவ பலனையும் அனுசரித்துப் பார்த்து நடக்க வேண்டும் என்கின்ற முறையிலேதான், இந்த சுயமரியாதைக் கலியாணம் என்பதும் ஆங்காங்கு செய்யப்பட்டும் பிரச்சாரம் செய்யப்பட்டும் வருகின்றதே ஒழிய வெறும் மாறுதலுக்காக என்று செய்யப்படவில்லை.

உங்களுடைய புராண மரியாதைக் கலியாணத்தைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். புராண மரியாதைக் கலியாணத்தின் முதல் தத்துவமே பெண்கள் ஆண்களுக்கு அடிமைகள் —சுதந்திரமற்றவர்கள்—மனிதத் தன்மைக்கு அருகதையற்றவர்கள் என்பவைகளை நிலை நிறுத்துவதற்காகச் செய்யப்படும் சடங்கு அல்லது காரியம் என்பது எனது அபிப்பிராயம். உதாரணமாக 'கன்னிகாதானம்', 'பெண் கொடுத்தல்', 'பெண் வாங்குதல்' 'தாலி கட்டுதல்' முதலிய வார்த்தைகளாலும் புருஷனுக்கு 'கொண்டவன்', 'கொண்டான்' என்று சொல்லப்படுகின்ற வார்த்தைகளாலும் பெண் அடிமையாகப் பாவிக்கப்படுகிறாள் என்பதை உணரலாம்.

இச் சுயமரியாதைக் கலியாணம் என்பதன் முக்கிய தத்துவம்—கூட்டு வாழ்க்கையில் ஆணுக்கும், பெண்ணுக்கும் எவ்வித வித்தியாசமோ, உயர்வு தாழ்வோ இல்லை என்பதும் சகல துறைகளிலும் சம சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என்பதுமேயாகும்.

மற்றும் வைதிக, புராண முறைக் கலியாணத்தில் மதம், சாதி, வகுப்பு, குலம், கோத்திரம் முதலியவைகளைக் கவனிப்பதே முக்கியமாய் இருப்பதால், ஆண்-பெண் பொருத்தம் சரியாய் ஏற்படுவதில்லை. 'குலத்தில் ஒரு குரங்கைக் கொள்ளு'; 'பாத்திர மறிந்து பிச்சை இடு'; 'கோத்திரமறிந்து பெண்ணைக் கொடு' என்னும் பழமொழிகளைப் பார்த்தாலே குலம், கோத்திரம், சாதி, வகுப்பு முதலியவைகளுக்குள்ள நிர்ப்பந்தங்கள் நன்றாய்த் தெரியும். இதன் பயனாய் அனேக கலியாணங்களில் பெண்ணுக்கு ஏற்ற மாப்பிள்ளை இல்லாமலும், மாப்பிள்ளைக்கு ஏற்ற பெண் இல்லாமலும்—நாயும் பூனையும் போல்—ஜோடிகள் சேர்ந்துவிடுகின்றன.

சுயமரியாதைக் கலியாணத்தில் சாதி, வகுப்பு, குலம், கோத்திரம் என்பவைகள் கவனிக்கப்படாமல் மணமக்களுடைய யோக்கியதாம்சங்களையே கவனித்துப் பார்க்கப் படுகின்றது.

வைதிகக் கலியாணத்தில் வயதுக் கிரமங்களில் தக்க பருவங்களை முக்கியமாய்க் கவனிப்பதில்லை. தக்க பருவம் வருவதற்கு முன்பு பெண்களுக்குக் கலியாணம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் இருந்து வருகின்றது. உதாரணமாக '10 வயது வந்தால் ஒரு பறையனுக்குப் பிடித்துக் கொடு' என்று சொல்லும் பழமொழியைப் பார்த்தால் விளங்கும். 50, 60 வயதான ஆண் கிழத்துக்கு 10, 12 வயதுப் பெண் குழந்தையைப் பிடித்துத் தாலி கட்டி விடுகிறார்கள். கலியாண விஷயத்தில் ஆண்களுக்குக் கிழம் என்பதே இல்லையாம். இந்த விஷயத்திலும் சுயமரியாதைக் கலியாணம் தக்க சரிசமமான வயதுப் பொருத்தம் பார்த்தே செய்யப்படும்.

மற்றபடி, புராணக் கலியாணங்களில் நாள் பார்ப்பது, கோள் பார்ப்பது, சடங்குகள் செய்வது, அதிகச் செலவுகள் செய்வது முதலிய காரியங்களால் கலியாணக்காரர்களுக்குத் தாங்கமுடியாததும், விலக்க முடியாததுமான பல அசவுகரியங்கள், செலவுகள் ஏற்படு கின்றன.

உதாரணமாக, புரோகிதன் அதிகாலையில் 4½ மணி, 5 மணி, 6 மணிக்கு 'முகூர்த்தம்' வைத்துக் கொடுத்துவிடுகிறான். இதனால் இரவெல்லாம் தூக்கமில்லாமல் கலியாணத்துக்கு வந்த ஜனங்கள் அவஸ்தைப் படுகிறார்கள்; பல் விளக்காமல், கால், கை கழுவாமல், வெளிக்கும் போகாமல் நித்திய கடன்களைக் காலா காலத்தில் கழிக்கமுடியாமல் மக்கள் அவஸ்தைப்படுவதும், மற்றும் பழக்க வழக்கமென்றும் சடங்கு, ஆடம்பரம் முதலியவைகளால் கலியாணக்காரர்களுக்குச் சகிக்க முடியாத தொல்லைகளும் தாங்க முடியாத கடன்களும் ஏற்பட்டு அக் குடும்பங்கள் ஒன்று, இரண்டு வருஷங்களுக்கும்—சில சமயங்களில் வாழ்நாள் முழுவதும்—கடனில் மூழ்கி வேதனைப்படுவதுமாக இருந்துவருகின்றது.

சுயமரியாதைக் கலியாணத்தில் எல்லோருக்கும் சவுகரியமான நேரமும் மிகவும் சுருக்கமான செலவும் கொண்டு நடத்தப்படுவதோடு, அநாவசியமான அர்த்தமற்ற சடங்குகளையும் ஒழித்து நடத்தப்பட வேண்டுமென்று கற்பிக்கப்பட்டு வருகிறது. இதனால் எல்லாம் கலியாணத்திற்கு ஏதாவது பலக் குறைவோ, கெடுதலோ ஏற்பட்டுவிடும் என்று யாரும் பயப்படவேண்டியதில்லை. கலியாணத்துக்கும் சாதி மதம், சடங்கு, நேரம், காலம், குலம், கோத்திரம் ஆகியவைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை.

நம் நாட்டில் சாதி, மதம், குலம், கோத்திரம், காலம், நேரம், சடங்குக் கிரமம் முதலியவைகள் கவனித்தே 100க்கு 99 கலியாணங்கள் செய்யப்படுகின்றன. இப்படியெல்லாம் செய்தும் இன்று அவற்றின் பலன்களைக் கவனித்துப் பார்ப்பீர்களானால், ஒட்டுமொத்தம் பெண் சமூகத்தில் 100க்கு 20 பெண்கள் விதவைகளாய் இருக்கிறார்கள். இந்த விதவைகளுள் 100க்கு 25 பேர்கள் 20 வயதுக்குக் கீழ்ப்பட்ட விதவைகளென்றால், அவர்களின் கஷ்டத்தையும், அனுபவிக்கும் வேதனைகளையும் பற்றி நான் உங்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டியதில்லை. நாள்கோள் பார்த்து, சாஸ்திரப்படி சடங்குகள் செய்யப் பெற்ற தெய்வீகக் கலியாணங்களில் பெண்கள் 100க்கு 20 பேர் ஏன் விதவைகளாய் இருக்க வேண்டும்? அவர்களில் 100க்கு 25 பெண்கள் 20 வயதுக்கு உட்பட்டவர்கள் விரக வேதனையில் ஏன் அழுந்திக்கொண்டிருக்க வேண்டும்? இது 'தெய்வீக' மணத்தின் பலனா? அல்லது 'அசுர' மணத்தின்—'பிசாசு' மணத்தின்—பலனா என்று யோசித்துப் பாருங்கள்.

'தெய்வீகம்', 'பழக்கம்', 'வழக்கம்', 'சாஸ்திரம்' என்கின்ற வார்த்தைகள் முன்னேற்றத்துக்கும், பகுத்தறிவுக்கும், சுதந்திரத்திற்கும் ஜன்ம விரோதியான வார்த்தைகளாகும். ஆதலால், சுயமரியாதைக் கலியாணம் என்பதில் மேற்படி முன்னேற்ற விரோதிகளுக்கும் சுதந்திர விரோதிகளுக்கும் இடமில்லை.

இந்தக் காரணங்களால்தான் பழைமை விரும்பிகள், வைதிகர்கள்—பகுத்தறிவற்ற கோழைகள்—சுயமரியாதை இயக்கம் என்றாலும், சுயமரியாதைக் கலியாணம் என்றாலும் முகத்தைச் சுளித்துக் கண்களை மூடி விழிப்பார்கள். இவர்களைப்பற்றி யாரும் கவலைப்பட வேண்டியதில்லை. இந்தக் கூட்டங்களுக்கு மரியாதை கொடுத்த எந்தத் தேசமோ சமூகமோ விடுதலை பெற்றதாக யாரும் சொல்ல முடியாது.

ஆகையால்தான், இந்தப் பிரச்சாரம் செய்து வருகின்றோம். மற்றபடி, இந்தக் கலியாணத்தில் என் போன்றாருக்கு யாதொரு வேலையும் இல்லை. புரோகிதத்துக்காக எவரும் இங்கு வரவும் இல்லை என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நீங்கள் எல்லோரும் இதனைக் கவனித்து நன்றாய்ச் சிந்தித்துப் பாருங்கள். நன்மையைக் கைக்கொண்டு பகுத்தறிவு வளர்ச்சிக்கும், விடுதலைக்கும் உதவி புரியுங்கள் என்று கேட்டுக்கொண்டு—உங்கள் சார்பாக மணமக்களைத் தங்கள் ஒப்பந்தங்களைக் கூறி ஒருவரை ஒருவர் வாழ்க்கைத் துணையாக ஏற்றுக்கொள்ள வேண்டிக்கொள்ளுகிறேன்.

[கோவையில், 22-9-1934-ல் சொற்பொழிவு—'பகுத்தறிவு' 7-10-1934]

## 4. திருமணம்—உலக சித்தாந்தம்

தலைவரவர்களே! தோழர்களே!

பாமர மக்கள் கலியாணம் என்பதை வீட்டு வேலைக்கு ஒரு பெண் ஆள் (வேலைக்காரியை) வைப்பதுபோலவே கருதுகிறார்கள்.

புருஷன் அப்படியே கருதுகிறான். புருஷன் வீட்டாரும் அதுபோலவே தங்கள் வீட்டு வேலைக்கு ஒரு பெண் கொண்டுவருவதாகவே கருதுகிறார்கள். இது மாத்திரமா? பெண் வீட்டாரும் தங்கள் பெண்ணை வீட்டு வேலைக்கே தயார்செய்து விற்றுக்கொடுக்கிறார்கள்.

பெண்ணும் தான் ஒரு வீட்டுக்கு வேலைசெய்யப் போவதாகவே கருதுகிறாள்.

பெண்ணின் கடமையும் சமையல்செய்வது, பாத்திரம் விளக்குவது, வீடு வாசல் கூட்டி மெழுகிச் சுத்தம் செய்வது இவைகளோடு பிள்ளைகளையும் பெற்றுக்கொண்டு அவர்களை வளர்ப்பது ஆகியவைகளையே முக்கியமாய்க் கொண்டதாக இருக்கிறது.

மதமும் சாஸ்திரங்களும் கலியாணத்தைப்பற்றி என்ன சொல்லுகின்றன என்று பார்த்தால் பெண் சுதந்திரமற்றவள்; அவள் காவலில் வைக்கப்படவேண்டியவள் என்பது ஒரு புறமிருக்க, கலியாணம் செய்வதானது மனிதன் 'புத்' என்னும் நரகத்திற்குப் போகாமல் இருப்பதற்கு ஆகவும், பெற்றோர்களுக்கு இறுதிக்கடன், திதி முதலியவைகள் செய்ய ஒரு பிள்ளையைப் பெறவும் கலியாணம் செய்துகொள்ள வேண்டியது அவசியம் என்று கூறுகிறது.

ஆகவே, கலியாணம் என்பது ஒரு ஆணும் பெண்ணும் கூடி இயற்கை இன்பத்தை நுகரவும், ஒருவரை ஒருவர் காதலித்து ஒருவருக்கொருவர் வாழ்க்கைப் போட்டியில் ஏற்படும் சிரமத்திற்கு இளைப்பாறவும், ஆயாசம் தீர்த்துக்கொள்ளவுமே ஆணுக்கு ஒரு பெண்ணும், பெண்ணுக்கு ஒரு ஆணும் வேண்டியிருக்கிறது என்பதைப் பெரும்பாலோர் சிந்திப்பதேயில்லை.

கலியாணப் பொருத்தம் பார்க்கவேண்டிய பொறுப்பு மணமக்களுக்கே உண்டு என்பதையும் கருதுவதே இல்லை. கலியாணம், மணமக்கள் எத்தனத்தினாலேயே ஆக வேண்டியது என்பதையும் ஒப்புக்கொள்ளுவதே இல்லை.

கலியாணம் என்றால், 'அது தெய்வீகமானது', 'தெய்வ எத்தனமானது', 'தெய்வமே பொருத்தி வைக்க வேண்டியது' என்று கருதுவதும் கலியாணத்தில் எப்படிப்பட்ட பொருத்தம் பொருந்தாப் பொருத்தமானாலும், அதனால் எப்படிப்பட்ட துன்பமும் தொல்லையும் அனுபவமானதும் கண்கூடான பிரத்தியேக அனுபவமாய் இருந்தாலும் அதைத் தெய்வ எத்தனம், தெய்வ சித்தம் என்கின்ற பெயரால் அனுபவிப்பதும், அப்படி நினைத்து திருப்தியடைவதுமாய் இருக்கின்றன.

கலியாணம் என்றால் சுதந்திர வாழ்க்கை—சமத்துவ வாழ்க்கை என்று இருக்க வேண்டுமே ஒழிய அடிமை வாழ்க்கை—மேல் கீழ் வாழ்க்கை—என்று இருக்கக்கூடாது என்பதே எனது ஆசை.

நாம் ஆயிரம் சமாதானம் சொன்னாலும், பெண்ணை அடிமையாகவே—ஒருவனுடைய சொத்தாகவே கருதுகிறோம் என்பதோடு, பெண்ணை நமது போகப் பொருளாகவே கருதுகிறோம். அதற்கு ஒரு தனி உயிரும் மனமும் இருப்பதாகக் கருதுவதில்லை. இது இன்று உலக சித்தாந்தமாய் இருக்கிறது.

குறிப்பிட்ட ஒரு தனிப்பட்ட மனிதனுக்கு 'பெண்சாதி' யாய் இல்லாத—கல்யாணமில்லாத பெண்ணுக்கு மாத்திரம் சுதந்திரம் என்பது சிறிதாவது உண்டு என்று சொல்ல

லாமே தவிர, மற்றபடி கலியாணமான பெண்கள் என்றால் அடிமைகளாகவே மதிக்கப் படுகிறார்கள்.

பெண் அடிமை என்பது மனித சமூக அழிவு என்பதை நாம் நினைக்காததாலேயே, வளர்ச்சி பெற வேண்டிய மனித சமூகம் பகுத்தறிவு இருந்தும் தேய்ந்துகொண்டே வருகின்றது.

தாயின் குணம், தாயின் தன்மை பெரிதும் பிள்ளைக்குப் பிறவியிலேயே வருகின்றது என்பதை யார் மறுக்கமுடியும்? மக்களின் குணம் 100க்கு 90 பாகம் சரீர அமைப்பைப் பொறுத்ததேயாகும். சரீர அமைப்புக்குத் தாய் தகப்பன் சரீர அமைப்பே பெரும்பாகம் காரணமாகும். ஆகையால், இந்த அடிமைப் பெண் சுதந்திர உணர்ச்சியுள்ள பிள்ளையைப் பெறமுடியும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

கல்வி, அறிவு, செல்வம் ஆகியவைகள் இல்லாத தாயானவள் நல்ல தாராள புத்தியும் சமத்துவ ஞானமும் திருப்தியான மனமும் உள்ள பிள்ளைகளை எப்படிப் பெறமுடியும் என்பதை உணர்ந்தோமேயானால், மனித சமூகம் சுதந்திரமாகக் கவலையற்று ஏன் வாழ வில்லை என்பது தானாகவே விளங்கும்.

[கீழையூரில் 10-6-1935-லும், திருபுவனத்தில் 11-6-1935-லும் திருச்சிராப்பள்ளியில் 13-6-1935-லும் சொற்பொழிவு—'குடி அரசு' 16-6-1935]

## 5. திருமணம் ஏன்?

தாய்மார்களே! தோழர்களே!

இந்த உலகத்தில் சொத்தைப்பற்றியும், மேல் உலகம் என்பதில் மோட்சம் என்பதைப்பற்றியும் இலட்சியம் இல்லாவிட்டால் திருமணம் என்பதாக—வாழ்க்கை ஒப்பந்தம் என்பதாகக்கூட—எதுவும் தேவையில்லை. நாம் தேடிய சொத்துக்கு நாம் பெற்ற பிள்ளை வாரிசாக இருக்கவேண்டும் என்பதே திருமணத்தின் முக்கிய நோக்கமாகும். அதற்கும் அந்தந்த சமுதாயப்படி சொத்தை அனுபவிக்கச் சிலருக்கு ஆண் பிள்ளை வேண்டும்; சிலருக்குப் பெண் பிள்ளை வேண்டும். தேவதாசிகளும், மருமக்கள் தாயம் உள்ளவர்களும் தங்கள் சொத்துக்குப் பின்சந்ததியாக உரிமைக்குப் பெண் குழந்தைகள் பெறவும், இல்லாமல்போனால் பெண் குழந்தையைத் தத்துக்கு எடுக்கவும் ஆசைப்படுகிறார்கள். மற்றவர்கள்—நம் போன்றவர்கள்—ஆண் குழந்தை பெறவும், பிறக்காவிட்டால் ஆண் குழந்தைகளைத் தத்து எடுத்துக்கொள்ளவும் செய்கிறோம். இதற்காகவேதான் திருமணம் பெரிதும் சடங்காக, ஒப்பந்தமாக, பதிவாக, சட்டத்திற்குள் அடங்கியதாகச் செய்யவேண்டியிருக்கிறது. இந்த நிலை மாறிவிட்டால் திருமணம் என்கின்ற வார்த்தையே மறந்து போகும்.

அதனால்தான், நான் இந்த முறைகூட முடிந்த முடிவல்ல என்று அடிக்கடி சொல்லி வருகிறேன். இனி 40, 50 வருடங்களுக்குப் பின்பு (1944)—அதாவது இந்த சொத்து முறைகள் மாறி, பொதுஉடைமை முறை வந்து தாண்டவமாடும்போது—இந்த முறைகூட இருக்காது என்பதோடு, இதை ஒரு மூட நம்பிக்கை—காட்டுமிராண்டிக் கால முறை என்று சொல்லவேண்டிவரும் என்பதோடல்லாமல், இன்று உங்களில் பலரால் 'புரட்சிக்காரன்' என்று கூறப்படுகின்ற என்னை ஒரு மூட நம்பிக்கைக்காரனாக—'வைதிகப் பிடுங்கல் இராமசாமி என்று ஒருவன் இருந்தான்' என்று என்னை உங்கள் பிள்ளைகள், பேரன் மார்கள் சொல்லும்படியான நிலைகூட வந்துவிடும் என்று நான் சொல்லுவதுண்டு.

ஆகையால், திருமணத்திற்கு ஒரு கட்டுப்பாடுதான் இருக்கவேண்டியிருக்கிறதே ஒழிய, முறை ஒன்றும் இன்று தேவை இல்லை. கட்டுப்பாடே வேண்டாத காலம்

வருமென்றால் முறை வேண்டிய காலம் எதற்காக வேண்டி இருக்கும்? ஒரு சமயம் கட்டுப்பாடு வேண்டியதில்லை என்கின்ற தன்மை நடைபெறக் கட்டுப்பாடும் முறையும் வேண்டியதாக இருக்கலாம்.

இன்று நாமாகிய திராவிடர்களுக்கு நம்மைப்பற்றிய சரித்திரமும் நம் நாட்டைப் பற்றிய தன்மைகளும்கூடத் தெரியவில்லையானால், நம் திருமணத்திற்கு என்ன முறை சிறந்தது என்று எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? அப்படித்தான் ஒன்று இருந்திருந்தாலும் அதைப்பற்றி இன்று பேசுவது எப்படி அறிவுடைமையும் பொருத்தமுடையதும் ஆகும்?

[இராஜபாளையத்தில், 6-12-1944-ல் சொற்பொழிவு—'விடுதலை' 16-12-1944]

## 6. உறவு முறை

மக்கள் சமூகத்தில் சொந்தம் பாராட்டவும், சொத்துக்கள் அனுபவிக்கவும், கலவிகள் செய்யவும் உறவுமுறை என்பதாக ஒரு நியதி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

அந் நியதிக்கு எவ்விதக் கொள்கையும் ஆதாரமும் இல்லாமலும்—உலகமெங்குமுள்ள மனித சமூகத்தில் ஒரே விதமான உறவு முறை அனுஷ்டிக்கப்படாமலும்—தேச ஆச்சாரம், சாதி ஆச்சாரம், மத ஆச்சாரம், பழக்க வழக்கம் என்கின்ற பல வகையான மார்க்கங்களைப் பின்பற்றியே உறவு முறைகள் கையாளப்படுகின்றன; யாதொரு நியாயமும் காரணமும் சொல்லப்படாமலே பின்பற்றப்படுகின்றன. அவ்வளவோடு மாத்திரமல்லாமல், இம் முறைகள்—சிறிதும் தவறாமல் மிகவும் ஜாக்கிரதையாய்க் கையாளப்படவேண்டும் என்கின்ற நிர்ப்பந்தங்களுக்கும் ஆளாகியிருக்கின்றன.

ஆகவே, இவைகளை எல்லாம் பார்த்தால், உறவு முறைகள் என்பவை அர்த்தமற்ற பழக்க வழக்கத்தில் கட்டுப்பட்டதாகவும், குருட்டு நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதாகவும்தான் காணப்படுகின்றனவே தவிர, அவசியங்களை அறிந்து கொண்டதாகக் கருதமுடியவில்லை.

உதாரணமாக, சகோதரர்கள் விஷயத்தில் ஆண் சகோதர உறவுக்கு ஒரு முறையும், பெண் சகோதர உறவுக்கு ஒரு முறையும் கையாளப்பட்டு வருகிறது. ஆண் சகோதரன் வயிற்றில் பிறந்த குழந்தைகளைத் தங்கள் தங்கள் குழந்தைகளாகவும் பெண் சகோதரி வயிற்றில் பிறந்த குழந்தைகளைத் தாங்கள் கலியாணம் செய்யத்தக்க பந்தத்துவம் உடையவர்களாகவும் இந்துக்களில் பெரும்பாலோர் கருதுகிறார்கள்.

முஸ்லிம் சமூகத்திலோ, பெண் சகோதரி மகளைக் கலியாணம் செய்து கொள்ளுவது தகாது என்றும், சிறிய தகப்பனார், சிறிய தாயார் பெண்ணைக் கலியாணம் செய்வது தகும் என்றும் கருதப்படுகிறது.

சில சமூகங்களில் ஒருவித இரத்தக் கலப்பும், முன் சம்பந்தமும் இல்லாதிருந்தாலும் குலங்கள் பெயரையும் கோத்திரங்கள் பெயரையும் பார்த்துக்கொண்டு அதன் பேரிலேயே கலவிக்கு—கலியாணத்துக்கு முறைகள் வைத்துக்கொள்ளப்படுகின்றன.

கிறிஸ்தவர்கள் சமூக உறவு முறை என்பது எவ்விதக் கட்டுப்பாட்டுக்கும் உடன்படாமல் கண்மூடித்தனமாய் ஏதோ ஒரு முறையைப் பின்பற்றப்படுவதாய் இருக்கின்றது.

வேறு நாடுகளில், தன்கூடப் பிறந்த சகோதரிகளையே—அதாவது 'சயாம்' தேசத்தில் ஆரிய மதத்தைப் பின்பற்றுகின்ற அரசர்கள் தம்கூடப் பிறந்த தங்கையையே மணந்துகொண்டு கலவி செய்கிறார்கள். பவுத்த இராமாயணத்தில், இராமனுக்குச் சீதை உடன் பிறந்த தங்கை என்றும், அக் காலத்தில் ஆரியர்களில் ஒரே தாய் தகப்பன் வயிற்றில்

பிறந்த அண்ணன், தங்கைகள் கலியாணம் செய்துகொள்ளும் வழக்கம் இருந்ததென்றும், அதை அனுசரித்தேதான் இப்போது சயாம் தேசத்தில் நடந்து வருகிறதென்றும் அறியக் கிடக்கின்றது.

மலையாள தேசத்தில் சில பாகங்களிலும், திபெத்து தேசத்திலும் ஒரு பெண் பல புருஷர்களுக்கு மனைவியாய் இருக்கும் வழக்கம் இருந்து வருகிறது. நம் நாட்டில் ஒரு புருஷன் பல ஸ்திரீகளைக் கலியாணம் செய்துகொள்ளுகிறான்.

சில சாதிகளில், ஒரு குடும்பத்தில் மகனுக்குக் கட்டப்பட்ட பெண்—தகப்பனுக்கும், கலியாணம் செய்து கொண்டவனுடைய மற்ற சகோதரர்களுக்கும் கலவிக்குரிய ஸ்திரீயாகக் கருதப்படுகிறாள்.

நம் நாட்டில் தாசி சாதி என்பவர்களிலும் மலையாளத்தில் நாயர் சாதி என்பவர் களிலும் குடும்பச் சொத்துக்குப் பெண்களே உரிமையானவர்களாக இருக்கிறார்கள். மற்ற சமூகங்களில் குடும்பச் சொத்துக்குப் பாத்தியஸ்தர்கள் ஆண்பிள்ளைகள் மட்டுந்தான் என்று கருதப்பட்டு வந்தது.

இஸ்லாம் சமூகத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் சொத்துரிமை அளிக்கப்பட்டு பங்கில் வித்தியாசம் கற்பிக்கப்பட்டிருக்கிறது.

ஐரோப்பியர்களிலும் உறவுமுறை, கலியாண முறை ஆகியவைகளில் இந்தியாவை விடப் பல மாறுதல்களும் பல தலை கீழ் முறைகளும் இருக்கக் காண்கிறோம். அத்தை மக்கள், சிற்றப்பன் மக்கள் ஆகியவர்களை ஒரே மாதிரியாகப் (நெவ்யூ, நீஸ்) பாவிக்கிறார்கள். அதுபோலவே, சகோதரன் மக்களுக்கும் சகோதரி மக்களுக்கும் ஒரே விதமான உறவுமுறை கொண்டாடுகிறார்கள். அழைக்கும் முறையிலும் ஒரே முறை வைத்துத்தான் அழைக்கிறார்கள்.

சில தேசங்களில் பெண்கள் பாடுபட்டுச் சம்பாதித்து ஆணுக்குப் போடுகிறார்கள். அத் தேசங்களிலுள்ள ஆண்கள் இங்குள்ள பெண்களைப் போல அலங்காரம் செய்து கொண்டு பெண்களுடைய போகப் பொருளாய்க் கிடக்கிறார்கள்.

சில இடங்களில் விபச்சாரத்திற்காகப் பெண்களை நீக்கி வைக்கிறார்கள். வேறு சில இடங்களில் விபச்சாரத்தனத்திற்காக ஆண்களை நீக்கி வைக்கிறார்கள்; சிலவிடங்களில் ஆண்கள் செய்யும் விபச்சாரத்தனத்தைக் குற்றமாகப் பாவிப்பதில்லை. இன்னும் சில இடங்களில் பெண்கள் விபச்சாரத்தனமே குற்றமாகப் பாவிக்கப்படுகிறது. மற்றும் சில இடங்களில் விபச்சாரத்தனம் எவ்வளவு இருந்தாலும் அதைப்பற்றிப் பேச்சே இல்லாம லிருந்து வருகிறது. சில வகுப்பார்கள் பெண்ணைக் கலியாணமே செய்துகொள்வதில்லை.

சிலர், புருஷன் செத்தால் அதிகமாக அழுகிறார்கள்; ஆனால் பெண்சாதி செத்தால் அதிகமாகத் துக்கப்படுவதில்லை. வேறு சிலர் மனைவி செத்தால் அதிகமாக அழுகிறார்கள்; புருஷன் செத்தால் அதிகமாகத் துக்கப்படுவதில்லை. அதுபோலவே, சிலர் ஆண் குழந்தை செத்தால் அதிகமாக அழுகிறார்கள்; வெகு நாளைக்கு விசனப்படுகிறார்கள்; ஆனால் அங்கு பெண் குழந்தைகள் மரணத்துக்கு அதிகம் கவலைப்படுவதில்லை. சில இடங்களில் இது மாறுபட்டு உள்ளது. பொதுவாக சாவுக்காகத் துக்கப்படுவது பெரும் பாலும் வயது, நிலைமை, இறந்தவர்களால் தங்களுக்கு ஏற்பட்ட—ஏற்படும்—பலாபலன் முதலியவைகளைப் பொறுத்தே உண்டாவதாயிருந்து வருகிறது.

ஆகவே, கலவிக்கும் துக்கத்துக்கும் விபச்சாரத்திற்கும் சொத்துக்கும் கலியாணத்துக் கும் அகில உலக மனித சமூகம் முழுமைக்கும் பொருந்தும்படியான ஒரு முறையோ, வரையறையோ காரண காரியங்களோ பொதுவாய் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. பழைய சரித்திரம் ஒன்றில் ஒரு தேசத்து அரச முறையில் அந்த அரசனுடைய (இராணி)

பெண்சாதி இறந்துவிட்டால், உடனே அந்த அரசனின் மகள் இராணியாக (அரசன் மனைவியாக) ஆகிவிடுகிறாள் என்றும் அரசன் இறந்துவிட்டால் உடனே மகன் அரச (கணவ)னாக ஆகிவிடுகிறான் என்றும்—அதாவது உண்மையான புருஷன்–மனைவியாக ஆகிவிடுகிறார்கள் என்றும் பார்த்த ஞாபகம் இருக்கிறது.

இவைகளை எல்லாம் யோசிக்கும்போது, கலவி முறை என்பதும் சொத்து முறை என்பதும் பெரும்பாலும் தேசாச்சாரம், மதாச்சாரம், அல்லது சாதியாச்சாரம் பழக்க வழக்கம் முதலியவற்றைப் பொறுத்து இருக்கின்றனவே தவிர, வேறு நியாயமான—நிர்ப்பந்தமான—உலகமெங்கும் ஒரே வழி துறையான, காரண காரியமான முறை கிடையவே கிடையாது என்றுதான் யூகிக்கவேண்டியதாக இருக்கிறது. இது விஷயத்தில் மற்ற உயிர்களின் இயற்கைச் சுபாவங்களும் எவ்வித வரையறைக்குக் கட்டுப்பட்டதாகவும் காணமுடியவில்லை. நமது பழங்கால புராணங்களைப் பார்த்தால், தான் பெற்ற மகளையும் தன்னை ஈன்ற தாயையும் புணர்ந்த கதைகள் பல இருக்கின்றன. முறையற்ற விபச்சாரத்தன சம்பந்தமான கதைகள் எண்ணிறந்தவைகள் இருக்கின்றன. குருவின் மனைவி, சகோதரன் மனைவி ஆகியவர்களைக் கலவி செய்வது குற்றமாகக் கருதப்படவில்லை. பிள்ளைப் பேற்றுக்காக வேறு புருஷனுடன் செய்யும் கலவி குற்றமாகக் கருதப்படவில்லை. சில இடங்களில் பிராமணர்களுடன் கலவி செய்வதைப் பிசகென்று கருதுவதில்லை. கடவுள்கள் 'பக்தப்' பெண்களிடம் கலவி செய்த கதைகள் அனந்தம்.

ஆகவே, இவ்விஷயங்களில் இன்னதுதான் சரி; இன்னதுதான் தப்பு என்று குறிப்பிடுவதற்கு இல்லாமல் இருந்து வருகிறது. ஆனாலும், கலவிக்கான வைத்திய முறைப்படியும், தேக தத்துவ முறைப்படியும் சில முறைகள் கற்பிக்கப்பட்டிருப்பதைக் குற்றமென்று சொல்ல இதுவரை எவரும் முற்படவில்லை. ஆதலால், இதைப் பகுத்தறிவுள்ள மனிதன் ஒப்புக் கொண்டாகவே வேண்டும் என்றும் சொல்லலாம்.

என்றாலும், கலவியைப் பற்றிய காரியங்களுக்குப் பாவம், புண்ணியம், கடவுள் தண்டனை, மானம் என்பவைகள் பொருத்தம் ஆகும்படியாக எவ்வித—குறிப்பிட்ட ஒரே மாதிரியான முறையும் கண்டுபிடிக்க முடியாமலிருந்து வருகின்றதென்பது மேற்கண்ட விஷயங்களால் கருதவேண்டி இருக்கிறது.

இந்த உறவு முறை சம்பந்தம், கலவி சம்பந்தம் மாத்திரமல்லாமல், மற்றும் மனித ஒழுக்க சம்பந்தமான பல காரியங்களிலும், பாவ புண்ணியம் நிர்ணயிக்கவோ, நன்மை தீமை நிர்ணயிக்கவோ முடியாமல்—இதுபோலவே தேசத்துக்கு ஒரு முறை, மதத்துக்கு ஒரு தினுசு, வகுப்புக்கு ஒரு மார்க்கம், சாதிக்கு ஒரு மார்க்கம்—என்பதாகத்தான் இருந்து வருகிறது.

ஆகவே, இவ் விஷயங்களை எடுத்துக்காட்டி, 'மனிதன் எப்படி நடந்துகொள்வது ?' என்னும் கேள்விக்கு, பொது அறிவும் ஆராய்ச்சியுமுள்ள மனிதன் என்ன சொல்லமுடியும் என்று யோசிக்கும்போது—சமயோசிதம் என்பதைத் தவிர வேறு வழிகாட்டி இருப்பதாக அறிய முடியவில்லை என்பதற்காகவே இவ்வுறவு முறை விஷயத்தை உதாரணமாக எடுத்துக்காட்ட வேண்டியதாயிற்று.

['குடிஅரசு'—கட்டுரை—2-6-1945]

## 7. திருமணம் தேவையா ?

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

மாற்றம் என்பது இயற்கையாய் எல்லாத் துறைகளிலும் நடந்துவந்தாலும், நமக்கு அவசியம் வேண்டியதான மாற்றங்கள்—நமக்கு நலமாக்கிக்கொள்ளும் மாற்றங்கள் பற்றிச் சிந்திக்கவேண்டியதும், அப்படிப்பட்ட மாற்றத்தில் ஈடுபடவேண்டியதும் அறிவுடைமை

யாகும். திராவிடர் திருமணம் என்றாலும் நான் இதை 1946-ம் வருஷத்திய (தற்கால நிலைக்கேற்ற) திருமணம் என்றும், இதுவே இன்று உலக மக்கள் திருமணமாக இருக்க வேண்டும் என்றும் சொல்லுகிறேன். ஆனால், இது மாறாமல் இப்படியே இருக்கவேண்டும் என்று நான் சொல்லுவதில்லை. 1946-ம் வருஷத்தியது என்று நான் சொன்னதால் 1956-க்கும் இப்படியே இருக்கவேண்டுமென்பது கருத்தல்ல. இந்த மாற்றம் நம் சவுகரியத்தையும், அறிவையும் மனிதத் தன்மையும், பொது நலத்தையும் குறிக்கொண்ட மாற்றமாகும். இதனிலும் மேலான நலனுக்கும் தெளிவுபட்ட அறிவுக்கும் ஏற்றபடி நாளைக்கோ 1956-ம் வருஷத்திலோ மாற்றம் ஏற்படலாம். அதைக் கூடாது என்று, இந்த 1946ஆம் ஆண்டு திருமண முறை சொல்லாது. 1912-ம் ஆண்டில் ஏற்பட்ட 'போர்ட் மோட்டார் கார்' முறை (அமைப்பு) 1946-ல் இல்லை; இன்று வேறு மாதிரி ஆகிவிட்டது. இதுவும் 1947-ல் இருக்காது; மாற்றமடைந்து தீரும். இந்த மாற்றம் எல்லாம் அறிவின் சவுகரியம் பற்றியது.

ஆனால், நமது திருமண முறையானது மாற்றம், அறிவு, சவுகரியம் மாத்திர மல்லாமல் சமுதாய அமைப்பு, அரசியல் சட்டம், பொருளாதார உரிமை, சுத்த சுதந்திரம் ஆகியவைகளையும் அடிப்படையாகக் கொண்டதாதலால், அவற்றிற்கு ஏற்றவண்ணம் அது மாறுதலடைந்துதான் தீரும். திருமணம் தேவையா? ஒப்பந்தம் தேவையா? என்பதுகூட சிந்தனைக்கு விருந்தாக ஆகிவிடலாம். ஆகவே, வரப்போகிற காலம் ஆராய்ச்சி, பகுத்தறிவு, சர்வ துறைகளிலும் சம சுதந்திர வேட்கைக் காலமாக இருக்குமாதலால், அதை இந்த மூட நம்பிக்கை பெரிதுமாயும் பகுத்தறிவு சிறிதுமாயும் இருக்கிற காலத்தில் கட்டுப்படுத்துவது பயன்படாதென்றே கருதுகிறேன்.

[திருப்பத்தூரில், 15-9-1946-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 21-9-1946]

## 8. கலப்பு மணம்

கலப்பு மணமோ, உயர்வு-தாழ்வு சாதி மணமோ இக் காலத்தில் ஒன்றும் அதிசயம் அல்ல என்பது எனது அபிப்பிராயம். நாம் செய்வதெல்லாம் இவற்றை விளம்பரம்செய்து மற்றவர்களையும் இதைப் பின்பற்றும்படி செய்ய ஆசைப்படுவதைத் தவிர வேறில்லை.

கலப்பு மணம் செய்து கொண்டால் சொத்து இல்லை என்றும், சட்டப்படி செல்லாது என்றும் சொல்வதுகூட சரியல்ல. பார்ப்பனப் பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டாலோ அல்லது பார்ப்பன ஆணைக் கலியாணம் செய்துகொண்டாலோ மாத்திரம் தான் செல்லாதாம்! அதைத்தவிர, மற்றபடி 'பார்ப்பனரல்லாதார்' இந்துக்கள்— தங்களுக்குள் எந்த சாதியில் யாரை மணம் செய்துகொண்டாலும் அது செல்லுபடி ஆகும். ஆதலால், அதைப் பற்றிச் சந்தேகம் இனி யாருக்கும் வேண்டாம்.

'இந்து லா' என்பதில் பார்ப்பனர்கள் தங்கள் சாதி கலந்து போகக்கூடாது என் பதற்காக—ஏனெனில் தாங்கள் மற்ற சாதிகளைவிட உயர்ந்தவர்கள் என்று சொல்லிக்கொள் வதற்காக–தங்களைப் பொறுத்தவரையில் வேறு சாதியில் கலியாணம் செய்துகொண்டால் சொத்து பாத்தியமில்லை என்று செய்துகொண்டார்கள். ஆதலால், நமக்கு அதனால் கெடுதல் ஒன்றும் இல்லை.

['குடிஅரசு'–கட்டுரை—10-1-1948]

## 9. காதல் மணம்

பழங்காலக் காதல் மணம் இன்று 'மிருகப்பிராய' மணம் என்றே சொல்லவேண்டும். காதல் என்பது மிக மிகச் சாதாரணமான அற்ப விஷயம். காதலுக்கு அடிமையாவது இன்றையச் சமுதாய வாழ்க்கை முறைக்குச் சிறிதும் பொருந்தாது. கண்டதும் காதல் கொண்டு, காதல் பசி தீர்ந்ததும் சலிப்படைந்து, அதன் பயனைப் பிறகு வேதனையுடன் பொறுத்துக் கொண்டிருப்பதென்றால், அது இன்ப வாழ்க்கையாக இருக்க முடியாது. உண்மையைப் பேசவேண்டுமானால், யாரைப் பார்த்தால் யாருக்குக் காதல் இல்லாமல் இருக்கமுடியும்? சமுதாயக் கட்டுப்பாடுகள் பல இருப்பதால் காதல் கொண்டு, காதல் கொண்டு ஏமாற்றம் அடைவதுமாக வாழ்வு முடிகிறதே ஒழிய வேறில்லை. காதலை அவரவர் உள்ளத்திற்கே விட்டுவிடுவோம்.

ஆனால், வாழ்க்கைத் துணை விஷயத்தில் காதல் போதாது. அறிவு, அன்பு, பொருத்தம், அனுபவம் ஆகிய பல காரியங்களே முக்கியமானவையாகும். பழங்காலத்தில் காதலே போதுமானதாக இருக்கலாம்; அப்போதைய அறிவுக்கு அவ்வளவுதான் தேவையாக இருந்திருக்கும். அது மனித வாழ்வையும் பிறவிக் குணங்களையும் மேன்மைப்படுத்துவதாக இருக்கவேண்டும். ஒரு குறிப்பிட்ட இச்சையின் பெருக்கம்தான் பெரிதும் காதலின் முழு இடத்தையும் பெற்றுவிடுகிறது. மற்ற பல வாழ்க்கை வேறுபாடுகளுக்கு அந்த இச்சைப் பெருக்கம் இருவருக்கும் போதவே போதாது. ஆகையால், அறிவையும் நிகழ்ச்சிப் பயனையும் அலட்சியப்படுத்தும் காதலை மனிதன் அடக்கி, வாழ்க்கைத் தன்மையைக் கொண்டு வாழ்க்கைத் துணையைப் பொருத்திக்கொள்ள வேண்டும் என்பதே எனது கருத்தாகும். ஆதலாலேயும் பழைய தமிழர் மணமுறைகளுக்கோ ஆரியர் மணமுறைக்கோ இங்கு வேலை கிடையாது. அறிவு, அனுபவம், ஆராய்ச்சி ஆகியவற்றின்மீது ஏற்பட்ட மணமுறைகளுக்கே இங்கு வேலை உண்டு. அவை பழையவையானாலும், புதியவையானாலும், தமிழனுடையதானாலும், ஆரியனுடையதானாலும், அய்ரோப்பியனுடையதானாலும் இருந்து போகட்டும்!

['குடிஅரசு'—கட்டுரை—10-1-1948]

## 10. திருமணம் சொத்துக்காகவே

தோழர்களே!

எப்போது புருடன்–பெண்டாட்டி, அதற்கு ஒரு ஒழுங்கு, கட்டுப்பாடு ஏற்பட்டிருக்க வேண்டுமென்றால் தனக்கெனச் சொத்து, நிலம், உடைமை தோன்றிய காலத்தில்தான்.

முதலில் மனிதன் மற்ற ஜீவன்களைப் போல் எதையோ அடித்துத் தின்றுவிட்டு, அவன் போக்கில் திரிந்து கொண்டிருந்தான். அப்போது சொத்து என்ற பேச்சுக்கு இடமில்லை. பின்னர் அவன் பயிர்செய்யக் கற்றுக் கொண்டு—இது இன்னாருக்குச் சொந்தமான நிலம்—இது இன்னார் சொத்து என்று ஏற்பட்டுத் தனிஉடைமை ஏற்பட்ட காலத்தில்தான், புருடன்–பெண்டாட்டி என்பதற்கும் இடம் ஏற்பட்டிருக்க வேண்டும்.

தனிஉடைமை ஏற்பட்ட பிறகு சொத்து சேர்க்கிறான்; தான் உயிருடன் இருக்கிற வரையில் அது அவனுடையதாக இருக்கிறது.

அவன் இறந்த பிறகு அந்தச் சொத்து யாருக்கோ பயன்படப்போகிறது; யாருக்கோ பயன்படுவதைவிட, தனக்குப் பிறந்த குழந்தைக்கே பயன்பட வேண்டும் என்று மனிதன் சிந்தித்து—சந்தேகத்திற்கு இடமில்லாமல் தனக்கே பிறந்த குழந்தை என நிச்சயம் செய்யக்கூடிய ஒரு ஏற்பாடாகத்தான், புருடன்–பெண்டாட்டி என்ற ஏற்பாடு செய்திருக்க வேண்டும். சொத்தில் இருந்துதான் இந்த முறை பிறந்திருக்க வேண்டும்.

இன்னமும்கூட நீங்கள் பார்க்கலாம்; பணக்காரர்களாக அல்லது உயர்சாதி என்று கருதிக்கொண்டிருப்பவர்களிடம்தான் 'பெண் வெளியில் போகக்கூடாது; அக்கம் பக்கம் பார்க்கக்கூடாது' என இந்தக் காரியத்தில் அதிகக் கவலை கொண்டு, கட்டுப்பாடு உள்ளது. சாதாரண பாட்டாளி மக்கள், ஏழைகள், அன்றாடக் கூலி மக்களாக வாழ்பவர்களிடத்தில் இவ்வளவு கடுமையான கட்டுப்பாட்டைக் காணமுடியவில்லை.

[புத்திரகவுண்டன் பாளையத்தில், 4-4-1959-ல் சொற்பொழிவு—'விடுதலை' 20-4-1959]

## 11. திருமண முறைகள்

பெரியோர்களே! தோழர்களே!

உலகில் மக்களின் வாழ்க்கைத் துறையில் நாளுக்கு நாள் இயற்கையாகவே பல மாறுதல்களும் சீர்திருத்தங்களும் ஏற்பட்டு வருவது போலவே, திருமண முறையிலும் தாமாகவே பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் பெரிதும் திருமண நாட்களைக் குறைப்பதும், செலவுகள் சுருக்கப்படுவதும், சடங்குகள் கைவிடப் படுவதும் முதலாகிய காரியங்கள்—மிக்க வைதீகக் குடும்பம் என்று பெருமை பாராட்டிக்கொள்ளும் குடும்பங்களிலும், சாதியிலும் – நடந்து வருகின்றன.

சமுதாயத் துறையில் செல்வத்திலோ, போலி வகுப்புப் பெருமையிலோ, குடும்பப் பெருமையிலோ குறைபாடு இருப்பதாகக் கருதிக்கொள்ளுகின்றவர்கள் மாத்திரம் சற்று பிடிவாதமாய் இருப்பதாகக் காட்டிக்கொள்ள வேண்டியவர்களாகி விடுகிறார்களே தவிர, உலக முற்போக்குக்கும், பகுத்தறிவும் நாகரிகமும் மக்களைச் சீர்திருத்தத்திற்கு விரட்டிக் கொண்டு போகின்றன என்பதற்கும் எந்தக் காரணத்தாலும் தடைப்படவில்லை.

அதனால்தான், சுயமரியாதைத் திருமணம் என்றாலும், தமிழர் திருமணம் என்றாலும் அவைகளை—'திருமண மக்களைவிட மேல் சாதிக்காரன்—மேல் வகுப்புக் காரன் என்கிற ஒருவன் நடத்தவோ, மரியாதை பெறவோ திருமணத்தில் கலக்கவோ விடக்கூடாது' என்பதை முக்கியமாக வலியுறுத்தி வருகிறேன்.

இரண்டாவது, அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் தேவைக்கும் பொருத்தமில்லாக் காரியங் கள்—பழக்கத்தின் பேராலோ வழக்கத்தின் பேராலோ, தெய்வத்தின் பேராலோ, மதத்தின் பேராலோ, சாதிவகுப்பின் பேராலோ நடத்தப்படக் கூடாது என்கிறேன்.

சீர்திருத்த முறையில் இன்று நடைபெறும் மணங்கள் முடிந்த சீர்திருத்தம் பெற்றவை அல்ல என்பதே என் கருத்து.

இயற்கையைப் பார்க்கும்போதும், பல நாடுகளில் உள்ள மனித சமூகம் பலவிதமான முறைகளை வழங்கி வருவதைப் பார்க்கும்போதும் திருமணத்திற்கு நாம் கூறும் வாழ்க்கைத்துணை ஒப்பந்தப்பெயரும்—அவ்வொப்பந்தம் துணைவர்களுடைய அன்புக்கும் ஆசைக்கும் உள்ள வலுவையும் எல்லையையும் பொறுத்ததாகவோ கூட இருப்பதில் ஒன்றும் முழுகிப் போய்விடாது.

[மாயவரத்தில் சொற்பொழிவு-'குடிஅரசு' 29-9-1940]

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

சீர்திருத்தத்தைப் பற்றிப் பேசுவதென்றால், பாமர மக்களைப் பார்த்துப் பயப்படு வதைவிடச் சீர்திருத்தத்தைத் தங்கள் சுயநலத்திற்காக எதிர்ப்பவர்களைக் கண்டு பயப்பட வேண்டியிருக்கிறது.

எனவே, சீர்திருத்தம் என்பதெல்லாம் பகுத்தறிவைக்கொண்டு ஆராய்ச்சி செய்து, சரி என்ற பட்டபடி நடவுங்கள் என்பதேயாகும்.

சீர்திருத்தத் திருமணங்களில் தமிழர் திருமணம் ஒன்று; மற்றொன்று, சுய மரியாதை அல்லது பகுத்தறிவுத் திருமணம் என்பதாகும்.

முதல்வகைத் திருமணத்தை வகுப்பு உணர்ச்சித் திருமணம் என்கிறேன். ஏனென்றால், ஆரியருக்குப் பதில்—திராவிடர்; ஆரியத்திற்கு பதில்—தமிழ்; ஆரிய சமயத்துக்குப் பதில்—சைவம் என்பதல்லாமல் அதில் வேறு ஒன்றுமில்லை.

சீர்திருத்தம் என்றால் இலாபகரமான அதாவது, சவுகரியமான மாறுதல்கள் இருக்க வேண்டும். அதாவது, 3 மணி நேரத் திருமணத்தை 10 நிமிட நேரத் திருமணமாக ஆக்க வேண்டும். புராணக் கதைகளைப் பாடலாகப் பாடுவதைவிட—அதுவும் பல பேருக்கு சமஸ்கிருதம்போல பொருள் தெரியாமல் இருப்பதைப் பாடுவதைவிட—மணமக்களுக்குச் சில புத்திமதிகளும் திருமண ஒப்பந்தக் கருத்துக்களும் விளங்கும்படி சுருக்கமாய்ச் சொல்லுவதாய் இருக்க வேண்டும். பழைய முறை என்ற சட்டி பானை அடுக்குவதோ, பட்டப் பகலில் (அயிரப் பந்தம்) பெரிய அகல் விளக்கு வைப்பதோ நிறுத்தப்பட வேண்டும். ஓமம் வளர்த்தல், அதில் மக்கள் சாப்பிடக்கூடிய சத்துப் பொருந்திய நெய்யைக் கொட்டுதல்—ஆகிய காரியத்தை அடியோடு அகற்ற வேண்டும். இவை முதலான திருத்தங்களையாவது செய்யாமல் சீர்திருத்தத் திருமணம் என்று எப்படிச் சொல்ல முடியும்?

[கருங்கல்பாளையத்தில், 11-11-1940-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 24-11-1940]

மண முறைக்கும் பழமையைத் தேடித் திரிய வேண்டியதில்லை. இன்றுள்ள எந்த மனிதனுடைய அறிவும் அனேகமாய்ப் பழமைக்கு இளைத்ததாய் இருக்காது; இருந்தாலும், நிலைமை தானாக சரிப்படுத்திவிடும். கால நிலைக்கும் சமுதாய நிலைக்கும் அறிவு முதிர்ச்சி நிலைக்கும் ஏற்றபடிதான் முறைகள் வகுக்கப்பட வேண்டியவைகளே ஒழிய, ஒரு காலத்து முறைகள் எக் காலத்துக்கும் என்றால் மனிதனுக்கு அறிவு வளர்ச்சி இல்லை என்பதுதான் பொருள். அதன்படி எந்த மனிதனும் தனது அனுபவத்தையே சொல்ல முடியாது என்று கூறுவேன்.

இதில் பிரத்தியட்ச அனுபவத்திற்கும் அறிவுக்கும் மேற்பட்ட காரியம் எதையும் கலக்கக்கூடாது. கலக்குவதானால், அதை எழுதி நெருப்பில் போட்டு அது பொசுங்காமல் இருக்கிறதா என்று பார்த்து அதன் பிறகே அறிவை அடக்கவேண்டும்! இந்த நிலையில் ஏதோ சிலர் தாங்கள்தாம் அறிவாளிகள்—மற்றவர்கள் அறிவிலிகள் என்று நினைப்பது கற்றறி மூடர்கள் குணங்களேயாகும்.

['குடிஅரசு'—கட்டுரை—10-1-1948]

தாய்மார்களே! தோழர்களே!

டாக்டர். அம்பேத்கார் ஒரு சட்டம் கொண்டு வருகிறார் (1951). அதன்படி நீங்கள் எல்லாம் பதிவு செய்துகொள்ள வேண்டியதுதான். இதற்குப் பார்ப்பனர்கள் இப்பொழுது எதிர்ப்பாக இருக்கிறார்கள். ஏன் என்றால், இந்தத் திருமணம் மதச் சம்பந்தமாக, மதத்திலேயே உள்ள சாஸ்திரம் சம்மதமாக, சாஸ்திரத்திலே உள்ள சடங்கு முறையாக நடக்கிறதனாலே பார்ப்பானுக்குப் பிழைப்புண்டு. அந்த முறை போய்விட்டால் அவனுக்கு பிழைப்புப் போய்விடும். ஆனதனாலே, அவர்கள் இன்னமும் மத சம்பிரதாயப்படி நடக்க வேண்டும் என்று வழக்குப் போடுகிறார்கள்.

டாக்டர். அம்பேத்கார் அவர்களுடைய கொள்கைப்படி, திருமணம் என்று சொன்னால் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் கூடி வாழ்க்கை நடத்துவதுதான். அதற்கு ஒரு

குறிப்பு இருக்கவேண்டும் என்பதுதானே தவிர, மற்றபடி வேறு ஒன்றும் வேண்டியது இல்லை என்று சொல்கிறார்கள்.

எப்பொழுதும் சொல்லி வருகிறேன்: நம்முடைய சொத்துரிமை, நமக்கிருக்கிற சொத்துரிமை எடுக்கப்பட்டுவிட்டால்—அதாவது, ஒரு கடை இருக்கிறது, தோட்டமிருக்கிறது, இத்தனை ரூபாய்க்குச் சொத்து இருக்கிறது என்று சொல்லுகிற முறை ஒழிந்து, ரஷ்ய சட்டம் நமக்கு வந்துவிடுமேயானால்— இங்கே இந்த ஏற்பாடு எல்லாம் இருக்காது. இந்த விஷயம் மக்களுக்குப் புரிந்திருந்தாலும்கூட சில பேருக்கு வேறு ஒரு மயக்கம் என்ன வென்றால், சொத்துக்காக ஏற்பட்ட திருமண முறையானது, பார்ப்பனர் உள்ளே புகுந்து சொத்தோடு மாத்திரம் விட்டுவிடாமல் இந்த உலகத்திற்குத்தான் சொத்து; மேல் உலகத் திற்கு இன்னும் வேறு ஒன்று இருக்கிறது; அதற்கும் திருமணம் வேண்டும் என்று சொல்லு கின்றார்கள்.

'மோட்சம் நரகம் என்பதெல்லாம் இருக்கிறதே! தாய் தகப்பன் இந்த உலகத்திலே செத்துப் போய்விட்டார்களே யானால் அவர்கள் உயிர் ஆவி ரூபம் அடைந்து மேல் லோகத் திற்குப் போய் மனித ரூபம் பெற்று வாழ்கிறது. அந்த மனித ரூபத்திற்கு வேண்டிய திதிகள், திவசம் செய்யப் பிள்ளை வேண்டும்' என்பதாக ஒரு பித்தலாட்டத்தை உள்ளே புகுத்தி—கட்டாயம் பிள்ளை பெற வேண்டும்; ஆகவே ஒவ்வொரு ஆணும், பெண்ணும் குழந்தையை உண்டாக்கிக் கொண்டுதான் தீரவேண்டும் என்று செய்துவிட்டார்கள். அத் திட்டம் எந்த அளவு வந்துவிட்டது என்றால்—நீங்கள் பரிகாசம் செய்வீர்கள்,—நான் பார்ப் பனர்களுடைய முறைப்படி சொல்லுகிறேன்:

சொத்துக்காகப் பிள்ளை இல்லாவிட்டாலும் திதி, திவசம் செய்வதற்காகப் பிள்ளை வேண்டும். தந்தை ஒரு பிள்ளையை உண்டாக்கச் சக்தி யில்லாதவனாக இருந்தால்— இந்த சாஸ்திரம் சொல்லுகிறது 'மனைவியை இன்னும் யாரிடமாவது விட்டுக் குழந்தையைப் பெற்றுவிடு!' என்று. காரணம் என்ன?

சொத்துக்காகக் குழந்தை வேண்டும்; மேல் லோகத்திலே இருக்கிற தகப்பனுக்கு திதி, திவசம் செய்வதற்குக் கட்டாயம் ஒரு பிள்ளை வேண்டும் என்று சொல்லி, இந்தத் திரு மணத்தைக் கட்டாயப்படுத்தி விட்டனர். அந்தக் குறைதான் இன்று இருக்கின்றது.

நாம் சமுதாயத்திலே பெரிய மாறுதல் வேண்டும் என்று சொல்லுகின்றோம்; சம உரிமை வேண்டும் என்று சொல்லுகின்றோம். வைதிக சம்பந்தமான திருமணங்களிலே வேறு நடவடிக்கைகள் நடைபெறுகின்றன. அது இங்கே இல்லை. பல இடங்களிலே அதற்காக சட்டி பானையை வைப்பார்கள்; நெருப்புக் கொளுத்துவார்கள். வேறு ஏதேதோ சடங்குகள் செய்வார்கள். இந்த மாதிரியான காரியங்களெல்லாம் இங்கே இல்லை. இல்லாததனால் ஒன்றும் தவறு இல்லை. நாமும் அவைகளிடத்திலே உள்ள வெறுப்பினால் அவைகளை வெறுக்கவில்லை.

இந்த இடத்திலே சட்டி பானையை அடுக்கவில்லை என்றால் அதற்கும் நமக்குமே சண்டையா? இந்த மாதிரிக் காரியமெல்லாம் தேவையில்லை. அவசியமானதைத் தவிர வேறு ஒன்றும் வேண்டியதும் இல்லை.

எதற்காக நெருப்பைக் கொளுத்துவது? ஒரு வீட்டின் முன்னாலே நெருப்பு எரிந்து கொண்டிருந்தால், அந்த வீட்டில் ஏதோ ஒரு பெரிய காரியம் (சாவு காரியம்) ஆகிவிட்டது என்றுதானே அர்த்தம்? கல்யாணத்திலே என்ன பெரிய காரியம் இருக்கிறது? நெருப்புக் கொளுத்துவது எதற்கு? சாப்பிடுகிற நெய்யை அதிலே ஊற்றுவதனால் யாருக்கு என்ன பலன்?

இவைகளை எல்லாம் நாம் கூடாது என்று சொன்னால் நமக்கு நெருப்போடு என்ன சண்டையா? இல்லை. நெய்யோடுதான் சண்டையா? இல்லை. அவைகள் எல்லாம்

இருக்க வேண்டிய இடத்தில் இருக்க வேண்டும். எனவே, இத்தகைய மடமை மூடப் பழக்கங்கள் ஒழிந்து சீர்திருத்த முறையில் திருமணம் செய்துகொள்ள ஏராளமான இளைஞர்கள் முன்வர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

[பெரம்பூரில், 11-2-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 17-2-1951]

## 12. திருமண முறையும் நாமும்

தாய்மார்களே! தோழர்களே!

நம்மிடையே நடைபெற்றுவரும் திருமணங்களில் பெரும்பாலானவை எவ்வித நியதிக்கும் உட்படாதவையாகவே காணப்பட்டு வருகின்றன.

இந்துமதத் தத்துவப்படி, வைதிக முறையில் நடந்து வருகின்றன என்றோ, வேத தத்துவப்படிதான் நடந்து வருகின்றன என்றோ, இன்னாருக்கு இன்னின்ன முறை என்கிற ஏதோ ஒரு சம்பிரதாயத் தத்துவப்படி நடந்து வருகின்றன என்றோ—வரை யறுத்துக் கூற முடியாத வகையில் பற்பல விதமாகவே இன்றையத் திருமணங்கள் நடந்து வருகின்றன. கண்டவர்கள் கண்டபடிதான் தம் திருமணங்களை நடத்தி வருகின்றனர்.

இந்த அளவில் இந்துக்கள் என்று தம்மைக் கருதிக்கொண்டிருக்கிற திராவிட மக்களுக்கு எப்போதாயினும் சடங்குமுறைத் திருமணம் என்று ஒன்று இருந்ததுண்டா என்பதும்; இருந்ததில்லையானால் இச்சடங்கு முறைகள் ஏன், எப்போது இவர்களிடையே புகுந்திருக்க வேண்டும் என்பதும் ஆராயத்தக்கனவேயாகும். நமது ஆராய்ச்சிக்கு எட்டிய அளவில் ஆதியில் திராவிட மக்களுக்கு எவ்விதச் சடங்கு முறையும் இருந்ததாகத் தெரியவில்லை. ஆரியம் இந் நாட்டில் நுழைந்த பிறகுதான் இச் சடங்கு முறைகளும் ஏற்பட்டிருக்க வேண்டுமென்பது தெரிகிறது. இதையொட்டித்தான் நாமும் சென்ற 35 வருட காலமாகவே பகுத்தறிவு வழிநின்று மூட நம்பிக்கைகளின் இருப்பிடமாய் அமைந்திருக்கும் சடங்குகளையும், சாஸ்திர சம்பிரதாயங்களையும் எதிர்த்து வந்திருக்கிறோம். திராவிடர்கள் இந்துக்களல்லர் என்பது தெரிந்துதான் அவர்களின் சூத்திரத்தன்மைபோக, பார்ப்பனனின் தாசி மக்கள் என்கிற இழிபெயர் ஒழிய, அவர்களை மானமுள்ள மனிதர்களாக ஆக்கி, உண்மை மனிதத் தன்மை பெறும்படி செய்யப் பகுத்தறிவின் பெயரால் சுயமரியாதை இயக்கம் சென்ற 35 ஆண்டு காலமாகவே பாடுபட்டு வந்திருக்கிறது. திருமணத்தில், நான் தலைமைவகித்து நடத்துவதற்கென்று எவ்விதப் பணியுமில்லை. அப்படி நடத்தப்பட அவசியமுள்ளதும் ஒன்றுமில்லை. வைதிகத்தின் பேராலும், கடவுள் மதம் சம்பிரதாயப் பழக்கவழக்கம் என்பனவற்றின் பேராலும் நடத்தப்பட்டு வருகின்ற திருமணங்களைவிட ஆயிரம் பங்கு கெட்டியுள்ள தன்மையிலும், ஒழுக்க நீதியுள்ள தன்மையிலும், நமது சமுதாயத்தை மேல் நிலைக்குக் கொண்டுவரும் தன்மையிலும் இத்திருமணம் அமைந்திருக்கிறது. மேலும், மூட நம்பிக்கைக்கு ஆதாரமானதும், நம்மைப் பார்ப்பானுக்கு அடிபணியச் செய்வதுமான எவ்விதச் சடங்கும் இதில் காணப்படவே இல்லை. எனவேதான், நாம் இம் முறையைப் போற்றி வரவேற்கிறோம். சடங்கு முறைகளைப் பற்றி நீங்கள் சிந்தித்துப் பாருங்கள், அப்போது புரியும் ஒவ்வொரு சிறிய சடங்கின் அடிப்படையிலும் பார்ப்பானுடைய இலாபத்திற்கு வழியும் அவனது உயர்தன்மைக்கு ஆதாரமும் அடங்கிக் கிடப்பது.

திராவிடர்களிடையே சடங்குமுறைத் திருமணம் இருந்ததென்பதற்கு எந்தப் பண்டைத் திராவிட நூலிலும் ஆதாரம் காட்ட முடியாது. தேவாரத்தில் ஏதோ காணப்படுகிறது; இராமாயணத்தில் இருப்பதாகத் தெரிகிறது; பாரதத்திலும் இருக்கிறது என்றுகூறி, இவ்வாறாக ஆரிய ஏடுகளைத்தான் காட்டுவார்களே ஒழிய—எந்தத் தமிழ் நூலிலும் திருமண முறைக்கு ஆதாரம் காட்ட முடியாது. இன்னும் யோசித்துப் பார்க்கப்போனால், வண்ணானுக்கு ஒரு முறையிலும், நாவிதனுக்கு ஒரு முறையிலும் திருமணச் சடங்குகள்

நடைபெற்று வருவதிலிருந்தே திராவிடர்களுக்கு எப்போதுமே திருமணமுறை இருந்திருக்க முடியாதென்பதும், இவையாவும் ஆரியர் வழி வந்தனவேயாகும் என்பதும் தெரியவரும்.

இது மட்டுமா? ஒரு ஆண் ஒரே பெண்ணுடன்தான் வாழ்ந்து வரவேண்டும் என்பதற்குக்கூட ஆதாரங் காட்டப்படவில்லை; ஆனால், ஒரு பெண் ஒரே ஆணுடன்தான் இருக்கவேண்டும் என்பதற்குமட்டும் ஆதாரங்கள் பல கிடைக்கின்றன. ஒரு ஆண் பல பெண்களை மணந்து கொள்வது கடவுளுக்கோ, சட்டத்துக்கோ, சாஸ்திரத்திற்கோ விரோதமாகாது. ஆனால், ஒரு பெண் பல ஆண்களை மணப்பது மட்டும் சட்ட விரோதமாகும்; சாஸ்திர விரோதமாகும்; சம்பிரதாய விரோதமாகும். ஒரு குழவிக் கல்லுக்கு 1000 மனைவிகள் இருக்கலாம்; இருந்தாலும் அதைத் தெய்வம் என்று தொழுவார்கள். நமது முதன் மந்திரியார் அன்றாடம் போற்றிப் புகழ்ந்துவரும் இராமபிரானின் தந்தை தசரதருக்கோ, ஒன்றல்ல—ஆயிரமல்ல—60 ஆயிரம் மனைவிமார்கள்! இருந்தாலும், இராமாயணம் ஒரு பக்தி நூலாகக் கருதப்படும். கீதையை உபதேசித்த கிருஷ்ணனுக்கோ 10 ஆயிரம் மனைவியர்; ஓர் இலட்சம் வைப்பாட்டிகள். கிருஷ்ணனுடைய நடத்தை இவ்வளவு மோசமாக இருந்தாலும் இதற்காகக் கீதை படிப்பவர்கள் யாரும் வெட்கப்பட மாட்டார்கள். ஏன்? அவர்களெல்லாம் மகான்கள்; என்ன வேண்டுமானாலும் செய்யலாம். நம்மவர் தொழும் கடவுள்களில் 100–ல் 90க்கு—இரண்டு மனைவிகளுக்குக் குறையாமலிருக்கும். இரண்டு மனைவிகள் போதாமல் தாசி வீட்டிற்கு வேறு அழைத்துச் செல்லப்படும்; இருந்தாலும் கடவுள்கள் பூஜிக்கப்பட வேண்டியவைகள். இப்படிப்பட்ட கடவுளைத் தொழும் அன்பர்கள் எப்படி ஒழுக்கமாக இருப்பார்கள்? இத்தகைய ஒழுக்கக்கேடான கடவுளைத் தொழுகிறோமே என்கிற நினைப்பாவது—எப்போதேனும் தோன்றுகிறதா உங்களுக்கு? மதமும், கடவுளும் ஒழுக்கத்தைக் கெடுக்க உண்டாக்கப்பட்டனவா, அல்லவா? இதைக்கூட உணராது மிருக வாழ்க்கை வாழ்ந்து வருகிறீர்களே! இது நலமா?

எனவே, திராவிடத் தோழர்களே! உங்களுக்கு ஒழுக்கம் ஏற்பட வேண்டுமானால்—நீங்கள் மனிதத் தன்மை பெறவேண்டுமானால், சாஸ்திர புராண சம்பிரதாயங்களிலும், மதங்களிலும், உங்களுக்குள்ள பற்றுதலை, பக்தியை நீங்கள் உடனே விட்டொழியுங்கள்! இன்று நடைமுறையிலிருந்துவரும் கடவுளும் மதமும் சாஸ்திரமும் சட்டமும் அவற்றின் வழிவந்த சம்பிரதாயமும் உங்களை இழிவுபடுத்தவும், அடிமைப்படுத்தவும் ஆரியர்களால் உண்டாக்கப்பட்டவை. மானமுள்ள ஒரு சிலராவது இம்மாதிரி சீர்திருத்தக் காரியங்களைச் செய்ய முன்வர வேண்டாமா? பயனற்ற காரியங்களை விட்டொழித்துப் பயனுள்ள முற்போக்கான காரியங்களைச் செய்தல் அவசியமல்லவா? தோழர்களே! நான் யாரையும் இம்மாதிரிதான் திருமணம் செய்யவேண்டுமென்று கட்டாயப்படுத்தவில்லை. சமாதானமாகத்தான் என்னுடைய கருத்துகளை எடுத்துச் சொல்லிவருகிறேன். உங்களுக்குள்ள அறிவைக் கொண்டு ஆலோசித்துப் பாருங்கள். உங்களை உயர்த்திக் கொள்ள வேண்டுமென்றால் தயவு செய்து, அருள் கூர்ந்து நான் கூறுவதைச் செவிமடுத்துக் கேளுங்கள். முன்னோர் கூறியது என்றோ, முன்னோர் செய்தது என்றோ எதையும் அப்படியே ஏற்றுக் கொள்ளாதீர்கள்! நெருப்பென்பதே என்னவென்று தெரியாத காலத்தில் சக்கிமுக்கிக் கற்களால் நெருப்பை உண்டாக்கியவன்—'அந்தக் காலத்துக் கடவுள்'தான்; 'அந்தக் காலத்து எடிசன்'தான். அதைவிட மேலான வத்திப்பெட்டி வந்த பிறகு எவனாவது சக்கிமுக்கிக் கல்லைத் தேடிக் கொண்டு திரிவானா, நெருப்புண்டாக்க? அப்படித் திரிந்தால் அவனைப் பைத்தியக்காரன் என்றல்லவோ உலகம் மதிக்கும்! அக் காலத்திய புத்தி எவ்வளவு, இக் காலத்திய புத்தி எவ்வளவு—இரண்டையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியுமா? அக் காலத்தில் எது பெருமையாய்ப் பேசப்பட்டதோ அதையே இக் காலத்திலும் பெருமையாகப் பேசமுடியுமா?

பலூனில் பறந்த அந்த முதல் மனிதனின் பெருமை அன்று எவ்வளவாக இருந்தது; இன்று எவ்வளவாக இருக்கிறது? கிராமபோனுக்கே அன்றிருந்த பெருமை எவ்வளவு—ரேடியோ வந்தபிறகு அதற்குள்ள பெருமை எவ்வளவு? இதையெல்லாம் நீங்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டாமா? இதேபோல் ஒரு காலத்திய கடவுள் இக் காலத்திற்கு உதவுமா? இக் காலத்திற்குப் பயன்படுமா?

நான் சொல்லும் சில கருத்துக்கள் இன்று தலைகீழ்ப் புரட்சியாகச் சிலருக்குத் தோன்றுகின்றன. அடுத்த 20 வருடங்களில்—என்னையே 'மகா பிற்போக்குவாதி' என்று அன்றைய உலகம் கூறுமே! அறிவு வளர்ச்சியின் வேகம் அவ்வளவு அதிகமாயிருக்கிறதே! மாறுதலுக்குக் கட்டுப்பட்டதன்றோ உலகம்? மாறுதலுக்கு வளைந்துகொடாத மனிதன் மாயவேண்டியதுதானே! இதுவரை மாறுதலை எதிர்த்து வெற்றிபெற்றவர்கள் கிடையாதே! நமது போக்குவரத்துச் சாதனங்கள், நமது வாத்தியங்கள், நமது உடைகள், நமது ஆபரணங்கள் இவையெல்லாம் இன்று எவ்வளவு மாறுபட்டுவிட்டன? 20 வருடத்திற்கு முன் எத்தனை பேர் கிராப் வைத்திருந்தார்கள்—இன்று எத்தனை பேர் குடுமி வைத்துள்ளார்கள்? இப்பெரிய கூட்டத்தில் குடுமி வைத்தவர்கள் எத்தனைபேர் என்று சுலபத்தில் எண்ணிவிடலாமே! இயற்கை மாறுதலால் ஏற்பட்டதா இது? அல்லது சர்க்கார் தான் குடுமி வைத்திருக்கக்கூடாதென்று சட்டம் போட்டதா? இல்லையே!

இன்று எத்தனைபேர் நெற்றியில் பூச்சுடன் காணப்படுகிறார்கள்? விரல்விட்டு எண்ணிவிடலாமே! 'பூச்சுடன் காணப்பட்டால் அபராதம் விதிக்கப்படும்' என்றா அரசு உத்தரவு போட்டுப் பூச்சுக்கள் மறையும்படி செய்யப்பட்டது? இல்லையே! காலம் மாறி வருகிறது; அம் மாறுதலுக்குக் கட்டுப்பட்ட மனிதனும் தானாக மாறுகிறான். பணக்காரர்களின் உயர்வெல்லாம் இன்று எங்கு போயின? அவர்களுடைய பிடிவாதம்தான் எங்கே போயிற்று? முன்பெல்லாம் தாய்மார்கள் எத்தனை முழம் சேலை கட்டினார்கள்; இப்போது எத்தனை முழம் சேலை கட்டிக்கொள்கிறார்கள்? 18 முழத்துக்குக் குறையாது சேலை கட்டுவதுதான் பெருமை என்று கருதிய தாய்மார்கள், இன்று 6 கெஜத்துக்கு மேல் கட்டக் கூச்சப்படவில்லையா? அன்றுமட்டும் அவர்கள் தாமாகவா விரும்பினார்கள், 9 கெஜ சேலையை? சேலை சுற்றுக் குறைந்திருந்தால் எங்கு ஓடிவிடுவார்களோ என்று ஆண் பிள்ளைகள் செய்த தந்திரம் அது! அன்றிருந்த கட்டுப்பாடு அவ்வளவு! இன்று பெண்களுக்கு அவ்வளவு கட்டுப்பாடு இல்லை. எனவே, நைசான சேலை கட்டிக்கொள்ள அனுமதிக்கப்படுகிறார்கள். நகைகளில்தான் எவ்வளவு மாற்றம்! அன்று தங்கச் சங்கிலி எல்லாம் எருமைமாட்டுக் கழுத்து இரும்புச் சங்கிலிபோல் இருக்கும்; இன்று சங்கிலி கண்ணுக்குத் தெரிந்தும், தெரியாத அளவுக்கு நைசாக இருக்கிறதே! சட்டம் போட்டா இம்மாறுதல் செய்யப்பட்டது? இப்படி எவ்வளவு வேண்டுமானாலும் உதாரணம் காட்டிக் கொண்டே போகலாமே!

அன்று விரல்தேய மண்ணில் எழுதி எழுத்துக்களைக் கற்றோம்; இன்று நம் கண் முன்னாகவே 8-வது பையன் சீமைப் பேனா வைத்துக்கொண்டு 'நைசான' பேப்பரில் எழுதுகிறானே! யாரால் தடுக்க முடிந்தது, இம்மாறுதல்களை? இப்படிச் சாதாரணமான காரியங்களில் எல்லாம் மாறுதலை ஏற்றுக்கொண்டபோது, தன்மானத்தையொட்டி நாங்கள் கூறும் மாறுதல்களைத்தானா நீங்கள் ஏற்கத் தயங்குவது? யாரோ சில அன்னக்காவடிப் பார்ப்பனர்கள் வயிற்றுப் பிழைப்புக்காக ஏற்படுத்திக்கொண்ட திட்டத்தையா இப்படி விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பது? நெஞ்சில் துணிவு பிறக்கவேண்டாமா, உங்களுக்கு? நடுநிலையிலிருந்தாவது நாங்கள் கூறுவதை ஆலோசிக்க வேண்டாமா? தூங்கிக் கொண்டுள்ளவர்களுக்கு விழிப்பூட்ட — மயங்கியிருப்பவர்க்குத் தெளிவூட்ட அறிவுள்ள சிலராவது முயற்சிக்கவேண்டாமா? அப்படி அறிவை வளர்க்கத்தான் இம் மாதிரி சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக்கொள்கிறோம்; இப்படிப் பயன்படுத்துவதுதான் முறையுங்கூட.

இன்று இம் மணமக்கள் தம் இல்வாழ்க்கையைத் துவங்குகிறார்கள். புதுக்கடை வைத்து புதுக்கணக்குப் போடுவதுபோல், இம் மணமக்கள் 'எங்களையும் உங்களோடு ஒரு குடும்பத்தினராகச் சேர்த்துக்கொள்ளுங்கள்' என்று அறிமுகப்படுத்திக்கொள்ளும் நாள்தான் இது. இப்படிப்பட்ட நாளில் நாம் எல்லோரும் நம்மைச் சோதித்துக் கொள்ளவேண்டும். நம்முடைய குறை என்ன என்பதை ஆராய்ந்து பார்த்துக் கொள்ளவேண்டும். நமது சமுதாயத்தை எப்படி முன்னேற்றத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்று ஆலோசிக்க வேண்டும். சமுதாய உணர்வை அடியோடு மறந்துவிட்டு, 'பழைமை, பழைமை' என்று பழைமைப் பித்தில் வாழ்ந்ததால்தான்—நாம் இதுவரை அடிமைகளாக இருக்க நேரிட்டது என்பதை உணர்ந்து, இனியும் அம் மாதிரி இருக்கக்கூடாது என்று உறுதிகொள்ள வேண்டும்.

திருமணம் செய்துகொள்கிறவர்கள் கட்டாயம் ரிஜிஸ்டரில் பதிவுசெய்துகொள்ள வேண்டும். பதிவு செய்துகொள்ள முதலில் ஆரம்பித்துவிட்டால் நாளாகஆக மற்ற சடங்குகள் தானாக மறைந்துவிடும். பதிவுசெய்துகொள்வதால் உள்ள நன்மையைத் தாய்மார்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். பதிவுசெய்துகொள்வதால்—கணவனுக்குச் சரிசமமான அந்தஸ்து மனைவிக்கும் கிடைக்கிறது. மேலும், மணந்த அன்றைக்கே அவனுடைய சொத்துக்கு அவளும் சம உரிமை உடையவள் ஆகிறாள். கணவன் தாசி வீடு சென்று திரும்பிவந்தால், மனைவி விவாகரத்து கோரலாம். ஆனால், பார்ப்பனச் சடங்கு முறைத் திருமணம் செய்துகொண்டாலோ விவாகரத்து கோர முடியாது. ஜீவனாம்சம் கோருவதானாலும், அவனால் கற்புக் கெட்டவள் என்று ஒருமுறையாவது குற்றம் சாட்டப்பட்டு, அது தவறு என்று ரூபிக்கப்படவேண்டும். கணவன் அடித்தால்கூட அடங்கிக்கிடக்கவேண்டியதுதான். பதிவுமுறைத் திருமணத்தில் இத்தகைய அடிமைத்தனத்திற்கே இடமில்லை. திருமணப் பதிவின்போது, 'கலியாணம் செய்துகொள்ளக்கூடாத முறையைச் சேர்ந்தவர்கள் அல்லரே நீங்கள்?' என்று பதிவாளர் கேட்பார். 'மணந்து கொள்ளக்கூடிய முறையைச் சேர்ந்தவர்கள்தாம்' என்று பதில் அளித்தால், அப்புறம் "ஒருவரையொருவர் மணந்துகொள்ளச் சம்மதிக்கிறீர்களா?' என்று கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகு சரியென்று பதிவுசெய்துகொள்வார். இம் மணமக்களும் அதேபோல் இருவரும் சமம் என்பதாகச் சொல்லியே கையொப்பமிட்டனர். அப்படிக் கையொப்பமிட்டுப் பதிவுசெய்துகொள்வது தமக்குத்தான் இலாபம் என்பதைப் பெண்மக்கள் உணர்ந்துகொள்ள வேண்டும்.

அரசாணைக் கால் வைத்து, அக்கினியைச் சுற்றி, அம்மியை மிதித்துச் செய்யப்படும் திருமணங்களில் உள்ள அடிமைத்தனம் இதில் இல்லவே இல்லை. இப்படிப்பட்ட மாறுதலுக்குப் பெண்கள் முழு மனத்தோடு இணங்கவேண்டும்; பிடிவாதம் காட்டக்கூடாது. பொது மக்கள்முன்னேற்றத்தைக் கண்டு கடவுளும், பணக்காரரும் நடுங்கும் இந்தக் காலத்தில்—பெண்கள் எப்போதும்போல் 'கண்மூடித் தெய்வங்களாக' இருக்கக்கூடாது. கடவுளுடைய செல்வாக்குகூடப் பறந்துவிட்டது. இதனால்தான், இப்போதெல்லாம் உற்சவம் நடந்தால்—பூசைசெய்யும் பார்ப்பானும், மேள வாத்தியக்காரனும் தான் அதைத் தொடர்ந்து செல்ல வேண்டியிருக்கிறது. முன்பு 5000 பேர் வந்த உற்சவத்திற்கு இன்று 500 பேரைக் காண்பது கூடக் கஷ்டமாயிருக்கிறது. 'என்னப்பா, பகவான் போகிறார் பாரப்பா!' என்று தெருவில் போகிறவனிடம் சொன்னால்கூட—'அவர் வேலையாக அவர் போகிறார்; என் வேலையாக நான் போகிறேனப்பா' என்று கூறிச் சென்று விடுகிறான். 'ஏன் முதலாளி?' என்று கேட்கிறோம்—முதலாளி ஒன்றும் பேசமுடியவில்லை. 'ஏன் கடவுள்?' என்கிறோம்; அதுவும் பேசாமல் கிடக்கிறது. 'ஏன் பார்ப்பான்?' என்கிறோம்; அவனுக்கு என்ன செய்வது என்று தோன்றாமல் என்னமோ வஞ்சக சூழ்ச்சிகள் செய்கிறான். 'ஏன் ராஜா?', 'ஏன் ஜமீந்தார்?' என்றெல்லாம் கேட்கிறோம். அவர்களும், 'இதோ மறைந்துவிடுகிறோம்" என்று கூறுகிறார்களே!

இப்படிப்பட்ட மாறுதல்கள் எல்லாம் எப்படிச் சுலபமாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன? இப்போது இவையெல்லாம் ஒழிந்தபோது—இந்த மூடப் பழக்கவழக்கங்கள் தாமா ஒழிந்துபோகமாட்டா? காலம் போகப்போக இவை ஒழியும். இவற்றை வளர்க்கும் ஒரு கூட்டம் நாட்டில் இல்லாவிட்டால், இக்கூட்டத்தையும்மீறி அவைகள் ஒழியத்தான் போகின்றன என்றாலும் அறிவுள்ள மக்களுக்கு, நாகரிக மக்களுக்கு அழகு—கூடிய சீக்கிரத்தில் மூடநம்பிக்கைகளிலிருந்து விடுபடுவதல்லவா? பழகிவிட்ட பெரியவர்களுக்குத் தான் மூடப் பழக்க வழக்கங்களை விடமுடியவில்லையென்றால் இளைஞர்களாவது அவற்றை ஏற்காமல் இருக்க வேண்டாமா?

அரசியல் சம்பந்தமான கூட்டங்களில் பொது அரசியலைப்பற்றி எவ்வளவு காரசாரமாக விவாதிக்கிறோமோ, அதுபோல் சமுதாய சம்பந்தப்பட்ட இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளின்போதும் நமது சமுதாயத்தின் குற்றங்களைப் பற்றியும் காரசாரமாகப் பேசி அவற்றை நீக்கும் மார்க்கத்தைத் தேடவேண்டாமா? சமுதாய சம்பந்தமான கடவுளைப் பற்றியும், மதத்தைப்பற்றியும் பேசினால்—அவற்றிலுள்ள குற்றங்களை எடுத்துத் தாராளமாக விளக்கினால் என்ன பாவிகளாகவா ஆகிவிடுவோம்?

[திருவொற்றியூரில், 17-10-1948-ல் சொற்பொழிவு—‘விடுதலை’ 24-10-1948]

## 13. திருமணம்

சுயமரியாதைத் திருமண அழைப்பில் ‘வாழ்க்கை ஒப்பந்த அழைப்பு’ என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மற்ற திருமணங்களில், ‘கன்னிகா தான முகூர்த்தப் பத்திரிகை’ ‘தாரா முகூர்த்தப் பத்திரிகை’, ‘விவாக சுப முகூர்த்தப் பத்திரிகை’ என்று போடுவார்கள். இந்த மாறுபாட்டை நல்லவண்ணம் சிந்திக்க வேண்டும்.

விவாக முகூர்த்தம், கன்னிகா தானம், தாரா முகூர்த்தம்—இந்தச் சொற்களுக்கு நேர்ச்சொல் தமிழில் இல்லை.

நாம் தமிழர்கள்; நமக்கு என்று நடக்கிற இது போன்ற காரியங்களில் வடமொழிப் பெயர்கள் வந்து புகுந்துகொண்டன. தமிழர்கள் என்பவர்களுக்கு என்ன திருமண முறை? என்ன பெயரில் வழங்கப்பட்டுள்ளது? என்ன ஆதாரம்? என்று புலவர்களைக் கேட்டால் அவர்களும் விழிக்கிற நிலையில்தான் உள்ளார்கள்.

தமிழர்களுக்கென்று ஏதாவது முறை உண்டா என்பதைப் பார்த்த அளவில், தமிழர்கள் ஆண்களும் பெண்களும் ஓரளவு சமமாக இருந்திருக்கிறார்கள் என்பதை வள்ளுவரின் குறளைக் கொண்டு கண்டறிந்தோம். பெண்ணுக்கு ‘வாழ்க்கைத் துணை’ என்றிருப்பதிலிருந்து இந்நிகழ்ச்சிக்கு ‘வாழ்க்கைத் துணை ஒப்பந்தம்’ என்று பெயரிட்டு, அதற்கேற்ப இம்முறைகளையும் கையாளுகிறோம்.

வெறும் பெயர் மாற்றம் மாத்திரமல்லாமல் அந்தச் சொல்லுக்கு அர்த்தம்—மற்ற வார்த்தைகளுக்குண்டான அர்த்தத்திற்கு மாறுபட்ட, சமுதாய நலத்திற்கேற்ற ஒரு நல்ல வாழ்க்கை முறையைக் குறிக்கும் சொல்லாக உள்ளது.

இதற்கு முன் திருமண முறை என்ற ஒன்று இல்லை. ஒரு ஆண் ஒரு பெண்ணை அடிமைகொள்வது என்ற முறையில்தான் நடந்துவந்திருக்கின்றது. திருமணம் என்பது தமிழ்ச் சொல்லே ஒழிய அதில் கருத்தொன்றும் இல்லை. திருமணம் போலவே கலியாணமும் அர்த்தமற்றது.

கலியாணம் என்பது வாழ்த்து என்று பொருள். அது ‘வாழ்க்கைத் துணை’ என்ற பொருளில் இல்லை. ஏதோ, கறுப்பு ஆட்டை வெள்ளாடு என்பது போலவும், கொடிய

விஷம் உள்ள பாம்பை நல்ல பாம்பு என்பது போலவும்,—இப்படித் தப்பான சொற்களை அமைத்துக் கலியாணம், திருமணம் என்றெல்லாம் சொல்லிவருகின்றோம்.

ஆனால், பார்ப்பனர் மட்டும் சரியான வார்த்தைகளையே உபயோகித்து வருகின்றனர். அவைகள் 'தாராமுகூர்த்தம்', 'கன்னிகா தானம்' என்பவைகளாகும்.

சமுதாயத்தில் திருமணம் என்பதும் வழக்கில் உள்ளது. இராஜகோபாலாச்சாரியார் ஆட்சியின்போது நடந்த இந்தி எதிர்ப்பின்போது (1938-39) வடமொழியின்பால் ஏற்பட்ட வெறுப்பின் காரணமாகத் திருமணம் என்று பெயர் வந்தது.

தானம் என்பது வடமொழிச் சொல் ஆகும். தாரா முகூர்த்தம் என்பதும் வடமொழிச் சொல்லே; தமிழ்ச் சொல் அல்ல. தமிழர்களுக்கான காரியங்களில் வடமொழிச் சொல்லாக இருந்தால் அது ஒன்றிலேயே நன்றாகத் தெரியுமே—அந்த முறை நமக்கில்லை என்று. நாம் தினமும் குடிக்கும் காப்பியை எடுத்துக்கொள்ளுங்கள். காப்பி என்றால் என்ன அர்த்தம்? அது இங்கிலீஷ் சொல். நித்தம் புழங்குகிற அந்தப் பண்டத்திற்குத் தமிழ்ச் சொல் இல்லை. 'டீ'க்காவது தேநீர் என்று தமிழில் கூறுகிறோம். காப்பி என்பது அன்னிய மொழி. தினம் சாப்பிடுகிற பண்டத்திற்கே அன்னிய மொழி என்றால் என்ன அர்த்தம்? அது நம் நாட்டில் இல்லை. எங்கிருந்தோ வந்தது; அதுதான் அந்தப் பெயர். நம் நாட்டில் இல்லாததால் அதற்குத் தமிழ்ச் சொல் இல்லை. எலக்ட்ரிக் லைட் இருக்கிறது. அது தமிழ்ச் சொல் இல்லை. ஆங்கில மொழிச் சொல். வெள்ளைக்காரன் கண்டுபிடித்துக் கொண்டுவந்ததால் அவன் மொழியிலேயே பெயர் வைத்துக்கொண்டான். தினம் வாழ்வில் அதை உபயோகப்படுத்துகிறோம். அதேபோல், கன்னிகா தானம், தாரா முகூர்த்தம் என்றால் அது நம் நாட்டுச் சொல் இல்லை. வெளியிலிருந்து வந்தது என்றுதான் அர்த்தம். அதனால் அவனுக்கு (பார்ப்பானுக்கு) அனுகூலம்; நமக்கு இழிவு. ஒரு பெண்ணைப் பெற்று வளர்த்து ஒருவனுக்குத் தாரை வார்ப்பது—தானம் தருவது என்பது கருத்து. நம் பழக்கப்படி ஆணும் பெண்ணும் சம உரிமை கொண்டு அன்பு பூண்டு ஒற்றுமையுடன் இருத்தல்—வாழ்க்கைத் துணை—தமிழ்ச் சொல். அவன் வந்த பிறகுதான் இதையெல்லாம் அழித்துவிட்டுப் பெண்களை அடிமையாக்குகிற நிகழ்ச்சியாக ஆக்கிவிட்டான்.

தன் பெண்ணை அருமையாக வளர்த்து யாரோ ஒருவனுக்குத் தானமாகக் கொடுப்பதென்றால் என்ன நியாயம்? எதற்காக ஒரு பெண்ணைத் தானமாகக் கொடுப்பது? சிந்திக்க வேண்டாமா?

அதற்கு மேலே மிகவும் மோசமானது தாரா முகூர்த்தம் என்பது. அதாவது, கணவன் கையைக் கீழே வைத்து, தன் பெண்ணின் கையை அதன் மேலே வைத்து அதன் மேல் தண்ணீரை ஊற்றி, 'கிருஷ்ணா! கிருஷ்ணா!' என்று சொல்லிக்கொண்டே திரும்பிக் கூடப் பார்க்காமல் கண்ணை மூடிக்கொண்டே வந்துவிடுவார்கள். அதாவது, தாரை வார்த்துக் கொடுப்பது என்பது திரும்பிக்கூடப் பார்க்கக்கூடாது என்பதுதான். தானமாகக் கொடுத்த பெண்ணைக் கணவன் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அவன் தன் மனைவியை வாடகைக்கு விடலாம்; பக்தருக்குக் கூட்டிக்கொடுக்கலாம்.

இப்போது நடைபெறும் திருமணத்தில் நாம் ஒன்றும் பெரிய மாறுதலைக் காண வில்லை. தலைகீழாக ஒன்றும் நடைபெறப் போவதில்லை. ஒரு சிறிய மாறுதல் மட்டும் உண்டு. மாறுதல்கள் இயற்கையாகவே பல இனங்களாலேயே பல இடங்களிலே கையாளப் பட்டுத்தான் வருகிறது.

இங்கே நாம் என்ன மாறுதலைக் காண்கிறோம்? சடங்கு இல்லை; வேறு இனத்தவன் எவனும் மணத்தை நடத்துவதில்லை. சுயமரியாதைக்கும் பகுத்தறிவுக்கும் இயற்கைக்கும் பொருந்திய மணம் வேண்டுகிறோம். இப்படிப்பட்ட இந்துத் திருமணத்தை நாத்திகத் திருமணம் என்று பலர் சொல்லக்கூடும்.

'இது நாத்திகத் திருமணமா?' என்றால் 'ஆமாம்' என்பேன். எந்த அர்த்தத்தில் சொல்கிறேன் என்றால், எதையும் அறிவைக்கொண்டு ஆராய்ந்து—தர்க்க வாதம் செய்து—அறிவின் முடிவுப்படி நடப்பது நாத்திகம். அதைத்தான் நாத்திகம் என்கிறார்கள். அதன்படி இது அறிவுப்படி நடக்கிற திருமணமாதலால் நாத்திகத் திருமணந்தான்.

இந்தத் திருமணத்தில் முதல் வெற்றி, பார்ப்பனன் இல்லாதது. ஆதலால், இதை சுயமரியாதைத் திருமணம் என அழைக்கிறோம். தான்தான் உயர்ந்த சாதி என்ற ஆணவங் கொண்டு, நம்மைப் பார்த்து, 'தொடாதே!, கூட உட்கார்ந்து சாப்பிடாதே!' என்று சொல்லும் ஒருவனை மனையில் உட்காரவைத்துக் காரியம் நடத்தினால், தமிழனுக்கு மானமுண்டு என்று சொல்லமுடியுமா?

இரண்டாவது வெற்றி என்ன வென்றால், இது பகுத்தறிவுத் திருமணம். 'சாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறதோ, அதுதான் நடக்கவேண்டும்; ஏன்? எப்படி? என்று கேட்கக்கூடாது' என்றால்—இது அறிவு சம்பந்தமான அடக்குமுறை என்பதைத் தவிர வேறு என்ன? நாம் பகுத்தறிவுவாதிகள் ஆனதால், அறிவுக்குப் பொருத்தமற்ற காரியங்கள் தேவையில்லை என்று கருதியே இதுபோன்ற முறையில் செய்கிறோம். மற்றும் இந்தத் திருமணத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் சம உரிமை இருக்கின்றது. ஆரியரின் 8 வகைத் திருமண முறைகளில் ஒன்றில்கூட பெண் ஓர் உயிருள்ள பொருளாகக்கூட மதிக்கப்படுவதில்லை.

நாம் எதற்காகப் பார்ப்பானை அழைக்கவேண்டும்? முதலாவதாக, பார்ப்பான் நம்மவனும் அல்லன். இரண்டாவது, நம்மைப் பின்பற்றுபவனும் அல்லன். மூன்றாவது, நம்மை இழிசாதி, தாழ்ந்த சாதியாக்கி அவன் மேல்சாதி என்று கூறிக்கொள்ளுபவன்.

நமக்கும் அவனுக்கும் எவ்வகையில் சம்பந்தம் உண்டு? புராணப்படி நடப்பது வைதிகம். நாம் புராணப்படியும், வேதப்படியும் சூத்திரன்—இழிசாதி மகன். நாம் எதற்காகப் புராணப்படியோ வேதப்படியோ நடத்த பார்ப்பானை அழைக்கவேண்டும்?

பார்ப்பானுக்கு நம்மைவிட அதிகமான யோக்கியதை இருக்கிறது என்று கருதித்தானே அழைக்கிறோம்? பார்ப்பான் மேல்சாதிக்காரன் என்று நினைத்துக்கொண்டு, அவன் வந்து நடத்திக்கொடுத்தால் நல்லது, பெருமை என்று நினைத்துத்தானே கூப்பிடு கிறோம்? இது காரணமாகத்தான்—அதாவது, பார்ப்பானை உயர்ந்த சாதிக்காரன் என்பதாக நாமே ஒத்துக்கொண்டு, அவனைவிடத் தாழ்ந்தவர்களாக, கீழ்சாதிக்காரர்களாக நம்மை நாம் நினைத்துக்கொண்டு அதற்கேற்றபடி நாமே நடந்துகொள்வதால்—பார்ப்பான் தன்னுடைய உயர்சாதித் தன்மைக்கு நிரந்தரப் பாதுகாப்புத் தேடிக்கொள்வதோடு நம்மவரை இழிவுபடுத்தவும் முடிகிறது.

இன்று நாம் பார்ப்பானைவிட ஒன்றும் தாழ்ந்தவர்கள் அல்லர் என்கிறதான உணர்ச்சி நம்மவர்களில் பெரும்பாலோருக்கு இருந்துவருகிறது. இப்படி இருக்கிறபோது, உயர்ந்த சாதிக்காரன் என்கிற பார்ப்பானை இங்கே உள்ளே கொண்டுவந்து விட்டுக் கொள்வது என்பது என்ன நியாயம்?

கீழானவன்–மேலானவன் என்றிருப்பது நமக்கு அவமானம் என்று கருதி அதனை ஒழிக்கும் முறையில் வேலை செய்துவரும் நிலையில் அவனை எதற்கு அழைப்பது? பார்ப்பான் வந்தால், முதலாவது நாமே ஒதுங்கி நிற்போம்; மேலே பட்டால் அவனது பார்ப்பனத் தன்மை கெட்டுவிடும் என்று ஒதுங்கி நிற்போம். 'சாமி, சாமி' என்று கூப்பிடுவோம். அவன் வந்து என்ன செய்கிறான்? அரிசி, பருப்பு வாங்கிக்கொண்டு நெருப்பு (ஓமத் தீ) போட்டுக் கொளுத்துவான். எதிரே நெருப்பு எடுத்துக்கொண்டு யாராவது வந்தால் அவன் காரியத்திற்கு சகுனத் தடை என்பான். முதலில் வாழ்க்கை நடத்த ஆரம்பிக்கிற நேரத்தில் அந்த நெருப்பை எதற்குப் போடவேண்டும்? நெருப்புக் கொளுத்துவதால் என்ன பயன்? யாருக்கு நன்மை?

அடுத்து, வைதிகத் திருமணத்தில் பார்ப்பனர் கூறும் மந்திரம் என்ற பித்தலாட்ட வார்த்தையில் ஒன்று, பெண்ணானவள் இதுவரை தேவர்கள் யாவருக்கும் ரிஷிகளுக்கும் மற்றும் கின்னரர், கிம்புருடர் போன்றவர்களுக்கும் மனைவியாக இருந்து, இறுதியில் இம் மணமகனுக்கு மனைவியாக இருக்க இன்றுமுதல் ஒப்புக்கொள்வதாகிய வார்த்தை களைக் கூறுகிறாள். இவ்வித வார்த்தையைத் தமிழில் கூறினால் சும்மா விடுவோமா? அல்லது இதைக் கேட்கும் மணமகன் புரோகிதனை உயிருடன் விடுவாரா? இக் காலத்தில் ஒரு கைமாறிய பெண்ணையே (செகண்டு ஹாண்டு) விபச்சாரி என்று கூறும்பொழுது, கணக்கற்ற தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் வெங்காயங்களுக்கும் மனைவியாக இருந்தவளைத் தன் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக்கொள்வாரா? அவன் சொல்கிற மந்திரத்திற்கு என்ன அர்த்தம் என்று யாருக்குத் தெரியும்?

மணமகள் படித்த பெண்ணாக இருந்து—அவன் சொல்கிற மந்திரத்திற்கு அர்த்தம் தெரியுமானால் முறத்தால் விரட்டுவாள். மணமகள் சொல்லுவதாக அவனே சொல்லிக் கொள்கிறான். ‘நான் அவனுக்குப் பெண்டாட்டியாக இருந்தேன்; அக்கினிக்கும் பெண்டாட்டியாக இருந்தேன்; இப்போது உனக்குப் பெண்டாட்டியாகிறேன் என்று சொல்லுகிறேன். இன்னும் நீ அடித்தாலும் சரி; உதைத்தாலும் சரி; கஞ்சி ஊற்றினாலும் சரி; ஊற்றாவிட்டாலும் சரி; நீ எத்தனை தேவடியாள் வைத்துக்கொண்டாலும் சரி, உனக்கும் அவளுக்கும் நான் அடிமையாக இருக்கிறேன்’ என்று மணமகள் சொல்லுவதாகச் சொல்லுகிறான். அவள் (மணமகள்) சொல்லாவிட்டால் அதற்குப் பதில் அவனே சொல்கிறான். இது என்ன நியாயம்?

புராண முறைகள் சமுதாய ஒழுக்கத்தையே கெடுத்துவிட்டனவே! சாஸ்திரத்தில் எத்தனை பெண்டாட்டி, தேவடியாள் வைத்துக்கொண்டாலும் வைத்துக்கொள்ளலாம் என்று எழுதிவிட்டதால் ஆண்கள் இஷ்டப்படி செய்து சமுதாய ஒழுக்கம் கெட்டுவிட்டது. என்னடா இப்படி யென்றால், ‘விஷ்ணு, சிவன், சுப்பிரமணியன், கிருஷ்ணன் செய்யவில்லையா?’ என்று கேட்கிற தன்மையில் ஒழுக்கம் கெடாமல் என்ன செய்யும்?

‘ஒரு பார்ப்பானுக்கு—அவன் இஷ்டப்பட்ட ஒரு பெண் இசைந்தாளானால் அவள் கற்பு கெடாது’ என்று மனுதர்ம சாஸ்திரத்தில் உள்ளது. பெண்கள் தன் கணவன் கூறுகிற படி விபச்சார செய்கைகளுக்கும் ஈடுபட்டால், அவள் பதிவிரதை லிஸ்டில் சேர்க்கப்பட்டு மோட்சமடைகிறார்கள் என்பது சாஸ்திர புராணங்களின் கொள்கை.

இந்தப்படி பார்த்தால், ஆரியர்களுக்குக் கற்பு என்று ஒன்று இல்லை. ஒழுக்கத்தைப் பற்றிப் பார்த்தால் அதுவும் சிறிதுகூட இல்லை. இவர்களுடைய கதைகளைப் படிக்கும் போதே இது தெளிவாகத் தெரிகிறது.

அக் கதைகளில் நீங்கள் என்ன காண்பீர்கள்? ஒரு பெண் பதிவிரதையாக இருக் கிறாள். ஒருத்தி பதிவிரதையாக இருப்பதைக் கெடுப்பதற்கு பிர்மா, விஷ்ணு, சிவன் இந்த மூன்று கடவுள்களும் போகிறார்கள். இப்படிக் கதை எழுதியிருக்கிறானே!

நாரதன் என்ன செய்கிறான். ஒரு நாள் இரும்புக் கடலையைக் கொண்டுபோய் இந்த மூன்று கடவுளுடைய பெண்டாட்டிகளிடம் கொடுத்து, ‘இதை வறுத்துக்கொடு’ என்கிறான். பார்வதி, இலட்சுமி, சரசுவதி இந்த மூன்று பேர்களிடமும் கொடுத்து வறுத்துக்கொடுக்கச் சொல்கிறான். அவர்கள், ‘என்ன நாரதரே! குறும்பு செய்கிறாய்; இரும்புக் கடலையை வறுப்பதாவது—போ, போ’ என்று கூறிவிட்டார்கள். ‘இரும்புக் கடலையை வறுக்க முடியாதா, பார்—நான் வறுத்து வாங்கிக்கொண்டு வருகிறேன்’—என்று சொல்லிவிட்டு நாரதன் பூலோகத்திற்கு வருகிறான். அனுசூயா என்கிற பெண்ணிடம் தந்து, ‘எனக்கு இதை வறுத்துக் கொடு’ என்கிறான். அவள் பதிவிரதை; அவள் வறுத்துத் தருகிறாள்! இரும்புக்கடலை பொரிந்து, தின்பதற்கு நன்றாக இருக்கிறது. அதை நாரதன் கொண்டு

வந்து இந்த மூன்று கடவுள் பெண்டாட்டிகளிடமும் கொடுத்து, 'இதோ, பார் வறுத்துக் கொண்டு வந்துவிட்டேன்' என்று அவர்களிடம் தருகிறான். அவர்கள் வாயில் போட்டுப் பார்க்கிறார்கள். பொரபொரவென்று கடலை நன்றாக இருக்கிறது. 'நாங்கள் கடவுள் பெண்டாட்டிகள். எங்களால் வறுக்க முடியாததை யார் வறுத்தான்? எப்படி வறுத்தான்?' என்கிறார்கள். அதற்கு நாரதன் 'பூலோகத்தில் ஒருத்தி இருக்கிறாள். அவள் பதிவிரதை. அவள் வறுத்துக்கொடுத்தாள்' என்கிறான்.

'அவள் பதிவிரதையானால் நாங்கள்.......?' உடனே அவர்களுக்குக் கோபம் வந்து விடுகிறது. 'அவள் பதிவிரதை என்றால் எங்கள் சங்கதி என்ன ஆகிறது? வரட்டும் எங்கள் கணவன்மார்கள்' என்கிறார்கள்.

சிவன், விஷ்ணு, பிர்மா மூன்றுபேரும் தங்கள் பெண்டாட்டிகளிடம் வருகிறார்கள். அவர்களின் பெண்டாட்டிகள் முகத்தைத் திருப்பிக்கொண்டு பேசவில்லை. என்ன விஷயம் என்கிறார்கள். நடந்ததைச் சொல்லி, 'இப்படி ஒருத்தி மாத்திரம் பூலோகத்தில் பதிவிரதையாக இருக்கிறாள் என்றால் நாங்கள் உங்கள் பெண்டாட்டிகளாக இருந்து என்ன பலன்? எங்களுக்கு வெட்கமாக இருக்கிறது' என்கிறார்கள்.

'என்னடி! அவள் பதிவிரதையாக இருக்கிறாள் என்றால் அதற்கு எங்களை என்ன பண்ணச்சொல்கிறீர்கள்?' எனக் கேட்க, அதற்கு, 'என்ன பண்ணச் சொல்கிறேன் என்று கேட்கிறீர்களா? போங்கள்! போய் அவளைக் கெடுத்துவிட்டு வாருங்கள்' என்கிறார்கள்.

அவர்கள் மூன்றுபேரும் இவளைக் (அனுசூயா) கெடுக்க வருகின்றார்கள். மூன்று பேரும் சந்நியாசி போல வந்து பிச்சை கேட்கிறார்கள். அவள் பிச்சை போட வருகிறாள். 'அம்மா, நாங்கள் ஒரு பூசை முடிக்கணும்; அதை முடித்துவிட்டுத்தான் சாப்பிடவேண்டும்' என்கிறார்கள். 'பூசை என்றால் என்ன வேண்டும்? தேங்காய் வேண்டுமா? பழம் வேண்டுமா?' என்கிறாள். 'அதெல்லாம் வேண்டாம், நீ துணியை அவிழ்த்துப் போட்டு விட்டு வரவேண்டும்' என்கிறார்கள்.

அவள் பார்க்கிறாள். சரி என்று மூன்றுபேரையும் குழந்தைகளாக ஆக்கி, பால் கொடுத்து, தொட்டிலில் போட்டுத் தூங்க வைக்கிறாள். இந்த மூன்றுபேர்களும் இல்லாததால் உலகத்தில் ஒரு வேலையும் நடக்கவில்லையாம். அதாவது, சிருஷ்டி, காப்பு, அழித்தல் ஆகிய மூன்று தொழில்களும் நடவாமல் நின்றுவிட்டதாம். எல்லோரும் பிறகு வந்து அந்த அம்மாள் காலில் விழுந்து கேட்டு அந்த மூன்று குழந்தைகளையும் திரும்பவும் கடவுள்களாக்கி அழைத்துக்கொண்டு போகிறார்கள்.

இப்படியாக ஒருபெண் பதிவிரதையாக இருந்ததைக் கெடுக்க மூன்று கடவுள்களும் வந்து இருக்கின்றனர். இப்படி ஒழுக்கத்திற்கு இடமில்லாக் கடவுள்தன்மை, பெண்களை இழிவுபடுத்தும் சாஸ்திரம், அப்பனுக்கே—ஏன் மனிதனுக்கே பிறக்காத ரிஷிகள், வெங்காயங்கள் சொன்னபடி நடக்காவிட்டால் அந்தக் கலியாணம் செல்லாது என்று பார்ப்பான் சொல்கிறானே?

புராணங்களில் வரும் பதிவிரதைகள் அத்தனைபேரும் கணவனின் சொல் கேட்டு நடந்தவர்கள்தாம். ஒரு பதிவிரதைகூட தன் கணவனை எதிர்த்துக் கேட்டிருக்கமாட்டாள். தன் கணவன் தன்னை நடத்துவது காட்டுமிராண்டித் தனமும் அறிவுக்குப் பொருத்த மற்றதும் ஆக இருக்கிறதே என்று சிந்தித்துக்கூடப் பார்த்திருக்க மாட்டாள். கணவனின் ஆசையைப் பூர்த்திசெய்யவே நாம் வந்திருக்கிறோம் என்ற ஒரே நோக்கத்தின்மீது, கணவனின் மனம் கோணாமல் அவன் சொல்வதை எல்லாம் செய்திருக்கிறார்கள். அவர்களுக்குத்தான் பதிவிரதைகள் என்ற பெயர்கள் இடப்பட்டன.

இப்படிப்பட்ட பதிவிரதைகள்தாம் சீதை, திரவுபதி, சந்திரமதி போன்றவர்கள்.

சீதை கர்ப்பமாக இருக்கிறாள் என்று இராமன் தெரிந்ததும் அவளைக் காட்டிற்கு ஓட்டி விட்டான். சீதையும் மறுத்துப் பேசாமல் காட்டிற்குச் சென்றாள். அவளிடம் அடிக்கடி சந்தேகப்பட்டு அவளைச் சத்தியம் செய்யச்சொல்கிறான். 'நெருப்பில் இறங்கு' என்று கூறினதாக ஒரு இராமாயணத்திலும் கூறப்படுகிறது. அவள் அதன்படி செய்த பின்புதான் அவன் சந்தேகம் தீருகிறதாம். அப்படி இருந்தும் அவளைக் கர்ப்பத்தோடு காட்டுக்கு அனுப்பிவிடுகிறான்.

அடுத்து, மகாபாரதத்தில் வருகிற திரவுபதி என்கிற பெண்ணை மணந்த அர்ச்சுனன் அவளைப் படாதபாடு படுத்துகிறான். அவளைத் தனக்கு மனைவியாக அமைத்துக் கொண்டது மட்டுமின்றித் தன்னுடன் பிறந்த மற்ற நான்கு பேர்களுக்கும் மனைவியாக இருக்கவேண்டும் என்று அவளை—'கோவாப்ரேடிவ் லிமிடெட் கம்பெனி சொஸைட்டி'யைப் போல்—அனுபவிக்கின்றனர்.

இதற்குத் திரவுபதி மறுத்துக் கூறவே இல்லை. அவளும் அப்படியே கணவன் சொன்னபடியே மொத்தம் அய்ந்து பேர்களுக்கும் 'டைம் டேபிள்' குறித்துக்கொண்டு, அதன்படி அய்ந்து பேர்களையும் அனுபவித்துவருகிறாள். அப்படிக் கணவன் சொல்லைக் கேட்டதால் அவள் பதிவிரதை நம்பர் 2..... என்று ஆக்கப்பட்டாள்.

எனவே, இதன் கருத்து என்னவென்றால், ஒருவன் மணந்த மனைவியைக் கணவன் மனது வைத்தால் பல பேர்களுக்கும் இசையும்படி செய்யலாம். அதை மனைவி மறுத்துக் கேட்கக்கூடாது. மற்றும் அவளைச் சூதாட்டத்தில் பந்தயப் பொருளாக வைத்து விளையாடினார்கள். தோற்றுப்போனவுடன் ஜெயித்தவன் பின்னால் அவள் போகும்படி ஆனது. அதற்கு அவள், 'நான் உனக்கு மனைவியாக வந்தேனே தவிர, சூதாட்டத்தில் பந்தயப் பொருளாக வைத்து விளையாடுவதற்கு வரவில்லை' யென்று கேட்கவே இல்லை. கணவன் சொன்னவுடன், ஜெயித்தவன் பின்னால் சென்றுவிட்டாள். அதன் பொருள் மனைவியைப் பந்தயப் பொருளாக உபயோகிக்கலாம் என்பது.

சந்திரமதியை, அரிச்சந்திரன் தான் பட்ட கடனைக் கொடுப்பதற்காக ஒருவனிடம் விற்றுப் பொருள் வாங்குகிறான். அரிச்சந்திர புராணம் என்ன கருத்தைக் கூறுகிற தென்றால், ஒருவன் தன்னுடைய கடனைத் தீர்க்க தன் மனைவியை விலை கூறி விற்று விடலாம் என்பது தான். சந்திரமதி தன் கணவன் தன்னை விலை கூறும்போது, 'நான் உனக்கு மனைவியே தவிர கடனைத் தீர்க்க விற்கக் கூடிய பொருளாக நான் உனக்கு என் பெற்றோர்களால் கொடுக்கப்படவில்லை' என்று கேட்கவில்லை. அரிச்சந்திரன் சொன்ன வுடன்விலைக்கு வாங்கியவன் பின்னால் சென்றுவிட்டாள்.

மேலும், இயற்பகை நாயனார் என்ற அடிமுட்டாள் ஒருவன், தான் மோட்சமடை வதற்காகத் தன் மனைவியை ஒரு பார்ப்பானுக்குக் கூட்டிக்கொடுத்தானாம். அவளும் சம்மதப்பட்டு பார்ப்பானுடன் போயிருக்கிறாள்.

ஆனால், அவள் மறுத்துக் கேட்கவில்லை. அவளைப் பெற்ற பெற்றோர்கள் மறுத்துக் கூறவும் அப் பெற்றோர்களைக் கணவன் வெட்டி வீழ்த்தினானாம். உடனே பார்ப்பானுக்கென்று இவன் செய்த தீரச்செயல்களைக் கேள்வியுற்ற பரமசிவன், பார்வதி சமேதரராய்க் காளைமாட்டின்மீது மெயில் வேகமாக வந்து காட்சிகொடுத்து, சொர்க்கத் திற்குப் பாதை காண்பித்துச் சென்றாராம். இக் கதைகளையெல்லாம் நான் நம்புவதில்லை யென்றாலும் எவ்வளவு முட்டாள்தனமாகப் பார்ப்பனர்கள் எழுதிவைத்திருக்கிறார்கள் என்பதைச் சிந்திக்கவேண்டும். தான் மோட்சமடைவதற்காகத் தன் மனைவியை மற்ற வனுக்குக் கூட்டிக்கொடுக்கலாம் என்பதற்காக இக் கதை கூறப்படுகிறது.

தாரை என்பவள் ஒரு பத்தினி. தன் கணவனிடத்தில் படிக்கவந்த மாணவனிடத்தில் இவள் சோரம் போனாள். இதனால் உண்டான கர்ப்பத்திற்கு, 'நான்தான் தகப்பன்,

நீ தகப்பன் அல்லன்' என்று சண்டை போடுகிறார்கள். இதற்குப் பரமசிவன் தீர்ப்புக் கூறியிருக்கிறான். பதிவிரதத் தன்மை எப்படி?

அதுபோலவே, அகலிகை ஒரு பத்தினி. இவள் கணவன் கவுதம முனிவர் என்கிற ஒரு ரிஷி. இந்திரன் பெரிய பணக்காரன்; நல்ல அழகன் என்று அறிந்து அவன்மேல் காதல் கொண்டாள். இந்திரனும் இவள் நல்ல பேரழகி என்று கேள்விப்பட்டு இவள்மேல் ஆசைகொண்டான்; முனிவர் இல்லாத சமயம் வந்தான். பின்பு அகலிகை கர்ப்பம் தரித்திருப்பதை அறிந்து, இதற்கு மூலகாரணம் தெரிந்துகொண்டு முனிவர் சாபம் கொடுத்தார். இவ்வளவு ஆதாரத்துடன் அவர்களே எழுதி வைத்திருக்கிறார்கள். இவர்கள் எல்லோரையும் பத்தினிப் பட்டியலில் சேர்த்து இருக்கிறார்கள்! ஆரியப் பெண்களை பத்தினிப் பட்டியலில் இவ்வளவு சுலபமாகச் சேர்த்துவிட்டிருக்கிறார்கள்.

அதுபோலவே, கபீர்தாசரின் கதையிலும் அவர் தன் மனைவியைப் பிறனுக்கு அடமானப் பொருளாக வைக்க அதற்கு அந்த அம்மாள் உடன்பட்டதுதான் அந்த அம்மாளுக்குப் பெருமை.

நடுக்காட்டில் சேலையை உருவிக்கொண்டு ஓடிவிட்ட புருஷனாய் இருந்தாலும் அவனைத் தெய்வமாகக் கும்பிட்டாளாம் தமயந்தி.

பாரதக் கதையில், 'பெண்கள் பாப ஜென்மங்கள்; அவர்களுக்கு ஒழுக்கம் என்பது கிடையாது; பாதுகாக்கும் அளவுக்குத்தான் அவர்களிடம் ஒழுக்கத்தை எதிர்பார்க்க முடியும்' என்று எழுதியிருக்கிறான். இப்படி இன்னும் எவ்வளவோ இருக்கின்றன.

ஆனால், இம்முறையானது பார்ப்பனர்களுக்கு ஆபாசத்தை விளைவிப்பதாகத் தென்படவில்லை. அவர்களுடைய பழக்க வழக்கப்படி, இதைப்போன்று பெண்கள் பல பேர்களை மணப்பதும், விபச்சாரத்தனம் செய்வதும், அவர்களுடைய சாதி வழக்கமாக அமைந்துவிட்டது. அதை வெளிப்படுத்துவதற்காகத்தான் பார்ப்பனர்கள் எழுதிய பதிவிரதைகளின் ஒழுக்க முறைகள் விளக்கப்படுகின்றன.

பார்ப்பனர்களுக்கு மான ஈனமும், தன்மானமும், பகுத்தறிவும் இல்லாத காரணத்தால் ஒருவன் கட்டியவளைப் பல பேர்கள் அனுபவிக்கலாம்; மற்றவனுக்குக் கூட்டிக் கொடுக்கலாம் என்ற முறையை அவர்கள் கடைப்பிடித்திருக்கலாம். அம் முறையைத் தமிழ் மக்களிடம் புகுத்தி நம்மையும் முட்டாள்களாக்கிவிட்டனர். அதை உணராத முட்டாள் களும் பார்ப்பனன் கூறியவைகளைச் சிந்திக்க முடியாத பாமர மக்கள் என்பவர்களும் படிப்பறிவில்லாதவர்களுந்தாம் பார்ப்பனப் புரட்டுகளை அறியமுடியாதுபோய் பார்ப்பனன் கூறியவைகளை நம்புகிறார்கள் என்றால்—படித்தவன், பட்டம் பெற்றவன், அறிவாளி, மேனாட்டுப் படிப்புப் படித்தவன் என்பவர்கள் எல்லாம் நம்பிவிடுகின்றனரே!

மதம், சாதி, உட்பிரிவு, பழக்க வழக்கம் இந்த நான்கின் அடிப்படையில்தான் நம்முடைய சமூகம் இருக்கிறது. சாதி இந்துக்கள் (Caste Hindus), சாதி இல்லாத இந்துக்கள் (Non-Caste Hindus), பஞ்சமர்கள் இந்த மூன்று பிரிவுகளும் இப்போது சட்ட மூலம் அமுலில் இருக்கின்றன. இவர்களில் சாதி இல்லாத இந்துக்கள், பஞ்சமர்கள் வீட்டுத் திருமணங்களுக்குப் பார்ப்பான் வரவேமாட்டான். இவ்வளவு பேதாபேதம் கொண்ட சட்டமும் சமூக அமைப்பும் இருக்கின்றன.

தமிழன் என்பவனுக்கு வருடம் கண்டுபிடிக்க சாதனம் கிடையாது. பார்ப்பான் 10 இலட்சம், 15 இலட்சம், 20 இலட்சம் வருடம் ஒரு யுகம் என்கிறான். நாளைக்கு ஒரு கதையை எழுதி இன்ன யுகத்தில் நடந்தது என்று எழுதி வைத்துவிடுவான். எனவே, வருடம் கண்டுபிடிக்கத் தமிழனுக்குச் சாதனமே இல்லை. இப்போது பிரபவ, விபவ என்று இருக்கிற 60 வருடங்களும் பார்ப்பான் வந்த பிறகு ஏற்பட்டவை. நான் பிரமாதி வருடம்

பிறந்தேன். எனக்கு இப்போது வயது 80. என்னைப் பார்க்கிறவர்கள் வேண்டுமானால்—இப்போது எண்பது வயதிருக்கும் என்பர். ஆகவே, இந்தப் பிரமாதிக்கு முதல் பிரமாதியில் பிறந்திருப்பேன் என்று கண்டுபிடிக்கலாம். அதல்லாமல், பிரமாதி வருடம் இன்ன மாதம் இன்ன தேதியில் பிறந்தேன் என்றால் அதை வைத்துக்கொண்டு எப்படிக் கண்டு பிடிக்க முடியும்? பிரமாதி என்றால்—இந்தப் பிரமாதியா, இதற்கு முந்திய பிரமாதியா? முந்திய எத்தனையாவது பிரமாதி என்பது எப்படித் தெரியும்? பிரமாதியில் பிறந்தவன் என்றால் அவன் 500 வருடத்திற்கு முன் இருந்தானா? ஆயிரம் வருடத்திற்கு முன் இருந்தானா? என்பதே கண்டுபிடிக்க முடியாது. ஆகவே, தமிழன் என்பவனுக்கு வருடமோ, சரித்திர ஆதாரமோ இல்லை. வருடமாவது பார்ப்பான் வருவதற்கு முன் இருந்ததா என்பது பிரச்சினையாகத்தான் இருக்கிறது. வருடங்களுக்குத் தமிழில் பெயர் இல்லை. எல்லாம் வடமொழியிற்தான் இருக்கிறது. எனவே, பார்ப்பான் வந்தபின் ஏற்பட்டதுதான் இந்த பிரபவ, விபவ என்னும் வருடங்கள். அதற்கு அவன் சொல்லும் காரணம், சொன்னால் சிரிக்கக்கூடியதாகவே இருக்கிறது.

['வாழ்க்கை ஒப்பந்தம்' என்ற நூலிலிருந்து]

## 14. வாழ்க்கைத் துணைநலம்

மணமக்கள் தாம் ஒருவரை ஒருவர் விரும்பித் தமது கூட்டு வாழ்க்கையைத் துவக்கிக் கொள்ள ஆசைகொண்டு, அதற்காக ஓர் ஒப்பந்தம் நிறைவேற்றிக் கொள்ளவும் அதை நமக்கு அறிவிக்கவும் முன்வருகிறார்கள்.

அதாவது, கூட்டு வியாபாரம் தொடங்கும் இரு நண்பர்கள் ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளவேண்டி இங்கு வீற்றுள்ளார்கள். வியாபாரம் தொடங்கியபிறகு ஒப்பந்தம் செய்து கொள்வது பெரும்பாலும் கூட்டாளிகளிடையே அதிருப்தி ஏற்படக் காரணமாய் இருப்பதால், இவர்கள் முன்கூட்டியே ஒப்பந்தத்தை நிறைவேற்றிக்கொள்ளுகிறார்கள். கூடிச் செயலாற்றுதல், கூடி வியாபாரம் செய்தல், கூடிப் பண்ணயம் வைத்தல் ஆகியவற்றிற்குக் கூட்டாளிகள் முன்னாடியே தமக்குள் ஒரு திட்டம் ஏற்படுத்திக்கொள்வது இயற்கையேயாகும்; அறிவுக்கும் பொருந்தியதேயாகும்; மிகவும் அவசியமாகும்.

அதுபோலவேதான், வாழ்க்கை நடத்துவதும் வியாபாரம் நடத்துவது போன்ற ஒரு செயல்தான். வியாபாரத்திற்கு முதலும் உழைப்பும் எப்படித் தேவையோ அதேபோன்று வாழ்க்கைக்கு ஒரு ஆணும் ஒரு பெண்ணும் அவர்களது இரண்டறக் கலந்த ஒப்புரவும் தேவையாய் இருக்கிறது.

இரு ஆண்கள் சேர்ந்தோ, இரு பெண்கள் சேர்ந்தோ ஒருபோதும் கூட்டுறவு வாழ்க்கை—குடும்ப வாழ்க்கை நடத்த முடியாது. இயற்கையும் அதற்கு இடம் கொடாது. இயற்கையாக ஒரு ஆணும் பெண்ணும் சேர்வது ஜீவ சுபாவத்தை ஒட்டியதுதான். எந்த ஜீவனும் தன் இனப்பெருக்கத்துக்காக ஆணும் பெண்ணுமாக இயற்கையால் தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. அவை ஒன்றோடொன்று ஒட்டித்தான் தீரும். உயிருள்ள பிராணிகள் மட்டுமல்ல—தாவரங்கள் கூடத்தான் ஒன்றுக்கொன்று ஒட்டித் தம் இனத்தை, தம் வர்க்கத்தை விருத்திசெய்கின்றன. விதையிலிருந்து முளை முளைக்கிறது; இலை விடுகிறது; செடியாகிறது; தழைக்கிறது; பூக்கிறது; பிஞ்சுவிடுகிறது; காயாகிறது; கனியாகிறது; மறுபடி செடியாகிறது. இப்படியாக இச்செடி தன் இனத்தைப் பெருக்கி வருகிறது. உலகில் காணப்படும் சகல உயிருள்ள, உயிரல்லாத தாவர வர்க்கத்துக்கும் பொதுச் சுபாவம் இனப் பெருக்கம்தான்.

மனிதனும் அப்படித்தான். மனிதன் குழந்தையாகப் பிறக்கிறான்; வளர்கிறான்; பக்குவத்தில் அதுபோன்ற பெண்ணைக் கூடுகிறான். கூடிய தன்மையின் பயனாகவே ஒரு குழந்தை தோன்றுகிறது; அந்தக் குழந்தை மறுபடியும் வளர்ந்து அதுபோலவே தோற்றமளிக்கிறது. இது ஜீவ சுபாவம். இதன் தத்துவம் தன் இனத்தைப் பெருக்குவது தான். இந்தப்படி மனித வர்க்கம் இனப்பெருக்கம் செய்து வருகிறது. மிருகங்களும் அப்படித்தான். குட்டி பிறக்கிறது; வளர்கிறது; கூடுகிறது; குட்டி போடுகிறது; அது வளர்ந்து மறுபடியும் இனப்பெருக்கம் செய்கிறது. பட்சிகளும் அப்படித்தான். முட்டையிலிருந்து குஞ்சு வெளியாகிறது; அது வளர்கிறது; பிறகு கூடுகட்டுகிறது; முட்டை இடுகிறது; அடை காக்கிறது; குஞ்சு பொரிக்கிறது. அந்தக் குஞ்சு தொடர்ந்து இனப் பெருக்கம் செய்கிறது. இக்கூடுதல் செடிகளில்கூடக் காணப்படுவதாகக் கூறப்படுகிறது. ஒரு பூவிலுள்ள ஆணின் தன்மை பொருந்திய மகரந்தத் தூள்கள், மற்றொரு பூவிலுள்ள பெண் தன்மை பொருந்திய மகரந்தப் பொடிகளோடு காற்றின் மூலமோ, வண்டுகளின் மூலமோ சேர்ந்தால்தான் காய் உண்டாவதாகக் கூறப்படுகிறது. எனவே, இந்த ஜீவசுபாவ தத்துவம் எல்லோருக்கும் புரிந்த ஒன்றுதான். இதில் புரியாததோ விளங்காததோ ஒன்றும் இல்லை.

இந்த ஜீவ சுபாவத்தின்படிக்கே எல்லா ஜீவராசிகளும் தம் இனத்தைப் பெருக்கிக் கொண்டுதான் வாழ்கின்றன. என்றாலும், மனிதனுக்கும் மற்ற ஜீவராசிகளுக்கும் கொஞ்சம் பேதம் காணப்படுகிறது. மற்ற ஜீவன்கள் பெரும்பாலும் கூட்டு வாழ்க்கை முறையின்படியே சந்தர்ப்பம் வாய்க்கும்போது—அவசியம் ஏற்பட்டபோது—கூடித் தம் இனத்தைப் பெருக்குகின்றன. மனிதன் பெரும்பாலும் கூட்டு வாழ்க்கை முறையின் மூலமே தன் இனத்தைப் பெருக்கவேண்டுபவனாக இருந்து வருகிறான். இதற்குக் காரணம் மற்ற ஜீவன்களுக்கு இல்லாத பகுத்தறிவு மனிதனுக்கு இருக்கின்றது என்பதுதான். எனவே, அவ்வறிவின்மூலம் மனிதன் தனக்கென்று சில கருத்துக்கள், சில கொள்கைகள், சில திட்டங்கள், சில முறைகள் வகுத்துக்கொண்டு அவற்றின்படிக்கே வாழ்கிறான். அவற்றின் மூலம் தனக்கென்று சில வசதிகள் செய்துகொள்கிறான். மனிதன் தான் தனது உணவைச் சமைத்துச் சாப்பிடுகிறான். மற்ற ஜீவராசிகள் யாவும் இயற்கையாகக் கிடைப்பனவற்றையே உண்டு வாழ்கின்றன. மனிதன்தான் நகைகள், ஆடைகள் போட்டுக்கொள்கிறான். மற்ற ஜீவராசிகள் அணிகளோ, ஆடைகளோ அணிந்துகொள்வதன்மூலம் அழகு, பெருமை ஏற்படுத்திக்கொள்வதில்லை; அவற்றை உண்டாக்கிக் கொள்ளவும் அவைகளால் முடியாது. அப்பகுத்தறிவு உள்ள காரணத்தால்தான், மனிதன் வீடு கட்டி வாழ்கிறான். அவ் வறிவுள்ள காரணத்தால்தான் கூட்டு வாழ்க்கை முறையையும் ஏற்படுத்திக்கொண்டிருக்கிறான். அப் பகுத்தறிவுள்ள காரணத்தால்தான், தன் சமுதாய கூட்டு வாழ்க்கைக்கென்று பல திட்டங்களை வகுத்துக்கொண்டு இருக்கிறான். அத்திட்டங்களை நிறைவேற்றத் தனி மனிதனால் முடியாது; அதற்கு மற்றவர் உதவி இருந்தே தீரவேண்டியிருக்கிறது. இதனாலும் கூட்டு வாழ்க்கையோடு கூடிய சமுதாய வாழ்க்கைமுறை அவசியமாகிறது. இனப் பெருக்கத்தை உத்தேசித்தும் சமுதாய வாழ்க்கை நலத்தை உத்தேசித்தும் கூட்டு வாழ்க்கைமுறை அவசியந்தான்.

வயது வந்த ஓர் ஆணும் ஒரு பெண்ணும் வாழ்க்கையில் பிரவேசிப்பதற்காகத் தங்களுக்குள் செய்துகொள்ளும் ஒப்பந்த வினையைத்தான் இன்று நாம் திருமணம் என்கிறோம். அந்த வினைகள் பலவிதமாகச் செய்யப்பட்டு வருகின்றன. அத்தனை விதங்களுக்கும் ஆதாரமோ, அவசியமோ என்ன என்பதற்கு யாராலும் காரணம் சொல்ல முடியாவிட்டாலும், ஏதோ பழக்கம் என்று சொல்லிக்கொண்டு தங்கள் கவுரவங்களையும் நினைத்துக்கொண்டு என்னமோ செய்துவருகிறார்கள். உலகில் மக்கள் வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் மாற்றம் ஏற்பட்டு வருவதுபோல், இத் திருமணம் என்கின்ற முறையிலும் காலதேச வர்த்தமானத்தைப் உத்தேசித்துப் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. மற்றும் பல துறை

களிலும் அநாதியான பழக்கவழக்கம் என்பவைகளில்கூட அறிவு விசாலத்தை முன்னிட்டும் மாற்றங்கள் ஏற்பட்டுவருகின்றன.

தமிழர்களுக்குத் திருமண முறை எது என்று ஆதாரம் சொல்லமுடியுமா? புலவர்களைக் கேட்டால் புராணத்தைக் காட்டுவார்கள். பரமசிவனுக்கும் பார்வதிக்கும் நடந்தது; இராமனுக்கும் சீதைக்கும் நடந்தது என்பார்கள். இந்தப் புராணங்கள் நமக்கு ஏது? எப்படி, எப்போது வந்தன?

இதெல்லாம் எப்படித் தமிழர் திருமண முறையாகும்? சரித்திர ஆதாரம் உண்டா? முதலாவது, தமிழனுக்கு நாளும் இல்லை; கோளும் இல்லை. இவற்றிற்கு அடியோடு ஆதாரமில்லை. காலை 4–30 மணிக்குத் திருமணம் என்பதும் பொருத்தமில்லாத சடங்கேயாகும். முகூர்த்தம், நட்சத்திரம், லக்கினம், எதுவும் தமிழ்ச் சொல் அல்ல. முதலில் தமிழனுக்கு வருஷமே இல்லை. 60 ஆண்டுகளும் தமிழ்ச் சொற்கள் அல்ல. அந்த வருஷங்கள் பிறப்பைப்பற்றிய கதையோ ஆபாசம்! ஆபாசம்! நாரதனுக்கும் கிருஷ்ணனுக்கும் சேர்ந்து பெற்ற பிள்ளைகளாம் அவைகள்! இப்படி பாகவதம் முதலியவைகள் சொல்லுகின்றன. கிறிஸ்தவனுக்கு வருஷக் கணக்கு இருக்கிறது; முஸ்லிம்களுக்கும் உண்டு. ஆனால், தமிழனுக்கு வருஷம் இல்லை. பார்ப்பானைக் கேட்டால் ஏதாவது புளுகுவான். அவன் தமிழர் வாழ்க்கையை நாசம் பண்ண இவைகளைப் புகுத்தி இருக்கிறான். தனது பிழைப்புக்கு வழிதேடிக் கொண்டிருக்கிறான். இவைகளை நாம் நம்புவதும் நம் அறியாமை—நம் மடமை எத்தனை டிகிரி இருக்கிறது என்பதைக் காட்டுகிறது.

இதுமாதிரித் திருமணங்களில், மற்றும் தமிழர் வாழ்க்கை நடப்புகளில் பழந்தமிழர் கொள்கை என்பதைப்பற்றிப் பேசக்கூடாதென்றும் அதைக் கொண்டுவந்து மேற்கோள் காட்டக் கூடாதென்றும் எனது தோழர்களைக் கேட்டுக்கொள்கிறேன். பழந்தமிழன் யார்? அவன் கொள்கை என்ன? அதற்கு ஆதாரம் என்ன? இன்று அவசியம் என்ன? என்பன போன்ற கேள்விகளுக்குப் பதில் சொல்ல இன்று ஆளைக் காணோம். வீணாக அந்தப் பேரில் பிழைக்கவோ, பெருமைப்படவோ, மக்களைச் சுரண்டவோ தங்கள் எண்ணத்திற்குப் பயன்படுத்திக்கொள்ளவோ பயன்படுகிறது. பழந்தமிழன் யாராயிருந்தால் எனக்கென்ன? உங்களுக்குத்தான்என்ன காரியமாகும்? அவன் கொள்கையோ, மதமோ, கடவுளோ, நடப்போ, சாதியோ எதுவாய் இருந்தால்தான் இங்கு இன்று நமக்கு என்ன இலாபம்? என்பதுதான் எனது கேள்வி.

இனிக் காதல் மணம் என்பதைப்பற்றிப் பேசுவோம். பழங்காலக் காதல் மணம் இன்று மிருகப்பிராய மணம் என்றே சொல்ல வேண்டும். காதல் என்பது மிகமிக சாதாரண அற்ப விஷயம். காதலுக்கு அடிமையாவது இன்றைய சமுதாய வாழ்க்கை முறைக்குச் சிறிதும் பொருந்தாது. கண்டதும் காதல்கொண்டு, காதல் பசி தீர்ந்ததும் சலிப்படைந்து, அதன் பயனைப் பிறகு வேதனையுடன் பொறுத்துக்கொண்டிருப்பது என்றால் அது இன்ப வாழ்க்கையாக இருக்கமுடியாது. உண்மையைப் பேசவேண்டுமானால், யாரைப் பார்த்தாலும் யாருக்குக் காதல் இல்லாமல் இருக்க முடியும்? சமுதாயக் கட்டுப்பாடுகள் பல இருப்பதால், காதல் கொள்வதும் ஏமாற்றம் அடைவதுமாக வாழ்வு முடிகிறதே ஒழிய வேறில்லை. காதலை அவரவர் உள்ளத்திற்கே விட்டுவிடுவோம். ஆனால், வாழ்க்கைத் துணை விஷயத்தில் காதல் போதாது. அறிவு, அன்புப் பொருத்தம், அனுபவம் ஆகிய பல காரியங்களே முக்கியமானவையாகும். பழங் காலத்தில் காதலே போதுமானதாக இருந்திருக்கலாம். அப்போதைய அறிவுக்கு அவ்வளவுதான் தேவையாக இருந்திருக்கும். இப்போதைய அறிவுத் திருமணம் வாழ்நாள் முழுவதும் பொருந்தும்படியாக இருக்க வேண்டும். மனித வாழ்வையும் பிறவிக் குணங்களையும் மேன்மைப்படுத்துவதாக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட இச்சையின் பெருக்கம்தான் பெரிதும் காதலின் முழு இடத்தையும் பெற்றுவிடுகிறது. மற்ற பல வாழ்க்கை வேறுபாடுகளுக்கு அந்த இச்சைப் பெருக்கம் இருவருக்கும்

போதவே போதாது. ஆகையால், அறிவையும் நிகழ்ச்சிப் பயனையும் அலட்சியப்படுத்தும் காதலை மனிதன் அடக்கி, வாழ்க்கைத் தன்மையைக் கொண்டு வாழ்க்கைத் துணையைப் பொருத்திக்கொள்ள வேண்டும் என்பதே எனது கருத்தாகும். ஆதலாலேயும் பழைய தமிழர் மண முறைகளுக்கோ ஆரியர் மண முறைகளுக்கோ இங்கு வேலை கிடையாது. அறிவு, அனுபவம், ஆராய்ச்சி ஆகியவற்றின்மீது ஏற்பட்ட மணமுறைகளுக்கே இங்கு வேலை உண்டு. அவை பழையதானாலும், புதியதானாலும், தமிழனுடையதானாலும், வேற்று நாட்டுக்காரனுடையதானாலும், அய்ரோப்பியனுடையதானாலும் இருந்துபோகட்டும். மண முறைக்குப் பழைமையைத் தேடித் திரிய வேண்டியதில்லை.

நான் ரஷ்யாவில் பார்த்தேன். திருமணம் என்ற முறையில் அமைப்பும், ஏற்பாடும் இல்லாமலேயே வாழமுடியும் என்பதை. இதற்குக் கட்டுப்பாடற்ற காதல் (Free Love) என்று பெயர். இந்த முறையும் அங்கு அமுலில் வைத்து இருக்கிறார்கள். இது எப்படி சாத்தியமாகிறது என்றால், அந் நாட்டு மக்கள் சோற்றைப்பற்றிக் கவலையில்லாமல் வாழ்கிறார்கள்; சுதந்திரமான வாழ்க்கை ஆண்-பெண் உறவிலும் நடத்துகிறார்கள். சொத்து, வாரிசு, உரிமை இருப்பதால்தான் நம்முடைய சமுதாயத்தில் கட்டுப்பாடு உள்ள குடும்ப முறை ஏற்படுத்த வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இதைத்தான் உயர்ந்த முறை என்று கூறி மதவாதிகள் வாழ்கிறார்கள். காதல் என்பதற்கும் கலியாணம் என்ற ஏற்பாட்டிற்கும் எந்தவிதத்திலும் சம்பந்தமில்லை. கலியாணம் செய்துகொண்ட பெண்ணிடம்தான் காதல் உணர்வு உண்டாகவேண்டும் என்ற இயற்கை நியதி இல்லை. தான் கலியாணம் செய்து கொள்ளாத பெண்ணிடம்கூட காதல் உணர்வு ஏற்பட்டுவிடலாம். இதை இயற்கையால் தடுத்துவிட முடியும்.

எந்தப் புலவரையாவது கேளுங்கள்! எப்படி அந்தக் காலத்தில் திருமணம் நடந்தது என்றால், நந்தவனத்தில் ஒரு ஆண் மகன் போவான். எதிர்த்தாற் போல் ஒரு பெண் வருவாள்; இரண்டு பேரும் பார்த்துக் கொள்வார்கள்—காதல் பொங்கியது; திருமணம் நடந்தது என்பார்கள். எங்கே இம்மாதிரி உண்மையில் நடக்கிறது? யாராவது தன் வீட்டுப் பெண்ணைப் பார்த்து, 'அம்மா நந்தவனத்திற்குப் போய்விட்டு வா' என்று அனுப்புவார்களா? கதவு கொஞ்சம் திறந்து இருந்தாலும், 'ஏன் அதிகமாகத் திறந்து வைத்து இருக்கிறது? உள்ளே வா' என்று சொல்லிவிட்டு வீட்டுக்குள் அடைத்து வைப்பார்களே தவிர, அம்மாதிரி அனுப்புவார்களா? இது எல்லாம் வெறும் கதைதான்.

அப்பாவும் அம்மாவும் பார்த்து ஒருவனுக்குக் கொடுத்து அடங்கி இருக்கவேண்டும்; அவ்வாறு இருந்தால் தான் கற்பு. அல்லாமல் பெண்ணும் பிள்ளையும் பார்த்துக் கொண்டால் உடனே களவு என்றாகிவிடும். நாம் இப்பொழுது செய்வது புதியதா அல்லது பழைய முறையா என்று கேட்கலாம்; அதை எப்படிச் சொல்ல முடியும்? அதாவது ஒரு முறை இருந்தால்தானே இதைப்பற்றிச் சொல்லலாம்? என்ன பெயர்?

இம்முறையில் எவை எவை தேவையோ அவை மட்டும் பின்பற்றப்படுகிறதே அன்றி தேவையற்றதும் அறிவுக்குப் பொருத்தமற்றதும் பின்பற்றப்படுவதில்லை. காரணம், இது வரை நடந்த திருமண முறைகள் எல்லாம் மாற்றமடையும் நிலை வந்துவிட்டது. பல்வேறு துறைகளில் உலகம் மாறுதல் அடைந்துகொண்டே போகிறது. அப்படி மாறுதல் அடையும் போது இந்த முறையிலும் மாற்றம் அடைந்து வருகிறது.

வைதிக முறைப்படி செய்யும் திருமண முறைகள் எல்லாம் நம் மக்களுடைய நாகரிகத்துக்கும் பண்புக்கும் பொருத்தமற்றவை என்பது தெரிந்தவுடன் அம்முறை நீக்கப் பட்டுவிட்டது. வைதிகம் என்ற சொல்லே வேதம் என்ற சொல்லினின்று வந்த வார்த்தை யாகும். சிவத்திலிருந்து சைவமும் விஷ்ணுவிலிருந்து வைஷ்ணவமும் வந்தது போல் வேதத்திலிருந்து வைதிகம் என்ற சொல் வந்தது.

வேதம் என்ற சொல் பார்ப்பனர்களால் புகுத்தப்பட்டதாகும். சரித்திரத்தில் கூட வேத காலம் என்று புதிதாக வந்ததைக் குறிப்பிடப்பட்டிருப்பதைப் பார்க்கின்றோம். வேதம் என்பது ஒரு காலத்தில் புதியதாக வந்ததாகும். அப்பொழுது மக்களிடையில் வேதம் என்பது மட்டும் புகுத்தப்பட்டதேயன்றி வேதம் என்றால் என்ன என்பது புகுத்தப் படவில்லை.

அன்றியும், அதை யாரும் அறிந்துகொள்ளாமல் இருப்பதற்கு அதற்குப் பல நிபந்தனைகளையும் உண்டாக்கினர். வேதத்தைப் படித்தால் நாக்கை அறுக்கவேண்டும்; கேட்டால் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும்; படித்து மனத்தில் பதியவைத்தால் நெஞ்சைப் பிளக்கவேண்டும் என்று பயம் காட்டி அதைப் பற்றி யாரும் அறிவதற்கே முடியாதபடி செய்துவிட்டனர்.

ஆனால், மக்கள் பின்பற்றுவதோ, எதையும் வைதிக முறைப்படி பின்பற்றுவது என்ற முறை வழக்கத்திலேயே வந்துவிட்டது. பிறர் மெச்சிக் கொள்வதற்காகிலும் எங்கள் வீட்டில் வைதிக முறைப்படிதான் செய்வது வழக்கம் என்று பெருமையாகப் பேசிக் கொள்ளுவதும் உண்டு. முன் கூறியபடி, வேதத்தின்படி நடப்பதாக வைதிகர் பெருமை யாகப் பேசிக் கொள்வதும் உண்டு. வேதம் என்ற சொல்லில் இருந்து வைதிகம் என்பது வந்தபோதிலும்—வேதத்தில் கூறப்படும் முறைக்கும், வைதிக முறைப்படி நடப்பதற்கும் சம்பந்தமே கிடையாது. முன்புதான் வேதத்தை ஆராயக்கூடாது என்று கூறி, வைதிக முறைப்படி என்று பலமுறைகள் ஏற்படுத்தி அதன்படி பின்பற்றிவந்தார்கள்.

ஆனால், இப்பொழுதோ வேதத்தை எல்லாம் அலசிப் பார்க்கும்போது அதன் யோக்கியதை என்னவென்று புரிந்துகொள்ளும் காலம். இப்பொழுது அதன் யோக்கியதை எல்லாம் வெளியாகிறது. ஆகவே, வேதத்துக்கும் வைதிக முறைக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது என்று தெரிகிறது. ஆனால், வைதிக முறைப்படி நடைபெறும் அத்தனையும், பார்ப்பனர்களின் கற்பனைக் கதைகளாகிய புராணங்கள் என்பவைகளை அடிப்படையாகக் கொண்டு இருக்கின்றன. புராணங்களில் எப்படிக் கடவுளுக்கும், கடவுளச்சிகளுக்கும் கலியாணம் ஆன முறைகள்தாம்—வைதிக முறைகள்தாம்—வைதிக முறையில் பின்பற்றப் படுகின்றன. புராணங்கள் அத்தனையும் பார்ப்பனக் கட்டுக் கதைகள். அவைகளில் காணப்படும் ஒன்றுகூட தமிழர்களின் நாகரிகத்திற்கோ பண்புக்கோ ஏற்றதில்லை.

பார்ப்பனர்களின் பழக்கம், வழக்கம், நாகரிகம் இவைகளைச் சித்திரிக்க எழுதப் பட்டவைகள் புராணங்கள் என்பவைகள். அவைகளில் காணப்படும் அனைத்தும் பார்ப் பனர்களின் வாழ்க்கைமுறைகளைக் குறிக்கின்றன. ஆனால், தமிழர்களுடைய நாகரிகத் திற்கும் பழக்க வழக்கங்களுக்கும் சம்பந்தமே இல்லாதவைகள். அப்படி இருக்க, புராணங் களில் கூறியபடி நம் மக்களைப் பின்பற்றும்படி செய்துவிட்டார்கள்.

இதற்குமுன் நம்மிடையே ஒரு ஆணும் ஒரு பெண்ணும் வாழ்க்கை நடத்த ஆரம்பிக் கும் ஒரு முறை இருந்திருக்கத்தான் வேண்டும். அப்பொழுது அந்நிகழ்ச்சிகளுக்கு ஏதாவது பெயர் இருந்திருக்க வேண்டும்.

புராணப்படி பார்ப்பனர்கள், சத்திரியர்கள், வைசியர்கள் என்ற இந்த மூன்று சாதி யார்கட்கு மட்டும்தான் கலியாணம் செய்துகொள்ள சாத்திரத்தில் இடம் இருக்கிறது. சூத்திரர்களுக்குத் திருமண முறை கிடையாது. நமக்குப் பார்ப்பான் வந்து கலியாணம் செய்துவைப்பது புரோகிதம் என்ற முறை ஆகும். புரோகிதம் என்றால், புராண முறைப்படி நடக்கும் திருமணம் ஆகும். மற்ற மூன்று சாதியார்களுக்கு நடப்பது வைதிக முறைப்படி நடக்கும் திருமணம் ஆகும். வைதிகம் என்றால் வேத முறைப்படி நடக்கும் திருமணம் ஆகும்.

சூத்திரர்கள் என்பவர்களுக்குத்தான் திருமண ஏற்பாடே கிடையாது. நீங்கள் சிந்திக்க வேண்டும். திருமண ஏற்பாடு இல்லை என்பது மாத்திரம் அல்ல, வேறு எந்த ஏற்பாடும் கிடையாது. சூத்திரனுக்குத் திருமணமே இல்லையென்றால்—வேறு எப்படி நடக்கிறது என்றால், நீங்கள் கவனித்து இருந்தால் தெரியும். சாதாரணமாகத் திவசம் முதலியவைகளைச் செய்யும்போதுகூட சூத்திரன் என்பவனை வேறு சாதியாக மாற்றித் தான் பார்ப்பான் காரியம் செய்கிறான். அதாவது, அவனுக்கு அந்தச் சமயத்தில் பூணூல் போட்டு அவனைச் சத்திரியனாகவோ, வைசியனாகவோ மாற்றித்தான் காரியங்கள் செய்கிறான். அதைத் தவிர, சூத்திரனுக்கு எந்தக் காரியமும் செய்யத் தனி ஏற்பாடு எதுவும் இல்லை. இன்று இருப்பது சூத்திர சாதி, பிராமண சாதி என்ற இரண்டு சாதிகள்தாம். சூத்திரர்களில்தான் பல பிரிவுகள்—முதலியார், நாயுடு இப்படியெல்லாம். இவர்களுக்குள் திருமணம் செய்துகொள்வதானது சாஸ்திர சம்பிரதாயப்படிகூடக் கலப்பு இல்லை.

'இந்து லா'வில் பிராமணன், சூத்திரன் என்ற பிரிவுகள் உண்டே தவிர நாயுடு, செட்டியார், படையாச்சி, பிள்ளை என்ற தனி வகைகள் இல்லை. ஆகையால், பார்ப் பனரைத் தவிர்த்து நாம் எல்லோரும் ஒரே சாதிதான். திராவிடர் என்று சொல்லலாம். மதப்படி, சாஸ்திரப்படி பார்த்தால் சூத்திரச் சாதிதான்.

மேல்சாதிக்காரனுக்குத்தான், அதாவது பார்ப்பானுக்குத்தான்—பூணூல்காரனுக்குத் தான் திருமணம் செய்துகொள்ள உரிமை உண்டே தவிர, சூத்திரனுக்கு உரிமை கிடையாது. அண்மையில் நடந்த, சிதம்பரம் செட்டியார்–ரங்கம்மாள் திருமணத் தீர்ப்பைப் பார்த்தாலே தெரியுமே!

திரு. சிதம்பரம் செட்டியார் தம் பிள்ளைகளுக்குச் சொத்துப் பிரிவினை சம்பந்தமாக ஒரு வழக்குப் போட்டார். அதில் அப்பீல் செய்த அவருடைய முதல் மனைவியின் மகனின் மனைவி (சிதம்பரத்தின் மருமகள்) சுயமரியாதைத் திருமணம் செல்லாது என்றும், எங்கள் சொத்தை இரண்டாகத்தான் பங்குபோட வேண்டுமென்றும், என் மாமன் மக்களுக்கு (ரெங்கம்மாள் குழந்தைகட்கு) இந்தச் சொத்தில் பங்கு கிடையாது; அவருக்குப் பிள்ளை இல்லை; அவர் கலியாணம் செல்லாது என்பதாகவும் குறிப்பிட்டார். அவருடைய இரண் டாம் மனைவியும் இறந்த பிறகு அவர் (திரு. சிதம்பரம் செட்டியாரே) நமது முறைப்படி செய்துகொண்ட தனது மூன்றாம் மனைவியின் இரண்டு மக்களுக்கும் பங்கு உண்டு என்று சொன்னார்.

அதற்கு நீதிபதி அவர்கள் சொன்னார்கள்: 'சூத்திரர்களுக்குக் கலியாணம் இல்லை'. பெண்டாட்டியும், வைப்பாட்டியும் ஒன்றுதான் என்றும் கலியாணம் செல்லாது என்றும், இதற்கு ஆதாரமாக நாரதர், பராசரர், யாக்ஞவல்கியர், மனு ஆகியோர் சொல்லி யிருக்கின்றார் என்பதாகவும் ஜட்ஜ்மெண்டிலேயே காட்டினார். அதற்கு வக்கீல், 'சடங்குகள் செய்தே திருமணம் செய்து இருக்கிறார்கள்' என்று சொன்னார். அதற்கு நீதிபதி அவர்கள், 'அந்தச் சடங்குகள் என்பது கலியாணச் சடங்குகள் அல்ல. கலியாணத்தை உடைக்கும் சடங்குகள் என்றுதான் சொல்லவேண்டும்; ஆகவே, திருமணம் செல்லாது' என்றார்.

இன்னொரு கேசிலே நீதிபதி சொல்லுகிறார்: 'திருமணத்திற்கு ஏதாவது சடங்குகள் இருந்தால் போதும் என்று'. இதிலேகூட எவ்வளவு முரண்பாடுகள்!

அதற்கு வக்கீல் அவர்கள், 'திருமணம் செல்லுமோ, செல்லாதோ அதைப்பற்றிக் கவலையில்லை; இவர்களுக்குச் சொத்துக்கு ஏதாவது வழி செய்யுங்கள்' என்று கெஞ்சிக் கேட்டார்.

அதற்கப்புறம் ஜட்ஜுக்குப் பரிதாபம் வந்தது. 'ஓஹோ; அப்படியா? இதற்கு வேண்டுமானால் வழி சொல்லுகிறேன்' என்று சொல்லி, 'சூத்திரர்களுக்கு மனைவிக்குப் பிறந்த பிள்ளைகளுக்கும், வைப்பாட்டிக்குப் பிறந்த பிள்ளைகளுக்கும் ஒரே மாதிரியான சொத்துரிமைதான். ஆகவே, சொத்தை நான்காகப் பிரித்து அதில் மூன்று பங்கு உங்களுக்கும் ஒரு பங்கு இன்னொரு மகனுக்கும் ஆகப் பிரித்துக் கொடுக்க வேண்டும்' என்பதாகத் தீர்ப்புச் சொல்லி இருக்கிறார். 'சூத்திரர்களுக்குத்தானே திருமண முறை கிடையாது என்கிறீர்கள்? நாங்கள் வைசியர்கள், எங்களுக்குத் திருமண முறை உண்டல்லவா?' என்று எதிரி கேட்டதற்கு, 'நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சூத்திரர்கள் என்பதாகத்தான் பிரிவி கவுன்சில் தீர்ப்பு இருக்கிறது' என்று ஜட்ஜ் எடுத்துக் காட்டி இருக்கிறார்.

சூத்திரர்களுக்குக் கலியாணம், சொத்து, திவசம் எதுவும் கிடையாது. கலியாணமோ, திவசமோ செய்வதானால் முதலில் புரோகிதன் நம்மைச் சூத்திரனிலிருந்து மாற்றுவதற்காகப் பூணூலைப்போட்டு வைசியனாக்கித்தான் பிறகு சடங்குகள் செய்வான்! சடங்குகள் முடிந்ததும், 'பூணூலைக் கழற்றி ஆற்றில் போட்டுவிடு' என்பான்.

சூத்திரனுக்குச் சொத்து என்பதாக ஒன்றும் கிடையாது. சூத்திரனுடைய சொத்தைப் பார்ப்பான் கொள்ளை அடிக்கலாம்; திருடலாம். அது குற்றம் ஆகாது. சூத்திரன் சொத்து வைத்திருப்பதுதான் குற்றமாகும். இது மனுநீதியில் உள்ளது! நமது இயக்கம் வலுத்துவிட்டதால் இதில் பார்ப்பனர் அடங்கிக் கிடக்கிறார்கள்; ஒன்றும் செய்ய முடியவில்லை. பார்ப்பானுக்குச் செல்வாக்கும், பலமும் இருந்தால் இப்பொழுதும் அந்தப் படிதான் செய்வான்.

எதற்காகப் பார்ப்பான் என்றும் சூத்திரன் என்றும் அவர்ணஸ்தர்கள் என்றும் பிரித்தார்கள் என்றால், இவர்கள் ஒற்றுமையாக இருந்தால் தங்களுக்கு ஆபத்து என்று கருதியே இப்படிப் பிரித்தார்கள். தமிழர்களுக்குள்ளாகவே நான் மேல்சாதி, நீ கீழ்சாதி என்று சண்டை போட்டுக்கொண்டால் தம்மிடம் சண்டைக்கு வரமாட்டான் என்பதாகக் கருதியே பார்ப்பான் இம் மாதிரி சூழ்ச்சி செய்து இருக்கிறான்.

மற்றபடி வைசியன் ஏது? சத்திரியன் ஏது? ஆசாரி பூணூல் போட்டுக் கொள்வதனாலேயே தன்னை மேல் சாதி என்று கருதிக்கொண்டு இருக்கிறான். அது போல்தான் பார்ப்பனர் முதலியவர்களும்.

ஆந்திராவில் உள்ள நாயக்கர்களுக்குப் பூணூல் உண்டு. எதற்காக? தன்னை மேலான சாதி என்று மற்றவர்கள் நினைப்பதற்காகத்தான்.

அதனால்தான், ஜஸ்டிஸ் கட்சியில் இருந்த ஆந்திரர்கள்கூடத் தங்களைத் திராவிடர் என்று சொல்லிக்கொள்ளமாட்டார்கள். ஏனென்றால், திராவிடன் என்றால் சூத்திரன் என்று எங்கு அவன் நினைத்துக் கொள்வானோ என்று கருதியே திராவிடன் என்பதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். சூத்திரன் என்றால் வைப்பாட்டி மக்களுக்கும் பணம் (பங்கு) கொடுக்கவேண்டும். மற்ற மேல்சாதியாரின் வைப்பாட்டி மக்களுக்குக் கீழ்சாதி மனைவி மக்களுக்குப் பங்கு சொத்து, பாத்தியம் கிடையாது.

நாம் திராவிடர்; நமது திருமணம் திராவிடர் திருமணம்தான். ஆனால், இந்த முறையில்தான் திராவிடன் பழங்காலத் திருமணம் நடந்ததென்றோ அல்லது இப்படியேதான் திராவிடர் எதிர்காலத்திலும் திருமணங்கள் நடத்தவேண்டும் என்றோ நான் முடிவுகட்டவில்லை. இது திராவிடர் திருமணம் என்றாலும் நான் இதை 1946ஆம் ஆண்டு (தற்கால நிலைக்கேற்ப) திருமணம் என்றும், இதுவே இன்று எல்லா உலக மக்கள் திருமணமாக இருக்கவேண்டும் என்றும் சொல்லுகிறேன். ஆனால், இது மாறாமல் இப்படியே

இருக்கவேண்டும் என்று நான் சொல்லுவதில்லை. 1946ஆம் வருடத்தியது என்று சொல்லுவதானால் 1950க்கும் இருக்கவேண்டும் என்பது கருத்தல்ல. இந்த மாற்றம் நம் சவுகரியத்தையும் அறிவையும் மனிதத் தன்மையையும் பொதுநலத்தையும் குறிக்கொண்ட மாற்றமாகும்.

இதனினும் மேலான நலனுக்கும் தெளிவுபட்ட அறிவுக்கும் ஏற்றபடி நாளைக்கோ 1956ஆம் வருடத்திலோ மாற்றம் ஏற்படலாம். அப்படி ஆகக் கூடாது என்று இந்த 1946ஆம் ஆண்டு திருமண முறை சொல்லாது. 1912ஆம் ஆண்டில் ஏற்பட்ட ஃபோர்டு மோட்டார் கார் முறை (அமைப்பு) 1946-ல் இல்லை. இன்று வேறு மாதிரியாகிவிட்டது. இதுவும் 1947-ல் இருக்காது. மாற்றம் அடைந்து தீரும். இந்த மாற்றம் எல்லாம் அறிவின் திறம், சவுகரியம் முதலியவற்றைப்பற்றியது. ஆனால், நமது திருமண முறையானது மாற்றம், அறிவு சவுகரியம் மாத்திரம் அல்லாமல், சமுதாய அமைப்பு, அரசியல் சட்டம், பொருளாதார உரிமை, சொத்து சுதந்திரம் ஆகியவைகளையும் அடிப்படையாகக் கொண்டதாதலால் அவற்றிற்கு ஏற்றவண்ணம் அது மாறுதல் அடைந்துதான் தீரும். திருமணம் தேவையா—ஒப்பந்தம் தேவையா என்பதுகூட சிந்தனைக்கு விருந்தாக ஆகிவிடலாம். ஆகவே, வரப்போகிற காலம் ஆராய்ச்சி-பகுத்தறிவு சர்வ துறையிலும் சம சுதந்தர வேட்கைக் காலமாக இருக்கும். ஆதலால், அதை இந்த மூடநம்பிக்கை பெரிதுமாயும், பகுத்தறிவு சிறிதுமாயும் இருக்கிற காலத்தில் கட்டுப்படுத்துவது பயன்படாது. மண முறைக்கும் பழமையைத் தேடித்திரிய வேண்டியதில்லை. இன்றுள்ள எந்த மனிதனுடைய அறிவும் அனேகமாய் பழமைக்கு இணைந்ததாய் இருக்காது. இருந்தாலும் நிலைமை தானாகச் சரிப்படுத்திவிடும். காலநிலைக்கும் சமுதாய நிலைக்கும் அறிவு முதிர்ச்சி நிலைக்கும் ஏற்றபடிதான் முறைகள் தானே வகுக்கப்பட வேண்டியவைகளேயொழிய—ஒரு காலத்து முறைகளே எக் காலத்துக்கும் என்றால் மனிதனுக்கு அறிவு வளர்ச்சி இல்லை என்பதுதான் பொருள். அந்தப்படி எந்த மனிதனும் தன் அனுபவத்தைச் சொல்ல முடியாது என்று கூறுவேன்.

இதில் பிரத்தியட்ச அனுபவத்திற்கும் அறிவிற்கும் மேற்பட்ட காரியம் எதையும் கலக்கக்கூடாது. கலக்குவதானால்—அதை எழுதி நெருப்பில் போட்டு அது பொசுங்காமல் இருக்கிறதா என்று பார்த்த பிறகே அறிவைக் கடக்கவேண்டும். இந்த நிலையில் ஏதோ சிலர் தாங்கள்தாம் அறிவாளிகள், மற்றவர்கள் அறிவிலிகள் என்பது கற்றறிந்த மூடர்கள் குணங்களேயாகும்.

புரோகிதன் எதற்கு? புரோகிதன் என்றால் என்ன என்பது முதலில் யோசிக்கத் தக்கதாகும். இன்று புரோகிதன் என்பவனுக்கு உள்ள இலட்சணம் எல்லாம் முதலில் அவன் பெரிய சாதிக்காரனாக இருக்கவேண்டும். அவனுடைய நடத்தை, தன்மை முதலியவைகளைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. பெரிதும் நமக்குத் தெரியாத மொழியில் அவனுக்குப் புரியாத சடங்குகளைச் செய்யச்சொல்லி, பணம் வசூலித்துக் கொண்டு போகின்றவனைத்தான் இன்று புரோகிதன் என்கிறோம். மற்றும், அவன் காலில் நாமும் மணமக்களும் விழுந்து கும்பிடுகிறோம்; இவற்றைத் தவிர, புரோகிதனுக்கு வேறு இலட்சணம் சொல்லுங்கள், பார்க்கலாம்; அல்லது வேறு பயனையாவது சொல்லுங்கள், பார்க்கலாம். இந்தப் புரோகிதன் நமக்கு எதற்கு என்று உங்களில் எத்தனை பேருக்குத் தெரியும்? அவன் நமது தமிழ் மக்கள் திருமணங்களில் எந்தக் காலத்தில் வந்து கலந்து கொண்டான் என்று உங்களுக்குள் யாருக்காவது தெரியுமா?

நாம் செய்த முதல் மாறுதல் நம் திருமணங்களில் புரோகிதமோ, பார்ப்பனனோ இல்லை என்பதாகும். ஒருவரை மேலான பிறவி, தாழ்ந்த பிறவி என்பதாக நாம் ஒப்புக் கொள்வதில்லை. அதற்காகப் பார்ப்பனத் துவேஷமோ, அவர்களிடத்தில் வெறுப்போ நாம் கொள்ளவில்லை. நாம் கீழான சாதி என்று ஒப்புக் கொள்வதற்கில்லை. அவ்வளவுதான்.

மேலும், கூட்டங்களில் நெய்விட்டு நெருப்பு உண்டாக்குவதுபோன்ற புரியாத சடங்கு களையும் செய்வதில்லை. இது நமக்கும் தெரியாத ஏதோ ஒரு பழக்கம். அது எப் பொழுது உண்டாயிற்று என்று நமக்குத் தெரியாது; அதைச் செய்கின்ற புரோகிதனுக்கும் தெரியாது. நாம் உஷ்ண நாட்டில் வாழ்வதால் குளிர் காய நெருப்பு அவசியம் இல்லை. சாப்பாட்டிற்குப் போட்டுக்கொள்ள வேண்டிய நெய்யை நெருப்பில் ஊற்றும் முட்டாள் தனத்தைப் பின்பற்ற வேண்டிய அவசியம் இல்லை என்கிற முடிவிற்கு வந்துவிட்டோம். அதுபோலவே, வேறு பல காரியங்களையும் வெறுக்கிறோம். ஏதோ காலத்திற்கு, உணர்ச் சிக்கு, பழக்கத்திற்கு அல்லாமல் இன்னும் இன்ன ஆதாரத்தோடு இன்ன காரியம் செய்யப் பட்டது என்பதாக ஒன்றும் வரவில்லை. புராணத்தில் வேண்டுமானால் அதுமாதிரி, இது மாதிரி சொல்லியிருக்கிறது என்று சொல்வானேதவிர ஆதாரம் என்று ஒன்றையும் காட்ட முடியாது.

திருமணத்தில் எதற்காகப் பார்ப்பானை அழைக்க வேண்டும்? திருமணத்திற்கும் பார்ப்பானுக்கும் என்ன சம்பந்தம்? உதாரணமாக வேண்டுமானால் சொல்லுவேன்: வீடு கட்டுகிறோம்; வீடு கட்ட வேண்டுமானால் கொத்துக்காரனை அழைக்கிறோம். அவனை மேல்சாதி என்பதற்காக அழைப்பதில்லை. கொத்துக்காரன் அருமையாக வீட்டைக் கட்டிக் கொடுக்கிறான். நாம் சுகமாக வாழ்வதற்கு வீடு கட்டுவதோடு சரி; அவன் வேலை முடிந்து விட்டது. பார்ப்பானைத் திருமணத்திற்கு அழைத்தால் என்ன செய்கிறான்? நம்மிடம் இருந்து பொருள்களை அபகரித்துக்கொண்டு போவதோடல்லாமல், நம்மைக் கீழ்மக்கள் என்றும் தாசி மகனென்றும் கூறி, பார்ப்பான்மட்டும்தான் உயர்சாதி என்றும் கூறி, நம்மை இழிவுபடுத்துகிறான்! அப்படி இருக்கப் பார்ப்பானை எதற்காக அழைக்கவேண்டும்?

பார்ப்பானை வைத்துத் திருமணம் செய்வதெல்லாம் ஒரு நூற்றாண்டுக்குள்தான் பரவிற்று என்றுதான் சொல்லவேண்டும். எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. 60, 65 ஆண்டுகளுக்கு முன் எங்கள் வீட்டுத் திருமணத்திற்கு வந்து 500 பேர்களுக்கு மேலாக மொய் (அன்பளிப்பு) எழுதினார்கள். அவர்களுக்குத் திருப்பி மொய் எழுதுவதற்கு என்னைத்தான் என் வீட்டிலே அனுப்புவார்கள். அதனால் பல திருமணங்களைப் பார்த்து இருக்கிறேன்.

அப்பொழுதெல்லாம் இப்படி எல்லோரும் பார்ப்பானைத் திருமணத்திற்கு அழைப்ப தில்லை. அப்படித் திருமண வீட்டிற்கு பார்ப்பான் வந்தால் பிச்சை வாங்குவதற்குத்தான் அங்கு வருவான். அதுவும் உள்ளேகூட அழைப்பது இல்லை. வெளியே ஒரு திண்ணை யில் வந்து உட்கார்ந்துவிட்டுப் போகும்போது ஆளுக்கு ஒரணா, இரண்டணா, பெரிய மனிதர்களாக இருந்தால் ஆளுக்கு 8 அணா, ஒரு ரூபாய் பிச்சையாய்க் கொடுப்பார்கள். அதை வாங்கிக்கொண்டு சென்றுவிடுவான். கலியாணம் செய்துவைக்கப் பரியாரி (நாவிதன்)தான் வருவான். அவன்தான் மணமக்களை ஆசிகூறி வாழ்த்திச் செல்வான்.

அப்பொழுதெல்லாம் மணப் பெண்ணுக்கு யார் தாலி கட்டியது என்றுகூட அந்தப் பெண்ணுக்குத் தெரியாது. மணப் பெண் வரும்போதே முகத்தை நன்றாக இழுத்து மூடிக் கொண்டேதான் வரும். இந்த நிலையில் எப்படித் தாலி கட்டுவது? அல்லது தாலி கட்டிய வர்கள் யார் என்று பெண்ணுக்கு எப்படித் தெரியமுடியும்? மாப்பிள்ளைக்கு அக்காளோ, தங்கையோ, அத்தையோதான் பெண்களுக்குத் தாலி கட்டுவார்கள். இந்த வழக்கம் எல்லாம் சாதாரணமானவர்களல்ல—பெரிய மனிதர்கள், ஊத்துக்குழி ஜமீன்தார், பட்டக் காரர் வீட்டிலேயெல்லாம்கூட இருந்து வருகிறது.

நாயக்கர் சாதியிலே யெல்லாம் சாத்தாணியைத்தான் புரோகிதம் சொல்ல அழைப் பார்கள். சாத்தாணி என்றால் பூணூல் சாத்தாதவன் என்று அர்த்தம். பின்னர்தான்—அதுவும் எங்களூரில் எங்கள் வீட்டிலேதான்—அதுவும் நாங்கள் சிறிது பணக்காரர் ஆனபின்

முதன்முதலாக சாத்தாணியையும் பார்ப்பானையும் சேர்த்து அழைக்க ஆரம்பித்தோம். அது எப்படியோ நாளடைவில் பார்ப்பானே நிரந்தரமாகப் புரோகிதம் செய்யும்படியான நிலையில் வந்துவிட்டது. சாத்தாணி தட்சிணை வாங்குபவனாகிவிட்டான்.

அப்படிப் பார்ப்பானை அழைப்பதால் என்ன விளைவு ஏற்படுகிறது? சுற்றி வளைத்துப் பார்த்தால் மிஞ்சுவது நாம் கீழ்சாதி என்பதுதான்.

ஆகவே, இதுபோன்ற நிலையை உடைப்பதுதான் எங்கள் வேலை. இதையெல்லாம் சொல்லிவிட்டால், பார்ப்பான் நா கூசாமல் நம்மைப் பார்த்து நாத்திகன் என்று கூறி விடுவான். நம் இன மடையர்கள் அதை நம்பிவிடுவார்கள்! நம் மக்களுக்கு இன உணர்ச்சியே இல்லாத காரணத்தால்தான் நாம் சமுதாயத்தில் இன்னும் மலக்குழியில் வாழ்கின்ற புழுக்களைப்போல் வாழ்கின்றோம்.

திருமணத்தில் எதற்காகக் கடவுளை அழைக்கவேண்டும்? திருமணத்திற்கும் கடவுளுக்கும் என்ன சம்பந்தம்? அவசியம்தான் என்ன? ஒட்டலுக்குப் போகும்போதும், கக்கூசுக்குப் போகின்றபோதும் கடவுளைக் கூப்பிடுகிறோமா? அங்கெல்லாம் கூப்பிடாத கடவுளைத் திருமணத்திற்கு எதற்காக அழைக்கவேண்டும்? இதைக் கேட்டால் உடனே நம்மை நாத்திகன் என்று சொல்லிவிடுவான். இது என்ன நியாயம்?

சடங்குகள் ஏற்படுத்தியதன் நோக்கம் எல்லாம் அவற்றால் சாதியை நிலைநாட்டவேயன்றி வேறல்ல; எதற்காகச் சடங்குகளைச் செய்யவேண்டும்? அதனால் என்ன பயன்? என்று கேட்டால், ஒன்றும் தெரியாது என்று சொல்லுவார்களேயொழிய, அதன் அவசியம் இன்னது என்று சொல்லமுடியாது. யாரைக் கேட்டாலும், 'இது எங்கள் சாதி வழக்கம்', 'அது அவர்கள் சாதி வழக்கம்' என்றுதான் சொல்லுகிறார்கள். அவரவர்கள் சாதியைப் பாதுகாக்கவே ஒவ்வொருவிதமான சடங்குகள் என்பதாக ஆக்கி, நிரந்தரமாக நம்மைப் பிரித்துவைக்கவே இந்தச் சடங்குமுறையை ஏற்படுத்தினார்கள்.

இன்று வன்னியர் சாதியை எடுத்துக் கொள்ளுங்களேன். அதிலேயும் எத்தனை பிரிவு தெரியுமா? திருமணங்களிலே பானையை அடுக்குவதும், 10 பானைகள் அடுக்குவதும், பந்தல் முட்டுகிறவரைக்கும் பானைகள் அடுக்குவதும், இப்படியாக இன்னும் பல வழக்கங்கள் உண்டு. இதில், 'நீ என்ன வன்னியர்?' என்று கேட்டால், 'பந்தல் முட்டு வன்னியர்' என்பார். அப்படி என்றால்—பந்தல் முட்டும்வரைக்கும் பானையை அடுக்கும் வழக்கமுடையவர் என்பதாகும். இந்த வழக்கம் எல்லாம் எங்கள் பக்கம்—பவானி பகுதியில்—கேட்டால் சொல்லுவார்கள். ஆகவே, சாதியைப் பாதுகாக்கவே இந்தச் சடங்குகளை ஏற்படுத்தினான். அப்படி இருக்க எதற்காக இந்தச் சடங்குகள் வேண்டும்? திருமணத்திற்கு மாலை மாற்றிக்கொண்டாலே போதுமானதாகுமே!

திருமணம் எதற்கென்று பார்த்தால்—ஒருவன் என்ன மதம், அவன் என்ன சாதி, என்கின்ற உட்பிரிவைக் காட்டிக்கொள்வதற்குத்தான் புகுத்தப்பட்டன. ஒரு மனிதன் கிறிஸ்தவனா, இந்துவா, முஸ்லிமா என்று திருமணம்போன்ற காரியங்களில் கண்டுபிடித்து விடலாம். இந்து மதத்தில் எடுத்துக்கொண்டால் பார்ப்பனர், சூத்திரருள்ளும் தேவாங்கர், படையாச்சி, பறையர், சக்கிலி இவர்கள் வேறு வேறு முறையில் சடங்குகளைச் செய்து திருமணங்களைச் செய்துகொள்ளுகிறார்கள். இப்படி வாழ்க்கைத் துறையில் பலவிதமாக, சாதிக்கொரு தினுசாகச் சடங்குகளைப் புகுத்திவிட்டார்கள். அருமைத் தோழர்களே! இந்தப் பழக்க வழக்கங்களையெல்லாம் நாம் கண்டிக்கிறோம்.

ஒவ்வொரு காரியத்திற்கும் பார்ப்பான் கட்டிவைத்திருக்கும் ஒவ்வொரு கட்டும் இப்போது உடைந்துவருகிறது. சாதகம் பார்க்கவில்லை; ஒரு கட்டு உடைந்தது. முகூர்த்தம் பார்க்கவில்லை; இன்னொரு கட்டு உடைந்தது. இராகுகாலத்தில் நடந்தது; இன்

னொரு கட்டு உடைந்தது. இப்படிப் படிப்படியாக பக்குவமான [Perfect] பகுத்தறிவுவாதியாக வரவேண்டும். இராகுகாலம், சாதகம் இதெல்லாம் பெருத்த தொல்லை.

எங்கள் அண்ணாவுக்கு இதில் ரொம்பவும் பைத்தியம்! எங்கள் குடும்ப சாதகத்தையே அச்சுப்போட்டு வைத்திருக்கிறார். அதில் எனக்கு 60 வயதுதான்! ஆனால் அதைத் தாண்டிவிட்டேன். அவர் சாதகம் என்ன ஆயிற்று? நானோ எனக்கு 42 வயதுதான் என்று நினைத்துக்கொண்டிருந்தவன். ஏன்? எனது சிநேகிதர்கள் 42 வயதுவுடன் செத்துப்போனார்கள். அதனால், எனக்கு 42 வயதுதான்—அதுவரைதான் இருப்பேன் என்று நினைத்துக்கொண்டு இருப்பேன். 42 வயது இருந்துவிட்டோம். இனிமேல் மிச்ச வயது எப்படியாவது போகிறது. 42 வயது முடிந்தவுடன் காங்கிரசில் சேர்ந்தேன். சாதகத்தில் எனக்கு 60 வயது என்று எழுதி வைத்திருந்தது—இன்று என்னவாயிற்று? இதையெல்லாம் எடுத்துச் சொல்ல வேறுயார் இருக்கிறார்கள்?

மாட்டு சாதகத்தையும் மனித சாதகத்தையும் சோதிடனிடம் காட்டினால், எது மாட்டு சாதகம், எது மனிதனின் சாதகம் என்று அவனுக்குச் சொல்லத்தெரியாது. அண்ணன் சாதகத்தையும் தங்கை சாதகத்தையும் புரிந்துகொள்ள முடியாது அவனால். இருவருக்கும் அவன் கலியாணப் பொருத்தம் சொல்லுவான். கடவுளாலேயே சொல்லமுடியாதே! கடவுள் சிலை முன்னால் சிவப்பு விபூதிப் பொட்டலம் கட்டிப்போட்டு எடுத்தால் மாறுதலாகத் தீர்ப்புக் கிடைக்கிறதே! நமக்குத் தன்மான உணர்ச்சி வேண்டும்.

சாத்திரம் பார்ப்பது, சகுனம் பார்ப்பது, பூ வைத்துக் கொள்ளக் கேட்பது—இவைகள் எவ்வளவு இழிவான தன்மை? பொருத்தம் என்றால் ஆண் பெண்ணைப் பார்க்கவேண்டும், பெண் தன்னைக் கட்டிக்கொள்ளப்போகும் ஆணைப் பார்க்கவேண்டும். ஒருவருடைய குணத்தை மற்றவர் புரிந்துகொள்ள வேண்டும். நாம் வண்டிக்கு ஒரு மாடு வாங்க வேண்டுமானால் இருக்கின்ற மாட்டுக்குப் பொருந்துமாறு எவ்வளவு கஷ்டப்பட்டு ஜோடி சேர்க்கிறோம்? சாதாரணமாக, நாய் குட்டிபோட வேண்டுமென்றால் நல்லரக நாயாகப் பார்த்துத்தானே சேர்க்கிறோம்? அதுபோலத்தானே குதிரையும்? ஆனால், மனிதனுக்கு ஜோடி சேர்ப்பதற்கு மாத்திரம் ஏன் அழுக்குப்பிடித்த பார்ப்பானிடம் போய்ப் பொருத்தம் கேட்கவேண்டும்? மருமகளின் குணம் மாமியாருக்குத் தெரியாது. கணவன் குணங்கள் மனைவிக்குத் தெரியாது. சாதகத்தைக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு, வீட்டைப் பார்த்துப் பரவாயில்லை என்று கூறி வந்துவிட்டால் திருமணம் தீர்ந்துபோயிற்றா?

திருமணம் செய்துகொள்பவனுக்குச் சாதகமே இருக்காது. சோதிடம் பார்ப்பவன் சாதகம் இல்லை என்றால், 'பரவாயில்லை' என்று கூறிவிட்டுக் 'கையை நீட்டு' என்பான். இப்படிக் கையை நீட்டி விரலைப் பார்த்துப் பொருத்தம் கண்டுபிடித்தால் என்ன அர்த்தம்? தாய் பெயரைச் சொல்லி பூ போட்டால், சாமி 'ஏண்டா தாய்ப் பெயரைச் சொல்லுகிறாய்?' என்று கூறி, பூவை எடுத்து எறிந்துவிடுமா? இல்லை அக்காள், தங்கை பெயரைச் சொன்னால், 'என்னை என்ன சோதித்துப் பார்க்கிறாயா?' என்று கூறி அடித்து விரட்டுமா! அந்த சாமி—கழுதை, நாய்க்குட்டிப் பெயரைச் சொன்னால்—இவை மிருகத்தின் பெயர் என்று கூறுமா? இப்படி இந்த 1958ஆம் ஆண்டிலுமா நாம் இத்தகைய பைத்தியக்காரர்கள் என்று காட்டிக்கொள்வது?

சகுனம் பார்ப்பது—எவ்வளவு காட்டுமிராண்டித்தனமாக வாழ்கிறார்கள்—எத்தனை டிகிரி முட்டாள் என்பதை அளக்கப் பார்ப்பான் வைத்துள்ள அளவுகோலேயாகும். முகூர்த்தம் பார்ப்பது—அஸ்திவாரமே இல்லாமல் ஆகாயத்திலே கட்டுகிற கோட்டைக்கு வாயிற்படி கிழக்கிலா, மேற்கிலா என்று அடித்துக்கொள்ளுவதாகும். காலை 4 மணிக்குத் திருமணம் என்பார்கள். அப்பொழுதுதான் நல்லநேரம் என்பார்கள். எந்த வேலைக்கும் சரியில்லாமல் ஒன்றுமே செய்யமுடியாமல் இடைஞ்சலான நேரத்தில் வைத்துக்கொண்டு

'நேரம், நேரம்' என்று பறக்கிறார்களே எவ்வளவு முட்டாள்தனம் இது! நல்ல இராகு காலத்தில் 3 மணிக்குக் கோர்ட்டிலே கேசுக்குக் கூப்பிட்டால் பேசாமல் இருந்துவிடுவீர்களா? 'எக்ஸ்-பார்ட்டி'யாகிவிடும்—உடனே ஓடுவார்கள்! நல்ல எமகண்டத்தில் இரயில் புறப்படுகிறது என்பதற்காக அதில் ஏறாமல் இருந்துவிடுவார்களா? உலகமெல்லாம் முன்னேறுகின்ற சமயத்தில் நம்முடைய சங்கதியைப் பார்த்தால் எவ்வளவு பிற்போக்கு? முற்காலத்தில் முன்னேறியிருந்தவர்கள் இந்தக் காலத்தில் இம் மாதிரி இருக்கலாமா? நம்மிடமே வாங்கிக்கொண்டு நம்மையே கீழ்மகனாக ஆக்கிவிட்டுப் போய்விடுகிறானே தவிர, 2 படி அரிசி வாங்கிக்கொண்டு போகிறான் என்பதற்காகவா பார்ப்பானை—எதிர்க்கிறோம்? அந்தக் காலத்திலே மோட்டார், ஆகாயவிமானம், இரயில் இல்லை. இப்பொழுது அவைகளையும் பயன்படுத்திக்கொள்கிறோம். நாம் இழிவுபடுத்தப்படுகிற சங்கதிகளை மட்டும் ஏற்றுக்கொண்டு முன்னேற மறுக்கிறோம்.

எல்லாத் துறைகளிலும்—எல்லோர்களுக்குள்ளும் மாற்ற உணர்ச்சி ஏற்பட்டால் ஒழிய நம் நாட்டைப்போன்ற, நம் சமுதாயத்தைப்போன்ற தாழ்த்தப்பட்ட, அடிமையாக்கப்பட்ட நாட்டுக்கும் சமுதாயத்திற்கும் விமோசனமில்லை.

பெண்கள், சமுதாயத்தில் சரி பகுதி எண்ணிக்கை கொண்டவர்கள். இரண்டொரு உறுப்பில் மாற்றமேயல்லாமல், மற்றபடி பெண்கள் மனித சமுதாயத்தில் ஆண்களுக்கு முழு ஒப்பும் உவமையும் கொண்டவர்கள் ஆவார்களென்பேன். நாமும் அவர்களை சிசு, குழந்தைப் பருவம் முதல் ஓடி ஆடி விளையாடும் பருவம் வரையில் கொஞ்சி முத்தங்கள் கொடுத்துப் பலவிதத்தும் பேத உணர்ச்சியற்று ஒன்றுபோலவே கருதி நடத்துகிறோம்; பழகுகிறோம். அப்படிப்பட்ட மனித ஜீவன்கள் அறிவும் பக்குவமும் அடைந்தவுடன் அவர்களைப்பற்றி இயற்கைக்கு மாறான கவலை கொண்டு, மனித சமுதாயத்தில் வேறாக்கி—கடைசியாக ஒரு பொம்மையாக்கிப் பயனற்ற ஜீவனாக மாத்திரம் அல்லாமல், அதைப் பெற்றோருக்கு ஒரு தொல்லையான பண்டமாக ஆக்கிக்கொண்டு, அவர்களது வாழ்வில் அவர்களை, அவர்களுக்கும் மற்றும் உள்ளவர்களுக்கும் கவலைப்படத்தக்க ஒரு சாதனமாகச் செய்துகொண்டு, அவர்களைக் காப்பாற்றவும், திருப்திப்படுத்தவும் பெருமையும் அடையச்செய்ய வேண்டியதான ஒரு அஃறிணைப் பொருளாகவே ஆக்கி வருகிறோம்.

பெண்களால் வீட்டிற்கு, சமுதாயத்திற்குப் பலன் என்ன என்று பாருங்கள்! எங்கு கெட்டபெயர் வந்துவிடுகின்றதோ என்பதுதானே? இன்று பெண்கள் வேலை என்ன? ஒரு ஆணுக்கு, ஒரு பெண்ணாக அமைவது. அது எதற்கு? ஆணின் நலத்திற்குப் பயன்படுவதற்கும், ஆணின் திருப்திக்கும், ஆணின் பெருமைக்கும் ஒரு கருவி என்பதல்லாமல் வேறு என்ன என்று சிந்தித்துப் பாருங்கள்.

ஒரு ஆணுக்கு ஒரு சமையல்காரி; ஒரு ஆணின் வீட்டுக்கு ஒரு காவல்காரி; ஒரு ஆணின் குடும்பப்பெருக்கிற்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை; ஒரு ஆணின் கண் அழகிற்கும் மனப் புளகாங்கிதத்திற்கும் ஓர் அழகிய அலங்கரிக்கப்பட்ட பொம்மை என்பதல்லாமல் பெண்கள் பெரிதும் எதற்குப் பயன்படுகிறார்கள், பயன்படுத்தப் படுகிறார்கள் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்!

இது என்ன நியாயம்? மனித சமுதாயம்தவிர மற்றபடி மிருகம், பட்சி, பூச்சி, ஜந்து முதலியவைகளில் வேறு எந்த ஜீவனாவது, 'ஆண்களுக்காகவே இருக்கிறோம் நாம்' என்ற கருத்துடன், நடத்தையுடன் இருக்கிறதா என்று பாருங்கள்!

இந்த இழிநிலையில் பெண்களுக்கு அவமானமாய்த் தோன்றவில்லை என்பதற்காகவே ஆண்கள், பெண்களை இவ்வளவு அட்டூழியமாக நடத்தலாமா என்று கேட்கிறேன். ஒரு ஆண் ஒரு பெண்ணைத் தனது சொத்து என்று எண்ணுகிறானே, எதனால்? துணி

யாலும் நகையாலும்தானே? பெரிதும் கம்பி இல்லாத் தந்தியும் ரேடியோவும் அணுகுண்டும் கண்டு பிடிக்கப்பட்ட இந்தக் காலத்திலும் பெண்கள் அலங்கார பொம்மைகளாக இருப்பதா என்று கேட்கிறேன்.

நான் சொல்வது இங்குள்ள பல ஆண்களுக்கும் ஏன், பெண்களுக்குங்கூட வெறுப்பாய், குறைவுமாய், சகிக்கமுடியாதபடியாய்த் தோன்றலாம் என்பது எனக்குத் தெரியும். இந்த வியாதி கடினமானது. தழை அடித்துப் பாடமந்திரம் போடுவதாலும், பூச்சுப் பூசிப் பற்றுப் போடுவதாலும் விலக்கக்கூடிய வியாதியல்ல இது. கூர்மையான ஆயுதத்தால் ஆழப்பட அறுத்துக்கிளறி காரம் (எரிச்சல் மருந்து) போட்டுப் போக்கடிக்க வேண்டிய வியாதி! அழுத்திப்பிடித்துக் கண்டித்து, அதட்டி அறுத்துத் தீர வேண்டியதாகும். நான் வெறும் அலங்காரப் பேச்சைத் தொண்டாகக் கொண்டவனல்லன். அவசியப்பட்ட வேலை நடக்கவேண்டும். என் ஆயுளும் இனி மிகமிகச் சொற்பம். இதையாவது செய்தாக வேண்டும். ஆதலால், கோபிக்காமல் ஆத்திரப்படாமல் சிந்தியுங்கள்.

நம் பெண்கள் உலகம் பெரிதும் மாற்றமடைய வேண்டும். நம் பெண்களைப்போல் பூமிக்குப் பாரமானவர்கள், மனிதனுக்குத் தொல்லையானவர்கள் நல்ல நாகரிகமான வேறு நாடுகளில் கிடையாது. இங்கு படித்தபெண், படியாதபெண் எல்லோரும் பொம்மைகளாகவே இருக்கிறார்கள். அவர்கள் பெற்றோர்களும் கணவன்மார்களும் அவர்களது (பெண்ணை) அழகிய பொம்மைத் தன்மையைக்கொண்டே திருப்தியடைகிறார்கள்; பெருமையடைகிறார்கள். பெண்களைத் திருப்திசெய்ய, அவர்களை நல்ல பெண்களாக ஆக்க விலையுயர்ந்த நகையும் துணியும் கொடுத்து அழகிய சிங்காரப் பொம்மைகளாக (பதுமைகளாக) ஆக்கிவிட்டால் போதும் என்று நினைக்கிறார்கள்.

பெண் பெருமை, வருணனை ஆகியவைகளில் பெண்கள் அங்கம், அவயவங்கள் சாயல் ஆகியவைகளைப்பற்றி அம்பதுவரி இருந்தால், அவர்களது அறிவு, அவர்களால் ஏற்படும்பயன், சக்தி, திறமை பற்றி ஒரு அய்ந்துவரி கூட இருக்காது. பெண்களின் உருவை அலங்கரிப்பது, அழகை மெச்சுவது, சாயலைப் புகழுவது ஆகியவை பெண்கள் சமுதாயத்துக்கு அவமானம், இழிவு, அடிமைத்தனம் என்பதை ஆயிரத்தில் ஒரு பெண்ணாவது உணர்ந்து இருக்கிறது என்று சொல்ல முடியுமா என்று கேட்கிறேன்.

பெண்களுக்குத் தகப்பன் சொத்தில் உரிமை கிடையாதது ஏன் என்று எந்தப் பெண்ணாவது காரணம் கேட்டாளா? 'பெண்களை அனுபவிக்கிறவன்—வேலை வாங்கிப் பயனடைகிறவன் காப்பாற்றமாட்டானா?' என்பதுதான். அதற்கு ஏற்ற அணி, நகை ஆகியவையே போதும்.

அலங்காரம் ஏன்? மக்கள் கவனத்தை ஈர்க்கும்படியான நகை, துணி, மணி, ஆபரணம் ஏன் என்று எந்தப் பெண்ணாவது, பெற்றோராவது, கட்டினவனாவது சிந்திக்கிறார்களா? பெண்கள் அஃறிணைப் பொருள்கள் என்பதற்கு இதைவிட வேறுஎன்ன ஆதாரம் வேண்டும்? தன்னை அலங்கரித்துக்கொண்டு மற்ற மக்கள் கவனத்தைத் தன்மீது திருப்புவது இழிவு என்றும், அநாகரிகம் என்றும் யாருக்கும் தோன்றாததற்குக் காரணம்—அவர்கள் போகப்பொருள்கள் என்ற கருத்தேயாகும். இது பரிதாபமாகவே இருக்கிறது.

நாம் நம் பெண்களை மற்றவர்கள் எப்படிப்பட்டவர்களானாலும் பலதடவை திரும்பித் திரும்பிப் பார்க்கும்படி—அவர்கள் கவனத்தை நம்மீது திருப்பும்படி அலங்கரிக்கின்றோம். அதில் நமது பணம், உழைப்பு, நம் வாழ்க்கைப்பயன் முதலியவைகளைச் செலவிடுகிறோம். இது ஏன், எதற்காக என்று சிந்திக்காததால் அதைத் தவிர நம் பெண்கள் வேறு காரியத்திற்குப் பயன்படாமல் போய்விட்டார்கள்.

நான் பாமர மக்களை மாத்திரம் சொல்லவில்லை. நம் அறிஞர், செல்வர், தனக்கென வாழாப் பிறர்க்குரியாளரானவர்கள் என்று சொல்லப்படும் பெரியோர்கள் யோக்கியதை

களையும் அவர்கள் பெண்கள் உலகத்திற்கு ஆற்றும் தொண்டுகளையுமேபற்றிச் சொல்லுகிறேன். சர். சண்முகம், சர். குமாரராஜா முதலாகிய திராவிடப் பேரறிஞர், செல்வர்களின் மனைவிகள், தங்கை தமக்கைகள், பெண்கள் எங்கே, எப்படிப் பிறந்தார்கள்? எப்படி வளர்ந்தார்கள்? எப்படித் தகுதியாக்கினார்கள்? எப்படி இருக்கிறார்கள்? ஷாப்புக் கடைகள், ஜவுளிக்கடைகள் ஆகியவற்றிற்கு விளம்பரத்திற்கு வைத்திருக்கும் அழகிய பொம்மைகள், உருவங்கள்போல் அல்லாமல், நாட்டுக்கு—மனித சமுதாயத்திற்குப் பெண்கள் உலகத்திற்கு இவர்கள் என்னமாதிரியான தொண்டாற்ற அல்லது தாங்களாவது ஒரு புகழோ, கீர்த்தியோ பெறத் தக்கபடி வைத்தார்களா என்று கேட்கிறேன். இவர்களே இப்படி இருந்தால் மற்ற பாமரமக்கள் தங்கப்பெட்டியினுள்ளே 'வெல்வெட்' மெத்தை போட்டுப் பூட்டித்தானே வைப்பார்கள்!

பெண்கள் படிப்பு என்பது சுத்தமுட்டாள்தனமான முயற்சியாகவே பெரிதும் இருக்கிறது. படிப்பு, நல்ல மாப்பிள்ளை சம்பாதிக்க ஓர் 'அட்வர்டைஸ்மெண்டாகப்' (விளம்பரமாக) பயன்பட்டது தவிர, மற்றபடி வீணாகப் போய்விட்டதல்லவா? செலவும் தண்டம் தானே என்கிறேன். அதுபோல், ஒரு பெண்ணை தாய், தகப்பன் பி.ஏ., படிக்க வைத்து, ஒருவன் கையில் பிடித்துக் கொடுத்து அந்தப் பெண் சமையல் செய்யவும், குழந்தை வளர்க்கவும், நகை துணி அலங்காரங்களுடன் மக்கள் கவனத்தை ஈர்க்கவும் செய்தால் பி.ஏ., படிக்கவைத்த பணம் வீண் என்பதோடு—அதற்காக சர்க்கார் செலவழித்த மக்கள் பணமும் வீண்தானே? இது தேசீய குற்றமாகாதா?

இந்தத் துறையில் எந்த அறிஞர்களும் சீர்திருத்தவாதியும் கவலை செலுத்தாமல் எவராலும் இனப்பெருக்கத்திற்கே பெண்கள் ஆளாக்கப்பட்டு விட்டார்கள்.

நான் சில படித்த பெண்களைப் பார்க்கிறேன். வயிற்றில் ஒரு குழந்தை; கட்கத்தில் ஒரு குழந்தை; இவ்வளவோடு சிலருக்கு முன்னால் ஓடும்படியான ஒரு குழந்தையை விட்டுவிட்டு இப்படியாகப் படைகளோடு, நல்ல நிகழ்ச்சிகள் நடக்கும் கூட்டங்களுக்கு வந்து நடுவிலிருந்துகொண்டு நிகழ்ச்சிகளுக்கு இடையூறும் தொல்லையும் கொடுப்பதையும் பார்க்கிறேன். இதற்காக அவர்கள் வெட்கப்படாததையும், சிலர் வருத்தப்படாததையும் பார்க்கிறேன். இது மனித சமூகத்தில் இருக்கத்தக்கதா? அதுவும் நாகரிக சமூகத்தில் இருக்கத்தக்கதா? அதுவும் நாகரிக சமூகத்தில் படித்த பெண்கள், படித்தவர்கள் வீட்டுப் பெண்கள் என்றவர்களிடையில் இருக்கத்தக்கதா என்று கேட்கிறேன். இந்த இலட்சணத்தில் நகைகள், விலையுயர்ந்த துணிகள்! குழந்தைகள் கூட்டத்தில் மலஜலம் கழிக்கும்; கத்தும். ஆபாசம்! இவை ஏன்?

நகைக்கும் துணிக்கும் போடும் பணத்தைப் பாங்கியில் போட்டு குறைந்த வட்டியாவது வாங்கி, குழந்தை பிறந்தவுடன் அதை எடுக்க அந்த வட்டியில் ஒரு ஆள் வைத்தாவது அதைப் பார்த்துக்கொள்ளச் செய்தால் அன்பு குறைந்துவிடுமா? பெற்ற தகப்பன் குழந்தையைத் தன்னுடன் கூடவே வைத்துத்தானா அழகு பார்க்கிறான்? அன்பு காட்டுகிறான்? கொஞ்சி விளையாடுகிறான்? ஆகையால் குழந்தையை ஆண்கள் மூலம் வளர்க்கவேண்டும்; சமையல் ஆண்மூலம் செய்விக்கவேண்டும்; பெண்கள் ஆண்களைப் போல் உயர்வேலை பார்க்கவேண்டும்.

ஆண்கள் பார்க்கும் எல்லா வேலைகளையும்—ஆண்கள் செய்யும், எல்லாத் தொண்டுகளையும் பெண்கள் பார்க்க வேண்டும். உறுதியாய் இது முடியும் என்பேன். ஆனால் நகைப் பைத்தியமும், துணி, அலங்காரப் பைத்தியமும் அணிந்துகொண்டு சாயல்—நடை நடக்கும் அடிமை, இழிவு, சுயமரியாதையற்ற தன்மைப்பைத்தியம் ஒழியவேண்டும்.

நம் பெண்கள் நாட்டுக்கு—சமூகத்திற்குப் பயன்படாமல் அலங்காரப் பொம்மைகளானதற்கு—ஆண்கள் கண்களுக்கு விருந்தானதற்குக் காரணம் இந்த பாழாய்ப்போன,

ஒழுக்கமற்ற சினிமாப் படங்களையும், சினிமா நட்சத்திரங்களையும் பார்த்து தினம் ஒரு 'பேஷன்' நகை, துணிக்கட்டு, வெட்டு, சாயல் ஏற்பட்டதுவே என்பேன். அந்தப் பெண்கள் தன்மை என்ன? ஒழுக்கம் என்ன? இவை எல்லாவற்றையும் நம்குலப் பெண்கள் என்பவர்கள் கருதாமல், புகழ், வீரம், பொதுநலத் தொண்டு முதலியவற்றால் கீர்த்திபெற்ற ஆண்களைப்போல் தாங்களும் ஆகவேண்டும் என்றில்லாமல் இப்படி அலங்கரித்துக் கொண்டு திரிவது பெண்கள் சமுதாயத்தின் கீழ்ப்போக்குக்குத்தான் பயன்படும் என்று வருந்துகின்றேன்.

நான், டீசென்சி (Decency)—சுத்தம், கண்ணுக்கு வெறுப்பு இல்லாத ரம்மியம் வேண்டாம் என்று சொல்லுவதாக யாரும் கருதக்கூடாது. அது அவசியம் வேண்டும். ஆனால், அது அதிகப்பணம் கொண்ட, மக்கள் கவனத்தை ஈர்க்கத் தகுந்த 'ஃபாஷன்', நகை, துணி வெட்டு போன்ற அலங்காரத்தால் அல்ல என்றும் (Simple) சாதாரண குறைந்த தன்மையில் முடியும் என்றும் சொல்வேன்.

நம் நாட்டுப் பெண்கள் மேல்நாட்டுப் பெண்களைவிடச் சிறந்த அறிவு, வன்மை, ஊக்கம் உடையவர்கள் ஆவார்கள். இச் சீதோஷ்ண நிலை அப்படிப்பட்டது. அப்படி இருக்க, ஒரு ருக்குமணி, ஒரு விஜயலட்சுமி என்கின்ற பார்ப்பனப் பெண்கள்தாமா பொது வாழ்வில் ஈடுபடத்தக்கவர்களாக, மந்திரிகளாக ஆக வேண்டும்? ஏன் நம்மவர்கள் ஏராளமாக வெளியில் வரக்கூடாது? இவர்களைத் தடுப்பது சேலை, நகை, துணி அலங்கார வேஷம் அல்லாமல் வேறு என்ன?

எனவே, பெற்றோர்கள் பெண்களைப் பெண் என்றே அழைக்காமல் ஆண் என்றே அழைக்கவேண்டும். பெயர்களும் ஆண்கள் பெயர்களையே இடவேண்டும். உடைகளும் ஆண்களைப்போல் கட்டுவித்தல் வேண்டும். சுலபத்தில் இது ஆணா, பெண்ணா என்று மற்றவர்கள் கண்டுபிடிக்க முடியாத மாதிரியில் தயாரிக்கவேண்டும். பெண்களைப் புருஷனுக்கு நல்ல பண்டமாக மாத்திரம் ஆக்காமல் மனித சமுதாயத்திற்குத் தொண்டாற்றவும் கீர்த்தி புகழ் பெறும் பெண்மணியாகவும் ஆக்கவேண்டும். பெண்ணும் தன்னைப் பெண்ணினம் என்று கருத இடமும் எண்ணமும் உண்டாகும்படியாக நடக்கக் கூடாது. ஒவ்வொரு பெண்ணுக்கும், நமக்கும் ஆணுக்கும் ஏன் பேதம்? ஏன் நிபந்தனை? உயர்வு-தாழ்வு என்ற எண்ணம் எழவேண்டும். ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், நம் பெண்கள் வெறும் போகப் பொருளாக ஆக்கப்படக்கூடாது. அவர்கள் புது உலகம் சித்திரிக்கவேண்டும் என்பதுதான் என் கருத்து. இந்தப்படி பேசுகின்ற தன்மையும் இதற்குத்தான்.

பெண்களைப் படிக்கவைப்பதுடன் நன்றாக அறிவுள்ளவர்களாக்க வேண்டும். மேல் நாட்டில் ஒரு வெள்ளைக்காரனை, 'உன் பிள்ளைக்கு எப்போது கலியாணம்? உன் பெண்ணுக்கு எப்போது கலியாணம்?' என்றால் 'நீ என்ன காட்டுமிராண்டியாக இருக்கிறாயே!' என்பான். பிள்ளை என்றால்—அவன் கலியாணம் எப்போது என்று அவனுக்குத் தெரியும். அவரவர்கள் தேர்ந்தெடுத்துக்கொள்வார்கள். தனக்கு ஒழுக்கமான, குணமுள்ள ஒருவனைப் பார்த்துப் பெண்ணே தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். அதற்காக அறிவுபெற, அவர்களைப் படிக்கவைத்து அறிவுள்ளவர்களாக்க வேண்டும்.

ஆண்களைப்போல் பெண்களையும், 'நீ பெண்; அங்கு போகாதே' என்று சொல்லாமல் சரிசமமாக வளர்க்கவேண்டும். இன்று ஒரு பெண் வெளியில் போவதானால் எவ்வளவு பெரிய பெண்ணாக இருந்தாலும் துணையில்லாமல் போக முடியாது. ஒரு சிறு பையன் போய் வந்துவிடுவான். ஏன்? அப்படி வளர்த்துவிட்டோம். பெண்களுக்கு குத்துச் சண்டை முதற்கொண்டு சொல்லிக்கொடுத்து ஆண்களைப்போலவே வளர்க்க வேண்டும். இந்து மதப்படி பதிவிரதை என்பதற்கு ஒழுக்கம், நற்குணம், நற்பண்பு

இவைகள் தேவையில்லை. கணவன் சொல்லுகிறபடி நடப்பதுதான் பதிவிரதாத் தன்மையாகும். அதை வலியுறுத்தவே புராணங்களில் பதிவிரதைகளின் கதை சித்திரிக்கப்படுகின்றன.

பெண்கள் சுதந்தரமற்ற பொருள்கள். அப் பொருள்களை ஆண் தன் இஷ்டப்படி நடத்தலாம். விற்றும் பணம் சேர்க்கலாம். மோட்சம் அடைய மற்றவனுக்குக் கூட்டிக் கொடுக்கலாம் என்கிற முறையில் பெண்களை உபயோகப்படுத்தி இருக்கிறார்கள்.

சிலப்பதிகாரத்தில் பெண்களைக் கொடுமைப்படுத்தி இருக்கும் முறையைப் பார்த்தால் மிகவும் மோசமாக இருக்கிறது.

திருமணம் நடக்கும் மேடையிலேயே மணமகன்—கோவலன்—தாசியின்மேல் ஆசைப்பட்டு அவளுடன் போய்விட்டானாம்! கோவலன் திரும்பி வரும் வரையில் கண்ணகி தன்னை அலங்கரித்துக்கொள்ளாமல், கூந்தலை அலங்கரிக்காமலும், பொட்டிட்டுக்கொள்ளாமலும், நல்ல உணவு இல்லாமலும், உப்பில்லாத உணவை உட்கொண்டும் கவலையே உருவெடுத்தும் இருந்தாளாம். எதற்காக இப்படிச் செய்யவேண்டும்?

அந்த இடத்தில் ஒரு ஆணை வைத்துப் பார்த்தால் அப்படி நடக்குமா? மனைவியானவள் கணவனை விட்டு வேறு ஒரு ஆணுடன் போய்விட்டால், அவள் வரும்வரையில் கணவன் இப்படி உப்பில்லாத உணவு சாப்பிடுவானா? பகவான் பார்த்து நம்மிடம் நம் மனைவியைக் கொண்டுவந்து சேர்க்கும்வரையில் கணவன் நமக்குச் சுகம் தேவையில்லை என்று கவலையுடன் இருப்பானா? எனவே, ஆணுக்கு ஒரு நீதியும் பெண்ணுக்கு ஒரு நீதியும் சிலப்பதிகாரத்தில் கூறப்படுகிறது. இப்படியே பெண்களை இழிவுபடுத்த வேண்டும் என்பதற்காக மிகவும் மோசமாகவும் எழுதிவைத்து இருக்கிறார்கள்.

பெண்கள் ஆண்களைப்போல் எதிலும் உரிமைகொள்பவர்களாய் இருக்கவேண்டும்.

நாசமாகப்போகிற கற்பு, கற்பு என்று சொல்லி நம் பெண்களை எவ்வளவு கேவலமாக ஆக்கிவிட்டார்கள்? பார்ப்பானோ மிகக் கெட்டிக்காரன்! ஆயிரம் பேர்களை அவள் பார்த்து இருந்தால்கூட பத்தினியாக்கி விடுவான்! சீதை, துரோபதை, தாரை இவர்களே இதற்கு உதாரணம். கற்பு என்றால் இரண்டு பேருக்கும் ஒரேமாதிரியாக அல்லவா இருக்க வேண்டும்? பைத்தியக்காரத்தனமாக மூட நம்பிக்கைகளைப் புகுத்திப் பாழாக்கி விட்டார்கள்.

கட்டுப்பாட்டிற்காகவும் நிர்ப்பந்தத்திற்காகவும் கற்பு ஒரு காலமும் கூடாது! கூடவே கூடாது! வாழ்க்கை ஒப்பந்தத்திற்காகவும் காதல் அன்பிற்காகவும் இருவரையும் கற்பு என்னும் சங்கிலி எவ்வளவு வேண்டுமானாலும் இறுக்கிக் கட்டட்டும். அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால், ஒரு பிறவிக்கு ஒரு நீதி என்கிற கற்பு மாத்திரம் அடிமைப்படுத்துவதில்—ஆசை, மூர்க்கத்தனமே அல்லாமல், அதில் கடுகளவு யோக்கியமும் நாணயமும் பொறுப்பும் இல்லவே இல்லை.

பாவத்திற்குப் பயந்து பதிவிரதையாய் இருப்பவளும், காவலுக்குப் பயந்து பதிவிரதையாய் இருப்பவளும், மானத்திற்குப் பயந்து பதிவிரதையாயிருப்பவளும் ஒரே யோக்கியதை உடையவளே ஆவாள்.

தசரதன், கிருட்டிணன் முதலியோர் 60,000 மனைவியரோடும், கோபிகா ஸ்திரீகளோடும் வாழ்ந்து இருக்கின்றனர்.

சுப்பிரமணியனுக்கும் கிருட்டிணனுக்கும் இருபுறங்களிலும் இரு மனைவியர் இருக்கிறார்களே, அதைப்போல் அம்மனுக்கு இருபக்கங்களிலும் ஆண்களை வைக்க முடியுமா? இந்த மாதிரியாகப் பெண்கள் விஷயங்களில் ஒழுங்கீனமாக நிறைய நடத்தி இருக்கிறார்கள்.

இப்பொழுது ஒரு மனைவி இருக்க மற்றொரு மனைவியைக் கட்டிக்கொண்டால் தண்டனை. தாசியிடம் தொடர்பு கொண்டிருந்தால்கூடப் போதும். ஆதாரத்துடன் காட்டி, 'நான் என் கணவனுடன் வாழ இஷ்டம் இல்லை; எனக்கு இவ்வளவு ஜீவனாம்சம் கொடுக்க வேண்டும்' என்று தன் அந்தஸ்துக்கு ஏற்ற மாதிரி மனைவி தொகை கேட்கலாம். முன்பு இப்படிக் கேட்டால் என்ன சொல்லுவார்கள் தெரியுமா? ஆண் அப்படித்தான் செய்வான். ஆண் வெள்ளிச் செம்பு; பெண்ணோ குயவன் சட்டி போன்றவள். ஆண் அதில் கழுவிக் கழுவி எடுத்துக் கொள்ளலாம் என்று சொன்னார்கள். இப்பொழுது அது மாதிரிக் கூற முடியாது.

இந்தப்படியுள்ள மாறுதல்கள் எல்லாவற்றிலும் பெண்களுக்குத்தான் இலாபம். குழந்தை விளக்கெண்ணெய் குடிக்கும்போது மிகவும் கஷ்டப்படும். பிறகு அந்த நன்மை குழந்தைக்குத்தான். அதுபோல, பெண்கள் இதை எதிர்த்தார்கள். பிறகு நமக்குத்தான் நன்மையாக இருக்கின்றது என்று அறிந்தவுடன் வாய் மூடிக்கொண்டு விட்டார்கள். பார்லிமெண்டில் பெண்களுக்குச் சொத்துச் சேரவேண்டும் என்று சட்டமாக நிறைவேறி விட்டது. இதனால் பெண்களுக்குச் சரிபங்கு சொத்து கிடைக்கும். இதனால் பெண்கள் ஆண்களைவிட அதிகமாகப் பணக்காரர்களாக ஆகலாம். ஏனெனில், பிறந்த வீட்டிலும் புகுந்த வீட்டிலும் சொத்து சேருகிறது.

இப்போது பெண்கள் படித்து முன்சீப், கலெக்டர், மந்திரியாக வேலை பார்க்கிறார்கள். ஆகவே அவர்களுக்கும் சம உரிமை கொடுத்தால் ஆண்களைவிட நன்றாக வேலை செய்வார்கள். 4 ஆண்களும் 1 பெண்ணும் குடும்பத்தில் இருந்தால் முதலில் அந்தப் பெண்ணைத்தான் படிக்கவைக்க வேண்டும். அப்படிப் படிக்கவைத்தோமே யானால் நம்மையெல்லாம் வண்டியில் வைத்து ஓட்டுவார்கள்.

வாழ்க்கை இன்ப துன்பங்களிலும் போக போக்கியங்களிலும் இருவருக்கும் சம உரிமை உண்டு என்றும் குறிப்பிட, சமத்துவ சுபாவம் மிளிரும் மாறுதல் அவசியமா, இல்லையா என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள். உங்கள் மனைவிமார்களை நினைத்துக்கொண்டே யோசிக்காதீர்கள். உங்களுடைய செல்வப்பெண் குழந்தைகளையும் அன்புச் சகோதரிகளையும் மனத்தில் கொண்டு யோசித்துப்பாருங்கள். உங்கள் தாய்மார் சுதந்திரவாதிகளாய் இருந்தால் நீங்கள் எப்படி இருந்து இருப்பீர்கள் என்பதையும் யோசித்துப்பாருங்கள். இன்று உலகில் கீழ் சாதியார் என்பவர்களுக்குச் சம சுதந்திரம் வேண்டும் என்று போராடுகிறோம். அரசாங்கத்தினிடம் இருந்து விடுதலை பெற்றுச் சுதந்திரமாய் வாழ வேண்டும் என்று போராடுகிறோம். அதே போராட்டத்தை நமது தாய் மார்கள் விஷயத்திலும், நமது சகோதரிகள் விஷயத்திலும் கவனிக்க வேண்டாமா? அந்தப்படி கவனிக்கப்பட வேண்டும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்களானால், அதற்கு இந்தச் சந்தர்ப்பத்தைவிட வேறு சந்தர்ப்பம் ஏது என்று கேட்கிறேன். புரோகிதம் இல்லாத தாலேயே நாத்திகம் என்றும், பெண்ணுக்குச் சம சுதந்திரம் வழங்கப்பட வேண்டும் என்பதனாலேயே சுயமரியாதைத் திருமணம் என்றும் சொல்லப்படுகிறது. அந்தப்படி சொல்லப்படுவதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. திருமணங்களில் ஆத்திக, நாத்திகத்திற்கு இடமே இல்லை. நாத்திகம் அவரவர்கள் மன உணர்ச்சி, ஆராய்ச்சித் திறன் ஆகியவைகளைக் கொண்டதே தவிர—அது ஒரு குணமல்ல; ஒரு கட்சி அல்ல; ஒரு மதம் அல்ல. ஆகையால், திருமண முறை மாறுதல்களில் நாத்திகத்திற்கு இடமில்லை. கடவுள் நம்பிக்கைக்காரர்கள் இந்த இடத்தில் கடவுள் இல்லை என்று சொல்லிவிட முடியுமா? என் போன்றவர்கள் அப்படிச் சொல்லுவதனால் எந்தக் கடவுள் நம்பிக்கைக்காரராவது அதை நம்ப முடியுமா? அதனால், இதில் நாத்திகத்தைப் புகுத்துவது சரியல்ல. புரோகிதன் இல்லாததே நாத்திகம் என்றால்—அவன் இல்லாமல் செய்யும் மற்ற அனேக காரியங்கள் நாத்திகம் என்றுதான் அர்த்தம். ஆதலால், அதையும் நாம் இலட்சியம் செய்யவேண்டிய

தில்லை. மற்றொரு விஷயமான ஆண், பெண் சமத்துவம் என்கின்ற சுயமரியாதை சிலருக்குப் பிடிக்கவில்லையானால் நாம் அதைப்பற்றிக் கவலைப்படவேண்டியதில்லை.

எதற்காக ஆணுக்குப் பெண் அடிமையாக இருக்க வேண்டும்? இஷ்டப்படாவிட்டால் என்ன செய்யமுடியும்? அதற்கு என்ன நிர்ப்பந்தம் செய்ய, யாருக்குப் பாத்தியம் உண்டு? ஆகையால், வேறு எந்தக் காரியங்களில் மாறுதல் இல்லாவிட்டாலும் இந்த வாழ்க்கைச் சுதந்திரத்தில் சம சுதந்திரம் ஏற்பட்டுத்தான் ஆகவேண்டும். சுயமரியாதை இயக்கத்தின் முதல் இலட்சியமே அதுவாகும். ஆதலால், அது விஷயத்தில் உள்ள—ஏற்படப்போகும் மாறுதலை மக்கள் வரவேற்றுத்தான் ஆகவேண்டும்.

மேல்நாட்டிலே உள்ள வெள்ளைக்காரர்கள் பெண்களுக்கு மிகவும் மரியாதை கொடுத்து வாழ்கின்றார்கள். அதனால்தான் அவர்கள் நாகரிகம் உள்ள மக்களாக மாறினார்கள். பெண்களை அடக்கி ஆளுவதும், அவமரியாதையாக அழைப்பதும், பேசுவதும் ஆண்கள் முதலில் தம் மனைவிகளிடம் விளையாட்டாக ஆரம்பிக்கிறார்கள். கடைசியில் பெற்ற தாயைக்கூட மரியாதைக் குறைவாகப் பேசுகிறார்கள். இந்தக் கெட்ட பழக்கத்தை ஒழித்துவிட்டுப் பெண்களுக்கு மரியாதை செலுத்தி வாழவேண்டும்.

மணமக்கள் இருவரும் சிநேகிதர்களாக நடந்து கொள்ளவேண்டும். 'நான் ஆண் பிள்ளை' என்று அதிகாரம் பேசக்கூடாது. இருவரும் சிநேகிதர்கள் என்று கருதி இருக்க வேண்டும்; அதிகாரம் என்பதை வெறுக்கவேண்டும்; அன்பாக எவ்வளவு வேலை வேண்டுமானாலும் வாங்கிக்கொள்ளலாம்; மிரட்டக்கூடாது. இம் மாதிரியான காரியங்களால்தான் உடலில் அதிகமாக அன்பு உண்டாகின்றது. வாழ்க்கையில் சதா அடிதடி நடந்தால் என்ன பயன்? வாழ்க்கை அன்புருவாக இருக்கவேண்டும். ஆண்கள் மெதுவாகத்தான் திருத்த வேண்டும். மணமக்கள் தங்களுக்காகவே என்று இல்லாமல் மற்றவருக்காகவே வாழ்கின்றோம் என்று எண்ணவேண்டும். இந்துமதம் மக்களிடையில் புகுந்து கெடுத்துவிட்டது. 'தான் மாத்திரம் மோட்சம் போகவேண்டும்' என்று எண்ணும்படி செய்துவிட்டது. நாம் தாம் மனிதர்கள் என்றில்லாமல் மற்றவர்கள் நமக்காக இருக்கிறார்கள் என்று எண்ண வேண்டும். கக்கூஸ் எடுப்பவர்கள், வீதியில் குப்பை கூட்டுபவர்கள் தங்கள் சுயநலத்திற்காகவா வேலை செய்கிறார்கள்? அதுபோல் நாமும் நடக்கவேண்டும். அதுதான் பரந்தநலப் பான்மையாகும்.

இந்தத் துறையில் மேல்நாட்டைப் பார்த்தால் இன்பமாக இருக்கும். ஒரு மனிதரும் அங்கு பிறருக்கு அசவுகரியமாக நடக்கமாட்டார்கள். இரவு $10\frac{1}{2}$ மணி ஆகிவிட்டால் விருந்தாளி, உறவினர் வீட்டுக்குப் போய்த் தொல்லை கொடுக்கமாட்டார்கள். தாயானாலும் முதலில் சொல்லிவிட்டுத்தான் வருவார்கள். அந்தப் பழக்கம் நம் நாட்டில் குறைவு. மோட்டாரில் ஏறக் கும்பலாய் இருக்கும். அதில் ஒரு தடியன் பின்னாலிருந்து எல்லோரையும் இடித்துத் தள்ளிக்கொண்டு போய் ஏறிவிடுவான். இம் மாதிரித் துன்பம் கொடுக்கிறோமே என்பது பற்றிச் சிந்திக்க மாட்டான். ஆனால், அந்தக் காரியம் நம் நாட்டில் கெட்டிக்காரத்தனம் என்று பாராட்டப்படுகிறது. மற்றவர் மனைவிகளை நாம் இடித்துத் தள்ளுகிறோம் என்று கருதுவதும் இல்லை; நம் மனைவியையும் இப்படித்தானே இடிப்பார்கள் என்று எண்ணிப் பார்ப்பதும் இல்லை.

ஆணுக்குப் பெண் சரிநிகர் ஆகும்; அடிமையில்லை. சோறு சமைத்துப் போட்டுச் சாப்பிடும் சோற்று ஆள் அல்ல பெண்; சமமானவள்; நண்பனைப் போன்றவள்—வாழ்க்கைக்குத் துணைவி அவள். இருவருக்கும் உரிமை ஒன்றே. தகப்பன் சொத்தில் ஆணுக்குப் போலவே பெண்ணுக்கும் சரிபங்கு உண்டு. அவர்கள் பதவியும் வகிக்கலாம். அவர்களின் பதவிக் குறைக்குக் காரணம் அவர்களைப் பக்குவப்படுத்தாததுதான். அவர்களுக்கு நல்ல அறிவையும், நல்ல பழக்க வழக்கங்களையும் அளிக்கவேண்டும். அன்னாரிடமிருந்து மூட

நம்பிக்கையை அகற்றவேண்டும். உதாரணமாக, பகவான் குழந்தைகளைக் கொடுப்பதாக நினைக்கின்றார்கள். பகவான் ஒன்றும் கொடுப்பதில்லை; டாக்டர் சிகிச்சையால் கொடுக்க முடியும்; நிறுத்தமுடியும். பகவானுக்கும் குழந்தைக்கும் சம்பந்தமேயில்லை. எனவே, திட்டப்படி பிள்ளைகளைப் பெற்று நல்வாழ்வு வாழவேண்டும். அதிகப் பிள்ளைகளால் அதிகத் தொல்லைதான். இதைப் புரிந்துகொள்வது முக்கியமானது.

இன்னும் பெண்களை விட்டிலேயே அடைத்து வைக்கிறோம். வெளியில் அனுப்பினால் அல்லவா அறிவு வளரும்? அப்படி அனுப்புவதென்றால், சந்தைக்கு அனுப்புகிறோம் அல்லது கோயிலுக்கு அனுப்புகிறோம். அங்கேயா அறிவு வளரும்? ஆகவே, இந்தச் சங்கதியெல்லாம் நன்றாகச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்னும் நாம் பழமை விரும்பிகளாக இருக்கக்கூடாது. மேல்நாடுகள் நாகரிகத்தில் முன்னேறியுள்ளன. உலகமே மிக வேகமாகத் திருந்தி மாறிவருகிறது. பல புதிய சாதனங்கள் உண்டாகி வருகின்றன. அமெரிக்கா கூப்பிடு தூரத்தில் வந்துவிட்டது. இந் நிலையில் நாம் இன்னும் சாதி, சடங்கு, பார்ப்பான் இவைகளைக் கட்டிவைத்துக் கொண்டு இருந்தால் எப்பொழுது மேலே போவது என்று சிந்திக்கவேண்டும். காலம் தாழ்த்தக்கூடாது. ஆனால், நான் சொல்வதை அப்படியே நம்பவேண்டும் என்பதில்லை; தவறாகப் புரிந்து கொள்ளவும் வேண்டியதில்லை. நேர்மையோடு சிந்தியுங்கள். உங்கள் மனத்தையே கேட்டுப்பார்த்து ஆராயுங்கள்! அதன் பிறகு ஒரு முடிவுக்கு வரலாம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மணமக்கள் கண்ணைக் மூடிக்கொண்டு பிள்ளைகளைப் பெற்றுக்கொள்ளக்கூடாது. அவசரப்படாமல் அய்ந்து வருடத்துக்குப் பிறகு பிள்ளை பெற்றுக்கொண்டால் நல்லது. மனைவியைக் கொஞ்சித் தீர்க்காமல், திருமணமான உடனே குழந்தை பெற்றுக்கொண்டால் மனைவியைக் கொஞ்சுவதா அல்லது குழந்தையைக் கொஞ்சுவதா? பிறகு வாழ்க்கையின் இலட்சியம் என்ன இருக்கிறது? அநாவசியமாகக் குழந்தைகளைப் பெற்றுக்கொண்டால் உடம்புக்குக் கெடுதல்தான். திருமணமான பத்து வருடத்தில் எட்டுப் பிள்ளைகளைப் பெற்றுக்கொண்டால் அவர்களை எப்படிப் படிக்கவைக்க முடியும்; வைத்திய வசதி செய்ய முடியும்? வாழ்க்கை நடத்த முடியும்?

இதற்காகச் சட்டம் செய்ய முயற்சித்து வருகிறார்கள். கூடிய சீக்கிரம் போஸ்ட் ஆபீசில் மாத்திரை விற்கப்போகிறார்கள். கடவுளுக்கு மேலே உத்தரவு போடப்போகிறார்கள். 'கடவுள் கொடுத்தார்; எல்லாம் பகவான் செயல்' என்பதும், 'பூச்சி, புழு ஒன்று கொடேன்' என்று நம் பெண்கள் வேண்டிக் கொள்ளுவதும் தவறு என்று அறிவு சொல்லுகிறது.

மணமக்கள் கூடுமானவரைக்கும் ஒரு அய்ந்து ஆண்டுகளுக்காவது பிள்ளை பெறாமல் இருக்கும்படி கேட்டுக்கொள்ளுகின்றேன். பிள்ளைகளை ஏராளமாகப் பெற்று விட்டு, 'பகவான் அந்தப் பிள்ளைகளை வளர்க்க வருவான்' என்று சொல்லிக்கொண்டு, ஒழுக்க ஈனமாய் நடந்து, மற்றவர்களுக்குத் தொல்லை கொடுத்தல் ஆகியவை செய்வார்கள். ஒழுக்கக் கேட்டுக்கு, அதிகப் பிள்ளைகளைப் பெறுவதும் காரணமாகும். நான் முப்பது ஆண்டுகளுக்கு முன்னாலேயே இதை உணர்ந்து, கர்ப்ப ஆட்சியைப் பற்றி எழுதி இருக்கிறேன். புத்தகமும் போட்டேன். அப்பொழுது 'ஜஸ்டிஸ்' பத்திரிக்கை முதல் மற்ற பத்திரிக்கைகளும் எதிர்த்தன.

எனக்குப் பிள்ளை குட்டிகள் இருந்தால் இந்த அளவுக்குக் கூடத் தொண்டு செய்ய முடியுமா? நல்ல யோக்கியர்கள், பொதுத் தொண்டர்களாக இருந்தவர்கள் எல்லாம் மக்கள் பெருக்கால் அயோக்கியர்கள், சுய நலக்காரர்களாக ஆகிவிட்டார்கள்! இது இயற்கை.

தன் புகழ் என்றும் நிலைக்கவாகிலும் பிறருக்காகத் தொண்டுசெய்யுங்கள்.

ஒவ்வொருவரும் பொது நலத்திற்காக என்ன செய்தோம் என்று எண்ணிப்பார்க்க வேண்டும். ஒரு வீடு எப்போதும் அவன் வீடாக இருக்கவேண்டுமேயானால் பொதுவாக்கப் பட்டால்தான் அவன் வீடாக இருக்கும். அதுபோல முடிந்தவரை ஒவ்வொருவரும் பொது நலத்திற்காக ஏதாவது செய்யவேண்டும்.

தனக்காக மட்டிலும் வாழ்வது என்பது ஒழுக்கமாக ஆக முடியாது. சமுதாயத்திற் காகவும் மணமக்கள் வாழவேண்டும். சமுதாயத்திற்காகப் பணிபுரிய வேண்டும். வரவுக்குள் செலவு செய்யவேண்டும். அதற்கு ஏற்ப வாழ்க்கையை அமைத்துக்கொண்டு, எதிர் காலத்துக்கும் சேமித்து வைக்கும் பழக்கம் வேண்டும். ஒழுக்கத்தோடு வாழ்கிறேன் என்று சொல்லிக்கொண்டு உங்கள் வீட்டுக் கதவை மூடிக்கொண்டு வாழாதீர்கள்.

முக்கியமாகக் கணவனும் மனைவியும் தங்கள் இலட்சியமாகக் கொள்ளவேண்டியது வரவுக்கு மீறாமல் செலவு செய்வதுதான். வரவுக்கு மேல் செலவுசெய்வது ஒரு விபச்சாரம் போன்றதாகும். இப்படியெல்லாம் வாழ்க்கையில் வழுக்கி விழக்கூடாது. ஆண்கள் பெண் களின் மூடநம்பிக்கையைப் போக்கிப் பக்குவப்படுத்த வேண்டும். துணி மணி நகைகளை வாங்கிக்கொடுத்து ஏமாற்றிவிடுவது சரியன்று. பெண்களுக்கு அறிவை வளர்க்கவேண்டும். சிந்தனையைத் தூண்டவேண்டும். இங்கிலாந்து, அமெரிக்கா, ரஷ்யா, துருக்கி, ஜப்பான், சைனா போன்ற பெரிய நாடுகளில் பெண்கள் நகை அணிவதில்லை. எங்கோ பெரிய அரசு குடும்பங்களில் வேண்டுமானால் நகை இருக்கும். அவர்களும் எப்போதும் கழுத்திலும் காதிலும் அணிந்துகொண்டே இருப்பதில்லை. நகைகளை ' இன்ஷியூர் ' செய்து பெட்டியில் பூட்டிவைத்து இருப்பார்கள். நாமோ துணிமணிகளுக்காக நிறையச் செலவுசெய்கிறோம். இந்தப் பழக்கத்தை நிறுத்த வேண்டியது அவசியமாகும்.

என்றைக்கும் வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்து விட்டுக் கடனாளியாக மாறிப் பிறரை ஏமாற்றுவது இழுக்கு. இதைவிட விபச்சாரம் என்பது இழிவானதல்ல. விபசாரத்தை விட மோசமான பண்பு அதிகச் செலவுசெய்து, அதற்காகக் கடன் வாங்கித் திண்டாடுவது என்று தான் சொல்லவேண்டும்.

முஸ்லிம் மவுல்விகள் ஒரு புத்தகத்தில் திருமணம் நடந்ததைக் குறித்து வைத்துக் கொள்ளுகிறார்கள். கிறிஸ்தவர்களுக்கும் பாதிரிமார்கள் ஒரு புத்தகத்தில் பெயரைப் பதிவு செய்து திருமணம் முடிக்கிறார்கள். நமக்குத்தான் அதுபோன்ற ஏற்பாடு இல்லை. கிராம முன்சீபிடம் ஒரு புத்தகம் இருக்கவேண்டும். குழந்தை பிறந்தால் பதிவு செய்து வைப்பது போல், திருமணத்தைப் பதிவு செய்துகொள்ள வசதியிருக்க வேண்டும். திருமணம் அது போல செய்துகொண்டு, பத்திரிக்கையில் நான்கு வரி, ' இன்னாருக்கும் இன்னவருக்கும் திருமணம் நடந்தது ' என்று போட்டுவிட்டால் எல்லோருக்கும் தெரிந்துவிட்டுப் போகிறது. திருமணம் என்பதற்கு விருந்து, தடபுடல் செலவுசெய்கிற நிலை ஒழியவேண்டும். அதோடு பெண்களை நன்முறையில் படிக்கவைக்கவேண்டும்.

இப்பொழுது நாளாவட்டத்தில் திருந்திய திருமணங்கள் அதிகமாக நடக்க ஆரம் பித்தவுடன், எங்கு இவர்கள் எல்லோரும் ஒன்றானால் நம் பாடு ஆபத்தாகிவிடுமோ என்று பயந்து, பார்ப்பனர் இதுபோன்ற காரியங்கள் நடைபெற முடியாதபடி என்னென்ன செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்கிறார்கள். சாதாரணமாகப் பதிவு செய்துகொள்வதில் இப்பொழுது பல சங்கடங்களை உண்டாக்கிவிட்டார்கள். அதற்கு முன்னால் பதிவு செய்து கொள்ளுவதானால் பெண்ணுக்கு 14 வயதுக்குமேல் 15 வயது ஆகியிருந்தால் போதும். ஆணுக்கு 18 முடிந்து 19 ஆகிஇருந்தால் போதும். இப்பொழுது ஆணுக்கும் பெண்ணுக்கும் 18 வயதாகி இருக்கவேண்டும் என்கிறார்கள். அதற்கு முன்னால் கையெழுத்துப் போட்டு 15 நாட்கள் கெடு இருந்தால் போதும்; 15 நாட்கள் கழித்துத் திருமணம் பதிவு செய்து கொள்ளலாம். இப்பொழுது 30 நாள் ஆகவேண்டும். 30 நாள் முடிந்து 31வது நாள்தான்

பதிவுசெய்யலாம். அதற்குமுன் கட்டணம் ரூ 1. இப்பொழுது ரூ 3 ஆக உயர்த்திவிட்டார்கள். இப்படித் தேவையில்லாத தொந்தரவுகளையெல்லாம் உண்டாக்கி வைத்திருக்கிறார்கள்.

இந்த 30 நாட்களுக்குள் எத்தனை திருமணங்கள் உடைந்துபோகும்? 'இந்த ஒரு மாதத்துக்குள் எத்தனை கருத்து மாறுபாடு, சொந்தக்காரர்கள் தொல்லைகள்? இவைகளால் எத்தனை திருமணங்கள் உடையாமல் உறுதியாக இருக்க முடியும்? நமது முயற்சிகளை எப்படிக் கெடுப்பது, உடைப்பது என்பதற்காகத்தான் சட்டம். இதுபோன்ற காரியங்கள்தாம் நமது சமுதாயத்தில் உள்ள மடமையை அளந்துபார்க்கும் 'தெர்மா மீட்டர்'.

இப்பொழுது பதிவாளர் அலுவலகத்திற்குச் சென்றால் திருமணம் பதிவு செய்யப்படுகிறது. வருங்காலத்தில் கடுதாசியில், 'நாங்கள் இருவரும் கணவனும் மனைவியுமாக ஆகிவிட்டோம்' என்று அந்த ஆபீசுக்கு எழுதிவிட்டாலே போதும்; அல்லது ஆள் மூலமாகக் கொடுத்து அனுப்பினாலும் போதும் என வரவேண்டும்.

ரஷ்யா போன்ற மேல்நாடுகளில், கார்டுகளில் எழுதிப் பதிவு செய்து விடுவார்கள்— 'நான் திருமணம் செய்துகொண்டேன்' என்று. இல்லையானால், 'எனக்குக் கணவர் பிடிக்கவில்லை; தனியாகப் பிரிந்துபோய்விடுகிறேன்' என்று கார்டில் எழுதி அனுப்பி விடுவார்கள். ஆகவே, பதிவுமுறை எளிதாக்கப்பட வேண்டும்.

['வாழ்க்கைத் துணை நலம்' என்னும் புத்தகத்திலிருந்து—1958-ம் ஆண்டு பதிப்பு]

## 15. ரஷ்யக் குடும்ப முறை

தோழர்களே!

ரஷ்யா முதலிய இடங்களிலே சொத்துக்களைப்பற்றி வாரிசு அவசியமே இல்லை; அவர்களுக்கு அந்த மாதிரிக் கட்டுபாடு இல்லை.

ஏதோ இயற்கை உணர்ச்சிக்காக ஓய்வு நேரங்களிலே சாந்தி ஏற்படுவதற்காக ஒரு வாழ்க்கைத் துணைவி இருக்கவேண்டும்; அவர்கள் சிநேகிதர்கள் மாதிரி என்றைக்கும் இருப்பார்களே தவிர, அங்குக் கலியாண முறையே கிடையாது. மற்றபடி நண்பர்களாக இருக்கவேண்டும்; ஒருவர் இடத்திலே ஒருவர் காதல் உடையவர்களாக இருக்கவேண்டும். இவ்வளவுதான் ரஷ்யாவிலே ஆண், பெண்ணுடைய வாழ்க்கைத்தன்மை. காரணம் என்ன?

அங்கு ஏதாவது சொத்து இருந்தால்தானே—வாரிசு ஏற்படவேண்டும் என்பதற்கு? அந்த சர்க்கார் எல்லோருக்கும் பொது. அந்த நாட்டுச் செல்வம், தொழில்முறை, வளப்பம் எல்லாம் எல்லா மக்களுக்குமே விகிதாச்சாரம் என்று இருப்பதனாலே, தனிப்பட்ட தங்களுடைய சொத்துக்கு வாரிசு இருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை.

குழந்தைகளைப் பெற்றால்கூட நம் நாட்டைப்போல அவ்வளவு அன்பு, ஆசை, பார்க்காமல் இருப்பதால் கவலை என்று சொல்லுகிற தன்மை ரஷ்யாவிலே இல்லை. நானே நேரில் பார்த்துவிட்டு வந்தேன். குழந்தைகளைப் பெறவேண்டும்; பெற்றவுடனே அவர்கள் வைத்துக்கொள்ளலாம்! இல்லாவிட்டால் சர்க்காரிடம் ஒப்படைத்து விடலாம்; ஓய்வு உள்ள போது குழந்தையைப் பார்த்துவிட்டு வரலாம். மற்றபடி, படிப்புச் சொல்லிக்கொடுத்து, வேலை தேடிக்கொடுப்பது ஆகிய இந்த வேலைகள் எல்லாம் ரஷ்யாவில் தாய் தந்தையர்களுக்குக் கிடையாது.

அங்கே தனக்கு என்று வைத்துக்கொள்ள வீடு கிடையாது. உள்ளவீட்டை எல்லாம் சர்க்கார் எடுத்துக்கொண்டு, சர்க்கார் கட்டி இருக்கிறார்கள். அதில் அவர்களுக்கு என்று

ஒரு வீடு தருகிறார்கள். அந்த வீடு யாருடையது, எவருடையது என்பது பற்றிக் கவலை இல்லை. அப்படி இருப்பதனாலே அவர்கள் வாரிசைப்பற்றிக் கவலைப்படுவது இல்லை. 'நாளை'யைப் பற்றி அவர்களுக்குக் கவலையும் இல்லை.

எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், அந்த வாழ்க்கை முறையில் எந்த ஆணும், பெண்ணும் எந்த நிர்ப்பந்தத்திற்கும் கட்டுப்பாட்டிற்கும் அடங்கி நடக்கவேண்டும் என்பது இல்லை.

இப்பொழுது சட்டம், அந்த நாட்டுப் பழக்க வழக்கம், அந்த மதத்திற்கு ஏற்பட்ட முறை இவைகளையல்லாம் அனுசரித்து ஏற்படுத்திக் கொண்டகாரியம் இதுவானதனாலே, அதற்கு இவைகள் எல்லாமில்லை. இவைகள் எல்லாம் இல்லாதபோது என்னமுறை இருந்திருக்க முடியும்? ஆனதினாலே, திருமணங்களுக்கு ஒருமுறை கிடையாது. ஒரு ஆணும் ஒரு பெண்ணும் இஷ்டப்பட்டு, 'நாம் இருவரும் இன்றிலிருந்து நண்பர்களாகி விட்டோம்' என்று சொன்னால் தீர்ந்தது.

சொத்து முதலியவைகள் இருப்பதனாலே, குழந்தை குட்டிகள் பெற்று விட்டால் எப்படி வளர்ப்பது என்கிற பொறுப்புகள் எல்லாம் இருப்பதினாலே ஒருமுறை ஏற்படச் செய்து, அந்த முறை இப்படி இருக்கவேண்டும் என்று அமைக்கப்பட்டு இருக்கிறது. அந்த அமைப்புதான் இந்தத் திருமணமுறை. அதற்குத்தான் கலியாணம் என்பது தவிர வேறு ஒன்றும் இல்லை.

[பெரம்பூரில், 11-2-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 17-2-1951]

# 5. மக்கள் பிரிவினை

## 1. நமது தலைவர்கள்—இரணியன்

இரணியாட்சன், இரணியகசிபு என்ற இரு அசுரர்களான ஆரியத் துவேஷிகளை ஆரியர் கொன்ற கதைகளே—விஷ்ணு பன்றியாகவும், சிங்கமாகவும் அவதாரம் செய்த (வேஷம் போட்டுச் சதிசெய்த) கதைகளாகும்.

இரணியாட்சன் (பொற்கண்ணன்) என்பவன் பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதாளத்துக்குக் கொண்டுபோய்விட்டான் என்பதாகச் சொல்லி, அதற்காக விஷ்ணு பன்றி அவதாரம் எடுத்துப் பாதாளத்துக்குப்போய், இரணியாட்சனைக் கொன்று, பூமியைக் கொண்டு வந்து விரித்தானாம்.

இந்த இரணியாட்சன் இப்படிச்செய்ததற்கும், இம்மாதிரி கொலையுண்டதற்கும் காரணம், பிராமணர்களின் சாபத்தால் ஏற்பட்டதாம். இது நிற்க, இரணியாட்சனுடைய உடன்பிறந்தவனான இரணியகசிபு என்பவன் இதற்காக விஷ்ணுவுடன் பழிவாங்க யுத்தம் செய்ததாகத் தெரிகிறது. அந்த யுத்தத்தில் மறைந்திருந்து கொன்றதேதான், 'தூணிலிருந்து நரசிம்மமூர்த்தி தோன்றி இரணியனைக் கொன்றார்' என்பதாகக் கற்பிக்கப்பட்டிருக்கவேண்டும். இந்தக் கதையைப் பாகவதப் புராணத்தின்படி பார்த்தால் இந்த உடன்பிறந்தார்கள் இருவரும் கொல்லப்பட்டதற்குக் காரணம் பார்ப்பனர் சூழ்ச்சி என்றே விளங்கும்.

பாகவதத்தில் இரணியன் கதையில் சொல்லப்படுவதாவது: இரணியகசிபு சொல்லுகிறான் 'ஓ தானவர்களே! இந்த விஷ்ணுவின் சகாயத்தால் நமது எதிரிகளும் அற்பர்களுமான தேவர்கள் என் சகோதரனைக் கொன்றார்கள்; அந்த மகாவிஷ்ணு ஒரு

பட்சபாதகன்; தந்திரக்காரன்; ஒரு சிறுவன்போல் தம்மைப் போற்றுகிறவன்; இஷ்டம் போல் நடப்பவன். இப்படிப்பட்டவனான அந்த விஷ்ணுவை வெட்டிவீழ்த்தப் போகிறேன். விஷ்ணுவைக் கொன்றால் தேவர்களும், தேவர்களின் கூட்டமும் வேரற்ற மரம்போல் வீழ்ந்துவிடுவார்கள். ஆதலால், நீங்கள் முதலில் பிராமணர்கள் இருக்கும் இடம் சென்று அவர்களது தபசு, யாகம், வேத அத்தியயனம், விரதம், தானம் முதலாகியவைகளைச் செய்பவர்களைக் கொல்லுங்கள். பிராமணர்களால் செய்யப்படும் அனுஷ்டானம், யாகம் இவை மகாவிஷ்ணு இருப்பதற்குக் காரணமாயிருக்கின்றன. ஆகையால், எந்த எந்தத் தேசத்தில் பிராமணர்கள் இருக்கிறார்களோ, எங்கு எங்கு வேத அத்தியயனம் செய்யப் படுகிறதோ, எந்த எந்தத் தேசத்தில் வருணாசிரமத்திற்கு உரிய கர்மங்கள் அனுஷ்டிக்கப் படுகின்றனவோ அந்த அந்தத் தேசத்திற்குச் சென்று அவர்களை அக்கினியை வைத்துக் கொளுத்துங்கள்; நாசஞ்செய்யுங்கள்' என்றான்.

'உடனே தானவர்கள் சென்று பிராமணர்கள் இருக்கும் பட்டணங்கள், கிராமங்கள், ஆச்சிரமங்கள் முதலிய அனைத்தையும் கொளுத்தினார்கள்; சிலர் கோடாரியையும் மண் வெட்டியையும் எடுத்துப் போய் கோவில்களையும் பிரகாரங்களையும், கோபுரங்களையும் இடித்துத் தள்ளினார்கள்; சிலர் கொள்ளிகளைக்கொண்டு வீடுகளை எரித்தார்கள்! இதனால்தேவர்கள் மறைந்து சஞ்சரித்தார்கள்' என்று பாகவதம் 7-வது ஸ்கந்தம் 2-வது அத்தியாயம் 715, 716-ம் பக்கங்களில் இருக்கின்றது.

மற்றும், இந்த பாகவதத்தில் சில இடங்களில் தனித்தனியாக இருப்பனவற்றைப் பொருத்திப் பார்த்தால்—நமது சீர்திருத்தக் கவி பாரதிதாசன் அவர்கள் எழுதிய 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என்னும் நாடகத்தில் உள்ள விஷயங்கள் அத்தனைக்கும் ஆதாரங்கள் இருக்கின்றன.

விஷ்ணுவும் சிவனும் பார்ப்பனர்களின் அனுகூலத்திற்கும், அவர்கள் ஆதிக்கத் திற்கும் வாழ்வுக்குந்தான் இருக்கிறார்கள் என்று, இன்று சுயமரியாதைக்காரர்கள் சொல்லுகிற விஷயங்கள் அவ்வளவும்—பாகவதத்தில் இரணியன் கதையில் இரணியன் வாக்காலேயே ஆரியர்கள் அந்தக் காலத்திலேயே எழுதிவைத்திருப்பது மிகுதியும் ஆச் சரியப் படத்தக்கதும், கவனிக்கத்தக்கதுமாகும்,

மற்றும், இரணியனை விஷ்ணு கொன்றவுடன் தேவர்கள் பலர் தனித்தனியாகத் தங்கள் மகிழ்ச்சியைச் சொல்லிப் பாராட்டுகிறார்கள். எப்படியெனில், வருணாசிரம தர்மம் காப்பாற்றப்பட்டதற்கு ஒருவரும்; திதி, பிண்டம் முதலியவைகள் நடைபெறமுடிந்ததற்கு ஒருவரும்; பிராமணர்கள் காப்பாற்றப்பட்டதற்கு ஒருவரும்; தங்கள் பயமும், அடிமைத் தனமும் நீங்கியதற்கு ஒருவரும்; தங்களுக்கு மக்கள் அவிர்ப்பாகம் கொடுக்கமுடிந்ததற்காக ஒருவரும்; தியானம், தபசு செய்யமுடிந்ததற்கு ஒருவரும்;—இப்படியாக இன்னும் பல காரியங்கள் செய்யமுடிந்ததற்காகப் பலரும் விஷ்ணுவைப் பாராட்டித் தோத்திரம் செய் கிறார்கள். இதுவும் 753, 754, 755-ம் பக்கங்களில் இருக்கின்றன.

எனவே, இன்றைய வருணாசிரம தர்மத்தையும், மற்றும் பார்ப்பனர்களையும், பார்ப்பனர் தங்கள் பிழைப்புக்காக ஏற்படுத்திக்கொண்டிருக்கிற வைதிக காரியங்கள் என்று சொல்லப்படும் அனேக தந்திரமான காரியங்களையும், அப்பொழுதே இரணியன் நடக்கவொட்டாமல்செய்து, பார்ப்பனர்களைத் தண்டித்து நிறுத்தி இருக்கிறான் என்பதும், பார்ப்பனர்களை நாட்டில்கூட வசிக்கவொட்டாமல் துரத்தி அடித்து இருக்கிறான் என்பதும், பார்ப்பனர்களின் உயர்வுக்கும் ஆதிக்கத்திற்கும் ஆரியக்கடவுளான விஷ்ணுவும் சிவனும் இருப்பதுதான் காரணம் என்பதும், தனது நாட்டில் அடிமையாய் இருக்க இஷ்டப்பட்டவர் களை மாத்திரம் வைத்திருந்தான் என்பதும் பாகவதத்தால் நன்றாய் விளங்குகின்றன.

ஆகவே, இரணியன் என்பதாக அந்தக் காலத்தில் ஒருவன் இருந்தானா, இல்லையா என்பது விவாதத்துக்கு இடமான பிரச்சனையானாலும், அந்தக் காலத்திலேயே சுயமரியாதை இயக்கம் வீறுகொண்டிருந்தது என்பதும்; அதுவும் பலாத்காரத்தில் ஈடுபட்டுப் பிரச்சாரம் செய்யப்பட்டிருக்கிறது என்பதும்; அதுபெரிதும் பார்ப்பனர்களை ஒழிப்பதும்; வேத சாத்திரங்களையும் பார்ப்பனர்கள் வீடுகளையும் கொளுத்துவதும்; கோயில், மடம், ஆச்சிரமம், கோபுரம் முதலியவைகளைக் கோடரி, மண்வெட்டிகொண்டு இடித்துத் தரை மட்டமாக்கி இருப்பதும் நன்றாய், தெளிவாய் விளங்குகிறது.

இரணியன் ஒரு சுயமரியாதை வீரனேயாவான். இரணியன் கதை ஒரு சுயமரியாதைக் கதையேயாகும்.

['குடிஅரசு'-கட்டுரை—26-2-1944]

## 2. இராவணன்

தலைவரவர்களே! தோழர்களே!

பாகவதத்தை எடுத்துக்கொண்டால் இரணியன் எவ்வளவு தூரம் சாதியை ஒழிக்கப் பாடுபட்டு இருக்கிறான் என்பதைத் தெரிந்துகொள்ளலாம். அவன் தீவிரமாகவே வேலை செய்திருக்கிறான். 'பார்ப்பனர் (அதாவது பார்ப்பனீயம்) எங்கு எங்கு இருக்கிறார்களோ அவர்களுடைய வீட்டை எல்லாம் இடித்துத் தள்ளுங்கள்; கையிலே மண்வெட்டி, பிக்காசுகளுடன் போங்கள். மூக்கைப் பிடித்துக்கொண்டே உட்கார்ந்து இருக்கின்றவர்களைக் கண்டால் மண்டையிலே அடியுங்கள். செய்கின்ற ஓமங்களைக் கலைத்துவிடுங்கள்' என்று கூறித் தனது ஆட்களை அனுப்பினான் இரணியன் என்பதாகப் பாகவதம் கூறுகிறது.

இதைப்போல்தான் கந்தபுராணத்தை எடுத்துக்கொண்டாலும், இராமாயணத்தை எடுத்துக்கொண்டாலும் காணலாம். பார்ப்பனீயத்தின் கொடுமையை ஒழிக்க முற்பட்டவர்களைப் பற்றித் தேவர்களிடம் பார்ப்பனர்கள் போய் என்னசொல்லி இருக்கிறார்கள்?

'இராவணன் எங்களது பூஜையைக் கலைக்கிறான்; ஓமம் வளர்க்க இடம் கொடுக்காமல் செய்கிறான்; வேதம் ஓதுவதற்குச் சம்மதிக்கமாட்டேன் என்கிறான்; யாகம் செய்ய அனுமதிக்கமாட்டேன் என்கிறான்' என்றுதான் தேவர்களிடம் பார்ப்பனர்கள் குறையிட்டு இருக்கிறார்கள். எனவே இதிலிருந்து நாம் தெரிந்துகொள்வது என்ன? அந்தக் காலத்தில் பார்ப்பனீயத்தின் கொடுமையால், நமது இந்த முன்னோர்கள் சாதியை ஒழிக்கப் பாடுபட்டவர்கள். இதனால்தான் இராக்கதர்கள்—அசுரர்கள் ஆனார்கள். சாதியை ஆதரிப்பவர்கள் ரிஷிகள், மகான்கள், மகாத்மாக்கள் ஆனார்கள்.

இதிலிருந்து எந்தவழிகளில் எல்லாம் சாதியைக் காப்பாற்ற வழிசெய்து இருக்கிறார்கள் என்பதைக் காணலாம். ஆகவே, இந்தச் சாதியை ஒழிக்க அந்த மாதிரியான புராணங்களிலும் சிலபேர் பாடுபட்டு இருக்கிறார்கள். ஆனால், அவர்களை நாளடைவில் பார்ப்பனீயம் 'அசுரர்கள்' என்று பெயரிட்டு, மக்களிடையே பிரச்சாரம் செய்து, பயமுறுத்தி வைத்திருக்கிறார்கள்.

ஆகையால்தான், மக்கள் சாதியை ஒழிப்பது என்றால் ரொம்பவும் பயப்படுகிறார்கள். யாரும் பயப்படவேண்டிய தேவை இல்லை.

[திருவொற்றியூரில், 17-1-1952-ல் சொற்பொழிவு—'விடுதலை' 21-1-1952]

தலைவரவர்களே! தோழர்களே!

இராவணனின் வீரதீரம் வெகுவாகப் புகழப்படுகின்றது. இராவணன் அரண்மனையின் சிறப்பை, அலங்காரத்தை அனுமான் வாயிலாகவே மிகவும் போற்றிப்புகழப்படு

கிறது. அனுமனே இராவணனுடைய அரண்மனையையும் அந்தப்புரத்தையும் கண்டு மிகவும் அதிசயப்படுவதுடன் அந்தப்புரத்திலே அழகான பெண்கள் உறங்க, இராவணன் அவர்களுக்கு மத்தியில் உறங்குவது 'நட்சத்திரக் கூட்டங்களிடையே பூரணசந்திரன் பொலிவுடன் தோன்றுவதுபோல இருக்கிறது' என்று வர்ணிக்கிறான். அத்தனைப் பெண்களும் இராவணனைக்கண்டு அவன் அழகிலும் அறிவிலும் வீரத்திலும் மயங்கி அவனை விரும்பித் தாங்களாகவே இராவணனைத்தேடி வந்தார்களே தவிர, ஒருவரையாவது இராவணன் கொண்டு வரவில்லை என்று சொல்லுவதோடு, சீதையையும் அவளுக்குத் திருமணமாவதற்கு முன் இந்த இராவணன் கொண்டுவந்திருந்தால் நன்றாயிருக்குமே என்றும்கூட அனுமன் நினைக்கிறானாம்.

இராவணனைப்பற்றி வால்மீகி சொல்லுகிறபோது—இராவணன் மகா கல்விமான்; தவசிரேஷ்டன்; வேதசாஸ்திர விற்பன்னன்; குடிகளையும், சுற்றத்தாரையும் இரக்கத்துடன் ஆதரிப்பவன்; தைரியசாலி; அதிபலசாலி; சுத்தவீரன்; மிகுந்த பக்திமான்; கடவுள்களுடைய பிரீதிக்குப் பாத்திரமானவன்; அனேக வரங்களைப்பெற்ற வரப்பிரசாதி என்று பல இடங்களிலும் எடுத்துக்காட்டியிருக்கிறார். இராமனைப்பற்றிச் சூதகனாகவும், வஞ்சகனாகவும், பேடியாகவும் காட்டப்படுவதுபோல—ஓர் இடத்திலாவது இராவணன் காட்டப்படவில்லை.

சூர்ப்பனகையை இராமன் மானபங்கம் செய்ததுபோல் சீதையையும் அந்தப்படியே இராவணன் செய்திருக்கமுடியும். ஆனாலும், அப்படிச்செய்யவேண்டும் என்று ஒருபோதும் இராவணன் நினைத்ததே இல்லை. சீதையை அசோகவனத்திலே தம்பியின் மகளையே அவளுக்குக் காவலாக இருக்கும்படிசெய்துவைத்தான். அதுமட்டுமல்ல; இராவணன் மிகவும் நல்லவன்; அவன் பெருமை உடையவனாகவும், பேரழகு உடையவனாகவும் விளங்கினான். ஆனால், பிராமணர்கள் யாகம் செய்வதையும், சோமரசம் அருந்துவதையும் கண்டால்மட்டும் அவர்களைக் கண்டிப்பான் என்று வால்மீகியே கூறுகிறார்.

இப்படி எல்லாம் சொல்லப்படுகிற இராவணனும் அவன் கூட்டத்தாரும் பார்ப்பனர்களுடைய விரோதிகள் என்பதால்—அவர்களைக் கொடியவர்களாக, அரக்கர்களாக ஆக்கி விட்டார்கள். இதை நாம் நன்றாக ஆராய்ந்து பார்க்கவேண்டும்.

[சென்னையில், 15-11-1954-ல் சொற்பொழிவு—'விடுதலை' 19-11-1954]

## 3. அரக்கர்கள் யார்?

இராட்சதர்கள் தபசு செய்தார்கள்; வரம் பெற்றார்கள்; அந்த வரத்தைக் கொண்டு அக்கிரமம் செய்தார்கள்—என்பதெல்லாம் இந் நாட்டுப் பழங்குடி மக்களையும் அவர்கள் தலைவர்களையும் இராட்சதர்கள் என்று சொல்லிக் கொல்லுவதற்குக் கடவுள்களும் தேவர்களும் என்ற பெயர்கொண்ட ஆரியர்கள் வழிதேடிக் கொண்ட ஒரு சாக்கே அல்லாமல், அவர்களது வரம் எதுவும் பயன்பட்டதாகத் தெரியவில்லை.

விஷ்ணு, சிவன் ஆகியவர்கள் யாவர்? எப்போது உண்டானார்கள்? எப்படி உண்டானார்கள்? எங்கிருந்து வந்தார்கள்? ஏன் வந்தார்கள்?—என்பதற்கு ஒரு ஆதாரமும் கிடையாது.

அதுபோலவே, தேவர்கள் யார்? எப்படி உண்டானார்கள்? எங்கிருந்து வந்தார்கள்? ஏன் வந்தார்கள்? உலகிற்கு அவர்களால் என்ன பயன்? — என்பதற்கும் ஆதாரமும் கிடையாது.

இவர்கள் எல்லாம் இமயமலைக்கு இப்புறம்தான்—அதாவது, 'இந்தியா கண்டம்' என்னும் பிரதேசத்தில் இருந்தார்களே ஒழிய, மற்றபடி இந்தியாவுக்கு அப்பாற்பட்ட

அய்ந்து கண்டங்களிலும் இருந்ததாகவோ, அந்தக் கண்டங்களைப்பற்றி இவர்கள் ஏதாவது தெரிந்திருந்ததாகவோ சரியான தகவல்களைக் காணோம்.

கீழ் ஏழு லோகம், மேல் ஏழு லோகம் கண்டு பிடித்தவர்கள்—ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஆசியா, அய்ரோப்பாக்களைப்பற்றி ஒன்றையும் கண்டுபிடித்ததாகவோ, அல்லது அங்குள்ளவர்கள் இந்தியாவையும் சிவ, விஷ்ணு, தேவர், அசுரர், இராட்சதர், சூரன் ஆகியவர்களை அறிந்திருந்ததாகவோ தகவல்களையும் காண முடியவில்லை.

அவதாரங்களில்கூட அக் கடவுள்களின் ஆட்சியில் அவர்களது பிள்ளை, குட்டி, மனைவி, முதலியவர்கள் வாழ்க்கையில் உள்ள இடம், மலை, ஆறு, கடல், ஊர், வீடு, வாசல் எல்லாம் இந்தியாவில் இருப்பவைகளைத்தான் சொல்லப்படுகின்றனவே ஒழிய—மற்றநாட்டு மலை, காடு, வனம், நதி, சமுத்திரம் எதுவும் சொல்லப்படவில்லை. கடவுள்கள், தேவர்கள் வாழ்க்கைகளில் காணப்படும் 'பூலோகமே' இந்தியாவாகத்தான் கருதப்பட்டிருக்கின்றதே தவிர, வேறு ஒன்றும் சேர்க்கப்படவில்லை.

இவற்றையெல்லாம் யோசித்துப்பார்த்து, இந்தியக் கண்டத்தின் பூர்வநிலை, அதாவது ஆரியர் வருவதற்குமுன் இருந்த நிலையையும் யோசித்துப் பார்த்தால்—சிவன், விஷ்ணு அல்லது சேயோன், மாயோன் மற்றும் திருக்குறள், தொல்காப்பியம் ஆகியவற்றில்வரும் 'உலகம்' முதலியவை பெரும்பாலும் இந்தியாவுக்குள் ஆரியர் வந்த பிறகு ஏற்பட்டவர்கள் தான் என்பதும்; அவை இந்தியாவைப் பொறுத்தவைகள்தான் என்பதும் சாதாரணமாய் விளங்கும். அவைகளைப்பற்றித்தான் மற்றவேறு ஆதாரங்களும் விளக்குகின்றன.

சிந்துநதி தீரத்தைப்பற்றியும் அங்கு மொகஞ்சதாரோ, ஹரப்பா முதலிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட பூர்வ சின்னங்களைப்பற்றியும் பேசுவதில், ஆரியர்களுக்குமுன் தமிழர்கள் அங்கிருந்தார்கள் என்றும் இந்தியா கண்டம் பூராவும் தமிழர்கள் இருந்தார்கள் என்றும்தான் சொல்லப்படுகிறது.

ஆனால், மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகம் இன்றைக்கு 6000, 7000 வருஷ காலத்துக்கு முந்தியது என்று சொல்லப்படுகிறது.

ஆரியர்களுக்கு முன்பே இந்த இடங்கள் நாகரிகமாய் இருந்திருந்தால் ஆரியர் இங்கு எப்படி வந்திருக்கமுடியும்? இந்தியாக் கண்டம் முழுவதும் சமயம், சமுதாயம், கலை, பழக்கவழக்கம் முதலிய யாவும் ஆரிய மயமாய்—ஆரிய ஆகமம், ஆரிய ஆச்சாரம், தர்மம், ஆரியக்கதை ஆகியவைகளே கொண்ட இலக்கண இலக்கியம், சரித்திரம், காவியம் ஆகியவை எப்படி ஏற்பட்டிருக்கமுடியும்?

கோவில்கள் எல்லாம் தமிழர்களுடையதா, ஆரியர்களுடையதா என்று பார்த்தாலும் அவற்றுக்குப் பணம் செலவு செய்தவனும், கட்டடம் கட்டினவனும், அதற்கு மானியம், மடப்பள்ளி விட்டவனும் தமிழனாக இருக்கலாம். சந்தேகமேயில்லை. ஆனால், சொந்தக் காரனும் கோவில் ஆகமக்காரனும் கடவுள் தன்மைக்காரனும் ஆரியனாகத்தானே இருக்கிறான்!

கோவில்களில் உள்ள உருவங்கள், அதன் தோற்றத்திற்கான கதைகள். பூசை, உற்சவ முறைகள், நைவேத்திய சாதனங்கள் ஆகியவை ஆரியர்களுடையவையாகத்தானே இருந்து வருகின்றன? அந்தக் கோவில்கள் கட்டப்பட்ட காலத்திலும் அப்போதுள்ள அரசர்கள் ஆட்சியிலும் ஆரிய ஆதிக்கம் தலை சிறந்து உச்ச ஸ்தானத்தில் இருந்தது என்பதற்கு—முதல், இடை, கடைச் சங்கங்களும், அப்போதிருந்த புலவர்களும் அரசர்களும், அரசநீதியும் அவர்கள் கைக்கொண்டிருந்த சமயங்களும் உதாரணமாக இல்லையா?

இந்த நிலையில் அசுரர், இராட்சதர்கள் என்பவர்கள் யாராக இருந்திருக்கமுடியும்? அவர்கள் எங்கிருந்து வந்திருக்க முடியும்? அதுவும் இந்தியாவிற்குள் உள்ள அயோத்தி,

மதுரை, டெல்லி, மிதிலை, காந்தாரம், விராடம், விதர்ப்பம், தண்டகாரண்யம், கோதாவரி, சித்திரகூடம் ஆகிய இடங்களும்—அங்கும் அதற்குப் பக்கத்திலுமே தாடகை, சூரன், சூர்ப்பநகை, மாரீசன் முதலியவர்களும் இருந்தார்கள் என்றால், இவர்கள் யாராக இருந்திருக்க முடியும்? இதைக் கண்டுபிடிக்கப் பெரிய பெரிய புராண, சரித்திர, இலக்கிய காவிய நூல் ஆராய்ச்சி ஏன் வேண்டும்?

இவை பொய்க் கதை, கற்பனைக் கதைகளாக இருந்தால் கவலை வேண்டாம்; மெய்க் கதை—சிறிதாவது நடந்த கதை என்றால், கோதாவரி நதிக்குப் பக்கத்திய தேசத்தில்தான் இராவணன் தங்கை சூர்ப்பநகை, இராவணன் தம்பி கரன் முதலியவர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்களைப் பார்த்து "உங்களைக் கொல்லவே நான் வந்தேன்" என்று இராமன் சொல்லுகிறான். முனிவர்களும், "பக்கத்தில் ஜனஸ்தானம் இருக்கிறது. அங்கு இராட்சதர்கள் இருக்கிறார்கள்" என்கிறார்கள்.

இந்தியாக் கண்டத்தின் பாகத்தைக் கடல் கொண்ட காலம் பதினாயிரம் வருஷத்துக்கு மேற்பட்டது என்கிறார்கள். ஆரியர்கள் இந்தியாவுக்கு வந்தது, 6000 வருஷத்துக்கு உட்பட்டது என்கிறார்கள். அதற்கு முன்பே தமிழர்கள் இந்தியாக் கண்டம் பூராவும் பரவி இருந்ததோடு, தமிழர் ஆட்சியும் அங்கெல்லாம் பரவி இருந்தது என்றும் சொல்லி, அஸ்ஸாம் கண்டுபிடிப்புகளையும், சிந்து கண்டுபிடிப்புகளையும் உதாரணம் காட்டுகிறார்கள்.

மீனக்கொடியோனாகிய தெற்கத்திய சம்பரான் என்னும் 'அசுர' அரசனுடன் தசரதன் சண்டை போட்டதாகவும் வால்மீகி இராமாயணத்தில் இருக்கிறது. சம்பரான் என்று ஒரு பாண்டிய மன்னன் இருந்ததாகவும் இலக்கியம் கூறுகிறது.

கதையை வளர்த்துவதற்காக, 'இராமன் சீதையை அங்கே போய்த் தேடினான்' என்று சொல்லப்பட்டிருக்கிறதே அல்லாமல்—சீதை காணாமற்போன சிறிது காலத்துக்குள்ளாகவே இராவணன்தான் தூக்கிக்கொண்டு போனான் என்பதும் தெரிந்துபோய் விட்டதாகக் காணப்படுகிறது.

அன்றியும், இராவணன் சீதையின் பக்கத்திலேயே இருந்து இலட்சுமணன் வெளியில் சென்றவுடன் தூக்கி வந்து இருக்கிறான். மாரீசன், தாடகையின் மகன் பக்கத்திலேயே வசித்திருக்கிறான். சூர்ப்பநகை தனது மூக்கறுபட்ட உடனே இராவணனிடம் சென்று இரத்த ஒழுகலோடு முறையிட்டிருக்கிறாள். இராவணன் உடனே மாரீசனோடு அதைப் பற்றிப் பேசுகிறான். விஸ்வாமித்திரன் யாகம் செய்ததும் தாடகை அதைக் கெடுத்ததும் இந்தியாவில் இன்னும் வடக்கில் என்றாலும் சமீபமாகத்தான் காணப்படுகிறது. சுக்கிரீவன், அனுமான் முதலியவர்களையும் பர்ணசாலைக்குச் சமீபத்திலேயே சந்திக்கிறான். ஜடாயு இரத்தம் காயாமல் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும்போதே, இராம-லட்சுமணர்கள் காண்கிறார்கள். இராமன், "நான் புத்தியில்லாமல் இராட்சதர்களை விரோதித்துக் கொண்டேன்" என்று வருந்துகிறான்.

ஆகையால், வால்மீகி கதைப்படி இராட்சதர்கள், இராட்சத அரசர்கள் என்று சொல்லப்பட்டவர்கள் பெரும்பாலும் திராவிட நாட்டிற்குள் அல்லது நமக்குச் சமீபத்திற்குள் தான் இருந்திருக்க வேண்டுமேயொழிய—அவர்கள் வெளிநாட்டார் என்றோ, வேறு இனத்தார் என்றோ சொல்லுவதற்குத் தக்க ஆதாரம் எதுவும் அதில் காணப்படவில்லை.

வால்மீகி இராமாயணத்தை, வால்மீகி கதைமுகமாய் எழுதியதால், வர்ணனைக் காகவும் கவர்ச்சிக்காகவும் சில கற்பனைகள் சேர்க்கவேண்டியதாக ஆகி, அவை ஒன்றுக் கொன்று முரண் படத்தக்கதாகவும் ஆகிவிட்டதால், பண்டிதர்கள் வக்கீல்களைப்போல் உண்மையைப் பற்றிய இலட்சியமில்லாமல் தங்கள் வெற்றியையே குறி வைத்தும், சில அற்ப குறிப்புகளை எடுத்துக்கொண்டும், மனச்சாட்சிக்கு விரோதமாய்க் கூச்சல் போட்டு தேவ-

அசுரர்களை உறுதிப்படுத்துகிறார்கள் என்பதல்லாமல், வேறு உண்மை என்ன இருக்கிறது? புராணங்கள், இதிகாசங்கள், வேத சாஸ்திரங்கள், ஸ்மிருதிகள் என்பவைகளுட்பட ஆரியர்கள் தங்கள் உயர்வுக்கும், திராவிடர்களை இழிவு படுத்தவும் செய்து கொண்டவைகளே தவிர வேறில்லை. அக் காலத் தமிழர்கள் ஒருசமயம் பாமர மக்களாக இருந்திருக்கலாம். ஆதலால் சமய, சரித்திர ஆதாரங்களைக் கொண்டு நாம் நம்மைக் கவனிக்காமல், தற்கால அறிவைக்கொண்டு பார்ப்பதுதான் பயன்தரக்கூடியதாகும்.

['குடி அரசு'—சித்திரபுத்திரன் என்ற பெயரில் கட்டுரை—20-9-1947]

## 4. திராவிடர்கள்

திராவிடர் கழகமானது இனத்தின் பேரால், பிறவியின் காரணமாய், நாட்டின் உரிமையின் காரணமாய்—ஆரியர்களால் இழிவு செய்யப்பட்டு அடக்கி, ஒடுக்கி, தாழ்த்தி வைக்கப்பட்டிருக்கும் மக்களின் விடுதலைக்கும் முன்னேற்றத்திற்கும் பாடுபடும் ஒரு அமைப்பு (ஸ்தாபனம்) ஆகும். விளக்கமாகச் சொல்லவேண்டுமானால், இந்துமத (ஆரிய தர்மப்படி 4-வது வர்ணஸ்தர்களாகவும் அல்லது 5-வது அவர்ணஸ்தர்களாகவும் ஆக்கப்பட்டிருக்கும்) சூத்திரர்கள் எனப்படுபவர்கள் எல்லாருடையவும் விடுதலைக்கும் முன்னேற்றத்திற்கும் உழைக்கும் கழகமாகும்.

திராவிடர்களைத்தான், 'சூத்திரர்கள்' என்பதாக இந்து மதத்தின் பேரால் ஆரியர்கள் அழைத்து வருகிறார்கள் என்பதற்குப் பல ஆதாரங்கள் இருந்து வருகின்றன. உதாரணமாக, மனுதர்ம சாஸ்திரத்தில் 10-வது அத்தியாயத்தில், 'சங்கர சாதி' என்ற தலைப்பின் கீழ், 'சாதி தர்மத்தை அனுசரிக்காதவர்கள், அனுசரிக்காதவர்களுக்குப் பிறந்தவர்கள் திராவிடர் என்ற பெயர் கொண்டவர்' என்றும், சூத்திரன் பிராமணத்தியைப் புணர்ந்தால் பெறப்படும் குழந்தைகள் 'பாக்கிய சாதியினர்'—அதாவது சமீபத்தில் வரக்கூடாத சண்டாள சாதிகள் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மற்றும், பிராமணர்களுக்குச் சூத்திரப் பெண்களிடத்தில் பிறந்த குழந்தைகள் ஆர்ய வர்த்த தேசத்தில் செம்படவன் என்று ஈன சாதியாக சொல்லப்படுவார்கள் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மற்றும், சாதி தர்மம் தவறிய கலப்பினால் பிறப்பவர்களால்தான் தோல்வேலை செய்யும் (சக்கிலி) சாதியும், பிணத்தின் துணியைப் பிடித்துக் கொள்கிறவர்களும் எச்சில் சாப்பிடுபவர்களுமான (பறையர்) சாதியும் ஏற்படுகின்றன என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'திராவிட தேசத்தை ஆண்டவர்கள் சூத்திரர்களாய்விட்டார்கள்' என்று தெளிவாகவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இது மனு 10-வது அத்தியாயம் 44-வது ஸ்லோகம் ஆகும். மற்றும் 'மிலேச்ச பாஷை பேசுகிறவர்கள் அனைவரும் தஸ்யுக்கள் என்று சொல்லப்படுவார்கள்' என்று தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. இது 10-வது அத்தியாயம் 45-வது ஸ்லோகம். 'தஸ்யுக்கள்' என்றால் திருடர்கள் என்ற கருத்தும் அதில் கீழே காட்டப்பட்டிருக்கிறது. இதில் மற்றொரு விசேஷம் என்ன என்றால் 'திராவிடன்' என்கிற பெயரைப் போலவே—ஆந்திரன் என்ற பெயரும் மனுதர்மத்தில் காணப்படுகின்றது. அதாவது, காட்டிற்குச் சென்று மிருகங்களைக் கொன்று நாட்டில் கொண்டுவந்து விற்பவன் 'ஆந்திரன்' என்று கூறப்பட்டிருக்கிறது (அத்தியாயம் 10, ஸ்லோகம் 48). எனவே திராவிடர்கள், ஆந்திரர்கள் என்பது மாத்திரமல்லாமல் கீழான, இழிவான, தீண்டப்படாத, திருடர்களான சாதியார்கள் என்பதை மனுதர்ம சாஸ்திரம் நன்றாக வலியுறுத்துகிறது என்பது 10-ம் அத்தியாயத்தில், 'சங்கர சாதி' என்ற தலைப்பில் நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது.

மற்றும், 'இவர்கள் அனைவரும் பட்டணத்துக்கும் ஊருக்கும் வெளியில் மரத்தடி, தோப்பு, மயானத்திற்குச் சமீபமான இடம் ஆகிய இடங்களில் இழி தொழிலைச் செய்யும் மக்கள் என்று யாவருக்கும் தெரியும்படியாக வாசம்செய்ய வேண்டியது' என்று 50-வது

ஸ்லோகத்தில் கூறப்படுகிறது. இப்படிப்பட்ட திராவிடர்களான மக்கள், 'நாயும் கழுதைகளும்தான் வளர்க்கவேண்டியது; மாடு முதலியன வைத்திருக்கக் கூடாது' என்று கூறுகிறது.

திராவிடத் தோழர்களே! கவனியுங்கள்! 'இவர்கள் பிணத்தின் துணியையே உடுக்க வேண்டும். உடைந்த சட்டியில் அன்னம் புசிக்கவேண்டும். உலோகப் பாத்திரங்களை உபயோகிக்கக்கூடாது. இரும்பு பித்தளை ஆகியவைகளால் செய்யப்பட்ட நகைகளையே அணியவேண்டும். இவர்கள் ஜீவனத்துக்காக எப்போதும் வேலை தேடிக்கொண்டே திரிய வேண்டும். நல்ல காரியம் நடக்கும்போது இவர்களைப் பார்க்கக் கூடாது; இவர்களோடு பேசக்கூடாது. இவர்களைத் தங்கள் சாதிக்குள்ளாகவே மணம் செய்து கொள்ளும்படி கட்டாயப்படுத்தவேண்டும். இவர்களுக்கு நேரே எதுவும் கொடுக்கக்கூடாது; உடைந்த பாத்திரத்தில் அன்னம் போட்டு வைக்கவேண்டியது; ஊருக்குள் இரவில் சஞ்சரிக்க விடக் கூடாது' என்றும் இப்படிப்பட்ட ஈன சாதியினர்கள் நல்ல வேடம் தரித்திருந்தபோதிலும் அவர்களை ஈனர்கள் என்றே கருதவேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஒரே ஒரு விமோசனம், அதென்ன தெரியுமா? அதுதான் ஏழெட்டு வருடங்களுக்கு முன்பு காந்தியார் இங்கு வந்தபோது சொன்ன மார்க்கம்—ஒரு சூத்திர ஸ்திரி வயிற்றில் பிராமணனுக்கு விவாக முறைப்படி பிறந்த பெண் மறுபடியும் பிராமணனையே மணந்ததின் மூலம் அவள் வயிற்றில் பிறந்து—இப்படியாக 7 பிறவி பிறந்தால் 7-வது தலைமுறையில் 'பிராமண சாதி' ஆகலாம் என்பதுதான். இதுதான் காந்தியார் தமிழ்நாட்டுக்கு வந்த போது திருப்பூரில் சொன்னது. மற்றும் கடைசியாக, 'சூத்திரன் பிராமணனுடைய தொழிலைச் செய்வதாலேயே பிராமணன் ஆக மாட்டான். எப்படி ஒரு பிராமணன் எந்த விதமான இழிவான தொழிலைச் செய்தாலும் அவன் பிராமணனே ஒழிய சூத்திர சாதி ஆகமாட்டானோ, அதுபோல ஒரு சூத்திரன் எவ்வளவு மேலான பிராமணன் தொழிலைச் செய்தாலும் பிராமணனாக மாட்டான்'. இது பிரம்மாவினால் நிச்சயிக்கப்பட்ட உண்மையாகும், தத்துவமாகும் (அத்தியாயம் 10, ஸ்லோகம் 73).

பிராமணன் கீழான தொழிலைச் செய்தபோதிலும் பயிரிடும் தொழிலை (உழுவதை)க் கண்டிப்பாய்ச் செய்யக்கூடாது. அதைச் செய்யாவிட்டால் ஜீவனத்திற்கு மார்க்கமில்லை என்கின்ற காலத்தில், அன்னியனைக் கொண்டு செய்விக்கலாம்; (அத்தியாயம் 10, ஸ்லோகம் 83). ஏனெனில், அந்தப் பிழைப்பு இரும்புக் கலப்பையையும் மண்வெட்டியையும் கொண்டு பூமியை வெட்டவேண்டியதாகும். ஆகையால், பிராமணர் உழுது பயிரிடல் கூடாது என்பதாகும் (அத். 10, ஸ்லோகம் 84).

தாழ்ந்த சாதியான் மேலான சாதியானின் தொழிலைச் செய்தால் அவனுடைய பொருள் முழுமையும் பிடுங்கிக்கொண்டு அவனையும் நாட்டைவிட்டு அரசன் உடனே விரட்டிவிட வேண்டும் (அத். 10, ஸ்லோகம் 96).

சூத்திரனுக்கு சம்ஸ்காரங்கள், ஓமம் வளர்த்தல் முதலியவைகளுக்கு உரிமை கிடையாது (அத். 10, ஸ்லோ. 126). சூத்திரன் எவ்வளவு தகுதியுடையவனாயினும் தன் ஜீவியத்துக்கு அதிகமாகப் பொருள் சம்பாதிக்கக்கூடாது. அப்படிச் சம்பாதித்தால் அது பிராமணனுக்கு இம்சையாக நேரும் (அத். 10, ஸ்லோ. 129).

சூத்திரனுக்கு யாகாதி கர்மங்கள் சம்பந்தமில்லை. ஆதலால், அவன் வீட்டிலுள்ள செல்வத்தைப் பிராமணன் தாராளமாக வலுவினாலும் கொள்ளலாம் (அத். 11, ஸ்லோ. 13).

அசுரர்கள் என்பது சூத்திரர்களைத்தான் என்பதற்கு ஆதாரம் மனுதர்ம சாஸ்திரத்தில், 11-வது அத்தியாயம், 20-வது ஸ்லோகத்தில் காணப்படுகிறது அதாவது, 'யாகம் செய்யாதவர்கள் அசுரர்கள்—அவர்கள் பொருளைக் கவருவது தர்மமாகும்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

திராவிடர்கள், சூத்திரர்கள்; சூத்திரர்களுக்கு யாகாதி காரியங்களுக்கு உரிமையில்லை. யாகம் செய்யாதவர்கள் அசுரர்கள். இந்த மாதிரி குறிப்புகள் மனுதர்ம சாஸ்திரத்தில் இருக்குமானால், மனுதர்ம சாஸ்திரமே இந்து மதத்திற்கு ஏற்பட்ட தர்மமானால், திராவிடர்கள் இந்துக்களானால்,—திராவிடர்களின் நிலை என்ன என்பதைப் பொதுமக்கள் உணர்ந்து பார்க்க வேண்டுமாய் விரும்புகிறேன்.

இப்படிப்பட்ட இழிவாலேற்பட்ட தன்மை திராவிட சமுதாயத்திற்கே இருக்கக் கூடாதென்றும், அவை எப்படியாவது ஒழிக்கப்பட்டே ஆகவேண்டுமென்றும், அதற்கு முக்கிய எல்லையான திராவிட நாட்டை (சென்னை மாகாணத்தைப்) பரப்பாக வைத்து—அதில் உள்ளவர்களைத் திராவிடர்களாகக் கருதி நடத்தப்படும் திராவிடர் கழக—திராவிட நாடு எழுச்சிக்கு தமிழ் நாடு, ஆந்திர நாடு, கேரள நாடு, கர்னாடக நாடு என்பதான கிளர்ச்சிகளை இந்த முக்கிய குறிப்பில்லாமல் குறுக்கே போட்டு—மொழியைப் பிரதானமாக வைத்துக்கொண்டு போராடுவதென்றால், மனுதர்ம சாஸ்திரத்தை மெய்ப்படுத்துகிறோம் என்பதல்லாமல் அதில் வேறு தன்மை என்ன இருக்கிறதாகக் காணமுடியும்?

['குடி அரசு'—கட்டுரை—20-9-1947]

## 5. இனப் பெயர்கள்

தோழர்களே!

திராவிடர் என்ற பெயர் அப்படி யாராலும் கற்பிக்கப்பட்டதல்ல. ஆரியர் என்ற பெயரும் அப்படித்தான். என்று மக்கள் அவரவர் வாழ்ந்துவந்த தேசத்தின் சீதோஷ்ண நிலைக்கேற்ப, அமைந்திருந்த அங்க மச்ச அடையாளங்களைக் கொண்டு பல இனப் பிரிவினராகப் பிரிக்கப்பட்டனரோ, அன்று இரண்டு வெவ்வேறு இனங்களுக்குக் கொடுக்கப்பட்ட பெயர்தான் .திராவிடர், ஆரியர் எனப்படும் பெயர்கள். இதே சமயத்தில் கொடுக்கப்பட்ட பெயர்தான் மங்கோலியர் என்பதும் நீக்ரோக்கள் என்பதும். உஷ்ணமான ஆப்ரிக்காக் காட்டுப் பிரதேசங்களில் வாழ்ந்துவந்த—சற்று முரடான மக்களை நீக்ரோக்கள் என்று அழைத்தனர். நல்ல குளிர்ப் பிரதேசமான மத்திய ஆசியாவில் வசித்துவந்த தவிட்டு நிற மக்களுக்கு ஆரியர் என்று பெயர் அளித்தனர். அதற்கு அடுத்தாற்போல் சற்று குட்டையாகவும் சப்பை மூக்குடனும் சைனா, ஜப்பான் பிரதேசங்களில் வாழ்ந்த மக்களை மங்கோலியர் என்று அழைத்தனர். இப் பிரதேசங்களுக்குத் தெற்கே சற்றுச் சம சீதோஷ்ணமான சமவெளிகளில் வாழ்ந்த தென்னாட்டு மக்களைத் திராவிடர் என்று அழைத்தனர்.

ஆகவே, அன்று அங்க மச்ச அடையாளங்களைக் கொண்டு மக்களைப் பல இனங்களாகப் பிரித்தார்களே ஒழிய, ஒருவன் கடவுளின் நெற்றியிலிருந்து வந்தவன் என்றோ, மற்றொருவன் கடவுளின் பாதத்திலிருந்து தோன்றியவன் என்றோ, அல்லது கண்ணிலிருந்து வந்தவன் என்றோ, காதிலிருந்து வந்தவன் என்றோ, மூக்கிலிருந்து வந்தவன் என்றோ பிரிக்கவில்லை. இதை நான் பேர் ஊர் தெரியாத எவனோ, மாட்டுக்கும் மனிதனுக்கும் பிறந்த எவனோ எழுதியதாகக் கூறப்பட்டு வரும் எந்த சாஸ்திரங்களைப் பார்த்தோ, வேதங்களைப் பார்த்தோ கூறவில்லை. சரித்திர ஆராய்ச்சி நிபுணர்களின் முடிவை ஆதாரமாக வைத்து எழுதப்பட்டதும், அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்டதும், உங்கள் நாலாவது அய்ந்தாவது வகுப்பு படிக்கும் குழந்தைகளுக்குப் பாடப் புத்தகமாக இருந்து வருவதும், அசல் ஆரியப் பார்ப்பனர்களால் எழுதப்பட்டிருப்பதுமான புத்தகங்களைப் பார்த்துத்தான் கூறுகின்றேன்.

"என்னப்பா, இன்றைக்குக் கூட்டமாமே? என்ன விசேஷம்?" என்று யாராவது இன்று ஒரு ஓட்டல் அய்யனைக் கேட்பாரானால், அவர் என்ன கூறியிருப்பார் தெரியுமா? "எவனோ ஈரோட்டிலிருந்து ஒரு அயோக்கியன் வருகிறானாம், அவன் மயிலாப்பூர்

பார்ப்பான் ஒருவனை ஏதோ பணம் கேட்டானாம். அவன் கொடுக்க மறுத்துவிட்டானாம். அதிலிருந்து பார்ப்பனர்களைத் திட்டுவதையே தொழிலாகக் கொண்டு பிரச்சாரம் செய்து வருகிறான். அதுக்கு ஏன் போகப் போறீங்க ? அவ்வளவும் பார்ப்பன துவேஷமாகவே இருக்கும் ” என்று கூறியிருப்பான். அப்படித்தானாக்கும் என்று நினைத்தே சற்று தயக்கத்துடன்தான் நீங்களும் வந்திருப்பீர்கள். யார் என்ன கூறி யிருந்தாலும் சரியே, நான் கேட்கிறேன். பண்டிதர்கள், பாவலர்கள் யாராயிருந்தாலும் பதில் கூறும்படி சவாலிட்டுக் கேட்கிறேன் :

இன்றைக்கு 200 ஆண்டுகளுக்கு முன்பு இந்தியா என்ற பெயரோ, இந்துக்கள் என்ற பெயரோ, எங்காவது வழங்கப்பட்டு இருந்ததாக உங்களில் யாராவது கூறமுடியுமா ? கூற முடியுமானால் அதற்கு உங்கள் வேதத்திலோ, சாஸ்திரத்திலோ இதிகாசங்களிலோ, ஒரே ஒரு ஆதாரமாவது காட்ட முடியுமா ? ஆதாரம் கண்டோம் என்ற யாராவது சொல்லட்டுமே பார்க்கலாம். யாராவது சொல்வார்களானால் மன்னிப்புக்கேட்டுக்கொள்ளத் தயாராய் இருக்கிறேன் ; நன்றியறிதலோடு என் தவற்றைத் திருத்திக்கொள்ளவும் தயாராய் இருக்கிறேன் ! 230 ஆண்டுகளுக்கு முன் பூகோளத்தின்படி இத் தேசத்திற்கு, இந்தியா என்று பெயர் இருந்ததாக யாராவது காட்டமுடியுமா ? இந்தியா என்பதும் இந்துக்கள் என்பதும் நடுவாந்திரத்தில், அதுவும் சமீபத்தில் ஆரியர்களால் கற்பித்துக்கொள்ளப்பட்ட பெயர்களே ஒழிய, பழைய மூலப் பெயர்கள் அல்ல. ஆனால் ஆரியர், திராவிடர் என்ற பெயர்மட்டும்— என்று தோன்றினவோ என்றுகூட வரையறுத்துக் கூறமுடியாத அளவுக்குப் பழமைப் பெயர்கள். ஆரியர் அல்லாத திராவிடர்களைத்தான்—ஆரியர்கள் ‘ தஸ்யூக்கள் ’ என்றும், ‘ சூத்திரர்கள் ’ என்றும், இழிவான வேலைகளுக்கே உரியவர்கள் என்றும், அரக்கர்கள், இராட்சதர்கள் என்றும் கூறி இருக்கின்றனர்: இதை நாம் கூறவில்லை. சரித்திர ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். பண்டித நேருகூட தம் மகளுக்கு எழுதிய கடிதத்தில், ‘ இராமாயணத்தில் குரங்குகள், அரக்கர்கள் என்று பழித்துக் கூறப்படுவது திராவிடர்களைப் பற்றித்தான் ’ என்று கூறியுள்ளார். அதாவது, புல்தரை தேடிவந்த ஆரிய லம்பாடிக் கூட்டம், திராவிடர்களோடு போராடித் தமக்கு அடிமைப்பட்டுப் பணியாட்களாக உழைக்க ஒப்புக்கொண்டவர்களைச் சூத்திரர், பஞ்சமர் என்றும், தம்மை எதிர்த்துத் தம் ஆட்சியை வெறுத்து ஓடியவர்களை அரக்கர்கள், இராட்சதர்கள் என்றும் கூறி வந்திருக்கிறது.

நம்மவர் தென்னாட்டில் பெரும்பகுதியாகவும், வடநாட்டில் ஆரியர் பெரும்பகுதியாகவும் இருப்பது—வடநாட்டிலிருந்த திராவிடர்கள் ஆரிய எதிர்ப்பைச் சமாளிக்க முடியாமல் தென்னாட்டை நோக்கி வந்திருக்கவேண்டும் என்பதைத்தான் காட்டுகிறது. ஆரியர்களின் முக்கியச் சடங்காகிய யாகத்தை எவன் பழித்தானோ, கெடுத்தானோ அவனே ஆரியர்களால் அரக்கன் என்றும், இராட்சதன் என்றும் கூறப்பட்டான். ஆகவே, யாகத்தில் உயிர்ப் பலி கூடாது ; அத்தியாவசியமான பொருள்கள் நெருப்பில் போட்டு எரிக்கப்படக் கூடாது என்று கூறும் நம்மைத்தான், ‘ அரக்கர் ’ என்கின்றனர், இந்த அன்னக்காவடி பார்ப்பனர். இன்னும் நாம்தான் யாகத்தைத் தடுக்கிறோம் ; பழிக்கிறோம். ஜீவ இம்சை கூடாது என்று செஞ்சிக் கூத்தாடிச் சர்க்காருக்கு விண்ணப்பித்துக்கொண்டு யாகங்களின் மீது தடை உத்தரவு வாங்கி வருகிறோம்.

யாகம் என்றால் என்ன என்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். ஆடு, மாடு தின்ன ஆசைப்படும் சில பிராமண பைசாசங்கள் ஒன்றுகூடிக்கொண்டு, அவற்றின் இரத்தம் வெளிப்பட்டால் ருசி கெட்டுவிடும் என்பதற்காக, அவற்றை வெட்டிக் கறி செய்யாமல் அவைகளைக் கட்டிப்போட்டு அவற்றின் விதைகளைக் கிடுக்கி கொண்டு கசக்கிக் கசக்கிச் சாகவைப்பார்கள். ஒரு ஆடோ, மாடோ இவ்விதம் சாகவைக்கப்பட பல மணி நேரங்கூட ஆகலாம். ஆனாலும், அகோர மாமிசப் பிண்டங்களான இந்த யாகப் ‘ பிசாசு ’களுக்கு அதுபற்றிக் கவலை யேது ? இவ்வாறு உயிர்வதை செய்யப்பட்ட மிருகத்தை யாக குண்டத்

திலிட்டு, அதில் நெய்யூற்றி வேகவைத்துத் தின்பதுதான் மனுதர்ம சாஸ்திரப்படி செய்யப் படும் யாகம். இப்படிப்பட்ட கோரவதை கூடாது என்று தடுத்தவர்கள்தாம் ஆரியரால் அரக்கர்களாகச் சித்தரிக்கப்பட்டனர்.

சூத்திரனுக்கு யாகம் செய்யும் உரிமை கிடையாது. யாகத்தை வெறுப்பவன் சூத்திரன். ஆகவே, யாகத்தை வெறுக்கும் திராவிடராகிய நாம் ஆரிய சாஸ்திரப்படி சூத்திரர்தான். 'ஆரியன் ஏது? சூத்திரன் ஏது?' என்று நம்மைக் கேட்கிறார்கள் சில அப்பாவி மக்கள். சட்டம் கூறமா சூத்திரன் இல்லை என்று? சூத்திரன், பிராமணன் இல்லையென்றால், கோயிலில் மணி அடிக்கும் தொழில் ஒரே சாதிக்காரன் வசமே இருக்கக் காரணம் என்ன? கோவில் அர்ச்சகர்கள் யார்? அவர்கள் ஏன் சமஸ்கிருதம் ஓதுகிறார்கள்? சமஸ்கிருதம்தான் தேவ பாஷை—மற்றவை மிலேச்ச பாஷை, நீச்ச பாஷை என்று ஆரிய சாஸ்திரம் கூறி இருப்பதை நீ அறிவாயா? திடுதிடு என்று நான்கு சாதியாரும் கோவிலுக் குள் போவோம்—சற்று இருங்கள் என்று கூறி பிராமணத் தோழன் உங்களைத் தாண்டிக் கொண்டு மூல ஸ்தானத்திற்குள் போய்விடுகிறானா, இல்லையா என்று பாருங்களேன்! இதைப் பார்த்த பிறகும் எந்தத் தோழனாவது பிராமணன், சூத்திரன் இல்லை என்று கூறுவானாயின்—'அவன் அறிவு மலையேறிவிட்டது' என்றுதானே கூறவேண்டும்? ஏன் இந்த உயர்வு—தாழ்வுக் கொடுமையை இன்னும் மூடிவைக்கப் பார்க்கிறீர்கள்? உள்ளதை மூடிவைத்தால் அது புரையோட ஆரம்பித்துவிடும் என்பதை நீங்கள் அறியீரோ?

[சுற்றுப்பிரயாணச் சொற்பொழிவின் சுருக்கம்—'குடிஅரசு' 8–5–1948]

## 6. திராவிடர்—பார்ப்பனர் யார்?

தலைவரவர்களே! தோழர்களே!

நம் நாட்டுக்கு கி. மு. 2000-ம் ஆண்டு காலத்தில் 'திராவிடம்' என்றே பெயர் இருந்தது. இராமாயணங்களிலும், புராணங்களிலும்கூட நம் நாட்டுக்கு 'திராவிடம்' என்றே பெயர் குறிப்பிடப்பட்டு இருக்கின்றது. ஆரியர் இந் நாட்டுக்குக் குடியேறிய பின்னர்தான் திராவிடம் என்பதற்குப் பதிலாக 'தென்னாடு' என்று பெயர் கொடுக்கப் பட்டது. பின்னர் 'தமிழ்நாடு' என்றும் வழங்கிவரலாயிற்று. திராவிடம், திராவிடர் என் பதால் ஆரியர் ஆதிக்கத்துக்கு என்றும் எதிர்ப்பு இருக்கும். ஆதலால் திராவிடம் என்ற உணர்ச்சியை அறவே அழித்தொழிக்கச் சூழ்ச்சி செய்துவரலாயினர்.

ஆனால், தற்சமயம் இந் நாட்டில் உள்ள பார்ப்பனர் கூறலாம்; 'நாங்கள் ஆரிய ரல்லர்; நாங்களும் இந்த நாட்டினர்தாம்' என்று. ஆனால், இதே சமயத்தில், நம் நாட்டுப் பற்றோ, மொழிப்பற்றோ சிறிதும் அவர்கட்குக் கிடையாது. ஆரிய கலாச்சாரத்தையே பின்பற்றிவருவதோடல்லாமல் நமது முன்னேற்றத்தையும், முயற்சியையும் ஒழிப்பதையே அவர்களது முழுமுயற்சியாகக்கொண்டு இருக்கின்றனர். இவைகளைக் கைவிடாமல், 'நாங்கள் ஆரியர் அல்லர்' என்று கூறிவிட்டால் போதுமா?

உதாரணமாக, ஆங்கிலோ–இந்தியர்கள் எப்படியோ அதேபோலத்தான் இந் நாட்டுப் பார்ப்பனர்களும். ஆங்கிலோ–இந்தியர்கள் நம் நாட்டுத் தாய்மார்கள் ஈன்றெடுத்த வர்கள்தாமே? ஆனால், அவர்களுக்குச் சற்றாவது நம் நாட்டு உணர்ச்சி இருக்கிறதா? நமது மக்களைப் பார்த்தால் 'டேய், டமில் மனுசா' என்று கேவலமாகத்தானே கூறு கின்றனர்? அவர்கள் யார்? எந்த நாட்டில் எப்படிப் பிறந்தவர்கள்? என்ற வரலாற்றை அறியாமல், தான் ஏதோ அய்ரோப்பாவில் பிறந்து இங்கு குடியேறியதுபோல சாதி ஆண வத்துடன் அல்லவா நடக்கிறார்கள்!

அதைப்போலவே, இந் நாட்டுப் பார்ப்பனர்களும், மேல் நாட்டில் இருந்து வந்து குடியேறிய ஆரியர்களுக்கும் நம் நாட்டவர்களுக்கும் பிறந்தவர்களாய் இருந்தும்கூட,

ஆரிய சாதி முறைகளையும், அதற்கான ஆணவத்தையும் கொண்டு, நாட்டுக்குரிய நம்மை கீழ்ச்சாதிகளாக—அடிமைகளாக மதித்து நடத்துவதும், அதற்கேற்ப நம் நாட்டு மன்னர்களை ஏமாற்றி, சாதி, மதம், கடவுள், புராணம், இதிகாசங்களின் பேரால் தங்களுக்குத் தனிச் சலுகைகளும் பெற்று, பாடுபட்டு உழைக்கும் ஏழை மக்களுக்கு வாழ்வில் வறுமையும் தொல்லையும் இருக்க, பாடுபட்டு உழைக்காத ஒரு கூட்டத்துக்கு வாழ்க்கையிலே மித மிஞ்சிய ஆதிக்கமும் இருந்துவருகிறது.

இன்றுகூட எந்தப் பார்ப்பனனையாவது பார்த்து, 'நீ என்னய்யா, பிராமணனா? என்று கேட்டால், இன்றைய நிலையில் அவன் அவ்வாறு கூறிக்கொள்ளச் சற்று அச்சங் கொண்டாலும், 'நான் பிராமணனல்லன்' என்று கூறுவானேயன்றி, 'நானும் திராவிடன் தான்' என்று கூற முன்வரமாட்டானே! ஏன்? திராவிடர் என்ற உணர்ச்சி வலுத்து விட்டால் பார்ப்பனீய ஆதிக்கத்துக்கு அன்றே அழிவு ஏற்பட்டுவிடும் என்பதாலேயாகும்.

எனவேதான், திராவிடர் கழகத்தாராகிய நாங்கள், பார்ப்பனர்களுக்குத் தனிப்பட்ட தொல்லையோ, தீங்கோ விளைவிப்பது என்பது எங்கள் கொள்கையல்ல; பார்ப்பனீயத்தை அறவே ஒழித்து மக்களிடையே ஒன்றுபட்ட சமுதாய உணர்ச்சியை உண்டாக்கவேண்டும் என்பதாகும் என்று கூறுகிறோம். இதை இந் நாட்டுப் பார்ப்பனர்கள் இனியாவது அறிந்து தங்களது தவறுதலைத் திருத்திக்கொள்ளவேண்டும். அதை விடுத்து, எங்களது முயற்சியை அழிக்க மேலும் சூழ்ச்சி செய்வார்களேயானால், அது தங்களுக்குத் தாங்களே அழிவைத் தேடிக்கொள்வதாக முடியும். பார்ப்பனர்களுக்குத் தனித் தொழிலாளர் கழகம் என்று ஒன்று இருக்கிறதா? காரணம் என்ன? உழைக்கும் வேலை அவர்களுக்குக் கிடையாது. எதற்கும் இலாயக்கற்ற பார்ப்பனனாய் இருப்பினும் கடவுள்பேரால், பாடுபடாமலேயே சுகவாழ்வு வாழ்வது ஏன்? பிறவியின் பெயரால், சாதியின் பெயரால் ஒரு கூட்டம் ஆதிக்கம் செலுத்தும் அக்கிரமம், இந் நாட்டைத் தவிர வேறு நாட்டில் இருக்கிறதா? அதுவும் சுயராஜ்யம் பெற்றபின்னரும், இந்த அக்கிரமம் இருக்கலாமா? அறிவின் பெயரால், உழைப்பின் அருமையினது பெயரால் ஒருவனுக்கு உயர்வும், நல்ல பலனும் இருக்கத்தான் வேண்டுமா? சாதியின் பெயரால் பதவியின் பெயரால் சோம்பேறிகள் எல்லாம் உயர்ந்தவர்கள் என்று புகழப்படுவதா? என்று கேட்கிறேன். இந்த உணர்ச்சியும் மானமும் ரோஷமும் உங்களுக்கு ஏற்படாமல் உங்களுக்கு என்னதான் கூலி உயர்ந்தாலும் பயன் என்ன?

[பொன்மலையில், 22-5-1949-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 28-5-1949]

## 7. மக்கள் பிரிவினை

தலைவரவர்களே! தோழர்களே!

இந்த உலகத்து மக்களை நான்கு பெரும் பிரிவுகளாக—அதாவது திராவிடர், ஆரியர், மங்கோலியர், காக்கேசியர் (நீக்ரோ) என்று நான்கு பிரிவுகளாகப் பிரித்து இருக்கிறார்கள். இந்தப் பிரிவு—கடவுள் முகத்தில் இருந்து பிறந்தவன் இவன்; காலிலே இருந்து பிறந்தவன் இவன் என்பதாகப் பிரிக்கப்படவில்லை.

இந்த மக்களின் அங்க, மச்ச அடையாளங்களுக்கு ஏற்பப் பிரித்து இருக்கிறார்கள். இந்தப் பிரிவுகள் மிருகங்களிலும் உண்டு. மாட்டை எடுத்துக்கொண்டால் இது காங்கயம் மாடு, இது பெருகூர் மாடு என்று மாட்டைப் பார்த்தவுடனேயே சொல்லிவிடலாம். பூணூல் போட்ட மாடு பெருகூர் மாடு என்றோ, பூணூல் போடாத மாடு காங்கயம் மாடு என்றோ நாம் பார்த்துச் சொல்வதில்லை. இதேமாதிரியாகக் குதிரை, நாய், குரங்கு முதலிய பல மிருகங்களிலும்—இது இன்ன பிரிவைச் சேர்ந்தது என்று அதன் உருவ அமைப்பைப் பார்த்தே சொல்லிவிடலாம்.

அதுபோலவேதான், மனிதர்களையும் அங்க அமைப்பு அடையாளங்களைக்கொண்டு பல பிரிவுகளாகப் பிரித்தார்கள். அந்தப் பிரிவிலேயே நாம் திராவிடர்கள் என்ற தலைப் பின்கீழ் வருகிறோம். எனவேதான், இன்றையதினம் நம் மக்களை ஒன்றாகக் கூட்டுவதற்கு இனத்தின் பெயரை வைத்து இருக்கிறோம். நாம் அனைவரும் இந்து மதத்தின்பேரால்-இந்துமத சாஸ்திரங்களின் பேரால்—இந்துமதக் கடவுள்களின்பேரால் சூத்திரர்களாக, இழி சாதி மக்களாகக் கருதப்படுவதற்கு—அந்தப்படியே நடத்திவருவதற்கு நம்மிடத்திலே என்ன கீழ்த்தன்மை இருக்கிறது? நம்மிடத்திலே என்ன துர்நாற்றம் வீசுகிறது? உயர் சாதிக்காரர்கள் என்பவர்களிடத்தில் என்ன நறுமணம் வீசுகிறது?

[காரைக்குடியில், 12-6-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 18-6-1950]

## 8. பார்ப்பன அகராதி

காங்கிரஸ் என்றால் என்ன? வெள்ளைக்கார ஆதிக்கத்தை ஒடுக்கி, பார்ப்பன ஆதிக்கத்தை ஏற்படுத்துவது.

வெளியேற்றம் என்றால் என்ன? பார்ப்பனரல்லாதார் சமூகத்தையும் அவர்கள் சுயமரியாதையையும் ஒழிக்க, மறுபடியும் சில குலத் துரோகிகளைக் கூட்டிக்கொண்டு வாக்குத் தத்தத்தை மீறி—மனச்சாட்சியின் பேரால்—கட்டுப்பாடாய்ச் சட்டசபைக்குப் போவதுதான்.

தொழிலாளிகள் நன்மை என்றால் என்ன? தொழிலாளிகளை ஏமாற்றி, அவர்களுக்குத் தலைவர்களாகி, அவர்கள் வோட்டுப் பெற்று—சட்டசபை, ஸ்தல ஸ்தாபனங்களில் ஸ்தானம் பெற்று, தொழிலாளர்களையே விட்டு, பார்ப்பனரல்லாதாரையும் தலைவர்களையும் ஈனத்தனமாகவும் இழி தன்மையாயும் திட்டும்படியும் அடிக்கும்படியும் கலகம் செய்யும்படியும் தூண்டி விடுவது.

இந்துமத பரிபாலன சட்டத்தால் இந்து மதம் போய்விடுமே என்று பயப்படுகிறார்கள் என்றால் என்ன? பார்ப்பனர்களுக்கு வரும்படி போய்விடுமே என்று பயப்படுவது.

மத விஷயத்தில் சர்க்கார் பிரவேசிக்கிறார்களே என்றால் என்ன? பார்ப்பனரல்லாதார் பிரவேசிக்கிறார்களே என்பது.

சட்டசபை கலையும்போது, மத பரிபாலன சட்டத்தை நிறைவேற்றுகிறார்களே என்றால் என்ன? பார்ப்பனரல்லாதார் எல்லாம் இம் மசோதாவை ஆட்சேபிப்பவர்களுக்கு மறு தேர்தலிலே வோட்டுக் கொடுக்கமாட்டார்களே என்கிற பயம்தான்.

பார்ப்பனரல்லாத தலைவர்கள் என்றால் என்ன? பார்ப்பனர் பார்த்து, "போடு, தோப்புக்கரணம்" என்றால், "இதோ போடுகிறேன், எண்ணிக்கொள்" என்று சொல்பவர்கள்தான்.

பிராமணத் துவேஷம் என்றால் என்ன? பார்ப்பனரல்லாதார்—சுயமரியாதைக்குப் பாடுபடுவதுதான்.

சுயராஜ்யக் கட்சியின் கட்டுப்பாட்டுக்குக் கட்டுப்படுவது என்றால் என்ன? பார்ப்பனரல்லாதாரை ஒடுக்க பார்ப்பனர் சொல்லுகிறபடியெல்லாம் கொஞ்சமும் தவறாமல் நடப்பதுதான்.

காங்கிரஸ் துரோகம் என்றால் என்ன? காங்கிரஸ் பேரால் பார்ப்பனர் பாமர ஜனங்களை ஏமாற்றுவதை வெளியிலெடுத்துச் சொல்வதுதான்.

காங்கிரஸ் தோல்வி என்றால் என்ன? பார்ப்பனருக்கும் அவர்களின் அடிமைகளுக்கும் சட்டசபையிலும், ஸ்தல ஸ்தாபனங்களிலும் இடம் கிடைக்காமல் போவதுதான்.

பொதுஜனங்களுக்கு இராஜீய ஞானம் இல்லையென்றால் என்ன? பார்ப்பனரல்லாதார்க்கு வோட்டுப் போடுவதுதான்.

பொதுஜனங்கள் ஏமாறவில்லை என்றால் என்ன? பார்ப்பனருக்கு வோட்டுப் போடுவதுதான்.

பிராமண விசுவாசம் என்றால் என்ன? கர்ப்பதான முகூர்த்தம் முதல், பிறந்து வளர்ந்து செத்தும்—செத்த பிறகும் பார்ப்பனருக்குப் பணம் கொடுத்துச் சடங்கு செய்து, பார்ப்பனர்கள் தயவால்தான் மோட்சத்துக்குப் போகலாம் என்று சொல்வதுதான்.

தரும பூஷணம் என்றால் என்ன? ஆயிரக் கணக்கான ரூபாய்களை ஒரு பார்ப்பனரின் காலில் கொட்டி, தங்க புஷபத்தால் அருச்சனை செய்து, அக் காலைக் கழுவி, அந்தத் தண்ணீரைச் சாப்பிடுவதுதான்.

செல்லுபடி இல்லாத எலெக்ஷன் என்றால் என்ன? பார்ப்பனர் தோற்றுப்போகும் எலெக்ஷன்கள்தாம்.

நல்ல நிர்வாக அதிகாரி என்றால் யார்? பார்ப்பனருக்கு உத்தியோகம் கொடுப்பவன்தான்.

கொடுமையான அதிகாரி என்றால் யார்? பார்ப்பனச் சிப்பந்திகள் செய்யும் அயோக்கியத்தனத்தைக் கண்டிப்பவன்தான்.

மகா அயோக்கிய அதிகாரி என்றால் என்ன? பார்ப்பனச் சிப்பந்திகள் இலஞ்சம் வாங்குவதைக் கண்டுபிடித்து, இனிமேல் இப்படிச் செய்யாதே என்று சொல்லுகிறவன்தான்.

சுதேச வைத்தியம் என்றால் என்ன? பார்ப்பனர் மாத்திரம் படிக்கத் தக்க வைத்திய முறையும், பார்ப்பனர்களே வைத்தியர்களாயிருந்து தீர்க்கத் தக்க வைத்தியமுமாகிய சமஸ்கிருதத்தில் உள்ள ஆயுர்வேத வைத்தியம்தான்.

பரதேச வைத்தியம் என்றால் என்ன? பார்ப்பனரல்லாதார் படிக்கத் தக்கதும் பார்ப்பனரல்லாதார் வைத்தியராகத் தக்கதுமான தமிழில் உள்ள சித்த வைத்தியம்தான்.

இந்தியாவுக்குப் பொது பாஷை என்றால் என்ன? பார்ப்பனர் மாத்திரம் படித்து, இந்தியா பூராவும் சுற்றி, பார்ப்பன ஆதிக்கத்தை நிலை நிறுத்த உபயோகப்படுத்தப்படும் 'ஹிந்தி' பாஷைதான்.

தமிழ்ச் சங்கம் என்றால் என்ன? அக்கிராசனாதிபதி பார்ப்பான், உப அக்கிராசனாதிபதி பார்ப்பான், காரியதரிசி பார்ப்பானாக இருக்கும் சங்கம்தான்.

தமிழ்க் கலாசாலை என்றால் என்ன? பிரின்ஸ்பால் பார்ப்பனன்; உதவி பிரின்ஸ்பால் பார்ப்பனன்; உபாத்தியாயர் பார்ப்பனன்; படிக்கும் பிள்ளைகளும் பார்ப்பனப் பிள்ளைகளாய் இருப்பதுதான்.

சமஸ்கிருதத் துரோகிகள் என்றால் யார்? தனித்தமிழ் பேசுகிறவரும், எழுதுகிறவரும்தான்.

தமிழில் தக்க ஆராய்ச்சியுடையவர் என்றால் யார்? சமஸ்கிருதத்தில் இருந்துதான் தமிழ் வந்தது, தமிழன் சமஸ்கிருத வார்த்தைகளையும் சேர்த்துப் பேசுவதுதான் தமிழுக்கு அதிக யோக்கியதையைக் கொடுக்கும் என்று சொல்லுபவர்தான்.

தமிழில் கொஞ்சமும் ஆராய்ச்சி இல்லாதவன் என்றால் யார்? தமிழ் தனிப்பாஷை; வேறு எந்த பாஷையின் உதவியில்லாமலே அது இருந்திருக்கிறது என்று சொல்லுபவன் தான்.

தேசீயப் பத்திரிகை, யோக்கியமான பத்திரிகை என்றால் எது? பார்ப்பனர்களுக்கு விரோதமில்லாமல் அவர்கள் செய்யும் அக்கிரமங்களை யெல்லாம் மூடி வைத்துவிட்டு, காங்கிரசைப் போற்றவேண்டும்; 'சுயராஜ்யக் கட்சியில்தான் தேசியத் திட்டம் இருக்கிறது. அதை ஆதரித்து ஜஸ்டிஸ் கட்சியை ஒழிக்கவேண்டும்' என்று எழுதுவதுதான்.

யோக்கியப் பொறுப்பற்ற, தேசபக்தி இல்லாத பத்திரிகை என்றால் எது? காங் கிரசின் தற்கால யோக்கியதையையும் அதில் இருக்கும் பார்ப்பனச் சூழ்ச்சியையும் வெளியி லெழுதுவதும், சுயராஜ்யக் கட்சி சுத்தமாய்ப் பார்ப்பனக் கட்சி என்று எழுதுவதுமான பத்திரிகைதான்.

['சித்திர புத்திரன்' என்ற பெயரில் கட்டுரை—'குடி அரசு' 29-8-1926]

## 9. பார்ப்பனீயம்

திரு. ஆச்சாரியார், 'பிராமண சங்கம் பல வருஷங்களாக இந்த நாட்டில் வேலை செய்து வருகின்றது' என்றும், 'எவன் தன் மனத்தை அடக்கி ஆண்டுகொண்டு யோக்கியனாக இருக்கின்றானோ அவனே பிராமணன்' என்றும் சொல்லியிருக்கின்றார்.

அப்படியானால், இப்போது 'பிராமணர்' என்று தங்களைச் சொல்லிக்கொள்ளும் பார்ப்பனர்கள் எல்லாம் தம் மனத்தை அடக்கிக்கொண்டு யோக்கியர்களாக இருக்கின்றவர் களா? அல்லது பிறர் மனத்தை அடக்கி அவர்களை ஆண்டுகொண்டு அயோக்கியர்களாக இருக்கின்றவர்களா?—என்று கேட்பதுடன், வெகு நாட்களாக இந்த நாட்டில் நடந்துவரும் 'பிராமண சங்கங்கள்' என்பவைகளெல்லாம் தங்கள் மனத்தை அடக்கி ஆண்டு யோக்கியமாய் இருந்துகொண்டு வரும் பிராமணர்களுடைய சங்கங்களா.—என்றும் கேட்கின்றோம்.

'யார் பிராமணன்?' என்று கேட்கும்போது மாத்திரம், 'தன் மனத்தை அடக்கி ஆண்டுகொண்டும் யோக்கியனாக இருந்துகொண்டும் இருக்கின்றவன் பிராமணன்' என்று சொல்லுவதும், மற்ற சமயங்களில் மான ஈனமின்றி உலகிலுள்ள சகல அயோக் கியத்தனங்களையும்—அதாவது கொலை, களவுகள், திருட்டு-புரட்டுகள் செய்வதும், சாமி தரிசனைக்கும், தரகு தரிசனைக்கும் தரகு பெறுவதும், போலீசு வேலை செய்வதும், வக்கீல் வேலை செய்வதும், இஷ்டமில்லாத பெண்களைக் கூட்டிக்கொடுத்தாவது உத்தி யோகம் பெறுவதும், அந்த உத்தியோகத்தில் இலஞ்சம் வாங்குவதும், தங்கள் வகுப் பாரைத் தவிர மற்ற வகுப்பார் தலையெடுக்காமல் அமுத்துவதும், தங்கள் பிள்ளைகளைத் தவிர மற்ற பிள்ளைகளைப் படிக்கவிடாமல் தடுப்பதும், தேசத்தையும் ஏழை மக்களையும் காட்டிக்கொடுத்து உயிர் வாழ்வதுமான காரியங்களையெல்லாம் செய்துகொண்டு, தங்களைப் பிராமணர்கள் என்று சொல்லிக்கொண்டும்—இந்த 'பிராமணத் தன்மைக்காக' கள்ளுக்கடை, வேசி வீடு முதல் கடவுள் சன்னிதானம் என்பது வரையில் தங்களுக்கு வேறு உரிமையும், மற்றவர்களுக்கு வேறு உரிமையும் இருக்கவேண்டுமென்று சொல்லிக் கொண்டு மக்களை வதைத்துக்கொண்டும்—இருக்கின்றதுமான அக்கிரமங்களை இனியும் எத்தனை காலத்திற்கு மறைக்கலாம் என்று திரு. ஆச்சாரியார் கருதிக்கொண்டிருக்கின்றார் என்பது நமக்கு விளங்கவில்லை.

தவிர, 'இராஜீய விஷயத்தில் நாங்கள் (பிராமணர்கள்) தலையிடுவதே கிடையாது' என்று சொல்லி இருக்கின்றார்.

இது உண்மையா? அப்படியானால் திருவாளர்கள் எஸ். சீனிவாசய்யங்கார், சக்கரவர்த்தி அய்யங்கார், சத்தியமூர்த்தி, கஸ்தூரி ரங்கய்யங்கார், ரெங்கசாமி அய்யங்கார், இராமானுஜ ஆச்சாரியர், இராஜகோபாலாச்சாரியார், மாளவியா, நேரு, திலகர், சாஸ்திரி, சர்மா, சாப்ரு, வி. வி. சீனிவாசய்யங்கார், மணி அய்யர், சிவசாமி அய்யர், சர். சி. பி. இராமசாமி அய்யர், சரோஜினி தேவி, பாலாம்பாள், இதே உபன்யாசகர் திரு. என். சீனிவாசாச்சாரியார் முதலியவர்கள் அரசியல் விஷயத்தில் தலையிடவில்லை என்கின்றாரா? அல்லது இவர்களை இந்தப் 'பிராமணர்'களோடு சேர்க்காமல் பேசுகின்றாரா? என்று திரு. ஆச்சாரியாரைக் கேட்கின்றோம்.

பிச்சைக்கும் புரோகிதத்துக்கும் வரும்போது மாத்திரம் தாங்கள் அரசியலில் பிரவேசிக்காதவர்கள் என்று சொல்லுவதும், உத்தியோகத்திற்கு வரும்போது வெள்ளைக்காரர்களிடம் பிராமணர்கள்தாம் அரசியலில் தலைமை வகிக்கவும் சீர்த்திருத்தத்தில் பெரிய உத்தியோகம் வகிக்கவும் யோக்கியர்கள் என்றும்; வெள்ளைக்காரர்களுக்குத் தகுந்தபடி சகல விதத்திலும் நடந்துகொள்ளும் திறமையும் சவுகரியமும் பிராமணர்களுக்குத்தான் உண்டு என்றும் சொல்லி, சகல அரசியல்களிலும் இந்தப் பிராமணர்களே புகுந்துகொண்டு வெள்ளைக்கார இராஜ்யத்தை நடத்துவதும் இந்த உபன்யாசகருக்கு உண்மையிலேயே தெரியாதா என்று கேட்கின்றோம்.

பிராமணர்கள் தங்களுக்குச் சட்ட பூர்வமாய் எவ்வித உரிமையும் ஏற்படுத்திக் கொள்ளவில்லை என்கின்றனர். இது மனதாரச் சொல்லும் பேச்சா, அல்லது தங்களைத் தவிர மற்றவர்கள் முட்டாள்கள் என்று கருதிக்கொண்டு சொல்லும் பேச்சா—என்று கேட்கின்றோம். வேதம், சாஸ்திரம், ஸ்மிருதி, ஆகமம், புராணம், மனுதர்மம், 'இந்து லா', பழக்க வழக்கம் முதலியவைகளின்பேரால் தங்களுக்கு ஏற்படுத்திக் கொண்டிருக்கும் பதவிகளும், தனி உரிமைகளும் சட்ட பூர்வமாக ஏற்படுத்திக்கொண்டதாகாதா—எனக் கேட்கின்றோம். மற்றும் கக்கூசுகளில் போர்டு பலகை போட்டு ஆண்-பெண்களுக்குப் பிரித்திருப்பதுபோல்—இன்றைக்கும் (1928-ல்) அனேக இடங்களில் (போர்டு) பலகை போட்டு 'பிராமணர்களுக்கு மாத்திரம்' என்று பிரித்திருப்பது சட்ட பூர்வமா அல்லது பலகைப் பூர்வமா—என்று கேட்கின்றோம்.

'பிராமணரல்லாதார் இயக்கம் உத்தியோகத்திற்கு ஏற்பட்டதென்று எண்ணிக் கவலையில்லாமல் இருந்துவிட்டோம். அது, 'குடிஅரசு' இயக்கத்தில் சேர்ந்துகொண்டு, (சுயமரியாதை) உரிமையை ஸ்தாபித்துக்கொள்ளுவதற்கு என்று சொல்லிக்கொண்டு, மத விஷயத்திலும் கோவில் விஷயத்திலும் புகுந்து நம்மை அடியோடு கவிழ்க்க ஆரம்பித்து, ஆயிரக்கணக்கான வருடங்களாய் நாம் (பிராமணர்கள்) அனுபவித்து வந்த உரிமையை இப்போது பலாத்காரமாய்ப் பிடுங்கிக்கொள்ள ஆரம்பித்திருக்கிறது; உதாரணமாய், சுயமரியாதைக்காரர்கள் செய்துவரும் பிரச்சாரத்தின் கொடுமை ஊர் ஊராகச் சுற்றிப் பார்ப்பவர்களுக்குத்தான் தெரியும்' என்பதாகச் சொல்லியிருக்கிறார்.

இந்த வாக்கியங்களால் பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின் உண்மையும், சுயமரியாதை இயக்கத்தின் தத்துவமும் விளங்காமல் போகாது. வெறும் உத்தியோகத்தைப் பற்றிப் பார்ப்பனரல்லாதார் இயக்கம் பாடுபடுவதாகப் பார்ப்பனர்கள் நினைத்துக்கொண்டிருந்த காலத்தில், அவர்களுக்கு இதைப் பற்றி ஒரு சிறிதும் கவலைப்படுவற்கு நியாயம் இல்லை. ஏனெனில், எவ்வளவு பிரயத்தனப்பட்டாலும் சர்க்கார் உத்தியோகங்களிலிருந்து பார்ப்பனர்களைச் சுலபத்தில் விரட்டிவிட முடியாது. ஏனெனில், வெள்ளைக்காரர்களிடமிருந்து உத்தியோகம் பெறும் யோக்கியதையும், சவுகரியமும், அவைகளுக்கேற்றபடி நடக்கும் தன்மையும் பார்ப்பனரல்லாதவர்களுக்கு இல்லையென்பது பார்ப்பனர்களுக்கு நன்றாய்த் தெரிந்த விஷயம். அன்றியும் பார்ப்பனரல்லாதார்க்கு விரோதமாய் எதிர்ப் பிரச்சாரம் செய்ய, பார்ப்பனர் அல்லாத பல கூலிகள் தங்களுக்குச் சுலபமாய்க் கிடைத்து

விடுவார்கள் என்கின்ற தைரியமும் இருந்தது. ஆதலால், அவர்கள் இதை இலட்சியம் செய்யவில்லை. ஆனால், இப்போது சுயமரியாதை இயக்கமானது பார்ப்பனச் சூழ்ச்சிகள் பலிக்கவிடாமல் செய்வதோடு, பார்ப்பனரல்லாத கூலிகளும் பார்ப்பனர்களோடு முன்போல் அவ்வளவு தாராளமாய்ச் சேருவதற்கில்லாமல் செய்வதால், இப்போது பார்ப்பனர்கள் பயந்து தீரவேண்டியதாகிவிட்டது. அன்றியும் சு. ம. கொள்கைகள் பார்ப்பன ஆதிக்கத்திற்கு ஆதாரமானதும், ஆணி வேரானதுமான—பார்ப்பன மதத்தையும், பார்ப்பன சாமி கோயில்களையும் கழுத்துப் பிடியாய்ப் பிடித்துக்கொண்டதால் பார்ப்பனர்கள் திமிறுவதற்கு இடமில்லாமல் கண் பிதுங்க விழிக்கின்றார்கள். மேலும், இந்த இயக்கம் வெற்றிபெற்றது என்று சொல்லுவது, பார்ப்பனர்கள் ஆயிரக்கணக்காக அனுபவித்து வந்த தனி உரிமைகளைப் பிடுங்கி எல்லா மக்களையும் சமமாக்கித் தீரவேண்டியதாதலால், சுயமரியாதை இயக்கத்தை ஒழிக்க முயற்சிக்கவேண்டியது பிராமண மகா சபையின் கடமையாகப் போய்விட்டது என்பதில் அதிசயம் ஒன்றும் இல்லை.

'கிராமங்களில் கூட இந்த இயக்கம் பரவிவிட்டது' என்று திரு. ஆச்சாரியார் சொல்லுவதிலிருந்து நாம் சந்தோஷப்பட வேண்டியதானாலும்—அது பரவவேண்டிய அளவுக்கு ஆயிரத்தில் ஒருபங்குகூட இன்னும் (1928-ல்) பரவவில்லை என்பது நமது கருத்தாகும்.

தவிர உபன்யாச முடிவில், 'சுயமரியாதை இயக்கம் பிராமண துவேஷ இயக்கமானதால் அந்த இயக்கத்தால் பிராமணர்களுக்குக் கெடுதியேற்படாமல் தடுப்பதற்காக, சைமன் கமிஷனைத் தஞ்சமடைய வேண்டும்' என்பதாகச் சொல்லியிருக்கின்றார்.

தாங்கள் மாத்திரம் எவ்வளவு இழிவானதும் அயோக்கியத்தனமான காரியங்களைச் செய்தாலும் பிராமணர்கள் என்பதும்;—தங்களைத் தவிர, மற்றவர்கள் எவ்வளவு யோக்கியர்களானாலும் அவர்கள் தங்களது 'வைப்பாட்டி மக்கள்' என்றும் 'சூத்திரர்கள்' என்றும், 'சண்டாளர்கள்' என்றும், தொடக்கூடாதவர்கள்–தெருவில் நடக்கக்கூடாதவர்கள் என்றும் பல மாதிரியான இழிவான வார்த்தைகளால் அழைப்பதும், கொடுமைப்படுத்தி வதைப்பதும் துவேஷமாகாமல் போவதும்; இம்மாதிரி செய்வது யோக்கியமானதல்லவென்று நாம் சொல்லுவது மாத்திரம் துவேஷமாவதுமானால், இந்தத் துவேஷம் உலகம் முழுமையும் ஏற்பட வேண்டும் என்றே ஆசைப்படுவதோடு, இந்தத் துவேஷமில்லாத தமிழ் மக்கள் சுயமரியாதை அற்றவர்கள் என்றே சொல்லுவோம்.

திரு. ஆச்சாரியார்—எந்தக் காரணத்திற்காகத் தங்கள்மீது துவேஷம் ஏற்படுவதாகச் சொல்லுகின்றாரோ—அல்லது சுயமரியாதைக்காரர்கள் எந்த விஷயங்களைச் சொல்லிக் கொண்டு பார்ப்பனர்கள்மீது துவேஷம் உண்டாகும்படி செய்கின்றார்கள் என்று நம்புகின்றாரோ—அந்தக் காரணங்களைப்பற்றி ஒரு சிறிதாவது கவனித்தாரா? என்றும் அல்லது அதற்கு ஒரு சிறிதாவது சமாதானம் சொல்ல முற்படுகின்றாரா? என்றும் கேட்கின்றோம்.

திரு. ஆச்சாரியாரின் கூட்டம் ஆயிரக்கணக்கான வருஷங்களாய் ஒரு உரிமையை அனுபவித்துக்கொண்டு வந்ததாலேயே அவர்களுக்கு அது நிரந்தர பாத்தியமாய் விடுமானால்—அதனால் மனிதத் தன்மையை இழந்து கஷ்டப்படுகின்ற மக்கள் அவ்வுரிமையை பலாத்காரத்தால் பிடுங்கிக்கொள்வதல்லாமல், வேறு என்ன வழி அவர்களுக்கு இருக்கின்றது? என்று கேட்கின்றோம். தங்களுடைய ஆயிரக்கணக்கான வருஷ அனுபோக பாக்கியதையைச் சொல்லாமல்—வேறு யோக்கியமான நியாயத்தைச் சொல்லித் தங்கள் உரிமையைக் காப்பாற்றிக்கொள்ள வந்தால், அதற்கு நாம் தாராளமாய் இடம் கொடுக்கத் தயாராய் இருக்கின்றோம். அப்படிக்கில்லாமல், வெறும் அனுபோக பாத்தியம் மாத்திரம் சொல்லுவதானால் அதை யார் ஒப்புக்கொள்ள முடியும்? ஏனெனில், பார்ப்பனர்கள் மீது நாம் சொல்லும் குற்றமே அதுதானேயல்லாமல் வேறு என்ன?

அதாவது, இந்தப் பார்ப்பனர்கள் வேதம் என்றும், மதம் என்றும், சாமி என்றும், பூதம் என்றும் புரட்டுகள் கற்பித்து அவைகளின்பேரால் நம்மை ஏமாற்றி, நம்மைத் தாழ்த்தி, நம்மீது ஆயிரக்கணக்கான வருடங்களாய் ஆதிக்கம் செலுத்திவருகின்றார்களாதலால்—அந்த ஆதிக்கத்தை ஒழித்து, நாம் விடுதலை பெறவேண்டும் என்றுதான் சொல்லிவருகின்றோம். இந் நிலையில் இருக்கின்ற நாம் எப்படி, 'காலாவதி தோஷத்தை' ஒப்புக் கொள்ள முடியும்?

அன்றியும், இந்த ஆதிக்கத்தையும் உரிமைகளையும் நிலைநிறுத்திக்கொள்ள சைமன் கமிஷனைத் தஞ்சமடைந்து விஞ்ஞாபனம் செய்துகொள்ள வேண்டும் என்கின்றார்.

இதை, தான் மாத்திரம் தனியாய்ச் சொல்லுவதாக இல்லாமல் பிராமண சபை, வருணாசிரம பரிபாலன சபை, வைதிகப் பிராமண சபை ஆகியவைகளும் இக் கொள்கைகளை ஒப்புக்கொண்டிருப்பதாகவும் சொல்லுகின்றார். இதிலிருந்து சைமன் கமிஷனின் சக்தி எவ்வளவு என்பது விளங்காமல் போகாது.

எனவே, சுயமரியாதை இயக்கத்தைக் குற்றம் சொல்லுகின்றவர்களும், சைமன் கமிஷனைப் பகிஷ்கரிக்க வேண்டும் என்று கூலிப் பிரசாரம் செய்கின்றவர்களும் இதிலிருந்தாவது பாடம் கற்றுக்கொள்வார்களாக!

['குடிஅரசு'—தலையங்கம்—26-8-1928]

## 10. பிரம்மஞான சங்கமும் பார்ப்பனரல்லாதாரும்

உலகத்திலுள்ள மக்கள் மனித சக்தியை உணராததற்கும் அறிவின் அற்புதத்தின் கரை காணாததற்கும், பல்வேறு பிரிவுகளாய்ப் பிரித்து ஒற்றுமையைக் கெடுத்திருப்பதற்கும், சுயநலம், பிறநல அலட்சியம், துவேஷம் முதலியவைகள் ஏற்பட்டுப் பரோபகாரம், இரக்கம், அன்பு முதலியவைகள் அருகிப் போனதற்கும், இயற்கை இன்பங்களும், சுதந்திர உரிமைகளும் மாறி, துக்கத்தையும் நிபந்தனை அற்ற அடிமைத்தனத்தையும் இன்பமாகவும் சுதந்திரமாகவும் நினைத்துக்கொள்ள வேண்டியதான நிர்ப்பந்தமுள்ள செயற்கை இன்பத்தையும் சுதந்திரத்தையும் அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டியதற்கும் முக்கிய காரணம் மதங்கள் என்பதே எமது அபிப்பிராயம்.

இந்த மதங்களேதாம் மக்களுக்குக் கொடுங்கோன்மையான ஆட்சியை ஏற்படுத்துவதற்கும் காரணமாயிருந்தனவென்றுகூடச் சொல்லவேண்டியிருக்கிறது.

உலகத்தில் பல காரணங்களால் ஏற்படும் பூகம்பம், எரிமலைக் குழம்பு, பூமிப் பிளவு, மண்மாரி, மழை, வெள்ளம், புயற்காற்று போலவும், காலரா, பிளேக் முதலிய ரோகங்கள் போலவும் மனித சமூக வீழ்ச்சிக்கு அடிக்கடி வேறு வேறு வேஷத்தின்பேரால் மதங்கள் என்பவைகளும் தோன்றிக்கொண்டே வருவதுண்டு.

இம் மதக் கேடுகளை உணர்ந்த அனேகரும், உண்மையிலேயே அக் கெடுதல்களை ஒழிப்பதற்கென்று வேலை செய்தவர்கள் அனேகரும் அந்த மதத்தை அப்படியே வைத்துக் கொண்டு கொள்கைகளுக்கு வேறுவித வியாக்கியானம் செய்தும், மற்றும் அம் மதத்திற்கு வேறு கொள்கைகளைப் புகுத்தியும், மற்றும் வேறு மதத்தை ஏற்படுத்திப் பழைய கொள்கைகளையே வேறு ரூபத்தில் வைக்கும் பலவித மாயவேலை செய்து வந்தும் ஒரு விதத்திலும் வெற்றி பெறாமல் பழைய நிலையிலேயே இருந்திருக்கிறார்கள்.

மற்றும் சிலர் சுயநலங்கொண்டு தங்கள் சமூக உயர்விற்கும், வகுப்பு ஆதிக்கத்திற்கும் ஆதாரமாகச் சூழ்ச்சிகள் செய்து, மக்களை ஏமாற்றிப் பல தந்திரங்கள்மூலம்

பழைய கொள்கைகளையே நிலை நிறுத்தி வஞ்சித்து வருகின்றார்கள். இந்த இரண்டிற்கும் தோற்றத்தில் வித்தியாசமிருந்தாலும் காரியத்தில் ஒரே பலனைத்தான் கொடுத்து வந்திருக்கின்றன.

இந்த நிலையிலேயே, அதாவது மக்களை அறியாமையில் ஆழ்த்தவும், சிலரின் ஆதிக்கத்தை வலுப்படுத்தவுமாக இது சமயம் நமது நாட்டில்—சிறப்பாகத் தமிழ்நாட்டில் கற்றறிந்த கூட்டத்தார் என்னும் பார்ப்பனரது உதவிகொண்டு ஒருவாறு நாட்டில் உலவுகின்ற புதிய மதத் தோற்றங்களில் 'பிரம்ம ஞான சங்கம்' அல்லது 'தியாசபிகல் சொசைட்டி' என்பதும் ஒன்று. அது தலைமைப் பேராசையும், கீர்த்தி வெறியும்கொண்ட ஒரு அய்ரோப்பிய மாதின் ஆதிக்கத்திலும், வெள்ளைக்காரர்களின் பண வலிமையிலும் ஒருவாறு செல்வாக்குப் பெற்று உலவுவதுடன். ஏற்கெனவே பல காரணங்களால் உயர்வு-தாழ்வுக் கொள்கையால் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், மூட நம்பிக்கையால் அறிவு வளர்ச்சி பெறாத மக்களுக்கும் பெரிதும் இடையூறாகத் தோன்றி இருக்கின்றது என்றுதான் சொல்ல வேண்டும்.

இச் சபை செல்வமும், செல்வாக்கும் கொண்ட ஒரு ஸ்தாபனமாயிருப்பதால் மேற்கண்ட இரண்டிலும் ஆசையுடையவர்களான பார்ப்பனர்கள் தங்கள் ஆதிக்கத்திற்கு இதை ஒரு சாதனமாய் உபயோகித்துக்கொள்ளக் கருதி, ஒருவாறு அதில் போய்க் குவிந்துகொள்ளுகின்றார்கள்; அதனால் பலனும் அடைந்துவருகின்றார்கள்.

நிற்க! இதன் கொள்கைகள் எவை என்று பார்ப்போமானால்—சத்தியம், சகோதரத் தன்மை ஆகியவைகள் முக்கியமானவையாகும்.

அன்றியும், கடவுள்கள்—இராம, கிருஷ்ணாதி அவதாரங்கள், தேவர்கள், மகாத்மாக்கள், தேவாத்மாக்கள், உலகத்தை இரட்சிக்க உலகக் குரு தோன்றப் போகிறார் என்பது; மகாத்மாக்களுடனும், தேவர்களுடனும் சம்பாஷணை நடத்துவதென்பது; புராணம், இதிகாசம், கீதை ஆகியவைகளில் சிலவற்றை முழுதும் சிலவற்றை ஒரு அளவுக்கும் ஒப்புக்கொள்வது; முன் ஜன்மம் அதன் நடவடிக்கைகளை அறிவது; மற்றும் இது போன்றவைகளில் நம்பிக்கையுடையவர்களும் இதை நேரில் தினம் அனுபவிக்கின்றவர்கள் என்பவர்களும் இம் மதஸ்தராவார்கள் என்று சொல்லப்படுகின்றது.

ஆனால், காரியத்தில் இவர்கள் நடவடிக்கை எப்படிப்பட்டது என்று பார்க்க வேண்டுமானால், அதை இந்தச் சங்கத்தில் சேர்ந்து இருக்கும் நபர்களைக்கொண்டு தெரிந்து கொள்ளலாம். இதில் சேர்ந்திருப்பவர்களில் பார்ப்பனர்களே முக்கியமானவர்கள்; அதிலும் வருணாசிரமக்காரரும், வேத சாஸ்திர, இதிகாச, புராணம் முதலியவைகளில் நம்பிக்கையும் பக்தியும் உடையவர்களாம். அவர்கள் நடவடிக்கைகளைக் கவனிப்போமானால் பேச்சுக்கும் நடவடிக்கைக்கும் சிறிதும் சம்பந்தமற்றவர்கள் என்பதும், மக்களை ஏய்க்க வெளியில் ஒரு கொள்கையும், தங்கள் ஆதிக்கத்திற்கு உள்ளுக்குள் ஒரு கொள்கையும் உடையவர்கள் என்பதும் விளங்காமல் போகாது.

சுமார் இரண்டு வருடங்களுக்கு முன்பாக திருநெல்வேலியில் கூட்டப்பட்ட திருநெல்வேலி ஜில்லா சுயமரியாதை மகாநாட்டில் கொண்டுவரப்பட்ட, 'எல்லா இந்துக்களுக்கும் கோவில் பிரவேசம் கொடுக்கவேண்டும்' என்கின்ற தீர்மானத்தை உரமாய் எதிர்த்தவர் பிரம்மஞான சங்கத்தில் அதிக பக்தியும் நம்பிக்கையும் பற்றுதலும் உடையவரான நண்பர் திருவாளர் நெல்லையப்ப பிள்ளையே ஆவார்கள். அவர்கள் சொன்ன ஆட்சேபம் என்னவென்றால்,

'ஆதித் திராவிடர்கள் முதலியவர்கள் அசுத்தமுள்ளவர்களானதால் கடவுள் அருகில் செல்லவோ பூசை முதலியவைகள் புரியவோ அருகதை அற்றவர்கள்' என்றும், 'கடவுளின் அருகில் அவர்களைச் செல்லவிடக்கூடாது' என்றும் சொன்னார்கள்.

அதை ஆட்சேபித்து அவ்வூர் பிரபல சைவ மக்களும், சைவ தேசிகர்களும் தக்க காரணம் காட்டி மறுத்தார்கள். முடிவில் ஓட்டு எடுக்கும்போது பிரம்மஞான சங்கத்தைச் சேர்ந்த பிரபலஸ்தரான திருவாளர் பென்ஷன் தாசில்தார் நெல்லையப்ப பிள்ளை அவர்கள் ஒருவர் மாத்திரமே எதிரிடையாகக் கை தூக்கினார். இந்த விஷயத்தில் அச் சங்கத்தின் ஏக தலைவரான திருமதி பெசண்ட் அம்மையார் அவர்களும் அதே அபிப்பிராயத்தையே சொல்லி இருக்கிறார்கள். அதாவது: 'ஆதித் திராவிடர் முதலியவர்கள் பரிசுத்தமற்றவர்களானதால் அவர்கள் தீண்டப்படாதவர்களானார்கள்' என்று சொன்னார். அதுமாத்திரமல்லாமல், இவர்கள் சமீபத்தில் காசியில் பல்கலைக்கழகத்தில் மாணாக்கர்களின்முன்பு பேசிய காலத்தில் சாதிப் பிரிவுகளை அதாவது, வருணாசிரமத்தை ஆதரித்து, 'தேச நன்மையை உத்தேசித்து அது அவசியம்' என்றும் பேசி யிருக்கின்றார்கள்.

ஆகவே, வருணாசிரம தருமமும், தீண்டாமையும் ஆதரிக்கப்பட்ட ஒரு ஸ்தாபனத்தால் நாட்டுக்கு எந்தவிதத்தில் சகோதரத் தன்மையும் ஒற்றுமையும் அன்பும் சத்தியமும் உண்டாகக்கூடும் என்பதை அறிவாளிகள் யோசித்துப் பார்க்க வேண்டுமாய் விரும்புகின்றோம்.

மற்றபடி, இந்த ஸ்தாபனத்தில் நடைபெறும் மற்ற விஷயங்களை நாம் இந்த வியாசத்தில் புகுத்த இஷ்டப்படவில்லை. ஆதலால், அதைப்பற்றி நாம் எழுத வரவில்லை. அரசியல் துறையில், பார்ப்பனரல்லாதார்களுக்கு இந்தச் சங்கத்திலுள்ள வருணாசிரமப் பார்ப்பனர்களின் தொல்லையும், வகுப்பு ஆதிக்கப் பேராசையும், (இச் சங்கத்தின்) தலைவியால் பார்ப்பனரல்லாதார்களுக்கு ஏற்படும் கொடுமையும் அளவிடற்பாலதல்ல.

சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் 'பிரம்மஞான சங்கம்' என்பது ஆரிய தர்மப் பிரச்சாரம், வருணாசிரம தர்ம பரிபாலனம், பிராமண மகாசபை என்பனபோன்ற பார்ப்பன ஆதிக்கப் பிரச்சார சபைகளில் ஒன்றே ஒழிய வேறல்ல. அதில் மேற்கண்ட சபைகளாவது வெளிப்படையாய் நம்முடன் போர் புரிகின்றன என்று ஒருவாறு சொல்லலாம். ஆனால், இந்த பிரம்மஞான சங்கம் என்பதோ சூழ்ச்சியின்மூலம் நம்மைக் கழுத்தறுத்து வருகின்றது. ஆதலால், பார்ப்பனரல்லாதார் பிரம்மஞான சங்கத்தில் சேருவது தற்கொலைத்தன்மை பொருந்தியது என்றே சொல்லுவோம்.

சமத்துவக் கொள்கையை அழித்துப் பார்ப்பனீயத்தைப் புகுத்த திருஞான சம்பந்தர் என்ற பார்ப்பனர் உதித்து 'சைவத்தைக் காப்பாற்றிய கதை'யைப் போலவே, நமது பார்ப்பனரல்லாதார் இயக்கத்தை அழித்துப் பார்ப்பனீயத்தைப் பரப்ப பெசண்ட் அம்மை என்னும் 'லோக மாதா' வந்து பிரம்மஞான சங்கத்தால் மக்களுக்கு 'பிரம்மஞானம்' புகட்டுகிறார் என்றுதான் சொல்லவேண்டும். ஒரு சமயம் அந்த ஸ்தாபனத்திற்கு ஏற்பட்டிருக்கிற செல்வாக்கால் தங்களது சுயநலத்திற்கு ஏதாவது வழி செய்துகொள்ளலாம் எனக் கருதிப் பார்ப்பனரல்லாதாரில் சிலர் அதில் சேருவதானாலும், சுயமரியாதைக் கொள்கையை ஒப்புக்கொள்ளுபவர்கள் அதில் கலந்துகொள்வது சிறிதும் பொருந்தாததாகும். அதில் உள்ளவர்களில் பெரும்பான்மையோரின் மனப்பான்மையையும் முக்கியஸ்தர்களில் தனித்தனி நபர்களின் மனப்பான்மையையும் அறிந்தே நாம் இந்தப்படி எழுதுகின்றோம்.

['குடி அரசு'–தலையங்கம்—9-12-1928]

## 11. பார்ப்பனீயம்: தடைக்கல்

உலகம் முழுவதும் விழிப்படைந்து முன்னேறிக்கொண்டிருக்கிற காலத்தில்—குறிப்பாக எல்லா சமூகத்தையும்விட, மதசம்பந்தமான பிடிவாதத்தில் இணையற்ற முகமதிய அரசர்கள் ஆட்சி செய்யும் நாடுகளும் கூட அரசுரிமையை இழந்தாவது சீர்திருத்தத்தைப்

பரப்பவேண்டும் என்று முயற்சித்துக் கொண்டிருக்கும் அரசர்களுக்குக் கட்டுப்பட்டு நடந்து வரும் இக் காலத்தில்—இந்தியா மாத்திரம் ஒரு கடுகளவு கூட தன் நிலையைவிட்டு அசையாமல் இருக்கக் காரணம் என்னவென்பதை மக்கள் யோசித்துப் பார்த்தால் விளங்காமற் போகாது.

நிற்க, பொதுவாக உலக மக்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து, சகோதர பாவம் கொள்ளுவதற்கு உலகத்தில் முதல் தடையாயிருந்தது—இருப்பது—'மதங்கள்' என்று சொல்லப்படுபவைகளேயாகும்; இரண்டாவது, அதன் உட்பிரிவுகள் ஆகும்; மூன்றாவது, பாஷைகளாகும். இதை அனுசரித்து இட வித்தியாசங்களும் ஆகும். உதாரணமாக, பவுத்தர்கள், கிறித்தவர்கள், முகமதியர்கள், இந்துக்கள் என்பன போன்ற மதப்பிரிவுகள் உலகத்தில் இல்லாமலிருந்தால் மக்கள் சமூகத்தைப் பெரும்பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் காட்டவும்—ஒரு நாட்டாருடைய சுக துக்கங்கள் மற்ற நாட்டார்களுக்குச் சம்பந்தமில்லாமலிருக்கவுமுள்ளதான நிலை உலகத்தில் இருக்கவே முடியாது என்னலாம்.

வேண்டுமானால், ஒரு சமயம் தேசத்தின் பேரால் மக்களையும் பிரித்துக் காட்ட வேண்டியதாக ஏதாவது ஏற்பட்டால் ஏற்படலாம். அப்படிக்கு இருந்தாலும் துருக்கியருக்கும் ஆப்கானிஸ்தானத்திற்கும் உள்ள பிரிவுகள் போன்ற பிரிவுகளும்; அமெரிக்காவுக்கும் அய்ரோப்பாவுக்கும் உள்ள வித்தியாசம் போன்ற பிரிவுகளும் போல இருக்குமே ஒழிய—எக்காரணத்தைக் கொண்டும் ஒற்றுமைப்படமுடியாததும், ஒரு தேசத்தையோ, ஒரு சமூகத்தையோ அடியோடு கொன்று ஒரு தேசத்தார் வாழத் துணியும்படியான பிரிவுகளாகவும்—மற்றவர்களைப்பற்றி ஒரு சிறிதும் கவலை கொள்ளாமல் தங்கள் தங்கள் சமூக நன்மையை மாத்திரம் கவனிக்கக்கூடிய பிரிவுகளாகவும்—ஒருவருக்கொருவர் நடை, உடை, பாவனை, பழக்க வழக்கம் முதலியவைகளால் வெறுப்புக் கொள்ளும் பிரிவுகளாகவும் பிரிந்திருக்க முடியவே முடியாது என்பது நமது உறுதியாகும். கிறித்தவர்களுக்குள் பல பிரிவுகள் இருந்தபோதிலும் மதம் என்கிற ஒரு காரணத்தால் ஒன்றுபட்டு உலகத்தில் உள்ள எல்லாக் கிறித்தவர்களும் இந்தியாவின் ஆதிக்கம் முதலிய விஷயங்களில் எதிரிகளாகவே இருந்து—இந்தியாவை உறிஞ்சி வருகின்றார்கள் என்பதை தினமும் உணருகிறோம். அதுபோலவே, உலகத்திலுள்ள எல்லா முகமதியர்களும் தங்கள் மதத்தின் பேராலும் சமூகத்தின் பேராலும் தங்களது நன்மையைக் குறிக்கொள்ளும்போது—இந்துக்கள் என்பவர்களுக்கும் கிறித்தவர்களுக்கும் எதிரிடையாய் இருக்க நேர்ந்தாலும் சிறிதும் அபிப்பிராய பேதமில்லாமல் ஒன்றுசேருகின்றார்கள்.

அதுபோலவே, இந்துக்கள் என்பவர்களும் மதவிஷயங்கள் என்பவைகளில்—முகமதியர்கள், கிறித்தவர்கள் என்பவர்களுக்கு எதிராக ஒன்றுசேர முடியாதவர்களாயிருந்தாலும் கூட ஒன்றுசேர வேண்டும் என்கின்ற உணர்ச்சிகளை எளிதில் அடைவதன்மூலம் எதிரிகளாகக் கருதத் தக்கவர்களாகிவிடுகின்றார்கள். இது சரியா, தப்பா அல்லது இதற்கு ஏதாவது பொருள் உண்டா என்பவைகள் ஒருபுறமிருந்தாலும்—முக்கியமாய், மதத்தின் பலனாய் வேற்றுமை உணர்ச்சிகள் தோன்றியே தீருகின்றன என்பதை எவரும் மறுக்க முடியாது. இப்படியெல்லாம் இருந்தாலும்கூட, மேல்நாட்டில் உள்ள ஒவ்வொரு மதக்காரர்களும் சமீப காலமாய்த் தங்கள் பிடிவாத குணங்களை விட்டு முதலில் தங்களுக்குள் ஒன்றுபடுவதற்கு முயற்சி எடுத்துக்கொண்டு, அம் முயற்சிக்கு எதிரிடையாய் இருப்பவைகளைத் தகர்த்தெறிந்து ஒரே சமூகமாக ஆவதற்கு மிக முனைந்து வருகின்றார்கள். இம் முயற்சிக்கு விரோதமாக மதத்தின் பேராலும் தெய்வத்தின் பேராலும் இருக்கும் தடைகளைக்கூட வெகு சுலபத்தில் தகர்த்தெறியத் துணிந்து வருகின்றார்கள்.

உதாரணமாக, இம்முயற்சியில் சிறிதளவானாலும் முதலில் வழிகாட்டின பெருமை மேல்நாட்டுக் கிறித்தவர்களுக்கே உண்டு என்று சொல்லவேண்டும். ஏனெனில், அவர்கள் தாம் முதன்முதலாக நிலைமைக்குத் தக்கபடித் தங்களைச் சரிப்படுத்திக்கொள்ள முன்

வந்தவர்கள். உதாரணமாக, அவர்கள் வேதம் என்று சொல்லப்படும் பைபிளைக்கூடத் திருத்த முயன்று, 'பழைய ஏற்பாட்'டிற்கு விரோதமாய்ப் 'புதிய ஏற்பாட்டை' உண்டாக்கி—நடை, உடை முதலியனவைகளையும் மாற்றிக்கொண்டார்கள். அதுபோலவே, இரண்டாவதாக முகமதியர்களையும் சொல்லலாம். ஏனெனில், அவர்களிலும் இந்துக்கள் என்பவர்களைப் போல் பிறவியில் உயர்வு தாழ்வு என்பது போன்ற சில கடுமையான பிரிவினை வித்தியாசங்கள் இல்லாவிட்டாலும், வாழ்க்கையில் முகமதியர்களையும் மதம் என்பது இந்துக்கள் என்பவர்களைப்போலவே அனேக விதங்களில் கட்டுப்படுத்தி வந்திருக்கின்றது என்று சொல்லலாம். உதாரணமாக, நடை, உடை, பாவனை முதலாகிய பலவற்றுள் மதங்களின் பேரால் கட்டுப்பட்டுக்கிடந்தாலும் இப்போது தைரியமாய் அக் கட்டுப்பாடுகளில் சிலவற்றையாவது தளர்த்திவிட ஆரம்பித்து விட்டார்கள். அது மாத்திரமல்லாமல், வெகு துரிதமாகவும் தைரியமாகவும் சிலர் மாற்றிக்கொள்ளவும் ஆரம்பித்து விட்டார்கள். அந்தப் படிக்கு மாற்றிய முகமதிய வீர அரசர்களான அமீருக்கும், பாட்சாவுக்கும் ஆதரவு கொடுக்கவும் முந்துகிறார்கள்.

மற்றும், வெளிநாடுகளில் அந்தந்த தேச குடிஜனங்கள் பெரும்பாலோர் அத் திருத்தங்களுக்குத் தாராளமாய் ஆதரவளித்துப் பின்பற்றி வருவதில் யாதொரு தடையும் காண முடியவில்லை. ஆனால், புரோகிதக் கூட்டத்தின் தொல்லைகள் மாத்திரம் எந்த மதத்திலும் சிறிதளவாவது இல்லாமலிருக்கும் என்று சொல்லிவிட முடியாது. என்றாலும், அவர்களிலும் சிலர் தம் சுயநலத்திற்கு வலியுறுத்துவதைத் தவிர வேறு காரணங்கள் சொல்லவோ, ஆதாரங்கள் காட்டவோ முடியாதபடி மக்கள் அறிவு பெற்றுவிட்டார்கள். இந்தியாவில் உள்ள முகமதிய சமூகமும் இந்தியர்களுடன் பழகுவதால் கமால் பாட்சாவுக்கும், அமீருக்கும் விரோதமாக அதிருப்தியும் ஆத்திரமும் காட்டுவதன்மூலம் ஒரு புறத்தில் தங்கள் மதப் பற்றைக் காட்டிக் கொண்டாலும், மற்றொரு புறம் தங்கள் சமூக நன்மையை உத்தேசித்து அவர்களுக்கு ஆதரவளித்தே வருகின்றார்கள். உதாரணமாக, அமீரையும் அவரது மனைவியரையும் இந்திய முகமதியர்களில் சிலர் குறை கூறி இருந்தாலும், அமீரினது ஆட்சிக்கு ஆபத்து வந்துவிட்டது என்று தெரிந்தவுடன் அவருக்கு இந்தியாவில் உள்ள மவுலானாக்கள் முதற்கொண்டு அனுதாபப்படுவதுடன், ஆதரவளிக்கவும் முந்துகின்றார்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இதன் காரணம் என்னவென்று பார்ப்போமானால், கூடுமான வரை அந்தச் சமூக நன்மை சம்பந்தமான கவலையும் ஒற்றுமையுமேயாகும். ஆனால், இந்துக்கள் என்பவர்களுக்குள் அம் மாதிரியான சமூக ஒற்றுமை இல்லாமல் எவ்விதத் திருத்தங்களுக்கும் எதிர்ப்புகள் இருந்து வருவதற்குக் காரணம் என்ன என்று பார்ப்போமானால், இதில் உள்ள மதப்பிரிவுகளோடு அவைகளிலுள்ள உட்பிரிவுகளும் சாதிப் பிரிவுகளும் அவற்றில் உள்ள உயர்வு-தாழ்வுகளும், அதனால் சிலருக்கு ஏற்படும் நிரந்தர நலமுமே காரணமாகும். இந்த உட்பிரிவுகளும் சாதிப் பிரிவுகளும் நிலைத்துக் குருட்டுப் பிடிவாதமாய் இருப்பதற்குக் காரணம் என்னவென்று பார்ப்போமானால், மற்ற மதங்களைவிட இந்துக்கள், இந்து மதம் என்பனவற்றில் அதிகமான நிர்ப்பந்தங்கள் இருந்து வருகின்றன என்பதேயாகும்.

அவையாவன :—முதலாவது, இந்துக்களுடைய மதக் கொள்கைகளின்படி மக்கள் படிக்கக்கூடாது. ஆனால், ஒரு சிறு வகுப்பினர்—பார்ப்பனர்கள் என்பவர்கள் மாத்திரம் தான் படிக்க உரிமையுள்ளவர்கள். மத ஆதாரம் என்பதைப்பற்றி, இந்து மதத்தைச் சேர்ந்த மக்களே தெரிந்துகொள்ளக்கூடாது. மத சம்பந்தமான எந்த விஷயங்களிலும் பிறவியிலேயே தாங்கள் உயர்ந்தவர்கள் என்று ஏற்பாடு செய்துகொண்ட ஒரு சிறு வகுப்பார் அதாவது 100க்கு 2 பேர்களான பார்ப்பனர்கள் தவிர—மற்றவர்களுக்குச் சொந்த அறிவை உபயோகிக்கவோ, ஆராய்ச்சி செய்யவோ, நன்மை தீமை எவை, அவசியமானவை எவை, அவசியமில்லாதவை எவை என்று தெரியவோ சற்றும் உரிமை கிடையாது.

படிப்பு, மத சம்பந்தம் ஆகியவைகளில் இம் மாதிரியான நிர்ப்பந்தம் இருப்பதோடு மாத்திரமல்லாமல், மனித வாழ்க்கையிலும் மக்களைத் தனித்தனி சாதிகளாகப் பிரித்த தோடல்லாமல் அவற்றில் உயர்வு தாழ்வும், ஒருவரை ஒருவர் தொடாமல் நெருங்காமல் காணமுடியாமல் செய்வித்து, ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு பிறவித் தொழிலையும் ஏற்படுத்தி, அவைகளையேதான் அவ்வவ் வகுப்பைச் சேர்ந்தவன் செய்து தீரவேண்டும் என்றும் அந்தப்படி அரசன் சட்டம், தண்டனை, கண்டனை ஆகியவைகள் மூலம் செய்விக்கவேண்டும் என்றும் அரசர்களாலும் நிர்ப்பந்தப் படுத்தப்பட்டுவிட்டது.

ஒரு சிறு கூட்டத்தார் தங்கள் ஜனத்தொகைக்குத் தக்கபடி, தங்கள் வாழ்வுக்குத் தேவையானபடி, நிரந்தரமாய்ப் பொருள் வருவாய் இருக்கத் தக்கதாகப் பதினாயிரக் கணக்கான கடவுள்களைச் சிருஷ்டித்து, ஆயிரக்கணக்கான சடங்குகளையும் சிருஷ்டித்து அவற்றிற்குத் தினப்படி பூஜை, உற்சவம், கலியாணம், அவைகளின் திருப்திக்கு என்று அச்சிறு கூட்டத்தாருக்கு வேண்டிவைகளையெல்லாம் அவசியமாக்கி, அவர்கள் கேட்டதை யெல்லாம் கொடுக்கவேண்டும் என்றும், அச்சிறு கூட்டத்தாரின் திருப்தியே கடவுள் திருப்தி என்றும், மற்ற மக்கள் பிறந்ததே அச்சிறு கூட்டத்திற்குத் தொண்டு செய்வதற்கென்றும் பலவாறாகக் கற்பித்து, அக் கட்டுபாடுகளிலிருந்து யாராவது விலகவோ அல்லது அக் கட்டுப் பாடுகளைப்பற்றி ஆராய்ச்சி செய்யவோ புறப்பட்டால்—அந்த ஆராய்ச்சி செய்வது மகா பாதகமானதென்றும், நாத்திகமென்றும், அப்படிப்பட்ட நாத்திகனை அரசன் தண்டிக்க வேண்டுமென்றும் மற்றும் இதுபோன்ற பல நிர்ப்பந்தங்களையும் உண்டாக்கி வைத் திருக்கின்றார்கள்.

இது மாத்திரமல்லாமல், யாராவது துணிந்து இக் கட்டுப்பாட்டையும் கொடுமை யையும் உடைக்கப் புறப்பட்டால் அவர்களை அசுரர்கள், இராட்சதர்கள், துஷ்டர்கள், தேவர்களுக்கு விரோதி, கடவுளுக்கு விரோதி, உலகத்திற்கு ஆபத்தை விளைவிப்பவன் என்பதான விஷமப் பிரசாரத்தால் அவனை அடியோடு அழித்துவந்திருக்கின்றார்கள். இன்றைய தினமும் மேற்கண்ட கொள்கைகளே மதக் கொள்கைகளாகவும் அவைகளைக் கொண்ட புஸ்தகங்களே மத ஆதாரங்களாகவும் அவைகளை நிலைநிறுத்தச் செய்வதே சீர்திருத்தங்களாகவும் இருந்து வருகின்றன.

உதாரணமாக, இது சமயம் நாட்டில் ஏற்பட்ட ஒரு புது உணர்ச்சியையும் கிளர்ச்சியு மானது மக்களை எவ்வளவோ தூரம் நடை, உடை, ஆச்சாரம், போகம், போக்கியம் முதலியவைகளில் பழைய கொள்கைகளையும், பழைய அனுபவங்களையும் மாற்றிக்கொள்ள அவசியமும் இடமும் ஏற்படுத்திக் கொடுத்து அனுபவத்திலும் தலை சிறந்து விளங்கிக் கொண்டிருந்தும், தனது சொந்த சுயநல மாத்திரம் எவ்வளவு அறிவீனமும் ஆணவமும் இழிவும் பொருந்தியதாக இருந்த போதிலும், அதிலிருந்து சற்றாவது மாறுவதோ தளர்த்தப் படுவதோ என்பது சிறிதும் முடியாததாகவே இருக்கின்றது.

உதாரணமாக, மக்கள் பிறவியில் உயர்வு தாழ்வு கற்பிக்கும் சாதி வித்தியாசத்தை நமது இந்திய நாட்டில் உள்ள அறிவாளிகள், பிரமுகர்கள், தலைவர்கள், பெரியோர்கள், இந்திய நாட்டில் உள்ள பொது இயக்கங்கள், சமயத் தத்துவங்கள் என்பவைகள் எல்லாம் அனேகமாய் ஒரேமுகமாக விலக்க வேண்டும் என்றும், ஒழிக்கவேண்டும் என்றும், அந்தப்படி ஒழிக்காவிட்டால் நாட்டிற்குச் சுதந்திரமில்லை—தேசத்திற்குச் சுயமரியாதை இல்லை—சமயத்திற்கு மதிப்பு இல்லை என்றும் பலவாறாக அபிப்பிராயம் கொடுத்தும், தர்மத்தின் பேராலும், மதத்தின் பேராலும் கூட்டங்கள் கூடித் தங்களுக்கும் தங்கள் ஆதிக் கத்திற்கும் தகுந்தபடியே தீர்மானங்கள் செய்து வருகின்றார்கள்.

உதாரணமாக, சமீபத்தில் பல இடங்களில் பார்ப்பனர்கள் ஒன்றுகூடி வருணாசிர மத்தை உறுதிப்படுத்தி, 'பார்ப்பனர் தவிர மற்றவர்கள் பார்ப்பனர்களின் வைப்பாட்டி மக்கள், பார்ப்பனச் சேவைக்காகக் கடவுளால் உண்டாக்கப்பட்டவர்கள்' என்கின்ற

கருத்துக்களடங்கிய—'சூத்திரர்கள்' என்பதை நிலை நிறுத்த முயற்சித்திருப்பதும்; சைவர்கள் என்பவர்கள் ஒன்றுகூடி, தீண்டாமை என்பதை நிலை நிறுத்தத்தக்க வண்ணமாக, 'தீண்டாதவர்கள் என்பவர்களுக்குத் தனிக் கோவில் கட்டிக் கொடுக்க வேண்டும்' என்று தீர்மானித்திருப்பதும் போதுமான உதாரணங்களாகும்.

எனவே, இந்த மாதிரி 'வருணாசிரம தர்ம'ங்களும், இந்த மாதிரி 'சைவர்'களும் நமது நாட்டில் உள்ளவரை எந்த விதத்தில் பார்ப்பனீயம் ஒழிய முடியும்? எந்த விதத்தில் சமத்துவம் உண்டாகும்? எந்த விதத்தில் மக்கள் ஒற்றுமைப்பட்டு மானத்துடன் வாழ முடியும்? என்பதை யோசித்தால் இந்தியாவில் எப்படிப் பார்ப்பனீயம் நிலைத்து-எந்தெந்த வழியில் நாட்டைப் பாழாக்கிவருகின்றது என்பது புலனாகும்.

எனவே, இந்தியாவில் பார்ப்பனீயமற்ற மதமே இல்லை என்றும், இந்து மதமென்னும் தலைப்பின் கீழ் எந்த மதமானாலும், சமயமானாலும் அகச் சமயமானாலும் அவற்றை எல்லாம் அடியோடு அழித்தாலல்லது மக்கள் அன்பு நிலை என்பதை ஒரு காலமும் அடைய முடியாதென்றே சொல்லுவோம்.

['குடி அரசு'-தலையங்கம்—14-4-1929]

## 12. பார்ப்பனீயம் ஒழிய

தலைவரவர்களே, தோழர்களே,

ஒரு இடத்தில் ஒரு வியாதி ஏற்பட்டால்—வியாதி வந்தவனுக்குப் பார்த்துப் பார்த்து மருந்து கொடுத்துக் கொண்டு வருவதால்—வியாதியை ஒழித்துவிட முடியாது. வியாதியின் மூலாதாரத்தைக் கண்டுபிடித்து, அதை அடியோடு அழிக்கவேண்டும். அதுபோலவே, கொசுக்கள் இந்த மண்டபத்திற்குள் வருவதற்குக் காரணம் என்ன என்பதைக் கண்டு பிடித்து அதை அழிக்கவேண்டும். இந்த மண்டபத்தில் இவ்வளவு அதிகமான கொசுக்கள் 'கொச, கொச' வென்று இருக்கின்றனவென்றால்—இதற்குக் காரணம் இங்குள்ள ஓதம், அருகிலுள்ள நீர்த்தேக்கம், அதிலுள்ள அசுத்தம், அழுக்கு ஆகிய காரணங்களால் தான் கொசுக்கள் உண்டாகின்றன என்பதை நன்றாய் அறியவேண்டும். கொசு உபத்திரவங்கூடாதென்கின்றவர்கள் மேற்கண்ட அசிங்கங்களையும், நீர்த்தேக்கங்களையும் ஒழிக்க வேண்டும். அக்கம் பக்கம் உள்ள எல்லா இடமும் சுத்தமாக வைக்கப்படவேண்டும். அப்பொழுதுதான் கொசுக்கள் ஒழியும்; இல்லாவிட்டால், 'வெட்ட வெட்டத் தழையும்' என்பதுபோல—எவ்வளவு அழித்தாலும் வட்டியுடன் பெருகும் என்பதே எனது அபிப்பிராயம்.

ஆகையால், அதுபோலவே பார்ப்பனர்கள் எப்படி உண்டானார்கள், அவர்கள் தொல்லை எதனால் ஏற்பட்டது, அதை எது பாதுகாத்து வளர்க்கின்றது, என்பவைகளைக் கண்டுபிடித்து அவற்றை அழியுங்கள்! நசுக்குங்கள்! அதுதான் பார்ப்பனீயத்தை ஒழிக்கும் மார்க்கமாகும். இல்லாதவரையில், நமது பாடெல்லாம் வீணாகிவிடும். அன்றியும், மற்றவர்களால் வீண்கூச்சலும் குரோதமும் துவேஷமும் என்றுதான் சொல்லப்பட்டுவிடும்.

ஆகையால், நாம் விஷயங்களில் முன்னைய அபிப்பிராயங்களைச் சிறிதும் மாற்றிக் கொள்ளாமல், மூலகாரணங்களைக் கண்டு அவற்றை அழிக்கும் வேலையில் ஈடுபட வேண்டும் என்று சொல்லுகின்றேன்.

அது என்னவென்றால், பார்ப்பான் என்பது—'மேல் சாதிக்காரன்' என்கின்ற தத்துவத்தின் மீது கட்டப்பட்டிருக்கின்றது. மேல்சாதிக்காரன் என்பது பாடுபடாமல் சோம்பேறியாய் இருந்து, ஊரார் உழைப்பில் வயிறு வளர்ப்பது என்கின்ற தத்துவத்தின்

மீது கட்டப்பட்டிருக்கின்றது. இதை நன்றாய் உணர்ந்து, இந்தத் தத்துவ அடிப்படையை இடித்தெறிய முயன்றோமானால், பார்ப்பனர்கள் என்கின்ற வார்த்தையே நாட்டில் இல்லாமல் போய்விடும். பார்ப்பனர் மாத்திரமல்ல—ஒரு சாதிக்கு மற்றொரு சாதி மேல் என்கின்ற தத்துவமே அழிந்துவிடும். அதுமாத்திரமல்ல, சாதிமுறையே அடியோடு அழிந்துவிடும். சாதாரணமாக, இன்று பார்ப்பன சாதியை மாத்திரம் ஒழித்துவிட்டால் போதுமா, என்று பாருங்கள்! இந்த நாட்டில் பார்ப்பனர்கள் கூடாதென்று சொல்லுகின்ற போது, அதற்கு அடுத்த சாதியராய் விளங்கும் சைவர்கள் முதலியவர்கள் இருக்க இடமுண்டா, என்று யோசித்துப்பாருங்கள். சைவன் என்றால் என்ன? பார்ப்பானைப் போலவே சரீரத்தால் வேலைசெய்யாத சோம்பேறி என்றுதானே அர்த்தம்? எவனெவன் தன்னை மேல்சாதிக்காரன் என்று சொல்லிக்கொள்ளுகிறானோ அவனெல்லாம் சரீரத்தால் வேலை செய்யாமல் மற்றவர்கள் உழைப்பில் வாழுகின்றவன்—வாழ ஆசைப்படுகின்றவன் என்றுதானே அர்த்தம்!

ஆகவே, சாதியை ஒழித்தாக வேண்டும் என்றும், எல்லோரும் சரீரத்தால் பாடுபட்டாக வேண்டும் என்றும் நிபந்தனை ஏற்படுத்தியாக வேண்டும். பாடுபடாதவனுக்கு இந்த நாட்டில் இடமில்லை என்று ஆக்கிவிடவேண்டும். அப்பொழுதுதான் பார்ப்பானும் ஒழிவான்; பார்ப்பானால் ஏற்படுகின்ற கொடுமை என்பதும் வேறு எந்த வகையிலும் இந்த நாட்டில் இல்லாமல் ஒழியும்.

மேல்நாடுகளில்கூட பல இடங்களில் இந்தக் கொடுமை—அதாவது சோம்பேறிகளின் சூழ்ச்சியும், கொடுமைகளும் இருந்துதான் வருகின்றன. அதற்காகத்தான் இன்று அனேக பாகங்களில் சோம்பேறி-பாட்டாளி சண்டைகளும் கிளர்ச்சிகளும் குழப்பங்களும் நடந்துகொண்டிருக்கின்றன. ஒரு விஷயத்தை ஞாபகத்தில் வையுங்கள். அதென்னவென்றால், இந்த சோம்பேறி சாதிகளுக்கோ, வகுப்புகளுக்கோ ஆதரவும் ஆக்கமும் அளித்துக் காப்பாற்றிவர மற்றொரு கூட்டம் இருக்கின்றது. அதுவும் ஒழிந்தாக வேண்டும் என்பதைக் கருத்தில் இறுத்தினால்தான், இந்த ஏமாற்றமும் கொடுமையும் ஒழிந்துபடும். அதென்னவெனில், அதுதான் பணக்கார வகுப்பு, முதலாளி வகுப்பு, மிராசுதார் வகுப்பு என்பனவாதியவைகளாகும். இந்த வகுப்புகளால்தான் 'பார்ப்பனீயம்'—அதாவது 'சோம்பேறித்தத்துவம்' இருந்து வருகின்றது. அதையும் மாற்றியோ அழித்தோதான் ஆகவேண்டும். இல்லாவிட்டால் சுலபத்தில் பார்ப்பனீயம் ஒழிந்துவிடாது.

[சேலத்தில், 19-2-1933-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 5-3-1933]

## 13. பார்ப்பன ஆட்சி

'தோலைக் கடித்துத் துருத்தியைக் கடித்து, மனிதனைக் கடிக்க ஆரம்பித்து விட்டது' என்று ஒரு பழமொழி சொல்லுவார்கள். அது போல், பார்ப்பனீயம்—அதாவது பார்ப்பன ஆட்சி அங்கு கை வைத்து, இங்கு கை வைத்து அடிமடியில் கையைப் போட்டு விட்டது என்று சொல்லவேண்டியதாகி விட்டது.

காங்கிரசைப்பற்றியும் காந்தியைப்பற்றியும் நாம் எதிர்த்தும் மக்களை ஜாக்கிரதையாய் இருக்கவேண்டுமென்று எச்சரித்து வந்ததுமானது, அரசியல் ஆதிக்கம் நமக்குக் கூடாதென்றோ, வெள்ளையர்-அன்னியர் இந் நாட்டைவிட்டுப் போகக்கூடாது என்றோ அல்ல என்பதை அவ்வப்போது தெரிவித்து வந்திருக்கிறோம். ஆனால், மற்றென்ன காரணமென்றால், இந் நாட்டுக்கு வெளிநாட்டிலிருந்து வயிறு பிழைக்க வந்து, இந் நாட்டு ஆதி மக்களைப் பல வழிகளிலும் ஏய்த்தும் கொடுமைப்படுத்தியும் வெற்றிகொண்டு

அடிமைப்படுத்தி ஆதிக்கம் செலுத்தி ஆட்சிபுரிந்த மூன்று வகையாரில்—அதாவது, ஆரியர், முஸ்லிம்கள், அய்ரோப்பியர் ஆகியவர்களில்—ஆரியர்களே மிகமிகக் கொடுமை செய்து மக்களைக் காட்டுமிராண்டிகளாக்கி மதத்திலும் சமுதாயத்திலும் அரசியலிலும் அடிமைகொண்டு ஆட்சி புரிகின்றவர்கள் ஆவார்கள். ஆதலால், எந்தக் காரணம் கொண்டும்—அதாவது, அய்ரோப்பியரே இன்னமும் ஆயிரம் வருஷம் ஆட்சிபுரிவதாயிருந்தாலும், முஸ்லிம்களே இன்னம் பதினாயிரம் வருஷம் ஆட்சி புரிவதானாலும்—ஆரியப் பூண்டின் ஆதிக்கம் மாத்திரம் கூடவேகூடாது என்று கருதி, காங்கிரசும் காந்தியும் ஆரிய ஆதிக்கத்துக்கு ஆயுதமாகவும் கூலியாகவும் இருந்து வருவதால் ஆரிய ஆதிக்கம் ஒழிவதற்கு இவ்விரண்டும்—அதாவது காங்கிரசும் காந்தியும் அடியோடு ஒழியவேண்டும் என்று சொல்லி எதிர்த்து வந்தோம்.

ஆரியர்களின் பிறவிக்குணம், சாதிக்குணம் இவ்விரண்டும் ஆரியரல்லாதவர்களை ஒழிப்பது அல்லது அடிமைகொண்டு அவர்கள் உழைப்பில் வாழ்வது என்பதேயாகும். இதற்கு உதாரணம் வேண்டுமானால் ஜெர்மானியரை—ஹிட்லரைப் பார்த்தால் விளங்கும். 'ஆரியரல்லாதவர்கள் ஒழியவேண்டும்' என்பது ஹிட்லருடையவும் நாஜி ஸ்தாபனத்தினுடையவும் கொள்கையாகும். நம் நாட்டு காங்கிரஸ் கொள்கையும், ஆரியர் கூலியாக உபயோகப்படுத்தும் காந்தியின் கொள்கையும் அதுவேயாகும். அதாவது, காங்கிரஸ் 'மனுதர்மம்' வருணாசிரம முறை ஆகியவைகளின்படி இந்தியா புதுப்பிக்கப் படவேண்டும் என்று சொல்லப்படுவதே இந்த நமது கூற்றை மெய்ப்பிக்கும். மற்றும் ஆரியருடைய எந்த ஆதாரங்களை எடுத்துப் பார்த்தாலும் ஆரியரல்லாதார் நாடு மிலேச்ச நாடு, ஆரியரல்லாதார் பாஷை மிலேச்சர் பாஷை, ஆரியரல்லாதார் மிலேச்சர், அசுரர், இராக்கதர் என்பதாகக் காணக்கிடப்பதை இன்றும் பார்க்கலாம்.

இவை இந்நாட்டு ஆதிக் குடிகளுக்கும், ஆரியர் கொள்கைகளை ஒப்புக்கொள்ளாத முஸ்லிம்களுக்கும் அவர்களது பாஷைக்கும் அவர்களது தேசத்துக்கும்தான் பொருந்தக் கூடியதாய் இருக்கிறதே தவிர, மற்ற ஜெர்மானியர் போன்றவர்களுக்குப் பொருந்தப் படுவதில்லை. ஆகவே, இந்தக் கொள்கைகள் கொண்ட ஆரியர்கள்—நமது நாட்டுக்கும் நம் நாட்டுப் பழங்குடி சமூக மக்களுக்கும் ஆரியம், ஆரிய பாஷை, அவர்களது மத உபதேசங்கள் முதலியவை கூடாது என்று கூறி வருகிறோம்.

இதில் நம்மவர்களான—அதாவது ஆரியரல்லாதாரான சிலருக்குப் பல காரணங்களால் இக் கொள்கை பிடிக்காததாகக் காணப்படலாம். அவர்கள், 'ஆரியரும்—நாமும் இந்நாட்டு மக்கள்' என்றும், 'உடனிருந்த முறை கொண்டவர்கள்' என்றும் நமக்கு உபதேசம் செய்ய வரலாம். இதை அறியாமை என்றும், அல்லாவிட்டால் கூழுக்குப் பாடும் கூலிக் கவி என்றும் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

ஆரியர்கள் இந்த நாட்டிற்கு மத்திய ஆசியாவிலிருந்து ஆடுமாடுகள் மேய்த்துக் கொண்டு கைபர், போலன் கணவாய்கள் வழியாக வந்தவர்கள் என்றும், ஆரியர்கள் என்றால் உழவர்கள்—பயிரிடுவோர்கள் என்ற அர்த்தமென்றும், அவர்கள் வருவதற்கு முன் இந்த நாட்டில் வடக்கில் 'தஸ்யூக்கள்' என்பவர்களும் தெற்கில் 'திராவிடர்கள்' என்பவர்களும் ஆதி குடிகளாய் இருந்தார்கள் என்றும், இந்த இரு சமூகத்தாரைவிட ஆரியர்கள் தந்திரசாலிகளாகவும் பலசாலிகளாகவும் இருந்ததால் இவர்கள்மீது படையெடுத்து அடக்கி ஒடுக்கி ஆதிக்கம் கொண்டார்கள் என்றும், பார்ப்பனர்களால் எழுதப்பட்ட சரித்திரங்களிலேயே இருந்து வருகிறது. மேலே குறிப்பிட்டபடி அதை இன்றும் பள்ளிப் பிள்ளைகள் படிக்கிறார்கள்.

மற்றும், இதை மெய்ப்பிக்க ஆரியர்களின் வேதம் என்று சொல்லப்படும் ஏடுகளைப் பார்த்தாலும்—அவற்றுள்ளும் ஆரியர்கள் ஆடு மாடுகளை மேய்த்துப் பயிரிட்டதையும்,

அதற்கு அனுகூலமானவற்றைக் கடவுளாகக் கற்பித்துக்கொண்டு—அக் கடவுள்களை மழை பெய்யவும், வெள்ளாமை விளையவும், பிரார்த்தனை செய்வதும், அவர்களுக்கு அக் காலத்தில் எதிரிகளாகக் காணப்பட்ட தஸ்யூக்கள் என்பவர்களையும் திராவிடர்களையும் கண்டபடி எல்லாம் வைது, சபித்தும் 'இவர்கள் அடியோடு அழிந்து ஒழிய வேண்டும்' என்று தங்கள் சாதிக் கடவுளாகக் கற்பித்துக்கொண்ட இந்திரன் முதலியவர்களைப் பிரார்த்திப்பதுமான பல பாசுரங்களைக் காணலாம். இன்றும் ஆரியர்களின் வேதமாக மாத்திரமல்லாமல் இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள் ஒழிந்த கிறித்தவர்கள் ஒழிந்த, மற்ற எல்லா மக்களுக்குமே மத வேதம், புராணம், இதிகாசம் என்று சொல்லப்படும் எல்லா ஆதாரங்களிலும் நூல்களிலும் இவற்றைக் காணலாம்.

ஆனால், இவைகளைச் சரித்திரமூலமாகவும் பழந்தமிழ் நூல்கள் மூலமாகவும், வடநூல் படித்ததின் மூலமாகவும் படித்தறிந்த சில தமிழ் மக்கள் தங்கள் இழி பிறப்பினாலும், தங்களுக்கு மானத்துடன் பிழைக்க வேறு வழி இல்லாத இழி தன்மையினாலும் இவைகளை மறைத்துக்கொண்டு ஆரியர்க் கடிமையாக வாழ்ந்து காலம் கழிக்க ஒருப்பட்டிருக்கிறார்கள்.

இவை எப்படி இருந்தாலும், இந்த ஆரிய ஆட்சி அல்லது ஆதிக்கம் இந்நாட்டுப் பழங்குடி மக்களுக்கு—முஸ்லிம் ஆட்சி செய்ததாய்ச் சொல்லுவதைவிட—ஐரோப்பிய ஆங்கில ஆட்சி செய்ததாய்ச் சொல்லுவதைவிட—மிக மிகக் கொடுமை செய்து வந்திருக்கிறது என்பதல்லாமல், இன்னமும் சகிக்கமுடியாத துன்பங்கள் அடையும்படி வதைத்து வருகின்றது என்று சொல்லவேண்டியிருக்கின்றது.

['குடிஅரசு'–தலையங்கம்—7-8-1938]

## 14. உஷார்

தோழர்களே! தாய்மார்களே!

எங்கள் கழகத்திற்குத் திட்டமில்லை என்று கூறுகிறீர்களே! உங்கள் இராஜகோபாலாச்சாரியாருக்கே தெரியுமே—ஜஸ்டிஸ் கட்சித் திட்டமென்றால் அது எவ்வளவு முற்போக்கானதென்று. ரஷ்யாவுக்குக்கூட நாங்கள் திட்டம் போட்டுக் கொடுப்போமே! நாங்களொன்றும் புத்தகப் பூச்சிகளல்லவே—கம்யூனிஸ்டுகளைப்போல் புத்தகம் பார்த்துத் திட்டம் போட.

கொழும்பு நகரத்தில் ஒரு பெரிய தோட்டம் இருக்கிறது. அங்கு ஒரு விளம்பரப் பலகையில், 'அந்தத் தோட்டத்தில் இல்லாத செடியின் பெயரைக் கூறிவிட்டால் அவருக்கு ரூ. 100 பரிசாக அளிக்கப்படும்' என்று எழுதி இருக்கிறது. அதே போல், நான் 100 அல்ல, 500 ரூபாய் தருகிறேன். ஏதோ குறிப்பிட்டுக் காட்டுங்கள், எங்கள் கழகத்தில் இல்லாத ஒரு திட்டத்தை. தனி உடைமையா, பொது உடைமையா, சமதர்மமா—எதற்கு எங்களிடம் திட்டம் இல்லை என்று கூறமுடியுமா, உங்களால்? கம்யூனிஸ்டுகள் முதல் போட்ட முதலாளிகளை மட்டுமே திட்டிவிட்டுப் பார்ப்பான் கிளப்பில் போய் ஓசிக் காப்பி வாங்கிச் சாப்பிடுவார்கள். நாங்கள் முதல் போடும் முதலாளிகள் மட்டுமல்லாமல், முதல் போடாத குழவிக் கல்லையும் அதன் பேரால் பிழைக்கும் பூணூல் பார்ப்பன முதலாளிகளையும் சேர்த்துக் குறை கூறுகிறோம். இது தானே வித்தியாசம்? அடுத்த 50 ஆண்டிற்கு ஆகக் கூடிய திட்டமுண்டு எங்களிடம். எங்களிடம் உடனடியாகப் போராட்டம் நடத்துவதற்கான திட்டம் ஒன்றுமில்லை என்று வேண்டுமானால் கூறலாம். போராட்டம் வேண்டும் என்பதற்காகவே ஒரு போராட்டத்தை நடத்துவதா? ஏதாவது ஒரு இலட்சியம் வெற்றி பெறுவதற்காகப் போராட்டம் நடத்துவதா? சிந்தித்துப் பாருங்கள்! மக்களிடம் பதவி கேட்கவோ அல்லது நற்சாட்சிப் பத்திரம் பெறவோ அல்ல—போராட்டம் நடத்தப்பட

வேண்டியது. போராட்டம் நாம் நடத்துவோமானால் போராட்டம் நடந்து கொண்டிருக்கும் போதே நமது இலட்சியமும் நிறைவேறிக் கொண்டு வரவேண்டும்; அப்படிப்பட்ட தறுவாயில்தான் நமது போராட்டமும் துவங்கும்! சட்ட மறுப்புச் செய்வதென்பது முட்டாள்தனம்; சண்டித்தனம். அதனால்தான் 'சட்டமறுப்பு, சட்டமறுப்பு' என்று பஜனை செய்தவர்கள் இன்று சட்டம் செய்ய முடியாமல் ஓடி ஒளிந்து கொள்கிறார்கள்.

ஆகஸ்ட் கலவர காலத்திலே—அதாவது, தந்திக் கம்பி அறுக்கப்பட்டு, தபாலாஃபீஸ் கொளுத்தப்பட்ட அந்தக் காலத்தில் ஒரு கவர்னர் 'டாப்' இல்லாத காரில் நடுத்தெருவில் பயமின்றிச் சவாரி செய்து கொண்டிருந்தான். ஆனால், அந்தக் காலத்தில் 'சட்டமறுப்பு, சட்டமறுப்பு' என்று கூறிக் கொண்டிருந்தனரே—இந்த சுயராஜ்ய காலத்தில் அவர்கள் மந்திரிகளாகியும்கூட வெளியே தனித்துச் செல்லப் பயப்படுகிறார்கள். இந்தியாவின் முதன் மந்திரி முள்வேலிக்குள் அடைபட்டுக் கிடக்கிறார்; எங்கும் சுதந்திரமாகப் போக முடிய வில்லையே என்று பிரலாபிக்கிறார். ஏன் இந்த நிலை? ஜெயிலை விட்டு வெளிவந்த பிறகு ஆகஸ்ட் கலவரக் காரணஸ்தர்களுக்கு நன்றி தெரிவிக்காதிருந்தால்—அவர்களுடைய அக்கிரமம், நாச வேலையைக் கண்டித்திருந்தால், நாட்டில் இவ்வளவு அக்கிரமம் தாண்டவமாடுமா?

தோழர்களே! நாட்டில் தங்கு தடையின்றி வளர்ந்து வரும் இக் காலித்தனத்திற்கு இடங் கொடாமல் அதை அடக்கிவருவதுதான் எங்கள் முதல் வேலை. ஆகஸ்ட் கலவரத்தின் போது செத்தவர்கள், கஷ்டப்பட்டவர்கள், பொருளிழந்தவர்கள் நம்மவர்கள்தாம். ஆனால், இன்று பயனும் பெருமையும் அடைந்தவர்களோ, அக்கிரகாரச் சோம்பேறிகள்தாம். பாடு படத்தான் நமக்கு உரிமை; இதை நீங்கள் நன்றாக மனத்தில் இறுத்தவேண்டும். பாடு படத்தான்—ஆரிய தர்மப்படி நமக்கு உரிமையுண்டே தவிர, பாடுபட்டதன் பயனை அனுபவிக்க நமக்கு உரிமை இல்லை என்பதை காங்கிரஸ் திராவிடத் தோழர்கள் உணர வேண்டும்.

ஒரு இராமசாமி ரெட்டியாரோ, ஒரு காமராஜரோ, என்னதான் நமக்குத் துரோகம் செய்தாலும், அவர்கள் நம்மவர்கள்; அவர்களும் திராவிடர்கள் என்பதை நம்மால் மறந்து விடக்கூடுமா? அவர்கள்மீது நம் கழகத் திராவிடர்களை ஏவிவிடுவது முறையாகுமா? அன்னக்காவடி பார்ப்பனர்கள் நாட்டில் காலித்தனம் வளர இடம் கொடுக்கிறார்கள் என்பதற்காக, ஆண்ட இனத்தவரான நாமும் காலித்தனத்தைக் கற்பித்துக் கொடுப்பதா? அவர்களைவிட நமக்குத்தான் பொறுப்பு அதிகம். ஏனெனில், இது நம்முடைய நாடு; இதில் வாழ்பவர்கள் 100-க்கு 97 பேர் நம்மவர்கள். ஆகவே, நாம்தான் மக்களுக்கு ஒழுக்கத் தையும், யோக்கியதையையும், கட்டுப்பாட்டையும் கற்பித்துக்கொடுக்க வேண்டியவர்கள். பார்ப்பனர் இந்நாட்டிற்குப் பிச்சையெடுக்க வந்தவர். ஆகையால் இந்நாட்டைப்பற்றியோ, இந்நாட்டு மக்களைப்பற்றியோ, அவர்களுக்குக் கவலையிடையாது. ஆகவே, அவர்களைக் கண்டு நீங்கள் ஆத்திரப்பட்டுவிடக் கூடாது; ஆராய்ந்து தெளியவேண்டும்.

பார்ப்பனர்–திராவிடர் போராட்டம் ரொம்பவும் வளர்ந்துவிட்டது; பார்ப்பனர்களும் துணிந்துவிட்டார்கள்; துணியக் காரணம் இல்லாமல் இல்லை. இன்று ஆட்சி அவர்கள் ஆதிக்கத்தில் இருக்கிறது. அனேகமாக அவர்கள் ஆதிக்கத்திற்கு இதுவே கடைசி கால மாகவும் இருக்கக்கூடும். இன்று தவறின், நாளை ஆட்சி யார் கைக்குச் செல்லுமோ என்று அஞ்சுகிறார்கள். ஆகவே, ஆட்சி தம் ஆதிக்கத்தில் உள்ளபோதே நம்மீது பாய்ந்து தம் ஆதிக்கத்தை நிலைநாட்டிக் கொள்ள நினைக்கிறார்கள். 'கறுப்பு நாய், வெள்ளை நாய் ஆகாது; கழுதை, குதிரை ஆகாது; ஆண், பெண்ணாக மாறமுடியாது; பெண், ஆணாக மாறமுடியாது. இவை எப்படி ஆண்டவன் படைப்போ, அதேபோல் ஆண்டவனால் பார்ப்பானாகப் பிறப்பிக்கப்பட்டவன் பார்ப்பானாகத்தான் இருப்பான்; ஆண்டவனால் சூத்திரனாகப் பிறப்பிக்கப்பட்டவன் சூத்திரனாகத்தான் இருப்பான். இவை மாற்ற முடியாதவைகள்' என்று கூறியிருக்கிறார்கள்.

திவான் பகதூர் சாஸ்திரியார், எம். எஸ். சுப்பிரமணிய அய்யர் ஆகியோர் கூடி இனி இரண்டில் ஒன்று பார்த்துக்கொள்ள இருக்கிறார்கள். 'புல்லேந்திய கை வாளேந்தும். பல முறை வாளேந்திப் பலரைக் கொலைசெய்திருக்கிறோம்; பலரை அண்டியிருந்து கெடுத்திருக்கிறோம்' என்று கூறி மேலும் மார்தட்டிக் கூறுகிறார்கள். சிப்பாய்க் கலகத்தை நடத்தியவர் யார் தெரியுமா? இராணா என்கிற ஒரு பார்ப்பான்தான்—ஞாபக மிருக்கட்டும். இது மட்டுமா? திருநெல்வேலியில் ஆஷ் துரையைச் சுட முன்வந்தவன் யார் தெரியுமா? வாஞ்சி என்கிற ஒரு பார்ப்பனன். இதுமட்டுமா? உலகமே போற்றிய உத்தம காந்தியாரைக் கொன்றது—யார் தெரியுமா? கோட்ஸே என்கிற ஒரு பார்ப்பான் என்பது ஞாபகமிருக்கட்டும்! துப்பாக்கி எடுக்குமளவுக்குத் துணிந்து நம்மைப் போருக் கழைக் கிறார்கள்—நாம் அஞ்சாமல் எதிர்த்து நிற்போம். அவர்கள் பேச்சுப்படி முன்வரட்டும்.

அதற்குமுன் அந்த அய்யர் கூறியிருப்பதைச் சற்று அலசிப் பார்ப்போம். 'ஆணைப் பெண்ணாக்க முடியாது, பெண்ணை ஆணாக்க முடியாது' என்கிறார். அய்யோ, பாவம்! இன்னும் இந்த அய்யர் பஞ்சாங்க காலத்திலேயே இருக்கிறார். மேனாட்டு அறிஞர்கள் இதற்கும் வழிகண்டுபிடித்துவிட்டார்கள் என்பதையும்; ஒரு பெண் ஆணாக்கப்பட்டு விட்டதையும்; இயற்கையாகவே சேவல் பெட்டையாவதும், பெட்டை சேவலாவதும் சகஜமாகவே இருந்துவருகிறது என்பதையும், இவர் அறிந்துகொள்ள வேண்டுகிறேன்.

அடுத்தபடியாக, 'பார்ப்பானும், சூத்திரனும் கடவுள் படைப்பு; ஆகவே, இவ் வேற்றுமை மாற்றக்கூடாதது, மாற்றமுடியாதது' என்கிறார். இந்தப் பார்ப்பனரைப் படைத்த கடவுள்தானே என்னையும் படைத்திருக்கவேண்டும்? 'அந்தக் கடவுள் அனுமதி யில்லாமலே, பார்ப்பானை ஒழிப்பதுதான்—சூத்திரனை ஒழிப்பதுதான் என் வேலை' என்று கூறிக்கொண்டு அதையொட்டிப் பிரச்சாரம் செய்துவருவேன். நான்மட்டும் எப்படிக் கடவுள் ஆக்கினைக்குப் புறம்பாக நடக்கமுடியும்? அப்படி இருக்கும்போது அவனண்டையே போய் முட்டிக் கேளேன்—'ஆண்டவனே, அந்தணனையும் படைத்து அவனை ஒழிக்க ஒரு இராமசாமி நாயக்கனையும் ஏன் படைத்தாய்?' என்று!

இங்கு சுமார் $1\frac{1}{2}$ இலட்சம் பேர்கூடி இருக்கிறோம் என்றாலும், ஒரு பார்ப்பனப் பத்திரிகையாவது ஒருவரி எழுதுமா, இங்கு நடக்கும் நடவடிக்கையைப் பற்றி? ஏதாவது ஒரு சின்னக் கலவரம்—இங்கல்ல, தூத்துக்குடி கடைத்தெருவில் நடந்துவிடட்டும், கொட்டை எழுத்தில் எல்லாப் பார்ப்பனப் பத்திரிகைகளும் 'தூத்துக்குடி கடைத்தெருவில் கருப்புச் சட்டையினர் கலாட்டா' என்று பிரசுரிக்கின்றனவா, இல்லையா பாருங்கள்? அவ்வளவு கட்டுப்பாடாக நம் சங்கதியை மறைக்கின்றனர். எங்கோ சென்னை ரஸிக ரஞ்சன சபாவில் $3\frac{3}{4}$ பார்ப்பனர்கள் கூடினார்கள் என்றால், அதுபற்றி ஒவ்வொரு பார்ப்பனப் பத்திரிகையிலும் ஒரு பக்கம் சேதிவருகிறதே! இந்த அக்கிரமத்தைப் பற்றிக் கேட்க ஆளுண்டா! இவ்வளவு அக்கிரமம் நீங்கள் செய்துகொண்டு, 'புல்லேந்தும் கை, வாளேந்தும்' என்று கூறுகிறீர்களே, அடுக்குமா இந்த ஆணவம் உங்களுக்கு? இப்படி நீங்கள் நேரில் வெளி வரவேண்டும் என்றுதானே இவ்வளவு காலம் பொறுத்திருந்தோம். எவ்வளவு சீக்கிரம் வெளிவருகிறீர்களோ அவ்வளவு சீக்கிரம் எங்களுக்கும் நலமாயிற்றே! அவ்வளவு சீக்கிரத்தில் இழிவும் ஒழிந்துபோகுமே! நீங்கள் இருப்பது 100-க்கு 3 பேர்; நாங்கள் இருப்பது 100-க்கு 97 பேர். எங்களில் ஒரு ஆள் உங்களில் ஒரு ஆளைக் கூடவா, வெற்றிகொள்ளமாட்டான்? நாங்கள் 97-க்கு 3 பேர் அழிந்தால் பரவாயில்லை; மிச்சம் இருக்கும் 94 பேராவது இழிவு நீங்கி மனிதர்களாக வாழ்வார்கள். உங்களில் 3-க்கு 3 பேர் மாண்டால் அப்புறம் 'சைபர்'தான் இருக்கும்!

புல்லேந்தியவர்கள், வாளேந்தினால்—வாளேந்தியவர்கள் என்ன ஏந்துவார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள்! விரல் உரல் ஆனால், உரல் என்னவாகும்? அப்புறம் உங்கள் கதி என்னவாகும்? என்பதையும் நினைத்துப் பாருங்கள். அனுதினமும் பார்ப்ப

னர்கள்தாம் திராவிடர்களுக்குத் தொல்லைகொடுத்து வருகிறார்களே ஒழிய, திராவிடர்களல்லர் பார்ப்பனர்களுக்குத் தொல்லைகொடுத்து வருவது என்பதை எல்லா மக்களும் உணர்ந்துகொள்ளவேண்டும். பார்ப்பனர்கள் வாழை இலைகள்; திராவிடர்கள் முட்செடிகள். வாழை இலை முள்ளின்மீது மோதினாலும், முள் வாழை இலைமீது மோதினாலும் வாழை இலைதான் அழிந்துபடும். அதுபோல், பார்ப்பனர்கள் திராவிடர்கள் மீது மோதினால் அவர்கள்தான் அழிவார்கள். திராவிடர்கள் பார்ப்பனர்களை மோத ஆரம்பித்தார்களோ—அப்புறம் பார்ப்பனப் பூண்டே இந்நாட்டில் இருக்காது. இதைப் பார்ப்பனர்கள் உணரவேண்டும். பார்ப்பனத் தோழர்களே! எங்களை முட்டாள்களென்று கூறி உங்களைப் புத்திசாலிகள் என்று பெருமையடித்துக்கொள்கிறீர்கள். ஆணவப்பட்டு அழிந்து போகாதீர்கள். புத்திசாலிகளானால், புத்திசாலிகளாகவே பிழைத்துக்கொள்ளுங்கள்.

உங்களவரே இந்தியாவின் முதன் மந்திரியாயிருப்பது பற்றியும், உங்களவரே கவர்னர் ஜெனரல் ஆகப் போவதுபற்றியும் நீங்கள் பெருமையடித்துக் கொள்ளாதீர்கள். இவர்கள் பார்ப்பனர்களா யிருப்பதால்தான் இந்தப் பதவிக்கு உரியவர்களானார்களே தவிர—எங்களவர்களைவிட அதிகமான யோக்கியதை ஒன்றும் இவர்களுக்கு இருந்துவிடவில்லை என்பதை ஒப்புக்கொள்ளுங்கள். இந்நாட்டில் எத்தனையோ அறிவாளிகளான திராவிடத் தாய்மார்கள் இருக்க ஒரு பார்ப்பனத்திதான் இம் மாகாணத்தின் மந்திரியாக முடிந்ததென்றாலும் அதுவும் உங்களவர் ஆதிக்கத்தினால்தானே ஒழிய, புத்திசாலித்தனத்தால் அல்ல என்பதையும் அறிந்துகொள்ளுங்கள். 100-க்கு 3 பேரேயுள்ள உங்களுக்கு உயர்ந்த பதவிகள் எல்லாம் சொந்தமாய் இருப்பது முறையல்ல. பாடுபடும் பாட்டாளிகள் சூத்திரர்களாகவும், பாடுபடாத சோம்பேறியாகிய நீங்கள் உயர்சாதிக்காரர்களாகவும் இருப்பது நேர்மையல்ல என்பதையும் நீங்கள் உணர்ந்துகொள்ளுங்கள்! பொதுவாக, உங்களுக்குச் சகல உரிமைகளும் வாங்கிக் கொடுத்தவர்கள் திராவிடர்கள்தான் என்பதை நீங்கள் உணருங்கள். 'கரையான் புற்றெடுக்க கருநாகம் குடி புகுந்ததுபோல்', நீங்கள் சுயராஜ்யத்தை உங்கள் நன்மைக்காகவே பயன்படுத்திக் கொள்ளல் நியாயமல்ல என்பதை உணருங்கள்; எல்லோருக்கும் சுயஉரிமை இருக்கப் பார்த்துக்கொள்ளுங்கள்; எங்களையும் உங்களது சகோதரரைப் போல் நடத்துங்கள். 'எல்லோரையும் சமமாகப் பார்ப்பவர்கள் பிராமணர்கள்' என்று கூறிக்கொண்டு—எதற்காக உச்சிக்குடுமி வைத்துக்கொள்கிறீர்கள்? எத்தனை நாட்களுக்கு எங்களவர்களில் சிலரை உங்கள் கையாட்களாக வைத்துக்கொண்டு எங்களை ஏய்த்துவரலாம் என்று நினைக்கிறீர்கள்? அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக எங்கள் பக்கம் வந்துவிட்டால் உங்கள் கதி என்ன ஆவது? என்ன செய்யப் போகிறீர்கள்? இப்போதே வந்துகொண்டிருக்கிறார்களே!

சென்ற கறுஞ்சட்டை மாநாட்டின்போது மதுரையில் எங்கள் பந்தலைக் கொளுத்துவதில் முக்கிய பங்கெடுத்துக் கொண்ட தோழர் ஒருவர் என்னிடம் வந்து, 'அய்யா! நான் அக்கிரகாரக் கும்பலின் பேச்சைக் கேட்டு அன்று ஏமார்ந்துபோனேன். இன்றுமுதல் நான் உங்கள் சிஷ்யன்; என்னை மன்னிக்கவேண்டும்' என்று கூறி மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்! 'அப்பா நீ மட்டுமல்ல, நானும் அப்படித்தானப்பா ஏமார்ந்தேன்; ஆகவே மன்னித்து ஏற்கவேண்டும் என்று ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு அவர்களோடு நான் சேர்ந்தேன்' என்று ஆறுதல் கூறினேன். ஒவ்வொரு தோழரும் இப்படித்தானே நடக்க நேரிடும்! அந்த மதுரைக்காரரைத் தூண்டிவிட்ட அக்கிரகாரத்துக்கார அய்யர் கூறினாராம், "டேய், நீ நேற்றுவரை வெறும் ரெங்கசாமியாயிருந்தே, இன்று நீ ரெங்கசாமி நாயக்கர் ஆகிவிட்டே' என்று. அதற்கு அந்தத் தோழர் கூறினாராம், 'நானாவது நேற்றுவரை வெறும் ரெங்கசாமியாயிருந்து, இன்று ரெங்கசாமி நாயக்கர் ஆனேன்; ஆனால், நீ பிறந்தது முதற்கொண்டு அய்யராகவே இருந்து வருகிறாயே, இது நியாயமாகப்படுகிறதா உனக்கு?' என்று கேட்டாராம். கேள்வி கேட்ட பார்ப்பனர் பேசாமல் வாயை மூடிக்கொண்டாராம்.

இந்தப் பார்ப்பனர்கள் தாம் எங்கு பார்த்தாலும் நமக்குத் தொல்லை கொடுத்து வருகிறார்கள்; நமது கூட்டங்களுக்குத் தடை விதிக்கும்படி பார்ப்பன சப்-இன்ஸ்பெக்டர்களைத் தூண்டுகிறார்கள்; நமது கறுப்புச்சட்டைக்காரர்கள் மீது தடையுத்தரவு பிறப்பிக்கும்படி தூண்டுகிறார்கள், பார்ப்பன உபாத்தியாயர்கள் நமது பிள்ளைகளுக்குத் தொந்தரவு கொடுக்கிறார்கள்; பார்ப்பனத் தலைமை உபாத்தியாயர்கள், திராவிட உபாத்தியாயர்களுக்குத் தொல்லை கொடுக்கிறார்கள்.

நாம் கோரும் முன்னேற்றத் திட்டங்களையெல்லாம், கூடுமான அளவுக்கு எதிர்க்கிறார்கள். ஆனால் அது சட்டமாகியவுடன் அதன் முழுப் பயனையும் அவர்களே அடைந்து கொள்கிறார்கள். பெண்களுக்கு வயது வந்த பிறகுதான் கல்யாணம் செய்யவேண்டுமென்று, நாம் கூப்பாடிட்ட போது எதிர்த்தார்கள். ஆனால், அது சட்டமானபோது அவர்கள் தான் அதன் முழுப்பயனையும் அடைந்து வருகிறார்கள். விவாகரத்து உரிமை, பதிவுத் திருமணம், சொத்துரிமை ஆகிய எதையும் எதிர்ப்பவர்கள் இவர்கள்தான். இப்படியாகப் பார்ப்பனர்கள் நம்மை எவ்வளவுதான் எதிர்த்து வந்தபோதிலும் நமக்கு ஏதோ நல்ல வாய்ப்பாய்த்தான் இருந்து வருகிறது. நாம் இதுவரை உயிரோடிருப்பதே ஒரு நல்ல வாய்ப்புத்தான். இனி நான் இறந்தாலும் ஏனைய திராவிடத் தோழர்கள் ஏமாந்து விடமாட்டார்கள். எனது வேலையை அப்படியே விட்டு விடமாட்டார்கள். தொடர்ந்து போராடி வெற்றி பெறுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டுவிட்டது.

நமது கொள்கைகள் ஒரு அளவுக்குப் பொதுமக்களின் செல்வாக்கைப் பெற்றுவிட்டன. இன்னும் கொஞ்ச காலத்திற்குள், நம் இஷ்டம் போல் நடக்காத மந்திரிகளுக்கு மந்திரிசபை நாற்காலி இடம் கொடுக்காது; நம் இஷ்டப்படி நடக்காத அதிகாரிகளுக்கு அதிகாரம் கிடைக்காது; நம் இஷ்டப்படி நடக்காத சட்டசபை மெம்பர்களுக்குச் சட்டசபை இடங் கொடுக்காது என்கிற நிலை ஏற்பட்டுவிடும். இந்நிலை வெகு சீக்கிரமே ஏற்பட வேண்டுமானால் நாம் எல்லோரும் கறுப்புச் சட்டைக்காரர்களாக வேண்டும். நீங்கள் என்ன 'சட்டைக்காரனா?' என்று நம்மைச் சிலர் கேட்கக்கூடும். நம் நாட்டில் 'சட்டைக்காரர்கள்' என்றொரு கூட்டம் இருந்து வருவது உண்மைதான்; அவர்கள் பலசாதிக்குப் பிறந்தவர்கள். ஆகவே வெறும், 'சட்டைக்காரர்கள்' என்று மட்டும் அழைக்கப்பட்டு வருகிறார்கள். நாம் அப்படியல்ல. நாம் ஒரே சாதிக்குப் பிறந்தவர்கள். ஆகவே 'கறுப்புச் சட்டைக்காரர்கள்' என்று நம்மையழைத்துக் கொள்கிறோம். கறுப்புச்சட்டை ஒரு படையெடுப்பின் எண்ணமல்ல; அது இழிவின் அறிகுறி. 'இழிவிற்காக அவமானப்படுகிறோம்; துக்கப்படுகிறோம்; அதைப் போக்கிக் கொள்ள முயற்சி செய்கிறோம்; முடிவு செய்து விட்டோம்' என்பதன் அறிகுறி.

தோழர்களே! நீங்கள் விரும்பி அணியுங்கள் கறுப்புச் சட்டையை! அடுத்த மாநாட்டிற்குள்ளாவது இந்த இழிசாதிப் பட்டம் கட்டாயம் ஒழிக்கப்பட்டேயாகவேண்டும். அதற்காக ஒரு 2000, 3000 பேர்களாவது பார்ப்பனர்களின் பலிபீடத்தில் தம் உயிரை இழக்கத் தயாராயிருக்க வேண்டும். 'நானா சூத்திரன்? எங்கள் தாய்மார்களா சூத்திரச்சிகள்? இந்நிலை ஒரு நிமிட நேரமேனும் இருக்க இடங்கொடேன்! இதோ என் உயிரை இதற்காக அர்ப்பணிக்கவும் துணிந்துவிட்டேன்!' என்கிற உணர்ச்சி ஒவ்வொரு திராவிடனுக்கும் ஏற்படவேண்டும். இழிசாதிப் பட்டத்தை யொழிப்பது சுலபமான காரியமல்ல என்றாலும், உலக அறிவு முன்னேற்றம், சாதி உயர்வு—தாழ்வுகளை இனி இருக்கவிடாது. ஆகவே, உறுதி பெற்றெழுங்கள்—இழிவு நீக்கந்தான் முக்கியம் என்று! சாகாமலேகூட வெற்றி பெற்றுவிடலாம்.

[தூத்துக்குடியில், 9-5-1948-ல் சொற்பொழிவு—'விடுதலை' 19-5-1948]

# 15. ஆரியர் இயல்பு

ஜெர்மானியர்கள் தங்களை ஆரியர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். நம் நாட்டுப் பார்ப்பனர்களும் தங்களை ஆரியர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள்.

இந்துமத ஆதாரங்களும் ஆரிய மதம், ஆரிய வேசம், ஆரியக் கடவுள்கள், ஆரிய மன்னர்களின் கதைகள் என்பதாகத்தான் இருந்து வருகின்றன.

புராண ஆராய்ச்சிக்காரர்களும் பண்டிதர்களும் சரித்திர ஆராய்ச்சிர்காரர்களும் பாரதம், இராமாயணம், மற்ற புராதனக் கதைகள் ஆகியவைகளில் வரும் சுரர், அசுரர் என்கின்ற பெயர்களையும், இராட்சதர்கள், தேவர்கள் என்கின்ற பெயர்களையும், இராமன், அனுமன் என்கின்ற பெயர்களையும், ஆரியர்—திராவிடர் என்கின்ற பிரிவையே பிரதானமாய்க் கொண்டதாகவும் தீர்மானித்துப் புத்தகங்கள் எழுதி இருக்கிறார்கள். மேல் நாட்டுச் சரித்திரக்காரர்களும், சிறப்பாக அரசாங்கத்தார்களும் மேற்கண்ட ஆரியர்—திராவிடர் என்கின்ற பிரிவை ஒப்புக்கொண்டு அந்தப்படியே ஆதாரங்கள் ஏற்படுத்திப் பள்ளிப்பாடமாகவும் வைத்து வந்திருக்கிறார்கள்.

அரசியல்காரர்களில் தீவிரக் கொள்கைகொண்ட தேசீயவாதிகள், சமதர்மக்காரர்கள், பொதுவுடைமைக்காரர்கள் என்று சொல்லப்படுகின்ற தோழர் ஜவகர்லால் நேரு போன்றவர்களும், தங்களது ஆராய்ச்சிகளில் ஆரியர்–திராவிடர் என்கின்ற பிரிவுகளை ஒப்புக்கொண்டும், சரித்திரங்களில் இருந்துவரும் ஆரியர்–திராவிடர் பிரிவுகளை ஒப்புக்கொண்டும் இருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட ஆரியர்களின் தத்துவம் எப்படி இருக்கிறதென்றால் இந்தியா அவர்களுடைய பூர்வீக நாடு என்று சொல்லுவதற்கில்லாமல் இருப்பதோடு, இந்தியாவில் ஆரியர்களுக்கு உள்ள சம்பந்தம்—கேவலம், அய்ரோப்பாவிலும் ஆப்கானிஸ்தானத்திலும் அரேபியாவிலும் பர்சியாவிலும் இருந்து வந்து குடியேறிய அய்ரோப்பியர், முகமதியர்கள், பார்சியர்கள் ஆகியவர்களுக்கு இருந்துவரும் பொறுப்பும் உரிமையும், மனிதாபிமானமும்கூட இல்லாதவர்கள் என்று சொல்லும்படியான நிலையில்தான் இருந்து வருகின்றார்கள்.

உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால், ஜெர்மானியர்கள் தங்களை ஆரியர்கள் என்று சொல்லிக்கொண்டு, 'ஜெர்மனி தேசத்தில் உள்ள யூதர்களுக்கு ஜெர்மனியில் இருக்க உரிமை இல்லை' என்று சொல்லி விரட்டியடித்த தன்மை போலத்தான்—இந்தியாவிலுள்ள மக்களால் ஆரியர்கள் விரட்டியடிக்கப்பட வேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள்.

ஜெர்மானியர்கள் யூதர்களை விரட்டியடிப்பதற்குச் சொல்லிய காரணங்கள், இந்தியர்கள் ஆரியர்களை விரட்டியடிக்கலாம் என்பதற்குப் பொருத்தமானதாகவே இருக்கின்றன என்பது கவனிக்கத் தக்கதாகும்.

அதாவது, ஜெர்மானியர்கள் யூதர்களை விரட்டியடித்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் சொல்லுகிறார்கள்.

அவைகளில் ஒன்று, யூதர்கள் தங்களுக்கென்று தேசம் இல்லாதவர்கள் என்பதும், தேசம் இல்லாத (அதாவது ஜிப்ஸி—மலைசாதியார்—லம்பாடிகள்—கூடாரத்தோடு திரிகின்றவர்கள் போன்றவர்கள்) அப்படிப்பட்டவர்களை ஒரு நாட்டில் வாழ விட்டால் அவர்கள் அந்த நாட்டின் வளப்பத்தையும் முற்போக்கையும் காட்டிக்கொடுத்து ஜீவிக்கிறவர்களாகி விடுவார்கள் என்பதுமாகும்.

இரண்டாவது, யூதர்கள் சரீரத்தினால் பாடுபடமாட்டாதவர்கள்; சரீரத்தினால் பாடுபடாதவர்கள் ஊரார் உழைப்பைக் கொள்ளை கொண்டு வாழுபவர்களாவார்கள் என்றும்;

ஊரார் உழைப்பால் வாழுகின்றவர்கள்—மனித சமூகத்துக்கு சயரோகம் போன்ற வியாதிக்குச் சமமானவர்கள் என்பதோடு, தங்கள் சோம்பேறி வாழ்க்கைக்காக நாட்டையும் மனித சமூகத்தையும் பிரிவினையிலும் கலகத்திலும் தொல்லையிலும் இழுத்து விட்டுக் கொண்டு சமாதான பங்கத்தை விளைவித்து மிகக் குறைந்த விலைக்கும் எதையும் காட்டிக்கொடுப்பார்கள் என்பதாகும்.

இந்த இரண்டு காரணங்களும் இன்று நமது நாட்டில் 'ஆரியர்' என்று சொல்லிக் கொள்ளும் பார்ப்பனர்களாதியோரிடம் இருந்துவருகின்றன.

முதலாவது, 'ஆரியர்களுக்கு இன்ன தேசம்' என்பதாகவே ஒன்று இல்லை என்ப தோடு, ஆரியர்கள் என்பவர்கள் சரீரத்தினால் பாடுபடாமல்—மதம், புரோகிதம், சாதி உயர்வு, அரசியல், உத்தியோகம், தேசியத் தலைமை என்கின்றதான சூழ்ச்சித் தொழில் களால்—சிறிதும் சரீரப் பாடுபடாமல் மற்ற ஆரியரல்லாத மக்கள் உழைப்பினாலேயே 'வஞ்சக ஜீவியம்' நடத்துகிறவர்களாய் இருக்கிறார்கள். இவர்களுக்குத் தங்கள் வாழ்க்கை, தங்கள் ஆதிக்கம் என்பது அல்லாமல் மற்றபடி எந்த தேசத்தைப் பற்றியோ, எவ்வித ஒழுக்கத்தைப் பற்றியோ, எந்த சமூகத்தைப் பற்றியோ சிறிதும் கவலை இல்லா தவர்களாய் இருக்கிறார்கள்.

இந்தக் காரணத்தாலேயே நமது பழைய ஆதாரங்கள், அகராதிகள் ஆகியவற்றில் ஆரியர்கள் என்றால் 'மிலேச்சர்கள்' என்றும், 'ஒருவிதக் கழைக்கூத்தர்கள்' என்றும் குறிப்பிடப்பட்டு இருக்கின்றன.

இதற்கேற்பவே, ஆரியர்கள் இந்நாட்டில் என்று காலடி வைத்தார்களோ அன்று முதல் இன்றுவரை, பலவித வஞ்சகங்களாலும், சூழ்ச்சிகளாலும் இந்நாட்டுமக்களை ஏமாற்றி அவர்களைச் சின்னாபின்னமாகப் பிரித்து, ஆபாசக் கற்பனைகளையும் நடத்தை களையும் வேதமாகவும், மோட்ச சாதனமாகவும் ஆக்கி, இந்நாட்டு மக்களுக்கு அவர்களே ஆதிக்கக்காரர்களாகவும்—'இகம்', 'பரம்' இரண்டிற்கும் தர்மகர்த்தாக்களாவும், சமுதாயம், அரசியல் இரண்டிற்கும் தலைவர்களாகவும் வழிகாட்டிகளாகவும் எஜமானர்களாகவும்கூட தங்களை ஆக்கிக்கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதை யாரும் மறுக்கமுடியாது.

ஆனால், இவர்களது தர்மகர்த்தாத் தன்மையிலும் எஜமானத் தன்மையிலும் வழிகாட்டித் தன்மையிலும் இந்நாட்டுக்கு எந்தத் துறையிலாவது ஏதாவது கடுகளவு முற்போக்கோ, நன்மையோ ஏற்பட்டு இருக்கின்றன என்று யாராவது சொல்லமுடியுமா என்று பார்த்தால் ஒன்றும் இல்லை என்றுதான் சொல்லவேண்டும்.

இந்தியாவுக்கோ, இந்திய நாட்டுப் பழம்பெருங்குடி மக்களுக்கோ ஏதாவது ஒரு நன்மை—சிறிதளவாவது ஏற்பட்டு இருக்கிறது என்று சொல்லப்படுமானால் அதில்—ஒரு சிறிது முஸ்லிம் அரசர்களாலும், பெரும்பாலும் அய்ரோப்பிய ஆட்சியாலும் ஏற்பட்ட தென்றே சொல்லாம்.

அதுவும் ஆரியர்களின் முட்டுக்கட்டையையும், தொல்லைகளையும் சமாளித்து ஏற்பட்டவைகள் என்றுதான் சொல்லவேண்டுமே ஒழிய, மற்றபடி ஆரியர்கள் முயற்சியோ, உதவியோ ஒருசிறிதாவது கொண்டு ஏற்பட்டனவென்று எதையும் சொல்லமுடியாது.

மேலும், இன்று அரசியல், சமூக இயல், பொருளியல், அறிவியல் ஆகிய நான்கு துறைகளிலும் இந்நாட்டு மக்கள் அடைந்திருக்கும் ஈனநிலைக்கு இந்த ஆரியர்களே காரணம் என்று சொன்னால் அதுவும் மிகையாகாது.

ஆகையால், தேசமில்லாதவர்களும் தேக உழைப்பு இல்லாதவர்களுமான சமூகம் எந்த நாட்டிற்கும் கேடுவிளைவிக்கக்கூடியது என்பதோடு, முக்கியமாக இந்தியாவுக்கு அது ஒரு பெருங்கேட்டையே விளைவித்துக்கொண்டிருப்பதாகவே இருந்துவருகிறது.

இதை நமது பாமர மக்கள் உணராமல் ஏமார்ந்து போய் தங்களுக்குத் தாங்களே கேட்டை விளைவித்துக்கொள்கிறார்கள் என்பது ஒரு புறம் இருக்க, இந் நாட்டு ஆரியரல்லாத மக்களில் படித்தவர்களாயும் விஷயமறிந்தவர்களாயுமுள்ள ஒரு கூட்ட மக்கள் அவ்வாரியர் களுக்கு 'உள் ஆளாய்' இருந்து சமூகத்தையே அடியோடு காட்டிகொடுத்தும்—கெடுத்தும் தாங்கள் வாழ முயற்சிக்கும் இழிநிலையை உணரும்போது, ஆரிய சுபாவம் இவர்களது இரத்தத்தில் எப்படி ஊறியது என்று ஆச்சரியப்பட வேண்டியிருப்பதை வெளிப்படுத்தாமல் இருக்க முடியவில்லை.

['குடி அரசு'—கட்டுரை 10-9-1949]

# 16. புரோகித ஆட்சி

தலைவரவர்களே, தோழர்களே!

நான் கூறுகிறேன், தொழிலாளர்கள் மோதிக்கொள்ள வேண்டிய இடம் முதலாளிகள் அல்ல. முதலாளிகளிடம் முறையிடுவதற்குப் பதிலாக மந்திரிகளிடம் முறையிடுங்கள்; அவர்கள் வீட்டைக் கொள்ளையடிப்பதற்குப் பதிலாக சஜானாக்களைக் கொள்ளையிடுங்கள். உங்களுக்குப் பலாத்காரத்தில் நம்பிக்கை இருந்தால் அதை யோக்கியமான முறையில், வீரமான முறையில் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். தொழிலாளியின் கூலி உயர்ந்துவிட்டால் மட்டும் அவன் நிலை, அந்தஸ்து உயர்ந்துவிடாது; தொழிலாளித் தன்மை அடியோடு மாறிவிடாது.

கூலி உயர்வு என்று கூறுவதெல்லாம் பார்ப்பனர் சூழ்ச்சி. பாட்டாளிகளை வேறு பக்கம் திருப்ப அவர்கள் கையாளும் தந்திரம் பாடுபடாதவன் எப்படிச் சுகவாழ்வு வாழ்கிறான் என்று உள்ள நிலைமைகளைத் தொழிலாளர்கள் உணர்ந்துவிட்டால், பார்ப்பன இனத்தின்மீது பாய்ந்துவிடுவார்கள். இந்த நிலைமை ஏற்பட்டுவிடுமே என்று அஞ்சியே, மற்ற கழகங்கள் கூலி உயர்வுப் பிரச்சினையை மட்டும் பேசுகின்றன. தொழிலாளர் பிரச்சினை சீக்கிரமாகத் தீர்ந்துவிட, முடிவுபெற நாங்கள் புரோகித ஆட்சிமீது—பார்ப்பனர்கள்மீது திருப்புகிறோம். அரசாங்கத்தின்மீது திருப்புவது, பார்ப்பனன்மீது திருப்புவது ஆகிய இரண்டும் ஒன்றேதான். அரசாங்கத்தில் இருப்பவர்கள் எல்லாம் புரோகிதர்கள். இந்தியப் பிரதம மந்திரி நேருவும் புரோகிதன் பரம்பரை; சென்னை முதன் மந்திரி இராஜகோபாலாச்சாரி ஓர் புரோகிதரின் பேரர், நேற்று ஆந்திராவில் ஒருவர் முதன் மந்திரியானர், அவர் ஒரு புரோகிதரின் மகன். புரோகிதர்களுக்குப் பதவி வசதியாகக் கிடைக்கிறது. ஆகவே, புரோகிதர் ஆட்சி ஒழியவேண்டுமென்றாலும்—அரசாங்கம் ஒழிய வேண்டும் என்றாலும் எல்லாம் ஒன்றுதான்.

இந்தியாவிற்குச் சக்கரவர்த்தியிருந்தார் [Emperor of India]. அவருக்குப் பாதுகாப்பாகத் தரைப்படை, கப்பற்படை, விமானப்படை அனைத்தும் இருந்தன. அவன் இன்று எங்கே போய்விட்டான்? அவனை விரட்டி விட்டோமே, 'Quit India' என்று கூறி! சக்கரவர்த்தி இல்லாமலேயே நாம் வாழ்கிறோமே? இந்தியாவில் 562 சிற்றரசர்கள் வாழ்ந்திருந்தார்கள்; 'சுதந்திரம்' பெற்றவுடன் அவர்கள் தங்கள் கிரீடங்களை இறக்கிக் காணிக்கையாக வைத்துவிட்டு, மாதம் 50000, 20000 என்று கூலி பெற்றுக்கொண்டு போய் விட்டார்கள்! அரசன் இல்லாத காலமே சரித்திரத்தில் இல்லாதிருந்தது. அப்படிப்பட்ட நிலையை மாற்றிவிட்டோமே! ஜமீன்தார்களும் ஓடிவிட்டார்களே! அடுத்தப்படி பணக்காரன் இருக்கிறான். உனக்கு ஏன் 1000 வேலி, 2000 வேலி என்று கேட்கும் நாள் வரும். அவனும் ஒழிந்துவிடுவான். இந்த அருமையான மாறுதல் ஏற்பட்டுவரும் காலத்தில் இந்த அன்னக்காவடிப் பார்ப்பான் ஏன்?

[கல்லக்குறிச்சியில், 4-10-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 8-10-1953]

## 17. 'பார்ப்பானே, வெளியேறு!'

தலைவரவர்களே! தோழர்களே!

ஆரியர்கள்–பார்ப்பனர்கள் இந்த நாட்டுக்காரர்கள்தாம் என்று சொல்ல முடியுமா? அல்லது நாம்தான் இந்த நாட்டுக் குடிமக்கள் அல்லவென்று சொல்லிவிட முடியுமா? பார்ப்பனர்களே எழுதிவைத்த சரித்திரங்களிலேயே எழுதியிருக்கிறார்களே, பார்ப்பனர்கள் இந்த நாட்டுக்குப் பிழைக்க வந்தவர்கள் என்று! அவர்களே எழுதி இருக்கிறார்களே, திராவிட மக்களாகிய நாம்தான் இந்த நாட்டின் பூர்விகக் குடிமக்கள், சொந்தக்கார மக்கள் என்று!

நாட்டுக்குச் 'சுதந்திரம்' கிடைத்துவிட்டதே! எங்கள் நாடு எங்கள் மக்கள் கையில்தானே இருக்கவேண்டும்? அப்படியிருக்க அன்னியர்கள்—இங்கு வந்தவர்கள், திராவிடர்களல்லாதவர்கள்—'நாங்கள் வேறு இனம், வேறு சாதி, வேறு பிறப்பு' என்று தங்களைத் தாங்களே சொல்லிக் கொள்ளுகிறவர்கள்—நம்மை இழிவானவர்கள், தகுதி திறமை அற்றவர்கள் என்று சொல்லி ஆதிக்கம் செலுத்துவது என்றால் என்ன அர்த்தம்? ஆதலால், இந்த நாட்டுக்கு அன்னியர்கள் இந்த நாட்டைவிட்டு வெளியேறட்டும் என்று சொல்லுகிறோம்.

வெள்ளையன் இந்த நாட்டுக்கு அன்னியன் என்றால், இந்தப் பார்ப்பனர்களும் அன்னியர்கள்தானே! அவன் (வெள்ளையன்) 200, 300 வருட காலமாக இருந்த அன்னியன் என்றால், இந்தப் பார்ப்பனர்கள் 2000, 3000 ஆண்டு காலமாக இருக்கிற அன்னியர்கள்தானே!

வெள்ளைக்கார அன்னியன் 6000 மைலுக்கு அப்பால் வெகுதூரத்தில் இருந்ததால் தன் ஆதிக்கத்தைக் காப்பாற்றிக்கொள்ள இந்த நாட்டு மக்களை அடக்கி வைத்திருந்தான் என்றாலும், நம்மை மனிதனாக நடத்தினான்; நம் ஆட்களிடம் சாப்பிட்டான்; நம் ஆட்களைத் தொடமாட்டேன் என்று அவன் சொல்லவில்லை. இன்னும் 'பறையர்கள்' என்று இந்தப் பார்ப்பனர்களால் அழைக்கப்படுகிற மக்கள்தானே அவனுடைய சமையல் காரர்களாக—'பட்லர்'களாக இருந்தார்கள்?

ஆனால், இங்கே இருக்கிற அன்னியனாகிய—இந்தப் பார்ப்பன அன்னியன் நம்மைத் தொடக்கூடமாட்டேன் என்கிறானே! தொட்டால் தீட்டு என்கிறானே! 'நான் முகத்திலே பிறந்த முதல் சாதி மனிதன்; நீ காலிலே பிறந்த கடைசாதி மகன்' என்கிறானே! நம் மக்கள் தலையெடுக்க வொட்டாமல் எல்லாத் துறையிலேயும் நம்மை அடக்கி, ஒடுக்கி, அடிமைப்படுத்தி அதற்கேற்ற முறைகளையே ஆட்சி, சட்டம், அரசாங்கம், மதம், கடவுள் என்பவைகளாக வைத்திருக்கிறானே! ஆதலால் இப்படிப்பட்ட அன்னியனை எப்படி வெளியே துரத்தாமல் இருக்கமுடியும்?

'இந்த அன்னியர்களை எப்படி வெளியேற்றுவது?' என்கிறீர்களா? எப்படி வெளியேற்றுவது? வெள்ளைக்கார அன்னியன் எப்படி வெளியேற்றப்பட்டான்?

தண்டவாளத்தைப் பெயர்த்தார்கள்; இரயிலைக் கவிழ்த்தார்கள்; தந்திக் கம்பியை அறுத்தார்கள்; போஸ்டாபீசுகளைக் கொளுத்தினார்கள்; அதிகாரிகளைக் கொன்றார்கள்; முகத்தில் திராவகத்தை ஊற்றினார்கள். இவைகள் எல்லாம் பார்ப்பான் வகுத்துக் கொடுத்த திட்டங்கள்தானே!

இப்படிப்பட்ட காரியங்களால்தான் வெள்ளைக்கார அன்னியன் வெளியேறினான் என்று காங்கிரஸ்காரர்களும் பார்ப்பனர்களும் சொல்லுகிறார்கள். அவனும் இதை ஒப்புக் கொண்டதன் அடையாளமாகவோ என்னவோ இந்தக் காரியங்களுக்கு அப்புறம் போய் விட்டான்.

ஆதலால், வெள்ளைக்கார அன்னியனை வெளியேற்றுவதற்காக என்னென்ன காரியங்களைச் செய்தார்களோ அப்படிப்பட்ட காரியங்களையெல்லாம், இந்தப் பார்ப்பன அன்னியனை வெளியேற்றுவதற்கும் செய்துதானே தீரவேண்டும்! ஆனால், நாங்கள் ஒன்றும் முட்டாள்கள் அல்ல, அவைகள் மாதிரியே திருப்பிச் செய்வதற்கு! தண்டவாளத்தைப் பிடுங்கியதிலும், இரயிலைக் கவிழ்த்ததிலும், தந்திக்கம்பியை அறுத்ததிலும், போஸ்டாபீஸைக் கொளுத்தியதிலும் யாருக்கு நட்டம்? வெள்ளைக்கார அன்னியனுக்கா? இல்லையே! நமக்குத்தானே! நம் பொருள்கள்தானே நட்டமடைந்தன? ஆதலால், நாங்கள் அதுபோல, நமக்கு நாமே நட்டத்தைத் தேடிக் கொள்கிறமாதிரி நடந்துகொள்ளவே மாட்டோம். அக்கிரகாரத்தின் பக்கம்தான் எங்கள் பார்வை திரும்பும்.

ஆகவே, தோழர்களே! இன்று சமுதாயத் துறையில், அரசியல் துறையில் நமக்குக் கேடாக இருப்பது இந்தப் பார்ப்பனர்கள்தான்.

பார்ப்பனர்களும் முடிவு கட்டிக்கொண்டார்கள், இரண்டிலொன்று பார்த்துவிடுவது என்று. ஆச்சாரியார் அவர்களே சொல்லிவிட்டார், 'இப்போது நடைபெறுகிறது தேவ–அசுரப் போராட்டம்' என்று. அப்படியென்றால் என்ன? ஆரிய–திராவிடப் போராட்டம், இராமாயணம்போல் துவங்கி விட்டதென்று பொருள்.

இதைப் பார்ப்பனர்கள் நன்றாய் உணர்ந்திருக்கிறார்கள். பெரிய பெரிய அறிவாளிப் பார்ப்பனர்களிலிருந்து சாதாரண 'சவுண்டிப்' பார்ப்பனர்கள் வரை நன்றாக உணர்ந்திருக்கிறார்கள். ஆனால், நம்மவர்களில் சிலர்தான் இதை இன்னும் உணராமல் இருக்கிறார்கள். உணரவில்லை என்பதோடு, நாம் செய்கிற இந்தக் காரியம் தப்பு என்றே சொல்ல வந்து விட்டது ஒரு கோஷ்டி!

நாம் இப்போது செய்கிற இந்தக் காரியம் நம்முடைய சொந்தத்துக்காகவா? அல்லது நம்முடைய சொந்த, சுயநல, சுயசுக வாழ்வு, சுயலாபத்துக்காகவா செய்கிறோம்? எல்லாத் திராவிட மக்களுக்கும், சூத்திரர்களுக்கும், 'தாசி மக்க'ளுக்கும், பறையர் சக்கிலிகளுக்கும் சேர்த்துத்தானே செய்கிறோம்? நாளைக்குச் 'சூத்திரன்' என்ற பட்டம் போனால் எனக்கு மட்டும்தானா போகும்? அல்லது 'சூத்திரன்' என்று இருப்பது எனக்கு மட்டும்தானா? எல்லோருக்கும் சேர்த்துத்தானே இந்தக் கீழ்நிலை? நாளைக்குச் சூத்திரப் பட்டம் போனால் எல்லோருக்கும் சேர்த்துத்தானே போகும்? இதைத் திராவிட மக்கள் நன்றாக உணர வேண்டும்.

நமக்கு இன உணர்ச்சி–கட்டுப்பாடு இருந்திருக்குமேயானால் இந்த ஆச்சாரியார் தானாகட்டும், அல்லது பார்ப்பனர்கள் தாமாகட்டும் இவ்வளவு மேலே போயிருக்க முடியுமா?

நமக்கு இன உணர்ச்சி—அத் தகைய அறிவு இல்லையென்பதாலேயே நாளுக்கு நாள் அவர்கள் மேலே மேலே போகிறார்கள். காந்தியையே கொன்றார்களே!

தோழர் காந்தியார் எப்பேர்ப்பட்டவர்; எவ்வளவு பெரியவர் என்று புகழப்பட்டவர். அந்தக் காந்தியார் இல்லாவிட்டால் இந்தப் பார்ப்பனர்கள் எங்கோ கிடந்திருப்பார்கள். இவர்களையெல்லாம் தூக்கி நிறுத்தி, ஆளாக்கி, அதிகாரத்தையும் இவர்கள் கையிலே வாங்கிக்கொடுத்தாரே காந்தியார்—அவர் கொஞ்சம் பார்ப்பனருக்கு எதிராகச் சொன்னார். அதாவது, பார்ப்பனர்கள் காந்தியாரிடம் போய், 'எங்கள் பிள்ளைகளுக்குப் படிக்க இடம் கொடுக்கமாட்டேன் என்கிறார்கள்' என்பதாகப் புகார் செய்தபோது, காந்தியார், 'நீங்களெல்லாம் பிராமணர்கள்; கடவுளைத் தொழப்போங்கள். அவர்கள்தான் படிக்கட்டுமே' என்று சொன்னார் என்ற உடனேயே—ஒரு பார்ப்பான், பார்ப்பன இனத்துக்கு அவர் செய்த நன்மை, தேடித்தந்த உயர்வையெல்லாம்கூட மறந்து சுட்டுத்

தள்ளிவிட்டானே! மற்றொரு பார்ப்பனர் நாம் படிக்கவேகூடாது என்று சட்டம்—சூழ்ச்சி செய்துவிட்டாரே? இந்த அளவுக்குப் பார்ப்பனர்களிடம் இன உணர்ச்சியும் வெறியும் இருக்கின்றன.

நாம் யாரையும் சுடவேண்டாம். இனத்தைக் காட்டிக்கொடுத்துப் பிழைக்காமலாவது, நாம் செய்வதைக் கெடுக்காமலாவது இருக்கலாமல்லவா?

நாமும் இத்தனை நாட்களாகப் பார்க்கிறோமே! பார்ப்பனர்களில் எத்தனையோ கொள்கை பேசுபவர்கள், புரட்சிக்காரர்கள், பெரிய பெரிய தலைவர்கள் என்பவர்களையெல்லாம் பார்த்திருக்கிறோமே! இவர்களில் எந்தப் பார்ப்பனராவது, எந்தப் பார்ப்பானையாவது எதிர்த்து இருக்கிறானா? எந்தக் கட்சியில் பார்ப்பான் இருந்தாலும், பார்ப்பன சமுதாய விஷயத்தில் எல்லாப் பார்ப்பனர்களும் ஒரே கட்சிக்காரர்கள்தானே!

[வண்ணாரப்பேட்டையில், 15-11-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 18-11-1953]

## 18. நீதி கெட்டது யாரால்?

மேன்மைதங்கிய கனம் நீதிபதி அவர்களே!

1. சமூகம் கோர்ட்டார் எனக்கு அனுப்பியிருக்கும் நோட்டீசில் சமூகம் கோர்ட்டை அவமதித்ததாகவும், அதற்கு ஏன் நான் தண்டிக்கப்படக்கூடாது என்பதற்குக் காரணம் காட்ட வேண்டுமென்றும் கோரப்பட்டிருக்கிறது. மேலும், ஒரு சிவசாமி முதலியார் என்பவரால் தாக்கல் செய்யப்பட்டிருப்பதாகச் சொல்லி எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் பிரமாணப் பத்திரிக்கையில், (Writ-Petition) ரிட் பெட்டிஷன் நெம்பர் 568-55-ல் சமூகம் கோர்ட்டு தீர்ப்பில் கனம் திருச்சி ஜில்லா கலெக்டரைப்பற்றிச் சொல்லப்பட்டிருப்பவைகளைக் குறித்து, திருச்சி பொதுக்கூட்டத்தில், நான் 4-11-1956ஆம் தேதியில் மேற்படி தீர்ப்பைச் சொன்ன கனம் நீதிபதி அவர்களைக் குறைகூறியிருப்பதாகவும் (criticise), அந்த நீதிபதிகளைத் தனிப்பட்ட முறையில் தாக்கிப் பேசியிருப்பதாகவும், அவர்களுக்கு உள் எண்ணம் (motive) கற்பித்துத் தாக்கியிருப்பதாகவும் அதனால் சமூகம் கோர்ட்டின் கவுரவம் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருப்பதாகவும் சமூகம் கோர்ட்டு நீதிபரிபாலனத்திற்கு இடையூறு விளைவிப்பதாகவும் இருக்கிறதென்றும் கண்டிருக்கிறது.

2. இந்தக் குற்றச்சாட்டு வார்த்தைகளில் நேரிடையான பொருளுக்கு ஏற்றமாதிரி நான் யாதொரு குற்றமும் செய்தவனல்லன். பொதுவாக மனித சுபாவத்தைப் பற்றியும், நீண்டகாலமாக அது பிரதிபலித்து வருவதுபற்றியுமே எடுத்துச் சொல்லி, அதற்குப் பரிகாரம் தேடவே முயற்சித்து இருக்கிறேன். பிரஸ்தாபத் தீர்ப்பில் (Writ-Petition) ரிட் பெட்டிஷன் நெம்பர் 568-55 தீர்ப்பில் பாதிக்கப்பட்டிருப்பவர் ஒரு திராவிடர்; அதிலும் தமிழர் (Non-Brahmin). தீர்ப்பு கொடுத்திருக்கிறவர்கள் பிராமணர்கள் என்று சொல்லப்படுகிற பார்ப்பனர்கள். இந்தத் தீர்ப்பின்மீது என்னுடைய ஆராய்ச்சிக்கு எட்டிய கருத்து—பாதிக்கப்பட்டவர் பார்ப்பனரல்லாதாராய் இருப்பதாலும், தீர்ப்புக்கூறினவர்கள் பார்ப்பனர்களாயிருப்பதினாலும் இம்மாதிரி ஏற்பட்டது என்பது எனது தாழ்மையான முடிவு. இதில் முற்கூறப்பட்டவர் பார்ப்பனரல்லாதார் என்பதையும், பின் கூறப்பட்டவர்கள் பார்ப்பனர்கள் என்பதையும் கனம் கோர்ட்டார் அவர்கள் மறுக்கமுடியாத உண்மையென்றும், இரு தரப்பார்களும் இந்துக்கள் என்பதையும் மறுக்கமுடியாத உண்மையென்றும் கருதுகிறேன்.

3. பார்ப்பனர் என்பது இந்துமதத்தின்படி வேதசாஸ்திர, புராணங்களின் தன்மையைப் பொறுத்தது. சம்பந்தப்பட்ட கனம் நீதிபதிகள் இருவரும் அந்த வேத சாஸ்திர இதிகாச புராணங்களின் தன்மைப்படி பார்ப்பனர்களாக இருப்பதோடு,

அவர்களது வாழ்விலும். தொழிலிலும் நடத்தையிலும்–மத வேத சாஸ்திர, இதிகாச, புராண தத்துவங்களுக்கு மாறுபாடாக நடக்கக்கூடாது என்ற உறுதியுடையவர்கள். இவர்கள் மாத்திரம் அல்ல, இந்த நாட்டிலே தங்களைப் பார்ப்பனர்கள் என்று சொல்லிக் கொள்கிற—கருதுகிற எவரும் இந்தத் தன்மைக்கு மாறாக நடந்துகொள்வதாகக் கூறினால் அது இயற்கைக்கும், உண்மைக்கும் மாறானதாகும். அதே வேத சாஸ்திர புராண இதிகாசங்களின்படி, பார்ப்பனர் உயர்ந்த சாதி; மற்றவர்கள்—குறிப்பாக இந்தப் புகார் சம்பந்தப்பட்ட தீர்ப்பினால் பாதிக்கப்பட்டிருப்பவர் தாழ்ந்த சாதியாளர் ஆவார்கள். உயர்ந்த சாதிக்கும் தாழ்ந்த சாதிக்கும் மனுதர்மம் முதலிய இந்து சாஸ்திர–புராண–இதிகாசங்களில் பெரிய கீழ்–மேல் பேதமும், பெருத்த இழிவும், பெருமையும் கற்பிக்கப்பட்டு இருக்கின்றன. அதை விட்டுவிடுவது என்பது எந்தப் பார்ப்பனனாலும் முடியாததும், விரும்பப்படாததுமான காரியமாகும். மற்றும், மேல் சாதிக்காரன் என்கின்ற பார்ப்பானுக்கு இந்த சாதி உணர்ச்சியை விடாமல் எந்தத் துறையிலும் காட்டிக்கொள்வதனால் மேன்மையும் நல்வாழ்வும் இலாபமும் இருந்து வருகின்றன. அதை இழக்க எந்தப் பார்ப்பானும் சம்மதிப்பான் என்று நம்புவது இயற்கைக்கு விரோதமானதாகும். ஆனதனால், இந்தப் பிரச்சினையில் நான் பேசியிருப்பது சம்பந்தப்பட்ட இந்த இரண்டு கனம் நீதிபதிகளையும் தனிப்பட்ட முறையில் குறித்து அல்ல என்பதையும், பார்ப்பனர்கள் எல்லோரையுமே கருத்தில் வைத்து அவர்களுடைய சுபாவத்தை நினைத்து, இதற்குப் பரிகாரம் தேட வேண்டுமென்கிற கருத்திலேயே பேசி இருக்கிறேன்.

4. மனுதர்ம சாஸ்திரத்தின்படி ஒரு பார்ப்பனரல்லாதவன் ஒரு நாட்டிலே நீதிபதியாகவோ, நிர்வாக அதிகாரியாகவோ, அமைச்சராகவோ, அரசனாகவோ, உயர் பதவியாளனாகவோ இருக்கக்கூடாது என்பது தர்மமாகும். அப்படி இருக்கக்கூடாது என்பதும் பார்ப்பனர் தர்மமாகும். இன்று மனுதர்மம்தான், நீதிபதிகள் கையாளும் இந்துச் சட்டத்துக்கு மூலாதாரமாகும். இதற்கு உதாரணங்கள் அதிகம். கனம் கோர்ட்டார் அவர்களுக்குக் காட்டவேண்டியதில்லையென்றே கருதுகிறேன்.

ஒரு உதாரணம் காட்டவேண்டுமானால், சென்னை அய்கோர்ட்டு ஏற்பட்டு சுமார் 100 ஆண்டுகள் ஆகியும் சமீபத்திய 10, 15 ஆண்டுகளில்தான்—அதாவது, 'பார்ப்பன துவேஷம்' என்று சொல்லப்படக்கூடிய சாதிப் புரட்சியும், பார்ப்பனர்கள் நடத்தையை வெளிப்படையாகக் கண்டித்தல் என்ற தன்மையும் சர்வசாதாரணமாக நாட்டில் ஏற்பட்ட பிறகுதான்—பார்ப்பனரல்லாதார்களில் ஒருவர் இருவர் உயர்நீதிமன்ற நீதிபதிகளாகத் தோன்ற முடிந்தது. ஆகையினால்தான், பார்ப்பனர்கள் எந்தப் பதவியில் இருந்தாலும் அவர்களுடைய நடத்தையில் சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம், பார்ப்பனர் அல்லாதவர்களை ஒழித்துக்கட்டுவதில்—தலை எடுக்கவிடாமல் செய்வதில் சரியாகவோ, தப்பாகவோ காலாகாலம் பாராமல் தங்கள் முயற்சிகளைச் செய்து கொண்டுதான் வருவார்கள். இப்படி இவர்கள் நீண்ட நாட்களாகச் செய்து வருகிறார்கள் என்பதற்கு ஏராளமான உதாரணங்கள் எடுத்துக்காட்டமுடியும். பின்னால் தருகிறேன்.

5. பிரஸ்தாப வழக்கில் சம்பந்தப்பட்ட கலெக்டருடைய உத்தரவு சரியானதென்று வாதாட நான் முன்வரவில்லை. அவரைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியவும் தெரியாது; எங்களுக்குள் அறிமுகம் அளவுக்குக்கூட சந்திப்பு ஏற்பட்டதும் இல்லை; இதை உறுதியாகச் சொல்லுகிறேன். அதுபோலவே, கனம் இரு ஜட்ஜுகளையும் நான் சந்தித்ததே கிடையாது; எனக்கு அறிமுகமும் இல்லை; என்னால் அவர்களை அடையாளம் காட்டவும் முடியாது. வெளியிலே சொல்லுவார்கள்—கலெக்டரைப்பற்றி நேர்மையும் நாணயமும் உள்ளவர் என்றும்; சம்பந்தப்பட்ட கனம் ஜட்ஜுகளை, தமிழர்களின் நல்வாழ்வு விஷயத்தில் விஷம் உள்ள பார்ப்பனர்கள் என்றும் பேசிக்கொள்வார்கள். நான் பேசியதாகச் சொல்லப்படும் பேச்சில் இந்த இருதரப்பினர்களைப்பற்றியும் தனிப்பட்ட முறையில் இந்த

குணங்களைச் சம்பந்தப்படுத்தியோ, மனத்தில் வைத்தோ நான் ஒரு பேச்சும் பேச முற்படவில்லை. தனிப்பட்ட முறையில் இவர்களைப்பற்றி எனக்கு எந்தவிதமான விருப்போ, வெறுப்போ கிடையாது. ஆனால், தீர்ப்பைப்பற்றிப் பத்திரிக்கையில், படித்ததும் அதைப்பற்றிப் பார்ப்பனப் பத்திரிக்கையான 'இந்து' பத்திரிக்கை எழுதிய தலையங்கத்தைப் படித்ததும் தமிழ் மக்கள் இதைக் கேட்டுப் பதறின பதட்டத்தையும் காட்டின பரிதாபத்தையும் பார்த்த பிறகு, எனக்குத் திடீரென்று ஒரு எண்ணம் தோன்றிற்று. 'ஆகா! இந்தக் கலெக்டர் ஒரு பார்ப்பனராய் இருந்தால் கனம் பார்ப்பன ஜட்ஜுகள் இப்படி எழுதியிருப்பார்களா? அல்லது ஜட்ஜுகள் இருவரும் பார்ப்பனரல்லாதாராய் இருந்திருந்தால்—இவ்வாறு கலெக்டரை அநாவசியமாகத் தாக்கி எழுதியிருப்பார்களா?' என்ற எண்ணமும் தோன்றியது. அதாவது, கலெக்டர் உத்தரவு (15-7-1955) தவறானது என்று கனம் ஜட்ஜுகள் கண்டுபிடித்த கருத்தைப்பற்றியல்ல நான் சொல்லுவது மற்ற எதைப்பற்றி என்றால், 'எதேச்சாதிகார நோக்கம் கொண்டவரும் சட்டத்தை மதிக்காதவருமான இப்பேர்ப்பட்ட ஓர் உத்தியோகஸ்தரிடம், இந்த இராஜ்யத்தில் எந்த இடத்திலும் சட்டம், அமைதி இவைகளைப் பாதுகாத்து நிர்வகிக்கின்ற ஒரு வேலையை மேலும் சர்க்கார் ஒப்படைக்கலாமா என்பதை அரசாங்கம் தீவிரமாக ஆலோசிக்க வேண்டும்' (அதாவது ஒப்படைக்கக்கூடாது) என்ற கருத்தைக்காட்டி எழுதித் தீர்ப்புக்கூறி இருப்பது பெருத்த அநியாயம் என்கிற ஆத்திரமும் எனக்கு ஏற்பட்டது. அந்த வாக்கியம் ஆங்கிலத்தில் உள்ளபடி :

**It is for the Government to consider and consider seriously whether an officer of such totalitarian views and disregard of law should continue to be entrusted with the duties of maintaining law and order in any locality in this State.'** என்பதாகும்.

6. மேலும், இந்த பிரஸ்தாபத் தீர்ப்பு சம்பந்தப்பட்ட வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் பார்ப்பனர்களாகவே—அதுவும் பெரிதும் 'அய்யங்கார்'களாகவே இருந்திருக்கிறார்கள். அதாவது, ரிட் மனுதாரருக்கு ஆஜராகி இது சம்பந்தமாக எல்லா நடவடிக்கைகளையும் நடத்தியவர் திரு. அண்ணாதுரை அய்யங்கார் என்ற பார்ப்பனர். சர்க்காருக்கு சகலவிதமான சட்டப்பிரச்சினைகளிலும் தக்க ஆலோசனை சொல்லக்கூடிய பெரிய வக்கீல், அதாவது, அட்வகேட் ஜெனரல் திருவேங்கட ஆச்சாரியார் என்ற பார்ப்பனர். கலெக்டருக்காக சமூகம் கோர்ட்டில் வாதாட நியமனம் செய்யப்பட்டவர் திரு. ராகவன் அய்யங்கார் என்கிற ஒரு பார்ப்பனர். தீர்ப்பை அளவு கடந்து ஆதரித்து சர்க்காருக்குக் கலெக்டர்மீது ஆத்திரம் ஏற்படும்படியும், தீர்ப்பை அமுலுக்குக் கொண்டு வரும்படியும் 'இந்து' பத்திரிக்கையில் தலையங்கம் எழுதியவரும் ஒரு அய்யங்கார் பார்ப்பனர் என்று தெரிகிறபோது—இயல்பாகவே பார்ப்பனர்களின் சுபாவத்தை உறுதிப்படுத்துவதோடு, எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமும் ஏற்பட்டுவிட்டது. மற்றும், இவ்வளவு பார்ப்பனர்கள் ஒன்று சேர்ந்து சதி ஆலோசனை செய்ததுபோல், கலெக்டர்மீது இவ்வளவு பெரிய—அதாவது கலெக்டருடைய வாழ்க்கைக்கே ஆபத்து ஏற்படும்படியான கடுமையான குறிப்பு எழுதித் தீரவேண்டிய அவசியத்திற்கு ஏற்றதாக இருக்கத் தகுந்த அளவுக்கு, கலெக்டர் செய்த பெரிய தப்பு என்ன என்பது இங்கே சிந்திக்கத்தக்கது.

மேலும், குதிரை வண்டிக்காரர்களிடமெல்லாம் ½ ரூ, 1 ரூ. என்று இலஞ்சம் வாங்கியதாகக் குற்றம் சாட்டி ருசுப்பிக்கப்பட்ட சப் கலெக்டர், ஜாயிண்ட் மாஜிஸ்டிரேட்டாக இருந்த திரு. டி. எஸ். சுவாமிநாதன் என்ற அய். சி. எஸ். பார்ப்பன அதிகாரியைப்பற்றியும்; துணி, மணி, உயர்ந்த ரக சாராயம், மதுவகைகளை இலஞ்சமாக வாங்கிக்கொண்டு பல ஊழல்களைப் புரிந்த எஸ். ஏ. வெங்கட்ராமன் என்ற அய். சி. எஸ். பார்ப்பன அதிகாரியைப்பற்றியும்; இரசாயன உர ஊழல் வழக்கில் சம்பந்தப்பட்ட எஸ். ஒய். கிருஷ்ணசாமி

என்ற மற்றோர் பார்ப்பன அதிகாரியைப்பற்றியும்;—இன்னோரன்ன பல பார்ப்பன அதிகாரிகளைப் பற்றியும், குற்றம் சாட்டப்பட்டு, கோர்ட்டுகள் முன்னால் கொண்டுவரப் பட்ட பார்ப்பன அதிகாரிகளில் யாரைப்பற்றியாவது—திருச்சி கலெக்டரைப்பற்றிய தீர்ப்பில் தாக்கி எழுதியுள்ளதைப் போல, எந்தத் தீர்ப்பிலாவது தாக்கி எழுதப்பட்டிருக்கிறதா? அல்லது அவர்களைப்பற்றி இந்த யோக்கியமான அய்யங்கார் 'இந்து' பத்திரிக்கையில் தலையங்கம் எழுதப்பட்டிருக்கிறதா? நில விஷயத்தில் அவர்—அதாவது திருச்சி கலெக்டர் ஒரு உத்தரவைப் போட்டார் என்பதின் காரணமாக அந்த உத்தரவு ரத்து செய்யப்பட வேண்டுமென்று வந்த வழக்கில்—'அந்த வழக்கு தப்பு; அது ரத்து செய்யப்பட்டுவிட்டது' என்று தீர்ப்புக் கூறினால் போதுமானதா யிருக்கலாம். அதற்குமேல் கலெக்டரும் இனி அம் மாதிரி உத்தரவு போடமாட்டார்; வேறு அதிகாரிகளும் அம் மாதிரி உத்தரவு போடமாட்டார்கள்; இது சாதாரணமாகப் பெருந்தன்மையில் செய்யக்கூடிய காரியம்.

இதில் கவனிக்கத் தகுந்த இன்னொரு காரியம் என்ன ஏற்பட்டிருக்கிறது என்றால், ரிட் மனு விசாரணைக்கு வருவதற்கு முன், மனுதாரர் (வாதி) தரப்பில் ஆஜரான குளித் தலை அட்வகேட் திரு. அண்ணாதுரை அய்யங்கார் அவர்களே 11-9-1956 ஆம் தேதியில் சென்னை யில் ஆஜரான வக்கீல் திரு. நம்பியாருக்கு எழுதிய கடிதத்தில், ரிட் மனு சம்பந்தமான விவகாரங்கள் பைசலாகிக் கொண்டிருப்பதால் வாய்தா வாங்கிக்கொள்ளும்படியும், சர்க்கார் தரப்பு வக்கீல் ரிட் மனு விசாரணைக்கு வரும்போது குறிப்பிட்ட சம்பவங்களுக்குப் பின் கலெக்டர் முன்னர் போட்ட உத்தரவை modify செய்து, மேற்கொண்டு போட்டிருக்கும் உத்தரவுகளைப்பற்றிச் சொல்லுவாரென்றும், ஆனதால் 16-7-1955 ஆம் தேதியில் கலெக்டர் போட்டிருக்கும் உத்தரவு சரியா, தப்பா என்று கவனிக்க வேண்டியதில்லை என்று நம் தரப்பில் சொல்லி, மனுவை விசாரணை இல்லாமல் முடித்துவிடலாம் என்றும் எழுதி இருக்கிறார். திரு. அண்ணாதுரை அய்யங்கார் திரு. நம்பியாருக்கு எழுதிய அந்தக் கடிதத்தின் நகலைத் தன்னுடைய கவரிங் லெட்டருடன் கலெக்டரின் பர்சனல் அஸிஸ் டென்ட் திரு. வில்சனுக்கு எழுதியிருக்கிறார். அந்த இரண்டு லெட்டர்களையும் கலெக்டர் தன்னுடைய வக்கீலான திரு. ராகவனுக்கு அனுப்பி, கோர்ட்டில் அதன்படி விளக்கிக்காட்டி, வழக்கை முடித்துவிடும்படி அனுப்பியிருப்பதாகத் தெரிய வருகிறது.

7. ரிட் மனு விசாரணைக்கு எடுத்தபொழுது கலெக்டருடைய வக்கீல் வழக்குச் சம்பந்தப்பட்ட விவகாரங்கள் முடிந்துவிட்டதாகக் கோர்ட்டார் அவர்களிடம் எடுத்துச் சொன்னதாகவும்; நீதிபதிகள் 'அதைப்பற்றி அக்கறை இல்லை; மனுவை விசாரித்து முடித்துவிடலாம்' என்று சொல்லி, வழக்கை விசாரித்து இம்மாதிரி முடிவு செய்திருப்ப தாகவும் தெரிகிறது. அதாவது, ரிட் மனுவில் கண்ட விஷயம் கோர்ட்டுக்கு வெளியிலேயே தீர்ந்துவிடுகின்றபடியால் விசாரிக்க வேண்டியதில்லை என்று வக்கீல் சொல்லியும்—'அதைப்பற்றிக் கவலையில்லை; கேசை நடத்திவிடலாம்' என்று கேசை நடத்தியிருக் கிறார்கள் என்றால்—இது உண்மையாய் இருக்குமானால், கனம் நீதிபதிகள் நடத்தையில் உள் எண்ணம் கொள்ளவேண்டி யிருக்கிறது. அந்தப்படி, கலெக்டரின் வக்கீல் நீதிபதி களுக்கு விசாரணை நடத்தவேண்டிய அவசியம் இல்லை என்கின்ற நிலைமையை எடுத்துச் சொல்லாமல் இருந்திருக்கும்பட்சத்தில், அந்தப் பார்ப்பன வக்கீலுடைய நடத்தை மேலே குறிப்பிட்டபடி, கலெக்டர் மீது சதி எண்ணம் கொண்டு செய்யப்பட்ட காரியங்களில் ஒரு அம்சமாக இருக்குமோ என்று எண்ணவேண்டி யிருக்கிறது.

மேலும் அட்வகேட் ஜெனரலாக இருக்கிறவர்—கலெக்டர், சர்க்கார் பிரதிநிதியாக இருந்து செய்த காரியமானதால் இதன் தன்மைகளைச் சரிவர உணர்ந்து கலெக்டரின் காரியங்களை முழுவதும் ஆதரிக்காவிட்டாலும் உத்தரவை ரத்து செய்வதோடல்லாமல்— விடாமல் கலெக்டரையே அடியோடு கெடுப்பதற்குத் தாராளமாய் இடம் கொடுத்துவிட்டுப் பேசாமல் வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தார் என்றால், அதற்காக, கனம் ஜட்ஜுகளும்

அட்வகேட் ஜெனரலுக்கு நல்வாழ்த்துக் கூறுகிறார்கள் என்றால்—இதை, சதிக்கு மற்றோர் அம்சமாகக் கொள்ளவேண்டியிருக்கிறது. மற்றும் சாதாரணமாக, நாணயக் கேடான காரியங்களில் அதிகாரிகளைத் தண்டிப்பது, குற்றம் கூறுவது முதலிய காரியங்களுக்குத் தலையங்கம் எழுதாத 'இந்து' பத்திரிக்கையானது, அமைதியை நிலைநிறுத்தச் செய்த சாதாரண நிர்வாக உத்தரவுமீது ஏற்பட்ட தீர்ப்பில் மிகக் கடுமையான வார்த்தைகளைப் போட்டுத் தலையங்கம் எழுதி இருக்கிற ஆசிரியர் பார்ப்பனராக இருப்பதாலேயே என்றும் அவர்களும், அதாவது சாதாரண சம்பந்தமில்லாதவர்களும் சேர்ந்து சதியில் கலந்திருக்கிறார்கள் என்று எண்ணவேண்டியிருக்கிறது.

8. ஒரு கலெக்டருக்கு உத்தியோக முறையில் கலெக்டர் என்ற 'ஹோதா'வில் எத்தனையோ இலாக்கா நிர்வாகங்கள், நடைமுறை வேலைகளும் இருக்கின்றன. அவைகளில் இந்தத் தீர்ப்புக்குக் காரணமான உத்தரவு நூற்றில் ஒரு பாகமாக இருக்கலாம். இதுவே கலெக்டருக்கு வேலையும் அல்ல; இந்த மாதிரி காரியங்களும் அவர் முன்னால் வரக்கூடியவைகளும் அல்ல; ஏதோ ஒரு சமயத்தில் வரும். இம் மாதிரி சந்தர்ப்பங்களில் அவருக்கு எந்தவிதமான உள் எண்ணமும் இருந்திருக்க வேண்டிய அவசியம் காணப்படவில்லை. கலெக்டருடைய 30 ஆண்டு நிர்வாக நடத்தைகளைப்பற்றி எந்தவிதமான குற்றமோ, குறையோ கூறப்படவில்லை; எவராலும் குறிப்பிடப்படவுமில்லை. இப்படிப் பட்டவர் ஒரு காரியத்தில் தவறுதலான உத்தரவு, அதுவும் தான் தவறு செய்கிறோம் என்கிற எண்ணமே யில்லாமல்—அரசாங்க நோக்கத்தைச் சரியாகவோ தப்பாகவோ புரிந்து, அதன்பேரில் போடப்பட்ட ஓர் உத்தரவுக்காக, இவ்வளவு பெரிய கொடுமை இழைக்கப்பட்டு விட்டதுதான் என் உள்ளத்தைப் பெரிதும் வருத்திவிட்டது.

9. நான் ஏறக்குறைய சுமார் 50 ஆண்டு காலமாகவே பார்ப்பன—மேல்சாதி மக்கள் என்பவர்கள்—சட்டப்படி, சாஸ்திரத்தின்படி, மதத்தின்படி என்று தாங்கள் அடைந்திருக்கும் வசதியையும் உயர் நிலையையும்—பார்ப்பனரல்லாத கீழ் மக்கள் நலனுக்குக் கேடாகப் பயன்படுத்தும் வாய்ப்பை ஒழிக்க வேண்டுமென்று பாடுபட்டு வருகின்றேன். என்னுடைய பிரதானமான தொண்டு இதுதான்—இனியும் என் வாழ்நாள் வரையிலும் ஏற்படுத்திக்கொண்டிருக்கிற தொண்டும் இதுதான். இவ்வளவு நான் வரையிலும் பாடு பட்டும் இந்நாட்டுப் பார்ப்பனரல்லாத மக்களுக்குப் பார்ப்பனர்களால் ஏற்பட்டு வருகிற கொடுமைகள், அவர்கள் தலை எடுக்க வொட்டாமல் அழுத்தப்பட்டு வருகிற துணிச்சலான அநீதிகள் ஒரு குறிப்பிடத்தகுந்த அளவுக்காவது குறைந்திருக்கிற அளவு நிலைத்திருக்குமா என்றும் சொல்லமுடியாது. என்னுடைய தொண்டிலே எத்தனையிலோ ஒரு பாகமான காரியத்திற்காக ஏற்பட்ட இந்த வழக்கில், பிரஸ்தாப ஜட்ஜுகளை நான் தனிப்பட்ட முறையில் தாக்கவில்லை என்பதோடு நான் இராமசாமி என்ற தனிப்பட்ட தன்மையில் பேசவில்லை; பொதுமக்கள் தொண்டன், அவர்களுக்காக எந்தத் தியாகமும் செய்யத் தயாராக இருக்கிறவன் என்ற முறையில்—கீழ் சாதிக்காரர்கள், சூத்திரர்கள் என்று சொல்லப்படுகிற அவர்களின் பிரதிநிதி என்ற முறையில் பேசுகிறேனே தவிர என் சொந்த நலத்திற்காக நான் அவ்விதம் பேசவில்லை.

10. கனம் ஜட்ஜுகளுடைய தீர்ப்புகளைச் சட்டமுறையில் நான் எவ்விதமான தவறும் கூறவில்லை. அவர்களுடைய உள் எண்ண விஷயங்களில் இந்த வழக்கு அதாவது, கலெக்டர் உத்தரவை ரத்து செய்திருப்பதை, சட்டப்படி என்கிற நீதி செலுத்தியிருக்கிற விஷயத்தில் அவர்களுக்கு எந்த விதமான உள்எண்ணங்களைக் கற்பிக்கவும் இல்லை. சட்ட நீதி பரிபாலனம் கெடும்படியான அளவில் நான் அவர்கள் மீது ஒருவிதமான குற்றத்தையும் எடுத்துக்காட்டவில்லை. என்னுடைய குறிப்பெல்லாம் பொதுவாக பார்ப்பன ஜட்ஜுகள் தயாராக இருந்தாலும் அவர்களுடைய நடத்தையில் சட்டத்தைப்பொறுத்து எப்படி நடந்து கொண்டாலும், தமிழனுக்குத் தன்னாலான கேடுசெய்து அழுத்தவோ, அழிக்கவோ செய்ய

வேண்டியது அவர்கள் சாதி—மதக் கடமை என்பதும்; இதில் யாரும் எந்தப் பார்ப்பனரும் மறந்தும் தவறி நடக்கமாட்டார்கள் என்பதும்; இந்தநிலை ஏற்படாமல் பாதுகாத்துக் கொள்ளவேண்டியது மற்றவர்கள் கடமை என்பதும்தான். இந்த ஜட்ஜுகள்மீதும் சட்ட ரீதியில் நான் குறை சொல்லவில்லை என்பதோடு, சட்டரீதியில் தகுதியற்றவர்கள் என்றும் சொல்லவரவில்லை. நான் சொல்லுவதெல்லாம் எங்களுக்கு—எங்களைக் கீழ்சாதி என்றும், நாங்கள் மேலே வருவது தங்களுக்கு ஆபத்து என்றும், தங்கள் மத தர்மத்துக்குக் கேடு என்றும், தங்களை மேல்சாதி என்றும், இந்த சாதிப் பிரிவுகள் இப்படியே இருக்கவேண்டும் என்றும் கருதிக் கொண்டிருக்கிற மனுதர்ம—இந்து பார்ப்பனர்கள் ஜட்ஜுகளாகவும், வேறு எந்த உத்தியோகஸ்தர்களாகவும், எங்கள் நாட்டில் எங்கட்கு வேண்டாம். வேறுநாட்டில் அவர்களுக்கு எவ்வளவு உயர்பதவி வேண்டுமானாலும் கொடுங்கள்; அவற்றுள் நாங்கள் குறுக்கிடவில்லை. அவர்கள் நீதிபதிகளாக இருப்பதில் எங்களுக்கு நம்பிக்கை இல்லை. இந்தக் கருத்தை வெளியிடும் வகையில்தான் பிரஸ்தாப வழக்குப் பேச்சில் நான் பேசியிருக்கிறேன்.

11. பார்ப்பான் நீதிபதியாய், ஆட்சியாளனாய் இருக்கும் நாடு கடும்புலி வாழும் காடேயாகும். ஆதலால், நாங்கள் புலிவேட்டை ஆடுகிறோம். புலி, மேலே பாய்ந்தால் ஒருவர் இருவர் கடிபடவேண்டியதுதான். 'எல்லாப் பார்ப்பனர்களும் அப்படித்தானா?' என்று கனம் ஜட்ஜுகள் சிந்தித்து, நான் சொல்லுவதைத் தவறு என்று கருதலாம். நம் நாட்டில் இன்றைபதினம் உள்ள பார்ப்பனர்களில் ஆச்சாரிய புருஷர்களாய் இருக்கிறவர்களைத் தள்ளிவிட்டு, எல்லோரையும் ஒன்றுபோல் பாவித்து, பொதுமக்கள் நன்மைக்காகப் பாடுபடுகின்ற பார்ப்பனர்கள் என்று எண்ணி இருக்கின்ற தன்மையில் உயர்ந்த சீர்திருத்தக்காரர், நாட்டின் விடுதலைக்காகப் பெரிய தியாகங்களைச் செய்தவர்கள் என்ற தன்மையில் இதுவரையில் எந்த இந்தியனும் வகித்திராத உயர்ந்த பதவி வகித்தவர்கள் என்கிற தன்மையில் முதல் வரிசையில் முதல்வராக இருக்கும் மாஜி கவர்னர்—ஜெனரல் உயர்திரு. சி. இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் சொல்லுகிறார்கள்: 'நான் வேத சாஸ்திர, புராண, இதிகாச, உபநிஷத் தர்மங்களில் முழு நம்பிக்கையுடையவன். வருணாசிரம தர்மத்தில் (சாதிப் பிரிவில்) மிக்க நம்பிக்கையும் கவலையும் உடையவன்; அவைகளைப் பரப்பவும் நிலைநிறுத்தவுமே நான் பாடுபடுகிறேன்; இனியும் அதற்காகவே பாடுபடுவேன்' என்று சொல்லுகிறார்; எழுதுகிறார்; அதற்கு வேண்டிய காரியங்களையும் செய்கிறார் என்றால்—இனியாரை மனத்தில் வைத்துக்கொண்டு—'எல்லாப் பார்ப்பனர்களும் இப்படித்தான் இருப்பார்களா?' என்று நினைப்பது?

> வாயில்—நாக்கில் குற்றம் இருந்தால் ஒழிய வேம்பு இனிக்காது; தேன் கசக்காது, பிறவியில் மாறுதல் இருந்தால் ஒழிய—புலி புல்லைத் தின்னாது; ஆடு மனிதனைத் தின்னாது. அதுபோலவாக்கும் நமது பார்ப்பனர்கள் தன்மை. இந்த ஒரு வழக்குக்காக அல்ல, நான் இப்படிச் சொல்லுவது.

12. திரு. ரெங்கசாமி ரெட்டியார் எம். எல். ஏ 18-2-1956ஆம் தேதியில் சென்னை சட்டசபையில் பேசியிருப்பதைவிட, நான் திருச்சி பொதுக்கூட்டத்தில் சம்பந்தப்பட்ட கனம் நீதிபதி அவர்களை அதிகமாகத் தாக்கியோ உள்எண்ணம் கற்பித்தோ ஒன்றும் பேசிவிடவில்லை. சட்டசபையில் பேசிய பேச்சுக்காக திரு. பி. ரெங்கசாமி ரெட்டியார் பேரில் கோர்ட்டை அவமதித்த குற்றத்திற்காகவோ, வேறு எந்தக் குற்றம் சாட்டியோ எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. அவர்மீது நடவடிக்கை எடுக்க முடியாது என்றும் சொல்லுகிறார்கள். இது என்ன விபரீதம்! ஒரு விஷயத்தைப்பற்றிச் சட்டசபையில் பேசினதற்குச் சட்டம் பாதுகாப்பு அளிக்கிறது; வெளியில் அதே விஷயத்தைப்பற்றி mild ஆகப் பேசியதற்காக 'கன்டெம்ட் ஆப் கோர்ட்' என்ற குற்றம் சாட்டி நடவடிக்கை எடுக்க அதே சட்டம் இடம் கொடுக்கிறது. நியாயப்படி இருவர் பேச்சிலும் குற்றம் இல்லை.

திரு. ரெங்கசாமி ரெட்டியார் பேசின பிறகாவது சர்க்கார் சம்பந்தப்பட்ட கனம் நீதிபதிகளைப் பொறுத்து உடனடியாக விசாரணை நடத்த ஏற்பாடு செய்திருந்தால், இந்த 'கன்டெம்ப்ட் ஆப் கோர்ட்' நடவடிக்கைக்கு இடம் இருந்திருக்காது.

13. அய்க்கோர்ட் ஜட்ஜுகளைப்பற்றிவிசாரணை நடத்துவதா என்ற அய்யப்பாடும் கனம் நீதிபதிகளுக்கு எழலாம். தற்போது உத்திரப்பிரதேசம் என்று அழைக்கப்படும் பழைய அய்க்கிய மாகாண சர்க்காரால் அலகாபாத் அய்க்கோர்ட் ஜட்ஜாக இருந்த திரு. சின்கா என்பவர் ஜட்ஜாக இருந்த காலத்தில் தான் செய்யவேண்டிய நீதிபரிபாலன காரியங்களைத் தாறுமாறான வகையில் செய்தார் என்றும், பட்ரவுனா வழக்கு, முராளிலால் வழக்கு இந்த இரு வழக்குகளில் தீர்ப்புச் சொன்னது அந்த ஜட்ஜால் நீதி பரிபாலனத்திற்குப் புறம்பான சலுகைகள் காரணமாக ஏற்பட்டவை என்றும் குற்றம் சாட்டி, அப்போதைய கவர்னர்–ஜெனரலாக இருந்த உயர்திரு. இராஜகோபாலாச்சாரியார் அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது. கவர்னர்–ஜெனரலும் அந்த விஷயங்கள் குறித்து விசாரித்து ரிப்போர்ட் அனுப்பும்படி பெடரல் கோட்டுக்குத் தெரிவித்தார். பெடரல் கோர்ட்டும் விசாரணை செய்த பிறகு, 'In our opinion in those two cases. he was actuated by extra-Judicial considerations in arriving at his conclusions. We consider that his conduct in two cases viewed in the light of proved facts, cannot be explained as an honest error of Judgment'.

பட்ரவுனா கேசில் அந்த ஜட்ஜு சின்ஹாவினுடைய சகோதரர் அட்வகேட் திரு. சாம்பு பிரசாத் என்பவர் 5-6-1945-ல் 'வகேஷன் கோர்ட்'டில் முதல் பிரதிவாதிக்காகச் சில நடவடிக்கைகளில் ஆஜராகி இருந்ததையும் பெடரல் கோர்ட்டு தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கிறார்கள். பெடரல் கோர்ட் ரிப்போர்ட்டை ஒப்புக்கொண்டு திரு. சின்காவை ஜட்ஜு பதவியிலிருந்து நீக்கிவிட்டார்கள். இச்செய்தி 29-4-1949 ஆம் தேதி, சென்னை 'மெயில்' பத்திரிக்கையில் வெளிவந்துள்ளது. அப்படிப்பட்ட 'சின்காக்கள்' நமது புனிதமான சென்னை அய்க்கோர்ட்டில் இருக்கப்படாது என்பதே எனது எண்ணம். சமீபகாலத்தில் மைசூர் அய்க்கோர்ட் ஜட்ஜ் ஒருவரை இந்திய குடியரசுத் தலைவர் நீக்கி இருப்பதும் குறிப்பிடத்தக்கது.

14. திரு. ரெங்கசாமி ரெட்டியார் சட்டசபையில் பேசியிருக்கிறபடி—கனம் நீதிபதிகளும் சாதாரண மக்களைப் போன்றவர்கள்தான். நேர்மையிலும் நாணயத்திலும் கடுகளவும் தவறாத ஜட்ஜுகளும் உண்டு; தவறி நடப்பவர்களும் உண்டு. தவறி நடக்கும் ஜட்ஜுகள் பற்றியும், அவர்கள் அக்கிரமத் தீர்ப்புகளைப்பற்றியும், எவ்விதமான சொந்த மாச்சரியமும் இல்லாமல் பொதுநல எண்ணத்துடன் (Bonafide) யோக்கியமாக விமர்சனம் செய்வது என்பது எவ்வாறு தவறாகும்? அப்படித் தவறு என்றால் ஜட்ஜு அக்கிரமம் செய்யலாம்; நடுநிலைமை பிறழ்ந்து தீர்ப்புகள் கூறலாம்; அது சட்டப்படி தவறு இல்லை—ஆனால், அதைப்பற்றிப் பேசினால், எடுத்துச் சொன்னால் தவறு என்று அல்லவா ஆகிறது? இது எந்த விதத்தில் நியாயமாகும்? அக்கிரமம் செய்யும் ஜட்ஜுகளைப் பற்றிப் பேசினால், கோர்ட்டு அவமதிப்புக் குற்றம் என்றால்—யார்தான் அதைப்பற்றிப் பேச முன்வருவார்கள்?

15. அப்படி ஜட்ஜுகள் என்ன அநீதி இழைக்காமலா இருக்கிறார்கள்? (1) This is an audacious attempt by a BRAHMIN Judge to invent a new rule, namely that a daughter who is unchaste is under the same rule of exclusion as a widow and cann't inherit her father's or mother's estate......... 'The reason why that learned Judge seems to have stretched the law was that while apparently he was prepared to admit that ordinary unchastity

might not be fatal, cohabitation with a Mohammedan was such an aggrevated form of unchastity that different considerations should apply'.

(தயவு செய்து 51 M. L. J. 387 பக்கம் பார்க்கவும்). ஒரு பார்ப்பன சப் ஜட்ஜ் சட்ட விரோதமான நியாயம் வழங்கினார் என்று உயர்நீதி மன்றம் கண்டித்தது.

(2) சென்னை அய்க்கோர்ட் கிரிமினல் அப்பீல் நெம்பர் 20-56-ல் முடிவு செய்திருக்கும் தீர்ப்பில் இருப்பது:

'The special Judge has gone to the extent of making a stupid and almost insulting suggestion, that the wife inside the kitchen and the aged father inside the house, presumably of the P. W. I. should have been examined to corroborate him'. It is not usual as our own experience shows in the house-hold of officers, for wives and children and parents to be present in the office and participate in what is going on there, probably the special Judge's experience in his own house-hold is different (Judgment dt: 31-10-1956 in Cr. A. No. 20-56 on the file of the High Court of Judicature, Madras delivered by Hon. Justice Mr. P. N. Ramasamy).

இதில் சம்பந்தப்பட்ட கீழ்க்கோர்ட் ஸ்பெஷல் ஜட்ஜ் ஒரு முஸ்லிம் என்பதும், அப்பீல் கோர்ட்டாகிய அய்க்கோர்ட் ஜட்ஜ் ஒரு பார்ப்பன ஜட்ஜ் என்பதும்தான் காரணமாகும்—இவ்வளவு கடினமாகவும் கீழ்த் தரமாகவும் தன் கீழ் உள்ள சப்-ஆர்டினேட் ஜட்ஜைப்பற்றித் தாக்கி எழுதி இருப்பதற்கு.

(3) 1950ஆம் ஆண்டில் துறையூரில் திரு. இராமானுஜ அய்யங்கார் என்ற ஒரு டிஸ்ட்ரிக்ட் முன்சீப், பார்ப்பனரல்லாத வக்கீல் திரு. பி. ரெங்கசாமி ரெட்டியாரின் O. S. No: 215—49-ல் விசாரணை நடத்திக்கொண்டிருக்கும்பொழுது சட்டவிரோதமாகவும், வக்கீலை அநாவசியமாக அவமதிக்கும் முறையிலும் சாதி ஆணவம் கொண்டு நடந்துகொண்டார்.

அந்த அய்யங்கார் முன்சீப் பேரில், திருச்சி சப்கோர்ட் O. S. No 213—51-ல் வக்கீல் ரெங்கசாமி ரெட்டியார், முன்சீப் இராமனுஜம் அய்யங்கார் ரூ. 2500க்கு மான நஷ்டத்திற்காகத் தாவா செய்தார். அந்தத் தாவாவில் எதிர் வியாஜ்யம் செய்து, கடைசியாக இந்த அய்யங்கார் முன்சீப் 16-2-1954-ல்,

'I regret for my behaviour towards plaintiff on 9-8-1950 and tender my apologies to him' என்று பிராதின்பேரில் எண்டார்ஸ் செய்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டதன்பேரில் அந்தத் தாவா மேற்கொண்டு நடத்தப்படவில்லை. இது, பார்ப்பன அதிகாரிகள் எவ்வளவு தூரம் பார்ப்பனரல்லாதாருக்குத் தொந்தரவு கொடுப்பார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டு. அந்த முன்சீபை வேலையிலிருந்து நீக்காமல் ஒரு அய்க்கோர்ட்டு டிபார்ட்மெண்டில் விசாரணை செய்து 'புரோபேஷனை' மட்டும் இரண்டு ஆண்டு அதிகப்படுத்தியதாகத் தெரிகிறது.

(4) சமீபத்தில் சமூகம் கோர்ட் பார்ப்பன ஜட்ஜுகளுள் ஒருவராகிய கனம் பாலகிருஷ்ண அய்யர், பார்ப்பனரல்லாத மந்திரியாகிய கனம் பக்தவத்சலம் கோர்ட்டில் நேரில் ஆஜராகாமல் இருக்க விதிவிலக்குக் கோரிப் போட்டிருந்த மனுவின்பேரில் தீர்ப்புச் சொல்லும்போது, 'மந்திரிகள் பல கிராமங்களுக்குச் சென்று பலதரப்பட்ட சாதாரண திறப்புவிழாக்களில் எல்லாம் கலந்துகொள்ளலாம்; கோர்ட்டிற்கு மட்டும் வரக்கூடாதா?' என்று கிண்டல் செய்யும் பாணியில் எழுதியிருக்கிறார். அதே விஷயத்தில் கனம்

பக்தவத்சலத்திற்குப் பதில் ஒரு பார்ப்பன மந்திரி—திரு. இராஜாஜி போன்ற ஒருவர் மனுப்போட்டிருந்தால் இந்த மாதிரி எழுதியிருப்பாரா? 'சட்டப்படி மனு அனுமதிப்பதற் கில்லை' என்று சுருக்கமாக எழுதியிருக்கமாட்டாரா?

(5) திரு. இராஜகோபாலச்சாரியார் மத்திய சர்க்காரில் உள்நாட்டு மந்திரியாக இருந்தபோது, பெங்களூர் L. S. ராஜு என்ற பார்ப்பன அய்யங்கார் வக்கீல்மீது தொடரப் பட்ட வழக்கில் அவரைத் தப்புவிப்பதற்காக, 'கிரிமினல் புரொசீஜர் கோடை'யே திருத்துவதற்காகச் செய்த பிரயத்தனமும்; தற்போதைய டெல்லி மக்கள் சபை சபா நாயகராக இருக்கும் திரு. அனந்தசயனம் அய்யங்கார் என்ற பார்ப்பனர் தன்னுடைய அதிகாரம், பதவி இவைகளை உபயோகப்படுத்தி அந்தக் குற்றம் சாட்டப்பட்ட பார்ப்பன வக்கீலை விடுதலை செய்வதற்குச் செய்த 'பகீரதப்பிரயத்தனங்'களும் எதை எடுத்துக் காட்டுகின்றன? இத்துடன் தாக்கல் செய்யப்பட்டிருக்கும் அய்யங்கார் கோஷ்டியின் ஆதிக்கமும், அட்டூழியமும் காட்டக்கூடிய, 'சாதிக்குறி 111' (Caste Mark 111) என்ற புத்தகத்தைப் பார்த்தால் முழுவிவரங்களும் தெரியவரும்.

16. இந்த நாட்டில் சாதிமுறை, பிரிவு, கீழ்சாதி-மேல்சாதி இருந்துவருகிறது. ஆட்சியும் ஆதிக்கமும் பெரிதும் மேல்சாதிக்குச் சொந்தம்; அவர்களிடம் அல்லலும் அவதியும் படுவது கீழ்சாதிக்காரர்களுக்குச் சொந்தம். இது சட்டப்படி, சாஸ்திரப்படி, கடவுள் சிருஷ்டியின்படி இந் நாட்டில் இருந்து வருகின்றது. இதை மாற்றுவதுதான் எங்கள் முயற்சி. இதற்கு நாங்கள் தக்க விலை கொடுத்தாக வேண்டும். ஆகையால் நீங்கள் கனம் கோர்ட்டார் இஷ்டப்படி விலை போடுங்கள். அய்க்கோர்ட் ஆதிக்கம் பார்ப்பனர்களிடமே இருந்து வந்திருக்கிறது. கீழ்சாதிக்காரர்கள் 100-க்கு 90 பேர்கள் உள்ள இந்த நாட்டில், மேல்சாதி ஜட்ஜுகள் ஏன் 100-க்கு 50, 60, 70 பேர்கள்? இவைகளெல்லாம் கேட்டால் 'கன்டெம்ப்ட் ஆப் கோர்ட்' குற்றமா?

17. சட்டசபையில் திரு. ரெங்கசாமி ரெட்டியார் பேசியிருக்கிறபடி ஏன் இந்த ஜட்ஜுகள் பேரில் விசாரணை நடத்தப்படவில்லை? 'சாமி அய்யங்கார் (சவுமியநாராயண அய்யங்கார்) திருச்சி ஜுடிஷியல் மாஜிஸ்டிரேட் சி. டி. வெங்கட்டரமணனுக்கு நெய், பால், சப்ளை செய்பவர் என்றும்; சாமி அய்யங்காரை ஹானரரி மாஜிஸ்டிரேட்டாகப் போடும்படி கலெக்டர் மலையப்பனிடம் சிபாரிசு செய்து அதன்படி நடக்காததால், கலெக்டர் பேரில் சி. டி. வெங்கட்டரமணனுக்குக் கோபம் ஏற்பட்டு அவர் அவருக்கு வேண்டிய அய்க்கோர்ட் ஜட்ஜ் கனம் நீதிபதி இராஜகோபால அய்யங்காரை சீரங்கம் அழைத்துவந்து விருந்துவைத்தார் என்றும்; பின்பு கிசான் தகராறுகள் நடந்த இடமாகிய திம்மாச்சிபுரத் திற்கு மேற்கூறியவர்கள் சென்று வந்தனர் என்றும்; 'ரிட் பெட்டிஷன்' ஜட்ஜ்மெண்ட் சொல்லுவதற்கு ஒரு வாரத்திற்கு முன்பே, அப்போது திருச்சியில் புரோபேஷனரி கலெக்டராக இருந்த வேதநாராயணன் என்பவரும் சி. டி. வெங்கட்டரமணன் என்பவரும் அய்க்கோர்ட்டில் கலெக்டரைக் கடுமையாகத் தாக்கி ஜட்ஜ்மெண்ட் தயாராகி வருகிறது என்றும் வெளிப்படையாகவே சொல்லும் அளவிற்குச் சதி நடந்திருக்கிறது' என்ற விஷயங்கள் எல்லாம்—மேலே சொல்லப்பட்ட அலகாபாத் அய்க்கோர்ட் ஜட்ஜ் திரு. சின்கா அவர்கள் செய்த குற்றங்களைவிடக் குறைந்தவைகளா? அல்லது அற்பமானவைகளா?

18. கனம் நீதிபதி அவர்கள் கவனிக்கவேண்டிய விஷயங்கள்:

(1) ரிட் பெட்டிஷன் ஜட்ஜ்மெண்டில் கலெக்டர் 15-7-1955-ல் போட்ட உத்தரவை ரத்துச்செய்து தீர்ப்புச் சொல்லுவதற்குப் பதிலாகக் கடுமையாக கலெக்டரைத் தாக்கி எழுத வேண்டிய காரணம் என்ன?

(2) திரு. மலையப்பனுக்குப் பதிலாக ஒரு பார்ப்பனர் கலெக்டராக இருந்திருந்தால் இவ்வாறு தாக்கி எழுதி இருப்பார்களா?

(3) நீதி இலாக்கா அல்லது வேறு எந்த இலாக்காவிலாவது பார்ப்பன கீழ் அதிகாரி ஒருவரைப் பார்ப்பன மேலதிகாரி ஒருவர் இந்த மாதிரி எப்போதாகிலும் தாக்கி எழுதி இருக்கிறாரா? என்பவைகள் எல்லாம் நன்கு பரிசீலனை செய்து சிந்தித்துப் பார்க்க வேண்டிய விஷயங்கள். சம்பந்தப்பட்ட இரண்டு கனம் ஜட்ஜுகளும் உள்ளபடியே பாரபட்சம் இல்லாத முறையில் எவ்வித உள் எண்ணமும் இல்லாமல் நடந்துகொண்டிருந்தால்—சட்டசபையிலும் வெளியிலும் இவ்வாறு பேசப்படுமா? மற்ற கனம் ஜட்ஜுகளைப் பற்றி அவ்வாறு பேசப்படுகின்றதா? அந்த இரண்டு ஜட்ஜுகளும் எவ்வளவு தவறு வேண்டுமானாலும் செய்யலாம்; அது குற்றமல்ல. ஆனால், அந்தத் தவற்றை நான் எடுத்துச் சொன்னது குற்றம் என்றால் நான் அதை முழுமூச்சுடன் எதிர்க்கிறேன். அது மாதிரியான சட்டத்தை நான் ஒப்புக்கொள்வதற்கில்லை. அதனால்தான், நான் இந்த விசாரணையில் கலந்துகொள்ளவில்லை. கோர்ட்டை அவமதிப்பதாகக் குற்றம் சுமத்துவது என்பது பொதுவாகக் கோர்ட்டுகளின் கவுரவத்தையும் நீதிபரிபாலனத்திற்குத் தடங்கல் விளையாமல் பாதுகாப்பதற்கும் மட்டுமே பயன்படுத்த வேண்டுமேயன்றி, நீதிபதிகளின் சொந்தக் கவுரவத்தைக் காப்பாற்றுவதற்கு—அவர்கள் தனியான நபர்கள் என்கிற முறையில் அவர்களுக்கு ஏற்படுகிற இழுக்குகள் அல்லது பழிகளிலிருந்து காப்பாற்றுவதற்காக இருக்கக்கூடாது. கோர்ட்டுகளுக்கு இருக்கக்கூடிய அதிகாரத்தைத் தனிப்பட்ட நீதிபதிகள் தங்களுடைய சொந்தக் கவுரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு என்று—அவர்களுக்குத் தனி நபர்கள் மீதுள்ள வெறுப்பின் காரணமாகப் பயன்படுத்திக் கொள்ளுவது முறையல்ல.

**('Proceedings for contempt of court have always been understood to be intended not for the vindication of the personal dignity of the Judges or to protect them from insults as individuals but to vindicate the authority and dignity of the court itself, and to prevent acts tending to obstruct the due course of Justice. Equally any attempt to use the power possessed by courts to punish persons for contempt to vent private spite or to gain private ends has never been tolerated'—Foreword dated 23-3-51 by the Hon. the chief Justice Mr. P. V. Rajamannar to the book, 'The law of Contempt of Court' By Mr. V. G. Ramachandran.)**

19. இம் மாதிரி விஷயம் எப்படி இருந்தாலும் உண்மையில் விவாதத்துக்கு இடமில்லாமல் ஒரு நீதிபதி என்பவர் தவறானது என்று சொல்லும்படியான தன்மையில் நடந்து கொண்டால்—தீர்ப்பு அளித்தால்—அதற்குப் பரிகாரம் தேடவேண்டுமானால், பொதுமக்களுக்கு என்னவழி இருக்கிறது? அப்பீலுக்கே போய்த் தீர வேண்டுமானால் எல்லோருக்கும் சாத்தியப்படும்படியான காரியமாகுமா? எல்லோருக்கும் எல்லாகாரியங்களிலும் அப்பீலில் இடமிருக்குமா? அரசாங்கத்தில் அரசர், ராஷ்டிரபதி, பிரதமர், முதலமைச்சர் முதலியவர்களுடைய போக்குகளைப் பற்றியும் உத்தரவுகளைப் பற்றியும் பொதுக்கண்டனங்களும் கிளர்ச்சிகளும் நடத்தத் தாராளமாக இடமும் சட்ட அனுமதியும் இருக்கும்போது—இந்த ஜட்ஜுகளைப் பொறுத்து மாத்திரம் அம்மாதிரியான இடமும் அனுமதியும் கிடையாது என்றால், மக்களுக்குச் சுதந்திரம் எங்கே இருக்கின்றது? பரிகாரம் எப்படித் தேடுவது? பொதுமக்களுடைய உணர்ச்சிகளை எப்படிக் காட்டுவது? 'சீசரின் பெண்டாட்டி சந்தேகத்திற்கு இடமில்லாதவளாய் இருக்கவேண்டும்' என்பதான காரியங்கள் மிகவும் யோசிக்கத் தக்கவைகள். என்னுடைய பிரச்சினை யெல்லாம் நீதிபதிகளைக் குறை சொல்லுவதல்ல; பார்ப்பனர்கள் நமக்கு ஜட்ஜுகளாக இருக்கக்கூடாது என்பதுதான். வெள்ளைக்காரர்களைக் குறிப்பிட்டு இந்த முறையில்தானே நாம் சுதந்திரப் போராட்டத்தில் போராடியிருக்கிறோம். வெள்ளைக்காரன் எவ்வளவு உயர்ந்த அதிகாரியாக இருந்தாலும்—

அவன் வெள்ளையன் என்கின்ற முறையில் இதைச் செய்தான், அதைச் செய்தான் என்று ஏராளமான விஷயங்களை எடுத்துக்காட்டிக் கிளர்ச்சி செய்யவேண்டிய அவசியத்தில் தான் இது நேர்ந்தது என்பதைப் பணிவாகத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

20. இந்த ஸ்டேட்மெண்டில் நான் எடுத்துக் காட்டியிருக்கிற விஷயங்கள் எல்லாம் எவ்வித குரோத, துவேஷ உணர்ச்சி இல்லாமல்—என் இன மக்களுடைய உண்மையானதும் அவசியமானதுமான நலன் கருதி—ஒரு யோக்கியமான பொதுநலத் தொண்டன் என்கிற தன்மையில் சமூகம் கோர்ட்டார் அவர்களுக்கும், கனம் நீதிபதிகளுக்கும் சமர்ப்பித்துக் கொண்டிருக்கிறேன். இதன்மீது கனம் நீதிபதிகளுடைய சித்தம் எதுவோ, அது என்னுடைய 'பாக்கியம்' என்பதாகக் கருதி, எதையும் ஏற்கத் தயாராக இருக்கிறேன்.

[சென்னை அய்க்கோர்ட்டில் 23-4-1957-ல் தாக்கல் செய்த 'ஸ்டேட்மெண்ட்'—புத்தகம், 23-4-1957]

## 19. ஓர் உண்மைச் சம்பவம்

சுமார் 70 வருடங்களுக்கு முன் திரு. பா. வெ. மாணிக்க நாயக்கர் அவர்கள் ஈரோடு கரூர் டிவிஷனில் அஸிஸ்டெண்ட் இன்ஜினியராக நியமிக்கப்பட்டபோது, ஒரு ஓவர் ஸீயரிடம் வேலை கற்க அமர்த்தப்பட்டார். பிறகு அவர் அஸிஸ்டெண்ட் இன்ஜினியர் வேலை ஏற்றுக்கொண்டார். அப்போது அந்த ஓவர்ஸீயர் மாணிக்க நாயக்கரின் கீழ் வேலை பார்க்கவேண்டியவரானார். இவரின் நடத்தையை மாணிக்க நாயக்கர் வேலை பழகும்போது தெரிந்து இருந்ததினால், சந்தேகப்பட்ட ஒரு காரியத்தில் கண்டித்தார். இது அந்த ஓவர் ஸீயருக்குப் பிடிக்கவில்லை. 'நம்மிடம் வேலை பழகின பையன் நம்மைக் கண்டிக்கிறானே!' என்று கருதி மாணிக்க நாயக்கருக்குப் புத்தி சொல்லுகிற மாதிரி,

'நீங்கள் சிறுவயது; உங்கள் பெயர் கெடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று சொன்னார். உடனே மாணிக்க நாயக்கர், 'என் பெயர் ஏன் கெடும்?' என்று கேட்டார்.

'உங்களைப்பற்றி மக்கள் கண்டபடி பேசுகிறார்கள். இதற்கு இடம் வைத்துக் கொள்ளாதீர்கள்' என்று ஓவர்ஸீயர் சொன்னார்.

'என்ன பேசுகிறார்கள்? சொல்லுங்கள்' என்று மாணிக்க நாயக்கர் கேட்டார்.

'நீங்கள் பணம் வாங்க ஆரம்பித்து விட்டீர்கள் என்று பேசுகிறார்கள்' என்றார் ஓவர்ஸீயர்.

'அந்தப்படி யார் சொன்னார்? சொல்லுங்கள்' என்று சற்று கோபமாகக் கேட்டார் மாணிக்க நாயக்கர். அதற்கு ஓவர்ஸீயர், 'ஜனங்கள் அப்படிப் பேசிக் கொள்ளுகிறார்கள்' என்று சொன்னார்.

உடனே மாணிக்க நாயக்கர், 'வாழாமல் உன் வீட்டிற்கு வந்திருக்கும் உன் மகளுக்கும், லஸ்கர் நாராயணசாமிக்கும் சம்பந்தம் உண்டு என்று ஊரெல்லாம் பேசிக் கொள்ளுகிறார்களே? அப்படி நீ வைத்துக் கொள்ளலாமா?' என்று கேட்டார். உடனே அந்த ஓவர்ஸீயர் கோபப்பட்டு, 'எந்த அயோக்கியப் பயல் அப்படிச் சொன்னான்? சொல்லு; முட்டாள்தனமாகப் பேசாதே' என்றார்.

உடனே மாணிக்க நாயக்கர் தன் காலில் இருந்ததைக் கழற்றி அந்த ஓவர்ஸீயர் தலையில் இரண்டு, மூன்று போட்டார்; பக்கத்திலிருந்தவர்கள் தடுத்து ஓவர்ஸீயரைப் பார்த்து, 'நீங்களும் ஊரில் பேசிக்கொள்ளுகிறார்கள் என்று சொன்னீர்கள்; அவரும் ஊரில் பேசிக்கொள்ளுகிறார்கள் என்று சொன்னார். இதில் தப்பென்ன? உங்களைச் சொன்னதால் உங்களுக்கு ஒன்றும் நஷ்டம் இல்லை. நீங்கள் அவரைச் சொன்னது அவர் வேலைக்கே

ஆபத்தாய் முடியுமே' என்று சொல்லி ஒவர்ஸீயரை மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி செய்தார்கள். இது, கரூர் அக்கால T.B.யில் நடந்த நிகழ்ச்சி.

இதை ஏன் எழுதுகிறேன் என்றால், அரசியலில் எதிர்க்கட்சி மீது, எதிரிகள் மீது குறை கூறுவதற்காகச் சிலர் எதையும் சொல்லிவிட்டு, அழுத்திக் கேட்டால், 'மக்கள் அப்படிப் பேசிக்கொள்ளுகிறார்கள்' என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளுகிறார்கள். அவர்களுக்குப் புத்தி வருவதற்காக உண்மையாய் நடந்த சம்பவம் ஒன்றைக் குறிப்பிட்டேன்.

'ஊரில் பேசிக்கொள்ளுகிறார்கள்' என்பது மிகக் கீழ்த்தரமான மக்கள் தன்மையாகும்.

[அறிக்கை—'விடுதலை' 26-3-1969]

## 20. ஆரியர்களின் தன்மை

ஆரியர்கள் இந்தியாவிற்குள் பிரவேசித்த காலத்தில் சுத்தக் காட்டுமிராண்டிகளாகவே இருந்திருக்கிறார்கள்.

அந்தக் காலம் பொதுவாகக் காட்டுமிராண்டிக் காலமாகவே இருந்த காலமானாலும், ஆரியர்கள் அக் காலத்தில், நம் திராவிடர்களைவிடக் காட்டுமிராண்டிகளாகவே இருந்திருக்கிறார்கள் என்றே தெரியவருகிறது.

இது எப்படிப் புலப்படுகிறது என்றால், அவர்களுடைய கற்பனைக் கருத்துக்களும், செய்யப்பட்ட கதைகளும், பின்னால் அவைகளைத் தழுவி உண்டாக்கப்பட்ட நூல்களும் முதலியவைகளால் நல்லவண்ணம் அறியக்கிடக்கின்றது.

அக்கால இந்தியர்களுடைய, திராவிடர்களுடைய நிலை எப்படி இருந்தது என்பதை அறிய பவுத்தரையும், பவுத்த ஆட்சியையும், பவுத்தக் கருத்துக்களையும், அவற்றைப் பின்பற்றி ஆரியர் கூறிய கருத்துக்களையும் சரித்திரக் கிரமப்படிப் பார்த்தாலே விளங்குகிறது.

அது மாத்திரமல்லாமல், உதாரணமாக ஆரியர்கள் தங்கள் கதை, கற்பனை முதலியவைகளில் நம்மை (அசுரர், இராக்கதர் என்கின்ற பெயர்களால்) இழிவுபடுத்தி இருந்தாலும் அக் கதைகளிலேயே நம் 'அரசர்களை'ப்பற்றி அவர்கள் குறிப்பிடும்போது (இரணியன், இராவணன் முதலியவர்களைப்பற்றிக் குறிப்பிடுவதில்) நமது அறிவு, ஆற்றல், தன்மை, குணம் ஆகியவைகளையும், வாழ்க்கைமுறை ஆகியவைகளைப்பற்றியும் குறிப்பிடுபவைகள்—இன்றைக்கும் அந்தப்படி எவனாலும் வாழமுடியாதபடி அவ்வளவு மேன்மையாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

அதேசமயத்தில், அவர்கள் தங்களைப்பற்றியும் தங்கள் பெரியவர்கள், ரிஷிகள், அறிஞர்கள், தெய்வீகத்தன்மையர்கள் என்பவர்களைப்பற்றியும் குறிப்பிடுகையில் மிகமிகக் கீழ்த்தரமான எண்ணம், நடத்தை, ஒழுக்கம், அறிவு, ஆற்றல், குணம் ஆகியவை அவ்வளவும் கீழ்த்தரமாகவே கற்பித்துக்கொண்டுமிருக்கிறார்கள்.

நம் அரசர்களை அவர்கள் எவ்வளவு இழிவுபடுத்திக் கூறியிருந்தாலும் அவர்களைப் பெரிய தவசிரேஷ்டர்களாகவே, அறிவாற்றல் பெற்ற உயர்தர 'வரப்பிரசாதி'களாகவே குறிப்பிட்டிருக்கிறார்கள்.

ஒரு மனிதன் தவம் செய்வது என்றால் நல்லொழுக்கத்தோடு இருந்துதானே செய்திருக்கமுடியும்? தவம் என்பது சுயநலத் தியாகம், கஷ்டநஷ்டங்களைச் சகித்தல்—ஏற்றுக்கொள்ளுதல், நல்ல ஒழுக்கம், நன்னடத்தை முதலிய காரியங்களால்தாமே இருக்க முடியும்?

அப்படிப்பட்ட ஒருவன் அந்தப்படிப் பலகாலம் நடந்துவந்து வரம்பெற்ற பின்பு அதைத் தவறான வழியில் செலவழித்தானென்றால் அது எப்படி அறிவுக்கும் அனுபவத் திற்கும் பொருந்திய காரியமாக இருக்கமுடியும்?

ஒரு மனிதன் எப்படிப்பட்ட தவறு செய்தான் என்றாலும், அதற்குக் காரணம் அவனுடைய மனத்தின் பலவீனம் என்பதுதான் விஞ்ஞானத் தத்துவமாகும். தவறு என்ற காரியத்தை ஒரு மனிதன் செய்ய நேருவது அவனது மனத்தின் பலக்குறைவு என்பதை முதன்முதல் மேல்நாட்டாரால்தான் கண்டுபிடிக்க முடிந்திருக்கிறது.

அதாவது, சில கெட்டகாரியங்கள் செய்பவர்களை மேல்நாட்டவர்கள் (That is his weakness) 'அது அவனது மனத்தின் பலவீனம்' என்று சொல்வார்கள். அதாவது, மனத்தில் தோன்றும் ஆசை, காரியங்களை அடக்கிக்கொள்ளும் சக்தி அவன் மனத்திற்கு இல்லை என்பது பொருள்.

திருடுபவன், பொய் பேசுபவன், பலாத்காரச் செயல்களில் இறங்குபவன், புணர்ச்சி விஷயங்களில் தவறாக, வெறியனாக நடப்பவன் முதலிய தவறு செய்பவர்களின் மனம் அவற்றைச் செய்யாமல் அடக்கி, தடுத்துக்கொள்ளும் சக்தி இல்லாததால் எளிதில் அக் காரியங்களைச் செய்துவிடுகிறார்கள். 'மனோ பலம்தான் மனிதனின் உயர்ந்த தன்மைக்குக் காரணம்; மனோ பலக் குறைவுதான் மனிதனின் கீழ்த்தன்மைக்குக் காரணம்' என்பது தேர்ந்த தத்துவமாகும். மற்றும் அவனவன் சுபாவம் என்பதும் மனிதன் பிறவித் தன்மையையே பெரிதும் பொறுத்ததாகும்.

இந்த அடிப்படையைப் பார்த்தால் ஒரு மனிதன் பல ஆண்டுகள் தவம் செய்தான் என்றால், அவன் மனத்தை அடக்கி—அடக்கி என்றால் அடக்கும் சக்தி, பலம் அவனுக்கு இருந்தது; இருந்தாகவேண்டும் என்பதுதான் பொருள். அப்படிப் பல ஆண்டுகள் மனத்தை அடக்கித் தவம் செய்து பலன் (வரம்) பெற்றவன் தனது சுபாவத் திற்கு மாறான, தவறான காரியம் செய்யும்படியான அளவுக்கு அவன் மனம் எப்படிப் பலவீனமடையமுடியும்?

நீதி செய்வதற்காக அரசன் தண்டிப்பது என்பது தவறான காரியமாக ஆகாது. இரணியனும், இராவணனும் தவறு செய்ததாகக் கற்பனை செய்திருப்பதில் அதற்குக் காரணங்களை ஆரியர்கள் சொல்லும்போது,—

'இரணியன் பிராமணர்களுடைய நடத்தை பிடிக்காமல் அவர்களைக் கொடுமையாய் நடத்தினான். அதற்கு விஷ்ணு மூலகாரணமாய் இருப்பதால் விஷ்ணுவை எதிர்த்தான்' என்பதாகத்தான் குற்றம்சாட்டி இருக்கிறார்கள்.

அதுபோலவே, இராவணன்மீது ஆரியர் குற்றம் சாட்டுகையில், முதல் குற்றமாக, 'இராவணன் பிராமணர்கள் செய்யும் யாகத்தை—ஜீவ இம்சை, கொலைக் காரியங்களை—நடத்த முடியாமல், நடைபெறவொட்டாமல் தடுத்தான்' என்றுதான் குற்றம் சாட்டி இருக்கிறார்கள்.

சீதை சம்பந்தப்பட்ட குற்றமும் பழிக்குப்பழி வாங்க நேரிட்டதைக் குற்றமாக்கப்பட் டிருக்கிறது; அக்காலத்தில் இவை குற்றமாக்கப்படவுமில்லை. மேற்கண்ட இருவரையும் ஆரியர் வெற்றிபெற்றதும் 'தெய்வீகத் தன்மையாலேயே' ஒழிய மனிதத்தன்மையால், மனித இயற்கை பலத்தால் அல்ல என்பதை நல்லவண்ணம் அந்தக் கதைகளிலேயே ஆரியர்கள் விளக்கி இருக்கிறார்கள். ஆதலால், ஆரியர்கள் போதிய மனிதத் தன்மை, அறிவுத்தன்மை பெறாத காட்டுமிராண்டிகளாய் இருந்த காலத்தில் எழுதிய கதைகளான தால் தங்கள் பக்குவமற்ற தன்மையை அப்போது அவற்றில் காட்டிக்கொண்டார்கள்.

மற்றும், அவர்களது வாழ்வு, ஒழுக்கம், கலவி—அதாவது ஆண்-பெண் சேர்க்கைத் தன்மை, நீதிமுறை, தர்மமுறை, வேதமுறை, சம்பிரதாயமுறை யாவையும் சுத்தக் காட்டுமிராண்டித்தன்மை கொண்டவைகளே தவிர, அறிவில் பக்குவமடைந்த மனிதத் தன்மை கொண்டதாக ஓர் இடத்திலும் காணமுடிவதில்லை.

அவர்களில், அவைகளில் ஒருசடுகளவு மனிதத் தன்மை கொண்டவையாய் இருக்குமானால் அவை இன்றும் இயற்கைக்கு ஒத்ததாய், நடக்கத் தக்கதாய், செயல் முறைக்கு ஏற்றதாய் இருக்கவேண்டாமா?

அக் காலத்தியவர்கள் காட்டுமிராண்டிகள்—பச்சைக் காட்டுமிராண்டிகள் என்பதாய் இல்லாவிட்டால் அவர்கள் தன்மை, அவர்களது அக் கால கற்பனைத்தன்மை இன்று உலகிலுள்ள 300-க்கு மேற்பட்ட கோடி மக்களில் ஒருசிறு கூட்டத்தாராகிய அவர்களைத் தவிர மற்ற யாராவது—ஒரு மனிதனாவது ஒப்புக்கொள்ளத்தக்கதாய் இருக்கவேண்டாமா?

அவர்கள் (ஆரியர்கள்) வாழ்வின் தன்மை, அக் காலங்களில் காட்டுமிராண்டித் தன்மையதாய் இருந்தது என்பதற்கு அவர்கள் எழுதிய உலக சிருஷ்டிமுறைகள்—அவர்கள் குறிப்பிடும் காலங்கள், அக் காலத்தேவர்கள், கடவுள்கள், அவர்களது யாகமுறைகள், புணர்ச்சிமுறைகள், நீதிமுறைகள் முதலியவைகளும், மற்றும் அவர்கள் கற்பித்துக் கொண்ட தேவர்கள், கடவுளர்கள், ரிஷிகள் முதலியவர்களின் பிறப்புமுறை, செய்கைமுறை, ஆயுள்முறை, வாழ்க்கைமுறை, நீதிமுறை, புணர்ச்சிமுறை முதலியவைகளில்—எது இன்று அவர்களாலேயே ஒப்புக்கொள்ளத் தக்கதாய், மனிதத் தன்மையுடையதாய், நடப்புக்கு ஏற்றதாய் இருக்கிறது?

கேவலம் இதிகாசக் காலங்களில் அவர்களது தன்மை எப்படிப்பட்டது என்று பார்த்தால் பாரத, இராமாயணக் கதைகளில் இராமன் பிறப்புமுறை, பஞ்சபாண்டவர்கள் பிறப்பு முறை ஆகியவை அறிவுக்கோ, நடப்புக்கோ ஏற்றமுறை என்று அவர் (ஆரியர்)களாலேயே ஒப்புக்கொள்ள முடியுமா?

இராமாயணகாலம், பவுத்தனுக்கு, ஆரியர் இந்தியாவிற்கு வந்ததற்கு, சேர, சோழ, பாண்டியர்க்குப் பிற்பட்டகாலம். இதில் வசிஷ்டன்—விசுவாமித்திரன்—நாரதன் வருகிறார்கள். அவர்களுக்கு நூற்றுக்கணக்கான கோடி காலம் (வயது) கூறப்படுகிறது.

செத்துப்போனவர்கள், பிரம்மா, சிவன், விஷ்ணு, இந்திரன், பூமிதேவி முதலியோர் வருகிறார்கள். இவர்கள் காலம் எண்ணிறந்த காலம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

யாகத்தைக் குறிப்பிடும்போது, கொல்லப்பட்ட குதிரைகளின் ஆண்குறியை, மனிதப்பெண்களின் பெண்குறியில் பொருத்திக் கலவி செய்யும்படி அவர்களின் கணவன்மார் வேண்டிக் கொண்டதாகக் குறிப்புகள் காணப்படுகின்றன.

கழுகு பதினாயிரக் கணக்கான ஆண்டுகள் வாழ்ந்ததாகவும், கழுகு யானையைத் தூக்கிக் கொண்டுபோய் மரக்கிளையில் உட்கார்ந்துகொண்டு கொத்தித் தின்றதாகவும் கூறப்படுகிறது. மற்றும், வாலி, அனுமன், ஜாம்பவான் முதலியவர்கள் கதைகள் இயற்கைக்கு ஏற்றவையாகுமா? அறிவுக்கு ஏற்ற கதைகளாக இருக்கமுடியுமா?

பாரதக்கதையில் கவுரவர்கள், பஞ்சபாண்டவர்கள் மனிதர்களாகத்தாம் கற்பிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால், பஞ்சபாண்டவர்கள் சூரியனுக்குப் பிறந்தார்கள்; எமனுக்குப் பிறந்தார்கள்; காற்றுக்குப் பிறந்தார்கள்; இந்திரனுக்குப் பிறந்தார்கள்; அசுவினி குமாரர்களுக்கு இருவர் பிறந்தார்கள் என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இவர்கள் இந்தப் பூலோகத்தில் இருப்பவர்களா? மனிதத் தன்மையுடையவர்களா? இவர்கள் மனிதப் பெண்களிடம் புணர்ச்சி செய்யத்தக்க அவ்வளவு சிறிய உருவங்களாக முடியுமா? கூப்பிட்டவுடன், நினைத்தவுடன் வருவதற்கு முடியுமா? வானலோகம், பூலோகம் அவ்வளவு சமீபத்தி

துள்ளனவா? இப்படியாக, சுத்தக்காட்டுமிராண்டித் தன்மையுடைய ஆரியர்கள், இந்திய மக்களையே காட்டுமிராண்டிகள் ஆக்கிவிட்டார்கள் என்பதோடு,—

இன்னமும் இப்படிப்பட்ட கற்பனையின்மீது 'நம்பிக்கை' கொண்டு பரப்பி வருகிறார்கள்.

மனிதப்பிறப்பு எப்படியோ நாசமாய்ப் போனாலும், இவர்கள் கூறும் கடவுள்கள்— கந்தன், கணபதி முதலியவர்கள் பிறப்பும், அவதாரக் கதைகளும் பகுத்தறிவுள்ள மனிதன் என்பவனால் சிந்திக்கத் தக்கவையா என்று சிந்திக்க வேண்டுகிறேன்.

எனவே, ஆரியர்கள் எவ்வளவு காட்டுமிராண்டிகள் என்பதை எடுத்துக்காட்ட ஒரு சில குறிப்புகளைக் காட்டினேன். அதோடுகூடவே, இப்படிப்பட்ட கருத்துக்கள் திராவிடரிடம் அக் காலத்தில் இருந்ததாகக் கூட ஆதாரம் காணமுடியவில்லை என்பதைக் கூறி இதை முடிக்கிறேன்.

[தலையங்கம்—'விடுதலை' 12-8-1972]

## 21. பார்ப்பான் பணக்காரனானால்?

இந்த நாட்டில் பார்ப்பனர்மீது பாமர மக்களுக்கு வெறுப்பு உண்டாகும்படி செய்து வரும் (என்னால் தோற்றுவிக்கப்பட்ட) சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் ஆகிய வற்றின் பிரச்சாரத்தால் பார்ப்பனர்கள் தங்களுக்கு உரிய வைதிக சம்பந்தமான ஏழ்மை வாழ்க்கையை விட்டுவிட்டு பாங்கு, வியாபாரம், இயந்திரசாலை முதலாளி முதலிய தொழில்களில் ஈடுபட்டு, ஏராளமான பணம் சம்பாதித்து, அவர்களில் அனேகர் செல்வவான்களாகவும், இலட்சாதிபதிகளாகவும் ஆகிவிட்டார்கள். 'இதுதான் துவேஷப் பிரச்சாரத்தால் ஏற்பட்ட பயன்' என்று, பார்ப்பனர்கள்மீது வெறுப்புக்கொண்ட பலர் என்னைக் குற்றம் சொல்லுகிறார்கள். இது உண்மையானால் எனக்கு மிகவும் மகிழ்ச்சியே யாகும்.

எனக்கு, எனது சுயமரியாதை—திராவிடர் கழகப் பிரச்சாரத்தின் கருத்து என்ன வென்றால், ஒரு பார்ப்பான்கூட 'மேல்சாதி'யான் என்பதாக இருக்கக்கூடாது என்பதற் காகத்தானே தவிர, பார்ப்பான் பணக்காரனாகக்கூடாது—அவன் நல்வாழ்வு வாழக் கூடாது—அவன் ஏழையாகவே இருக்கவேண்டும் என்பது அல்ல. ஒவ்வொரு பார்ப்பானும் இராஜா சர். அண்ணாமலைச் செட்டியார், பொப்பிலி இராஜா, சர். சண்முகம் செட்டியார், சர். இராமசாமி முதலியார் போன்றவராகக் 'கோடீஸ்வர'னாகவும், இலட்சாதிபதியாகவும் ஆகிவிட்டாலும் சரியே; எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் எந்தப் பார்ப்பானும், மடாதிபதிகள் உட்பட எவரும் சிறிதுகூட நமக்கு மேல் சாதியினன் என்பதாக இருக்கக் கூடாது என்பதுதான் என் நோக்கம்.

பணக்காரத்தன்மை ஒரு சமூகத்துக்குக் கேடானதல்ல; அந்த முறை தொல்லை யானது—சாந்தியற்றது என்று சொல்லலாம்; என்றாலும் அது பணக்காரனுக்கும் தொல்லையைக் கொடுக்கக்கூடியதும், மனக்குறை உடையதும், இயற்கையில் மாறக் கூடியதும், எப்பொழுது வேண்டுமானாலும் மாற்றக்கூடியதுமாகும்.

ஆனால், இந்த மேல்சாதித்தன்மை என்பது இந்த நாட்டுக்குப் பெரும்பாலான மனித சமுதாயத்துக்கு மிகமிகக் கேடானதும், மகாக் குற்றமுடையதுமாகும். அது முன்னேற்றத்தையும், மனிதத்தன்மையையும், சம உரிமையையும் தடுப்பதுமாகும்; ஒரு பெரிய மோசடியும், 'கிரிமினலு'மாகும். ஆதலால், என்ன விலை கொடுத்தாவது மேல் சாதித்தன்மையை ஒழித்தாகவேண்டும் என்பது எனது பதிலாகும்.

['குடி அரசு'—9-11-1946; 'உண்மை' 14-10-1972]

## 22. பார்ப்பனர்—அன்றும் இன்றும்

நம்மில் சமுதாய சீர்திருத்தத்திற்கு யார் பாடுபட்டாலும் அவர்களுக்குப் பார்ப்பனர்கள் அளிக்கும் பட்டங்கள் என்னவென்றால் இராட்சதர், அரக்கர், அசுரன் என்கிறதான பட்டங்களாகும்.

இந்தப் பெயர்களின் தத்துவம் என்னவென்று சிந்தித்துப் பார்த்தால், இன்று இந் நாட்டில் நடந்துவரும் சமுதாயப் (பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார்) போராட்டமானது 1000, 2000 ஆண்டுகளுக்கு முன்னதாகவே இந்தியாவில் தொடங்கி நடந்து வந்திருக்கிறது என்பதுதான்.

கடவுள் (விஷ்ணு) அவதாரங்கள் என்கின்ற பார்ப்பனக் கற்பனைகளைப் பார்த்தால், நமது அரசர்கள் அக்காலங்களில் பார்ப்பனர் விஷயங்களில் எப்படியெப்படி நடந்து கொண்டிருக்கிறார்கள் என்பதும், அவற்றைப் பார்ப்பனர்கள் எப்படியெப்படிச் சமாளித் திருக்கிறார்கள் என்பதும் விளங்கும். அந்த விஷ்ணு அவதார எண்ணிக்கை 10 என்றாலும்—10க்கும் கதைகள் இல்லை.

விஷ்ணுவின் (1) மச்ச (2) கூர்ம (3) வராக (4) நரசிம்ம (5) வாமன (6) பரசுராம (7) இராம (8) பலராம (9) கிருஷ்ண என்பவையான—9 அவதாரங்களுக்குத்தான் கதைகள் இருக்கின்றன. 10-வது அவதாரம் இனிமேல் ஏற்படும் என்று கூறப்பட்டிருக் கிறது. 'அந்த அவதார காலத்தில் இன்னின்ன காரியம் நடக்கும்; மக்கள் இப்படி நடந்துகொள்ளுவார்கள்' என்பதாகக் காணப்படுகிறது. அப்படிக் காணப்படுவதற்கேற்ப இன்று காரியங்கள் நடக்கின்றன.

அதாவது—'இன்றையப் பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் போராட்டம்தான் 10-வது அவதாரப் போராட்டம்; அதுதான் இன்று நடைபெறுகிறது' என்பதற்கு அந்த அவதாரங்களுக்கு எதிரிகளாக இருந்த இராட்சதர்கள் முதலிய பெயர்களை—இன்றும் பார்ப்பனர் நமக்குச் சூட்டுவதே ஆதாரமாகும். அதாவது இராஜாஜி, நம் தலைவர்களை—இராவணன், இரணியன், சூரபத்மன் என்றெல்லாம் சொல்லுவதும் அந்த ஆதாரத்தையே நமக்குக் காட்டுகிறது. அத்துடன் சத்தியமூர்த்தியும் இப்படி நம் தலைவர்களைப் பல முறை சொல்லியிருக்கிறார்.

இந்த 'அவதாரங்களின்' தத்துவம் என்னவென்றால்—'பார்ப்பனன் என்பவன் எந்தத்துறையிலும் ஒழுங்காக, ஒழுக்கமாக, நாணயமாக, நேர்மையாக, உண்மையாக நடந்துகொள்ளவேண்டிய அவசியம் இல்லை; தனது நலத்திற்கு எந்தத் தவறான காரியத்தையும் செய்யலாம்; தன் உயர் வாழ்வும், வெற்றியும்தான் முக்கியம்' என்பதைப் பார்ப்பனர்களுக்குப் படிப்பிப்பதேயாகும். இவை ஏதோ ஒருகாலத்தில் எழுதப்பட்டிருந் தாலும் இன்று பார்ப்பனர் நடப்பில் இருந்துவரும் நடத்தைகளையும், குணங்களையுமே நன்கு எடுத்துக்காட்டுகின்றன.

இந்த நூல்கள் 1000, 2000 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்ட நூல்களாய் இருந் தாலும்—அக்காலத்திலேயே பார்ப்பனர் தங்களுக்கு இருந்துவந்த எதிர்ப்புக்களைச் சமாளிக்கவும், மேலால் ஏற்படக்கூடும் என்று நினைத்து முன் எச்சரிக்கையாகவும், எக்காலத்துக்கும் பொருந்துமாறும் பார்ப்பன மக்களுக்கு வழிகாட்டவும் எழுதப்பட்டவை களாகும்.

இவைகளைத் துருவிப் பார்த்தால்—கவனமாகச் சிந்தித்தால், பார்ப்பனரின் இன்றைய நிலை என்ன; அதற்கு நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பது விளங்கும்.

[தலையங்கம்—'விடுதலை' 2-12-1972]

# 6. விழாக்கள்

## 1. நினைவுநாள் ஏன்?

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

எத்தனையோ பேர் சாகிறார்கள். ஏதோ இரண்டொருவர்கட்குத்தான் நாம் நினைவு நாள் கொண்டாடுகிறோம். செத்துப்போனவர்களின் பணத்தை உத்தேசித்தோ, படிப்பை உத்தேசித்தோ, அதிகாரம், பட்டம், பதவி, அறிவு, சாமர்த்தியம் முதலியவை களைப்பற்றியோ நாம் எவருக்கும் நினைவு நாள் கொண்டாடுவதில்லை. இவைகள் காரணமாக நாம் எவரையும் போற்றுவதுமில்லை; துதிப்பதுமில்லை.

பணத்தால் ஒரு மனிதனை மதிப்பதென்றால், ரிசர்வ் பாங்கியைத்தான் மதிக்க வேண்டும். படிப்பால் ஒரு மனிதனை மதிப்பதென்றால் பெரிய லைப்ரரியைத்தான் மதிக்கவேண்டும். அறிவால் ஒருவனை மதிக்கவேண்டுமானால் 'என்சைக்ளோபீடியா', ரேடியோ முதலியவைகளை மதிக்கவேண்டும். இப்படி அனேகவற்றை—உயிரில்லாதவை களிலும் காணலாம். ஆதலால், நாம் மதிப்பது, பேசுவது, நினைவுறுவது என்பவை யெல்லாம் இவைகளை உத்தேசித்தல்ல.

மற்றெதற்காக என்றால், மனிதர்களாக—மனிதத்தன்மை உடையவர்களாக இருந்து, மறைந்த மனிதர்களுக்காக இரங்கி, அவர்களது மனிதத்தன்மையை எடுத்துக் கூறி, மற்றவர்களையும் மனிதர்களாக ஆகுங்கள் என்பதற்காகவே யாகும்.

அப்படியானால், செத்துப்போன மற்றவர்களும், இப்போது இருக்கும் மக்கள் எல்லோரும் மனிதர்கள் அல்லவா என்று கேட்பீர்கள். அவர்களையெல்லாம் மனிதர்கள் என்று சொல்லுகின்றோமே ஒழிய, மற்ற ஜீவபிராணிகளுக்கும் மனிதர்களுக்கும் பேதம் காணக்கூடிய தன்மையுடைய மனிதர்கள் என்று சொல்லுவதற்குரியவர்களாக மாட்டார்கள். பேதம் என்றால் உருவ பேதம் அல்ல. நடப்பிலும், நடப்பால் ஏற்படும் பயனிலும் உள்ள பேதமேயாகும்.

உலகிலுள்ள எல்லா ஜீவபிராணிகளுக்கும்—மனிதர்கள் என்பவர்கள் உட்பட, உருவத்தில் பேதம் இருந்தாலும், குணத்தில் பேதம் இருந்தாலும் நடப்பும் பயனும் அனேகமாய் ஒன்றுதான்.

அரசர்களை மதிக்கிறோமா? பெரிய மனிதர்களை, ஆழ்வார்களை மதிக்கிறோமா? அல்லது தெய்வங்கள் என்பவர்களையாவது மதிக்கிறோமா? மடாதிபதிகள் அல்லது மகான்கள் அல்லது ஆச்சாரியார்களை மதிக்கிறோமா? இவர்களை எல்லாம் அவரவர் களிடத்தில் சம்பந்தமும், தனிப்பட்ட நலமும் பெறுகிறவர்கள்தான் மதிப்பார்கள்; மற்றவர்கள் ஏன் மதிப்பார்கள்?

ஏன் என்றால், வியாபாரம் செய்து இலாபம் சம்பாதிப்பவனை யார், எதற்காக மதிப்பார்கள்? ஒட்டல்காரன், 'அன்னதான பிரபு' ஆவானா? சம்பள உபாத்தியாயர், 'குருநாதன்' ஆவானா? தாசி, 'காதலி'யாவாளா? என்பதுபோல்தான் தன் தன் நலத்துக்கு—தன் தன் பொறுப்புக்காகக் காரியம் செய்யும் எவனுடைய காரியமும்—எப்படிப்பட்டதாயினும், அது சாதாரண ஜீவ சுபாவமே ஒழிய போற்றக்கூடியதாகாது. அப்படியல்லாத தன்மை, செய்கை, வாழ்க்கை கொண்ட மனிதர்கள்—அதாவது தன்னைப் பற்றிய கவலை இல்லாமல் பிறருக்கு என்று தன்னை ஒப்படைத்துத் தொண்டாற்றுகிறவன் மதிக்கப்பட்டே தீருவான். அத் தொண்டால் பாதகமடையும் தனிப்பட்டவர்கள், தனிப்பட்ட வகுப்புக்கள், கும்பல்கள் அவனை மதிக்காமல் இருக்கலாம்; அவமதிக்கலாம்; அது பொதுவாய் மதிக்காததாகாது.

ஆகவே, நாம் நினைவு நாள் கொண்டாடும் மக்களை, உண்மையான மனிதர்களாய்க் கருதி, அவர்களது மனிததத்தன்மையை மதித்து, மற்றவர்களும் அந்தத் தன்மைக்கு வரவேண்டுமென்கிற ஆசைக்காக, எடுத்துக்காட்டுக்காக, பிரச்சாரத்திற்காக கொண்டாடுகிறோம்.

[திருச்சி, தஞ்சை, கும்பகோணம் ஆகிய இடங்களில் 1945 மார்ச், ஏப்ரல் மாதங்களில் சொற்பொழிவு —'குடி அரசு' 14-4-1945]

## 2. படத்திறப்பு விழா

நாம் உருவப்படத் திறப்புவிழா நடத்துவது என்பது பூசை செய்யவோ, தேங்காய், பழம் ஆராதனை செய்து, விழுந்து கும்பிட்டுப் பக்தி செய்து, நமக்கு வேண்டியதைக் கோரிப் பிரார்த்தனை செய்யவோ, நாம் செய்த—செய்யும் பாவத்தை மன்னிக்கும்படி கேட்கவோ அல்ல என்பதை முதலில் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அப்படிப்பட்ட சக்தி இருப்பதாகக் கருதிக்கூட நாம் எந்தப் படத்திறப்பு விழாவும் செய்வதில்லை. மற்றும், எப்படிப்பட்ட படத்திற்கும் பூசை செய்யும்படியோ, கோவில்களிலோ தேர், இரதம், விமானம், சப்பரம் ஆகியவைகளிலோ வைத்து ஊர்வலம் ஆராதனை செய்யும்படி காலித்தனம் செய்வதற்கோ அல்ல.

ஆனால் மற்றெதற்கு என்றால், மனித சமூக நலனுக்கு—சுயநலமில்லாமலும், மற்றவர்களிடமும் எவ்விதக் கூலியோ, புகழோ, பிரதிப் பிரயோஜனமோ பெறாமலும், தன் முயற்சியால், தன் பொருளால், தன் பொறுப்பென்று கருதித் தொண்டாற்றி வந்த பெரியார்களின் குணாதிசயங்களையும் தொண்டையும் எடுத்துச் சொல்வதன்மூலம், மற்றும் பலரும் அக்காரியத்தைப் பின்பற்ற வேண்டும்—பின்பற்ற மாட்டார்களா என்பதற்காகவேதான். மனித சமூக நலனுக்குப் பிரதிப் பிரயோஜனம், கூலி இல்லாமல் மக்கள் பாடுபட வேண்டும் என்கின்ற மேலான குணத்தைப் பிரச்சாரம் செய்வதற்கு ஒரு சாதனமாகவேதான் இக்காரியத்தைச் செய்கிறோம்.

உதாரணமாக, கிரீஸ் தேசத்துச் சாக்ரடீஸ் என்பவர்—எந்தக் காரியத்தையும் அறிவால் ஆராய்ச்சி செய்து பார்க்க வேண்டும் என்று சொன்னதற்காக விஷம் கொடுத்துக் கொல்லப்பட்டார். கவுதம புத்தர் என்பவர்—ஆரியப் புரட்டுகளை எதிர்த்ததற்காக எவ்வளவோ கஷ்டப்பட்டார். இயேசு கிறித்து விக்கிரக ஆராதனை, கோவில் பூசை முதலியவைகளை எதிர்த்துப் பிரச்சாரம் செய்ததற்காகச் சித்திரவதை செய்து கொல்லப்பட்டார். முகமது நபி அனேக மூடப்பழக்க வழக்கங்களையும், பல தெய்வ உணர்ச்சியையும், பெண் கொடுமையையும் எதிர்த்துப் பல நல்ல கொள்கைகளைப் பிரச்சாரம் செய்ததற்காகப் பல முறை சங்கடப்படுத்தப்பட்டார். அப்படிப்பட்டவர்களும் மற்றும் அது போன்ற பல புதிய அபிப்பிராயம் சொன்னவர்களும் அவர்களது ஆயுள் காலத்தில் இதுபோல் எவ்வளவு துன்பப் படுத்தப்பட்டு, எவ்வளவு கஷ்டப்படுத்தப்பட்டு, எவ்வளவு தொல்லைப்படுத்தப்பட்டு இருந்தாலும் இன்று அவர்கள் கோடானுகோடி மக்களால் அவர்களது அபிப்பிராயங்களோடு மதிக்கப்படுகிறார்கள்; கோடிக்கணக்கான பேர்களால் பின்பற்றப்படுகிறார்கள். அது போலவேதான், நாங்களும் இன்று எங்கள் அபிப்பிராயங்கள் எவ்வளவுதான் வெறுக்கப்பட்ட போதிலும், பாமர மக்களாலும், சுயநலச் சூழ்ச்சிக்காரர்களாலும் எவ்வளவுதான் வெறுக்கப்பட்டுத் தொல்லைகள் விளைவிக்கப்பட்டு அல்லல் பட்டாலும், பிற்காலத்தில் எங்கள் தொண்டு மக்களுக்கு மிக்க பயன்தரக்கூடியதாயும் பாராட்டக்கூடியதாயும், மக்களை ஞான வழியில் நடத்தக் கூடியதாயும் இருக்கும் என்கின்ற நம்பிக்கையுடையவர்களாகவே இருக்கிறோம். இல்லாவிட்டால் இவ்வளவு தொல்லைகளுடன் எங்களுக்கு எவ்விதத்திலும் சுயநல மற்ற இந்தத் தொண்டைப் பெரும்பான்மையான மக்களுடைய இவ்வளவு வெறுப்பிற்கிடையில் துணிந்து ஆற்ற முனைந்திருக்கமாட்டோம்.

நாங்கள் பாமர மக்களால் வெறுக்கப்படுவதினாலேயே எங்கள் தொண்டின் மேன்மையை உணருகிறோம். பாமரமக்கள் மதித்துப் பக்தி செலுத்திப் புகழும்படியாக நடந்துகொண்டவர்களுடைய எப்படிப்பட்ட தொண்டும், அபிப்பிராயமும் அவர்களது வாழ் நாளுக்குப்பின் பயன்பட்டதாக எங்களுக்கு ஆதாரமே கிடைக்கவில்லை. அப்படிப்பட்டவர் களால் மனித சமூகம் திருத்தப்பாடு அடைந்ததாக எவ்வித ருசுவும் இதுவரை கிடைத்த தில்லை.

நாமறிய ஒரு காலத்தில் திலகர் புகழப்பட்டார்; பெசண்ட் அம்மையார் புகழப் பட்டார்; காந்தியும் புகழப்படுகிறார். சரித்திரத்தில் எத்தனையோ ஆச்சாரியார்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள், சுவாமிமார்கள் எனப்பட்ட எத்தனையோ பேர் புகழப் பட்டதாகவும் பார்க்கிறோம். இவர்களில் பலர் 'தெய்வீகம்' கற்பிக்கப்பட்டார்கள்; பலர் தெய்வங்களாகவும் கருதப்பட்டிருக்கிறார்கள். ஆனால் இவர்களாளெல்லாம் ஒரு காதொடிந்த ஊசியளவு பயன் மக்களுக்கு ஏற்படுகிறதா? ஏற்பட்டதா? ஏற்படும் என்கின்ற குறியாவது காணப்படுகின்றதா? இவர்கள் எல்லாம் புராணங்களுக்குப் புதிய உரை எழுதுகிற உரையாசிரியர்கள் போல் தோன்றி, பாமரர்களுடைய பக்திக்கும் பூசைக்கும் பாராட்டுத லுக்கும் ஆளாகி, முட்டாள்தனத்துடனும் அல்லது பாமர மக்களை ஏமாற்றிப் பொய்ப் புகழ் பெற்று வருகிறோமே என்கின்ற உணர்ச்சியுடனும்தானே செத்தார்கள்—சாகின் றார்கள்—சாகப்போகின்றார்கள் என்று சொல்லவேண்டி இருக்கிறதே தவிர, கண்கண்ட பயன் என்ன என்று பாருங்கள்!

இன்று உண்மையில் மனித சமூகத்திற்கு ஏதாவது புதிய மாறுதல் உணர்ச்சி அல்லது புரட்சிகரமான சுதந்திரம், விடுதலை, சமத்துவம், சுயமரியாதை என்பதான உணர்ச்சி தோன்றி இருக்குமானால்—அவை அனைத்தும் ஒரு காலத்திலேயோ, நேற்றோ, இன்றோ—கல்லடிபட்டு, கொல்லப்பட்டு, கையடிபட்டு, தொல்லைப்பட்டு உயிர் துறந்த, உயிர் வாழ்கின்ற—வெறுக்கப்பட்ட மக்களாலேதான் என்பது ஆராய்ந்து பார்க்கின்ற எவருக்கும் சுலபத்தில் புலப்படும்.

அப்பேர்ப்பட்டவர்கள் எல்லாம் மக்களின் தன்மை உயர வேண்டுமென்று கருதித் தொண்டாற்றியவர்களே ஒழிய, மக்கள் தங்களைப் போற்றிப் புகழ்ந்து பூசிக்க வேண்டு மென்று கருதியவர்கள் அல்லர். ஆதலால் அப்பெரியவர்களை ஞாபகப்படுத்தி, அவர்கள் தன்மையை மற்ற மக்கள் உணர்ந்து, அம்மாதிரியான உள்ளம் பெற்று மனித சமூகத்துக்குத் தொண்டாற்ற முற்படவேண்டும் என்பதற்காகவே அவர்களது உருவப்படத் திறப்பு விழாக்கள் என்ற பெயர் வைத்து இவற்றை எடுத்துக் கொள்கிறோம்.

[கட்டுரை—'குடிஅரசு' 10-1-1948]

## 3. விழாவும் நாமும்

பேரன்புமிக்க தலைவர் அவர்களே! தாய்மார்களே! தோழர்களே!

இங்கு நடைபெற்று வரும் இந்தப் பொங்கல் விழாவில் இரண்டாவது நாள் நிகழ்ச்சிக்காக என்னை அழைத்ததில் நான் ஏதோ எனக்குத் தோன்றும் கருத்துக்களை உங்களிடம் சொல்லி அளவளாவ முன் வந்திருக்கிறேன்.

விழா என்பதன் நோக்கமே மக்கள் பலர்கூடி அளவளாவிக் களிக்க வேண்டு மென்பதுதான். விழாவிற்காகப் பலதரப்பட்ட கருத்துக்களுடைய மக்கள் ஒன்று சேரும் போது அவரவர்களுடைய கருத்தை ஒருவரோடொருவர் பரிமாறிக்கொள்ளச் சந்தர்ப்பம் எழுகிறது. இங்கு நடைபெறும் பொங்கல் விழாவில் அன்றாடம் ஒரு அறிஞரை வர வழைத்து அவருடைய கருத்துக்களை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வாய்ப்பளிக்கப்பட்டு

வருகிறது. இது மிகவும் பாராட்டத்தக்க காரியம் ஆகும்; அதோடு பயனுள்ள காரியமு மாகும். அனேகமாக விழாக்கள் எல்லாம் இப்படித்தான் கொண்டாடப்படவேண்டும். நம் நாட்டு விழாக்கள் என்பவை இன்று பெரும்பாலும் அர்த்தமற்ற சடங்குகளாகவே இருந்து வருகின்றன. மேலும், இவைகள் பெரும்பாலும் எந்தக் காலத்திலோ, யாருடைய நன்மை கருதியோ, யாராலோ, எதனாலோ ஏற்படுத்தப்பட்டனவாயிருக்கின்றனவே யொழிய, பெரிதும் நம்முடைய முன்னேற்றத்திற்கு ஏற்றனவாக அமைந்திருக்கவில்லை.

உதாரணமாக, ஒவ்வொரு விழாவும் மத சம்பந்தமானதாகவும் அவை பெரிதும் பார்ப்பான் மேன்மைக்கும், பிழைப்புக்கும் பயன்படத்தக்க ஒரே தத்துவத்தை அடிப்படை யாக வைத்து ஏற்பாடு செய்யப்பட்டிருப்பவையாகவே நாம் காண்கிறோம். அந்தந்த விழாவையொட்டிய சடங்குகளும் பெரும்பாலும், துவக்கிய காலந்தொட்டு ஒரே மாதிரியாக இருக்கின்றனவேயொழிய, நாளுக்குநாள் எவ்வித முன்னேற்ற மாறுதலும் அடைந்துவரக் காணோம். மக்களுடைய அறிவு வளர்ச்சிக்கும் விழாச் சடங்குகளுக்கும், எவ்வித சம்பந்தமும் இருப்பதாகக் கூட நமக்குத் தோன்றவில்லை. சென்ற ஆண்டில் நடைபெற்ற சரஸ்வதி பூஜை, பிள்ளையார் பூஜை, உற்சவம், கடவுள்கள் திருமணம் ஆகிய இவற்றிற்கும்—இவ்வாண்டு நடைபெற்ற இவ்விழாக்களுக்கும் நம்மால் எவ்வித மாறுதலும் காண முடியவில்லை. முன்பு விளக்கெண்ணெய் விளக்கென்றால் இன்று 'காஸ்லைட்', 'எலெக்ட்ரிக் லைட்'—இவைதாம் மாறுதல். நம்முடைய பழம்பண்டிகைகளும்கூட எவ்வித மாறுதலும் இன்றியேதான் நடைபெற்று வருகின்றன. இத்தகைய விழாக்களில் கலந்து கொள்வதால் மக்களுக்கு ஏதாவது பயனுண்டா என்பதுபற்றி யாரும் கவலை எடுத்துக் கொண்டு சிந்திப்பதில்லை. இந்தமாதிரி பலர் கூடிக் களிக்கும் சந்தர்ப்பத்தை—அவர் களிடையே உள்ள வேற்றுமையை நீக்கவும், அவர்களது அறிவை முன்னேற்றப்பாதையில் அழைத்துச்செல்லவும் அறிவாளிகள் உபயோகப் படுத்திக்கொள்ள வேண்டும். அந்த மாதிரி நம்முடைய விழாக்கள் மாற்றியமைக்கப்படவேண்டும் என்ற எண்ணம் எனக்கு வெகு காலமாகவே இருந்துவருகிறது. கொஞ்ச காலத்திற்கு முன்பே பொதுநலத் தொண்டர்கள் இதில் போதிய கவனம் செலுத்தியிருப்பார்களானால், நம் நாடு இதற்குள் எவ்வளவோ முன்னேற்றமடைந்திருக்கும். அறிவுக்குக் கேடாயிருந்துவரும் பல விழா முறைகள், அறிவு வளர்ச்சிக்கான விழாக்களாக மாற்றியமைக்கப்படவேண்டும் என்று நான் கூறுவது வெகு பேருக்குச் சங்கடமாயிருக்கலாம்.

நான் இதுபற்றிக் கவலை எடுத்துக்கொண்டு மேல்நாடுகளில் நடைபெறும் விழாக் களைப்பற்றியும், அவைகளின் முறைகளைப் பற்றியும் ஆராய்ந்திருக்கிறேன். எனது மேல் நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தின்போது பல விழாக்களில் நான் கலந்துகொண்டும் இருக்கிறேன். அவர்களது விழாக்கள் ஒவ்வொன்றிலும் ஏதாவது புதிய படிப்பினை இருக்கும். ஏதாவது முற்போக்கு உணர்ச்சிப் பெருக்கத்திற்கான வசதி இருக்கும். ஆனால், இங்கு எந்த விழாவும் அப்படி இருப்பதில்லை; அறிவுக்கு உணர்ச்சி கொடுக்கும் தன்மையே நமது விழா முறையில் இருப்பதில்லை. இங்கும் பெரிய, பெரிய உற்சவ விழாக்கள் பல இலட்சக்கணக்கான பொருட்செலவில் இலட்சக் கணக்கான மக்களைக் கூட்டுவித்து நடைபெற்று வருகின்றன என்றாலும் அவற்றால் அறிவும் நாகரிகமும் மேலும் மேலும் அந்தகாரத்திற்கு அழைத்துச் செல்லப்படுகிறதே அல்லாது ஒன்றேனும் அறிவு விளக்கத்திற்கு—நவநாகரிகத்திற்கு ஏற்றதாய் அமையவில்லை.

மற்ற நாடுகளில் இம்மாதிரியான விழா நாட்களைக் கண்காட்சி மாதிரி நடத்து வார்கள். அக்கண்காட்சி சாலைகளில் புதிய கற்பனைகள் பல மலிந்திருக்கும். வாழ்க்கை வசதி மேம்பாட்டிற்கான பல புதிய கண்டுபிடிப்புகள் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கும். பல நாடுகளில் இருந்து தருவிக்கப்பட்ட நுண்ணிய கருவிகள் கண்காட்சியில் இடம்பெற் றிருக்கும். ஒவ்வொரு துறையிலும்—எழுத்து, இயந்திரம், கைத்தொழில், சித்திரம் ஆகிய

சகல துறைகளிலும் அது பெரிய படிப்பினையாக அமைந்திருக்கும். கண்காட்சி சாலையின் ஒரு பக்கத்தில் நுழைந்து மறு பக்கத்தில் வெளி வருவதற்குள் ஒருவன் சகல துறைகளிலும் தன் அறிவை வளர்த்துக்கொண்டு விடுவான். அவன் உலகத்தின் முன்னேற்ற வளர்ச்சிகளைத் தன் கண்கள்முன் கண்டு களித்துத் தெளிவுபெறுகின்றான்; பல ஆராய்ச்சி நுணுக்கங்களை அறியும் வாய்ப்புப்பெறுகிறான்; பல அதிசயக் கருவிகளைக் கண்டு அகமகிழ்கிறான். சுருங்கக்கூறின் கலாசாலை சென்று படித்துப் பெறவேண்டிய அறிவு வளர்ச்சியை, அவன் அந்தக் கண்காட்சியின் மூலம் ஒரு சில மணி நேரத்திலேயே பெற்று விடுகிறான். அவ்வளவு பயன்தரத்தக்க முறையில் அவர்கள் கண்காட்சிச் சாலைகளை நடத்துகிறார்கள். மனித சமுதாயத்தின் அறிவு முன்னேற்றத்திற்கென்றே அவைகள் நடத்தப்பட்டுவருவதால் அதில் அறிவாளிகள் பெருங்கவலை எடுத்துக்கொண்டு உழைக்கிறார்கள்.

அரசாங்கம் மட்டுமல்ல; தனிப்பட்ட நபர்களும் மனித சமுதாயத்தின் நல் வாழ்வுக்குத் தம்மாலான சகல உதவிகளையும் செய்ய முயற்சிக்கிறார்கள். தொழில் துறையில் இருந்துவருகிற மக்கள் அத் துறையில் தமது பூரா கவனத்தையும் செலுத்தி மக்கள் தேவைக்கான நற்பொருள்களை நயமான விலைக்குத் தருவதற்கான முயற்சி எடுத்துக் கொள்கிறார்கள். பொது மக்களின் நன்மைக்கான புதிய, புதிய கண்டுபிடிப்புக்களை மக்களுக்குக் கண்காட்சியின்மூலம் அறிமுகம் செய்துவைக்கிறார்கள். தமது வாழ்க்கையையே பொது மக்களின் நன்மைக்காக அவர்கள் பயன்படுத்தி வருகிறார்கள். அம்மாதிரி பொதுநல உணர்ச்சியே நம்மிடம் இருப்பதில்லை. ஆகவேதான் நம் விழாக்கள் இன்றும் அர்த்தமற்ற சடங்குகளாகவே இருந்துவருகின்றன. நம் நாட்டிலும் பெரிய பண்டிகைகளும், திருவிழாக்களும் நடந்துகொண்டுதான் இருக்கின்றன.

நாமும் பல இலட்சக் கணக்கில் திரும்பத் திரும்ப அவற்றிற்குச் சென்றுகொண்டுதான் இருக்கிறோம். பழையபடி பல சாமான் கடைகளையும், பல சில்லரை வேடிக்கைகளையும் தான் பார்க்கிறோமே யொழிய—அறிவு முன்னேற்றத்திற்கான வசதி ஒன்றையேனும் அங்கு காண்கிறோமில்லை.

விழாவிற்கு வந்து வீடுதிரும்பும் ஒருவனைக் கண்டு, 'என்னப்பா விசேஷம்?' என்று கேட்டால் அவன் என்ன கூறுவான்? 'ஒன்றும் விசேஷமில்லை; நிறையக் கூட்டம் இருந்தது; அலங்காரம் அழகாயிருந்தது; கூட்டத்தில் பலர் நசுக்கப்பட்டார்கள்; இந்த வருடம் புது வாத்தியக்காரன் வந்திருந்தான்; அவன் விடியவிடிய வாசித்தான்; வாத்தியத் திற்குமட்டும் ரூபாய் ஓராயிரமாம்' என்று இப்படித்தான் பதில் கூறுவானே அல்லாது, 'இந்த விழாவிற்குச் சென்றதால் இன்ன பலன் பெற்றேன்; அமெரிக்காவிலிருந்து தருவிக்கப்பட்ட ஆகாய விமானத்தையும், பர்ஷியாவிலிருந்து தயாரிக்கப்பட்ட அற்புதக் கம்பளங்களையும் பார்வையிட்டேன். அரைமணி நேரத்திற்குள் 50 கெஜம் ஆடை நெய்யக் கூடிய அதிசயக் கருவியைக் கண்டேன்' என்று கூறமாட்டான் அல்லவா?

அழகிய அலங்காரத்தாலும், அற்புத வாத்தியத்தாலும் அவனுக்கு ஏதாவது பயனுண்டா? மற்ற உலக மக்களைப் போல் நாமும் பெருமையடித்துக்கொள்ள நாம் ஏதாவது ஒரு அதிசயக் கருவியையாவது உற்பத்தி செய்திருக்கிறோமா? நம் பெருமையெல்லாம், 'நான் ஒரு வருஷத்திய புரட்டாசி சனிக்கிழமைகூட திருப்பதிக்குச் செல்லத் தவறியதில்லை;' 'ஒரு வருடமேனும் திருவண்ணாமலை தீபசேவைக்குச் செல்லாமல் இருந்ததில்லை' என்பதோடு அடங்கிவிடுகிறதேயல்லாது, வேறு என்ன இருக்கிறது, நாம் பெருமைப்பட? பாடுபட்டுத் தேடிய பணத்தை இரயில்வேக்காரரும், பார்ப்பன அர்ச்சகர், ஓட்டல்காரர், காப்பிக்கடைக்காரர் உண்ண அழுவதைத் தவிர, வேறென்ன பயன் கண்டோம், நமது விழாக்களால்? இந்த விழாக்களால் நமது சமுதாய நிலை, அல்லது அறிவு வளர்ந்து விட்டதென்று யாரேனும் கூறமுடியுமா? தலைமுறை தலைமுறையாக நமது சமுதாய நிலை

வாழ்க்கைநிலை ஒரே நிலையில்தானே இருந்துவருகிறது? வேறு நாட்டுமக்களுக்கு இருந்து வரும் அறிவு முன்னேற்றத்திற்கான வாய்ப்பு நமக்கு இல்லாமற் போன காரணம் என்ன?

மனிதன் எப்போதும் ஒரு காரியத்தை ஒரேமாதிரி செய்துகொண்டு வருபவன் அல்லனே! செக்குமாட்டைப் போல் ஒரேமாதிரித் திருப்பித் திருப்பிச் சுழன்றுகொண்டு வருபவனல்லனே! மனிதன் பகுத்தறிவுச் சிந்தனை உடையவனானதினால், அவன் ஓர் வளர்ச்சிப்பிராணி! அதனால்தானே அவன் மிருகங்களுக்கு மாறுபட்டு இருக்கிறான்? மிருகங்கள் குட்டிபோட்டுச் சந்ததியை வளர்த்துவரும்; அவற்றிற்கும் உடல் வளர்ச்சி உண்டு என்றாலும் அவைகளுக்கு அறிவுவளர்ச்சி இல்லை. ஆதலால், அவற்றின் ஜீவியத்தில் தாமாக ஒன்றையும் மாற்றிக்கொள்வதில்லையே. நம்முடைய நிலை ஒன்றும் அப்படிப்பட்டதல்லவே! நாள்தோறும் புதியன தோன்றலும், அதற்கேற்ப ஆசாபாசங்கள் வளர்ச்சியடைவதும் மனிதனுக்கு இயற்கையாயிற்றே! நல்ல நல்ல கண்டுபிடிப்புக்களின் மூலம் அவனுடைய இன்பப் பெருக்கிற்கான வசதிகள் அதிகப்படக் கடமைப்பட்டிருக்கின்றனவே!

நமது அறிவுவளர்ச்சி அத்துறைகளில் செல்வதற்கில்லாமல் ஏதோ ஒரு வகையில் தடைப்படுத்தப்பட்டிருக்க வேண்டும் என்றுதானே நாம் யூகிக்கவேண்டி இருக்கிறது? சாதாரணமான மோட்டார் வண்டிகூட, சென்ற சில வருடங்களில் எவ்வளவோ மாற்றமடைந்திருக்கிறதே! 1917இல் இருந்த 'மோட்டர்'வண்டி 1930ஆம் வருடத்திய மோட்டார் இல்லை; 1947ஆம் வருடத்திய மோட்டார்வண்டி 1946ஆம் வருடத்திய மோட்டார்வண்டி மாதிரி இருக்கவில்லை. 1947ஆம் வருடத்தின் முடிவில் வரும்வண்டி 1947இன் ஆரம்பத்தில் வந்த வண்டிக்குக் கொஞ்சமாவது மாறுபட்டிருக்கிறதே—இதற்குக் காரணம் என்ன? இயந்திரசாலை நிபுணர்கள் அதில் கவலை எடுத்துக்கொண்டு வேலைசெய்து வருவதால் தானே இத்தகைய முன்னேற்றத்தைக் காணமுடிகிறது. முதலில் 5 வருடத்திற்கு ஒரு முறை (மாடல்) அமைப்பு மாறிக்கொண்டே வந்தது. இன்று ஒரு வருடத்திற்குள்ளாகவே இரண்டு முறை மாறக்கூடிய நிலைக்கு வந்துவிட்டதே! ஆரம்பத்தில் மெதுவாக இருந்த வளர்ச்சி முடிவில் வேகம் அடைந்துவிட்டதே! இப்படித்தானே இன்னும் அனேக சங்கதிகள் மாற்றமடைந்து வருகின்றன. இப்படி மாறுவதுதான் இயற்கை.

நமது அரசியல் கருத்தைத்தான் எடுத்துக்கொண்டு பார்ப்போமே! 1885இல் தோன்றிய இந்திய தேசிய காங்கிரஸின் அன்றையக் கருத்து என்னவாக இருந்தது? இன்று அதன் கருத்து என்னவாக இருக்கிறது? அன்றைய சூழ்நிலைக்கேற்ப அதன் குறிக்கோள் அன்று அமைந்தது. இன்றையச் சூழ்நிலைக்கேற்ப அதன் குறிக்கோள் இன்று மாற்றப்பட்டு இருக்கிறது. இன்றுள்ள சூழ்நிலை எப்படி அன்றிருந்தவர்களுக்குத் தெரிந்திருக்க முடியும், இன்றைய சூழ்நிலைக்கேற்ப அன்றைய குறிக்கோளை அமைக்க? அன்றுகூடிய காங்கிரஸ், முதலில் இராஜாவைக் காப்பாற்றும்படி கடவுளை வாழ்த்தியது; பிறகு இராஜாவை வாழ்த்தியது; இராஜ விஸ்வாசப் பிரமாணம் எடுத்துக்கொண்டது; அருள் கூர்ந்து மன்னர்பிரான் ஏதாவது உத்தியோகம் வழங்கவேண்டுமென்று பிரார்த்தித்துத் தீர்மானங்கள் செய்தது. அன்று காங்கிரஸ் செய்தது தவறென்றோ அல்லது அவர்களெல்லாம் அடிமை மனப்பான்மை கொண்டவர்கள் என்றோ நான் கூறவரவில்லை. அன்று எது அந்த ஸ்தாபனத்திற்குத் தேவை என்று தோன்றியதோ, அதை வழங்கவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டது. பிறகு சிறு உத்தியோகங்களிலிருந்து பெரிய உத்தியோகங்களுக்கு வந்தது. பிறகு சம்பளத்தில் ஏன் வெள்ளையனுக்கும், இந்தியனுக்கும் வித்தியாசம் இருக்கவேண்டும் என்று கேட்டது. அப்புறம் எல்லா உத்தியோகங்களும் தங்களுக்குத்தான் இருக்கவேண்டுமென்று கேட்டது. பிறகு எங்களை ஏன் வெளிநாட்டார் ஆளவேண்டும் என்றது. 'இனி நீங்கள் போய்விட்டு வாருங்கள்' என்று வெள்ளையனைப் பார்த்துக் கடைசியாகக் கூறிவிட்டது. இன்று அந்தப்படியே அவனும் போய்விட்டதாகக் கூறப்படுகிறது.

'கல்லுங் காவிரியும் உள்ளவரைக்கும் எங்களைத் தாங்களே ஆண்டுவரவேண்டும்' என்று கூறிய காங்கிரஸ் இன்று அதற்கு நேர்மாறாக, 'என்னைத்துக்கு நீ ஆளவேண்டும்', 'வெள்ளையனே வெளியேறு' என்று சாதாரணமாகக் கூறிவிடவில்லையா? அவ்விதமே, ஒவ்வொரு கருத்தும் முன்னேறிக்கொண்டுதான் வருகிறது. 'ப்ராகிரஸ்' (Progress) என்பதும் வளர்ச்சி என்பதும் பரிணாமமுன்னேற்றம் என்பதும் இதுதான். மனிதன் தன் பகுத்தறிவுகொண்டு சிந்திக்கச் சிந்திக்க அவனுடைய ஆசாபாசங்களும் வளர்ச்சியடைகின்றன. அதற்கேற்ப அவனுடைய முயற்சியும் வலுக்கிறது; வெற்றியும் பெறுகிறான்; அதனால் தன் வாழ்க்கைநிலை உயர அவன் இன்பமடைகிறான்.

ஒவ்வொரு வளர்ச்சிக்கும் சிந்தனை அறிவுதான் அடிப்படைக் காரணமாகும். உலகத்திலுள்ள மற்ற அறிவுள்ள மக்களின் வாழ்க்கைத்தரத்துடன் நம் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் நாம் ரொம்பவும் பின்னணியில் இருக்கிறோம் என்பது தெளிவாகும். இயற்கைப் பகுதறிவுப் பாதைவழிச் சென்று நாம் எங்கிருக்க வேண்டுமோ அந்த இடத்தில் நாம் இன்று இருக்கவில்லை. பல நூற்றாண்டுகளாக நாம் மிருகங்களைப்போல் எவ்வித முன்னேற்றமுமின்றி வாழ்ந்துவருகிறோம். அதாவது, மற்ற நாட்டு மக்களுடைய அறிவு வளர்ச்சிக்கு நாம் ஒரு நூறு ஆண்டுகளாவது பின்னணியில் இருக்கிறோம். காரணம் நமக்கு—அறிவில்லாமற் போனதாலல்ல; அந்த அறிவுக்குச் சுதந்திரம் கொடுக்காததால்தான். காரணம்—நாம் முன்னேற்றத்திற்கு அருகதையற்றவர்கள் என்பதற்காக அல்ல; நமது முன்னேற்றத்தைக் காலத்தினிடமும், கடவுளிடமும், தலைவிதிப் பயனிடமும் ஒப்புவித்துவிட்டதால்தான். காரணம்—நமக்கு அறிவை வளர்க்க சந்தர்ப்பம் கிடைக்காமல் போனதால் அல்ல; கிடைத்த சந்தர்ப்பத்தை மூட நம்பிக்கைகளைப் வளர்க்கப் பயன்படுத்தியதால்தான்.

நமது பண்டிகைகளையும், நமது சமுதாய சம்பந்தமான திருமணம் போன்ற விழாக்களையும் நாம் வெறும்வேடிக்கையாகவும் பொழுதுபோக்கு வாய்ப்பாகவும் கருதிவந்தோமே ஒழிய, அவற்றை மக்களின் அறிவு வளர்ச்சிக்கான வாய்ப்பாகக் கொள்ளவில்லை. அப்படிக் கொள்வது தவறென்றுகூடக் கருதியிருந்தோம். கடவுள் சம்பந்தமாக, மத சம்பந்தமாக, சாஸ்திர சம்பந்தமாக, பழக்கவழக்க சம்பந்தமாக—எந்த ஒரு சிறு மாறுதலுக்கும் இடம் கொடுக்காமல் நாம் நம் முன்னோர் நடந்துகொண்ட மாதிரியை அப்படியே பின்பற்றி வந்தோம். 'அவற்றை அறிவினால் ஆராய்ந்து பார்க்கக்கூடாது; அவற்றில் எத்தகைய மாறுதலும் செய்ய நினைக்கக் கூடாது; நினைத்தால் நரகம் சம்பவிக்கும்; புல்லாகவோ, புழுவாகவோ மறுபிறவியில் பிறக்கநேரிடும்' என்றெல்லாம் கூறப்பட்டுவந்தது; இன்றும் கூறப்பட்டுவருகிறது. பேய், பிசாசுகளுக்கும், மந்திரவாதிகளுக்கும் எப்படி இன்று சில மடையர்கள் பயந்துகொண்டு வாழ்க்கை நடத்துகிறார்களோ, அதேபோல் மத, சாஸ்திர பூச்சாண்டிக்கும், நரக பூச்சாண்டிக்கும் பயந்து மக்கள் தம் புத்தியை உபயோகிக்கத் தவறினார்கள். தமது அறிவிலும் ஆற்றலிலும் நம்பிக்கை இழந்து, 'ஐயோ, பாவமே நான் என்ன பாவம் செய்தோ இப்படித் துன்பப்படுகிறேன்; நான் சாணி மூத்திரம் வேணுமானாலும் குடித்துவிடுகிறேன்; என்னைமட்டும் நரகத்திற்கு அனுப்பிவிடாதே' என்று ஒவ்வொருவரும் கடவுளிடம் பிரார்த்தனை செய்துவந்தனர். ஒருவரிருவர் நரகத்தில் நம்பிக்கையற்று அறிவுகொண்டு முன்னேற்றமடைய முயற்சித்தனர் என்றாலும், இந்த நாசமாய்ப்போன நாசகாரப் பயங்கொள்ளிகள் அவர்களையும் சும்மாவிடவில்லை. அவர்களைக் கடவுளுக்கு விரோதிகள் என்று பழித்துக் கூறி அவர்களுக்குப் பலவான கொடுமைகள் இழைத்துவந்தனர். இதனால்தான் நம் மக்கள் முன்னேற்றமடைய வாய்ப்பில்லாமற் போய்விட்டது.

எது எதற்குக் கடவுள், எதற்கு மதம், எதற்கு சாஸ்திரம், எதற்கு பழக்கவழக்கங்கள் ஆகியவைகளைப் பயன்படுத்துவது என்கின்ற தராதரம் இல்லாமல் அடியோடுயாவற்றிற்கும் அடிமையாகிவிட்டோம். அறிவை உபயோகிக்கும் வாய்ப்பு பெற்றிருக்கும் பிற நாட்டு

மக்கள், தம் அறிவால் கண்டுபிடித்திருக்கும் அதிசயக் கருவிகளை எல்லாம் நாமும் செய்ய வேண்டுமே என்ற கவலையில்லாமல், அவற்றால் நமக்கேற்படும் ஆசை, வசதி, காரணமாக அவற்றை ஆசையோடு அனுபவிக்கமாத்திரம் தொடங்கிவிட்டோம். நமக்குப் பிரயோசனம் இருப்பதைச் சட்டென்று ஒப்புக்கொண்டுவிட்டோம். அப்போதுமாத்திரம் நமக்கு இயற்கையாய் உள்ள பயத்தை வீசியெறிந்துவிட்டோம். இது அனுபவிக்கத் தக்கதுதானா? முன்னோர்கள் இதை அனுபவித்தார்களா? கடவுள் நம்பிக்கை இதை அனுமதிக்கிறதா? என்றெல்லாம் நாம் சிந்திக்கவில்லை. நாம் அனுபவிக்கிறோம். ஆனால் அனுபவிக்கப் படும் பொருள் எப்படிச் செய்யப்பட்டது? யாரால் செய்யப்பட்டது? நம்மால் ஏன் அப்படிப் பட்ட பொருளைச் செய்ய முடியவில்லை என்றெல்லாம் நாம் சிந்திப்பதில்லை. சாதாரண மாக இந்த விளக்கை எடுத்துக்கொண்டால்கூட இதுவும் படிப்படியாக எவ்வளவோ முன்னேற்றம் அடைந்துவந்திருக்கிறது. நெருப்பு, அகல்விளக்கு, கிரோசின்விளக்கு, பவர்லைட், கியாஸ்லைட், எலெக்ட்ரிக் லைட் என்று முன்னேறிவிட்டது. இன்று எவ்வளவு தான் பக்தனாயிருந்தாலும், அவன்கூட மின்சார விளக்கில்தான் தன் பிரார்த்தனையைச் செலுத்த ஆசைப்படுகிறான். பல மதங்களும் கணக்கற்ற தெய்வங்களும் பெரிய ரிஷிகளும் முனீஸ்வரர்களும் பலதீரர்களும் சூரர்களும் நம் நாட்டில் தோன்றியிருந்தும், அவர்களால் எல்லாம் இப்படிப்பட்ட காரியத்திற்கு ஒரு பயனும் ஏற்படக் காணோம்? இவர்களில் ஒருவருக்காவது இப்படிப்பட்ட ஒரு சாதனத்தைக் கண்டுபிடிக்கக் கூடிய சக்தியை, நமக்கு அளிக்கத் திறனில்லாமற் போய்விட்டது. உலகம் எவ்வளவோ முன்னேறியும் நாம்மட்டும் இன்னும் காட்டுமிராண்டிகளாகத்தான் வாழ்ந்து வருகிறோம்.

நம்மிடையே இன்னும் நிரந்தரமான வருணாசிரம தர்மம் இருந்துகொண்டுதான் இருக்கிறது. 2000 வருடங்களுக்கு முன் எந்த வகுப்பார் சூத்திரராயிருந்தாரோ அந்த வகுப்பார் இன்னும் சூத்திரர்களாகத்தான் இருந்து வருகிறார்கள். 2000 வருடங்களுக்கு முன் யார் பிராமணர்களாய் இருந்தார்களோ அவர்கள்தாம் இன்றும் பிராமணர்களாய் இருந்து வருகிறார்கள். நம் வர்ணம் (நிறம்) பழக்க, வழக்கம், ஆசாபாசம், வருணதர்ம நடத்தை ஆகியவைகள் எல்லாம் மாறிய பின்பும் இது மட்டும் மாறுதலடையாமல் பிறவி காரணமான சாதித் தன்மை மட்டும் மாறாமல் இருப்பது சரியா? இதுவரை இருந்தது போகட்டும். இனிமேலும் இந்த இழிநிலை ஒழிய வேண்டாமா? மானத்தைப்பற்றிக் கவலைப்பட இடம் கொடுக்காத மதம் நமக்கேன்? இந்தமாதிரி நாம் கூட்டமாகக் கூடும் போது நமது கவனமும் கவலையும் நமது மானத்தைப்பற்றித்தான் இருக்கவேண்டும். நமது இழிவு நீங்குவது எப்படி? நாம் மனிதத்தன்மை பெறுவது எப்படி? என்று சிந்திப் பதில்தான் நமது பூரா கவலையும் இருக்கவேண்டும்.

நமது இழிவுக்குக் காரணம் நாம் ஒப்புக்கொண்டு ஏற்றுக்கொண்டிருக்கும் மதமும், அதற்கு ஆதாரமாயிருந்துவரும் சாஸ்திரங்களும், புராணங்களும், அவற்றிற்கேற்ப கற்பிக் கப்பட்ட கடவுள்களும் என்பதை நாம் முதலில் உணரவேண்டும். அவற்றை நமது தன் மைக்கேற்ப, மானத்திற்கேற்ப, முற்போக்குக்கேற்ப மாற்றியமைக்க முற்படல் வேண்டும். மதம், புராணங்கள், அவற்றிற்கேற்ற கடவுள்கள் ஆகியவற்றின் மூலமாய் வைத்துச் செய்யப் பட்ட கலையையும், இலக்கியத்தையும் அவ்வப்போது அறிவுகொண்டு நம் மனநிலைக்கு ஏற்றவாறு மாற்றியமைத்துக்கொள்ளவேண்டும். நரக தண்டனைக்குப் பயந்து நாம் மனிதாபிமானத்தை விட்டுவிட முடியாது. 'கடவுளா, பாடுபடும் பாட்டாளி மகனை ஏழை யாகவும், பாடுபடாத சோம்பேறியைச் சுகவாழ்வுக்காரனாகவும் பிறப்பித்திருக்கிறது, வைத்திருக்கிறது?' என்று கேட்கவேண்டும். மதமா, அது ஏன் பாடுபடுகிற பாட்டாளி மக்களை இழிசாதி மக்களாகவும், பாடுபடாத சோம்பேறி மக்களை உயர்சாதி மக்களாகவும் வைத்திருக்கவேண்டும்?' என்று கேட்கவேண்டும். கண்மூடிக் காலம், கண் மூடித் தலை வணங்கி நிற்கும் காலம் கடந்துவிட்டது. அதன் 'லிமிடேஷன் பார்' (Limitation Bar) ஆகிவிட்டது. கடவுளுக்கும் மதத்திற்கும், மக்கள் பயந்திருந்த காலம் மலையேறிவிட்டது.

மற்ற நாடுகளில் கடவுள் தன்மையிலேயே மக்கள் சந்தேகம் கொள்ள முற்பட்டுவிட்டனர். கடவுள் தன்மையை வெறுக்கக்கூடத் துணிந்துவிட்டனர். கடவுளைச் சந்தேகிப்பவர்களும், கடவுளை வெறுப்பவர்களும் தம் அறிவைச் சுதந்திரமாக விட்டு முயற்சி செய்து பார்க்கிறார்கள். அதனால் அவர்கள் கண்கள் இருண்டுபோய் விடுவதில்லை; அல்லது காதும் அடைத்துப்போவது கிடையாது. ஆகவே நீங்களும் கடவுளையும், மதத்தையும் எல்லாவற்றிற்கும் போட்டுக் குழப்பாமல் ஒருபுறம் தனியாய் ஒதுக்கிவிட்டு, பயமின்றி உங்கள் அறிவு கொண்டு யாவற்றையும் சிந்தித்துப் பாருங்கள். நான் சொல்லுவதை அப்படியே நம்பிவிட வேண்டும் என்று நான் கூறவில்லை; அப்படி நம்பப் பாத்தியப்பட்டவர்களும் அல்லர் நீங்கள். உங்கள் பகுத்தறிவுகொண்டு ஆராய்ந்து பாருங்கள்!

[திருவத்திபுரத்தில் 19-1-1948-ல், சொற்பொழிவு—'விடுதலை' 29-2-1948]

## 4. தமிழர் திருநாள்

திராவிடத்தின் ஆதி மக்களான தமிழர்களுக்கு தமிழர்களுக்குரிய பண்டிகை என்பதாக ஒன்றைக் காண்பது மிக அரிதாக உள்ளது.

இதன் காரணம் என்னவென்றால், கலாசாரத்துறையில் தமிழனை ஆதிக்கம் கொண்டவர்கள் தங்களது கலாசாரங்களைத் தமிழனிடம் புகுத்துகிற வகையில் முதல் பணியாக—தமிழ்நாட்டின் தமிழனின் கலாசாரங்களை, பழக்க வழக்கங்களை அடியோடு அழித்து மறைத்து விட்டார்கள். இதனால் தமிழனுக்குரிய கலாசாரம் எது என்று அறிவது கூட மிகமிகக் கடினமான காரியமாக ஆகிவிட்டது தமிழனின் கலாசார பண்புகள் அழித்து ஒழித்து மறைக்கப்பட்டுவிட்டன என்பது மாத்திரமல்லாமல், தமிழனுக்கு வரலாறு, சரித்திரம் என்பதுகூட இல்லாமல் அழிக்கப்பட்டுவிட்டது.

எனவே, இன்று தமிழன் கலாசாரம், பண்பு, வரலாறு அற்ற ஒரு அடிமை ஜீவனாக விளங்குகிறான். இப்படி விளங்குவதுமாத்திரமல்லாமல் இன்று தமிழன் கொண்டாடும்—நடத்தும் கலாசாரப் பண்பு, வரலாறு என்பவைகள் எல்லாம் தமிழனுக்கு இழிவும் அடிமைத் தன்மையும் தந்து அவற்றை நிலைநிறுத்துபவைகளாகவே இருந்து வருகின்றன.

தமிழனுக்குள்ள கலைகள் என்பனவெல்லாம் தமிழனை அடிமையாக்குவனவாகவே இருந்து வருகின்றன. தமிழனுக்கு அடியோடு சமயம் என்பதே இல்லாமல் போய்விட்டதே எனலாம். மக்களுக்கு, விழா முக்கியமான தேவையாகும். விழாவை முன்னிட்டு மக்களுக்கு மகிழ்ச்சி, ஓய்வு, மக்களுடன் அளவளாவுதல், கவலையற்ற கொண்டாட்டம் கொள்ளுதல், அன்பு, ஆசைப்பரிமாற்றம், சுயேச்சையான களியாட்டம் முதலியவைகளை அனுபவிக்க முடிகின்றது. இவைகளை ஏற்படுத்துவதால்தான் இவற்றை விழா என்று கூறுகிறோம்.

அரசாங்க விடுமுறைக்கு உரிய பண்டிகைகள் போகி, பொங்கல், மாட்டுப்பொங்கல், மகாசிவராத்திரி, தமிழ் வருடப்பிறப்பு, ஆவணிஅவிட்டம், கோகுலாஷ்டமி, சரஸ்வதிபூசை, தீபாவளி. விடுமுறை இல்லாத பண்டிகைகள்—பிள்ளையார்சதுர்த்தி, கார்த்திகைதீபம், பங்குனிஉத்திரம், தைப்பூசம் இந்தப்படியாக இன்னும் பல உள.

இவைகளில் தமிழனுக்கு, தமிழ்ச் சமுதாயத்திற்கு, தமிழன் பண்பிற்கு, தமிழன் வரலாற்று நடப்புக்கு, தமிழனின் அறிவு ஆராய்ச்சிப் பொருத்தத்திற்கு—ஏற்றவாறு விழா அல்லது பண்டிகை என்பதாக எதையாவது சொல்ல முடிகிறதா?

தமிழனின் இழிவுக்கு மறுக்கமுடியாத—முக்காலத்திற்கும் ஏற்றநிலையில் ஒரு எடுத்துக்காட்டைக் கூறவேண்டுமானால் தமிழனுக்குக் காலத்தைக் காட்டக்கூடிய சொல், சாதனம், அமைப்பு என்பது இல்லையென்றே கூறலாம்.

கிறித்தவர்கள் காலத்தைக்காட்ட கிறித்துவ ஆண்டு (கி. பி.) இருக்கிறது. முஸ்லிம்கள் காலத்தைக்காட்ட இஸ்லாம் ஆண்டு (ஹிஜ்ரி) இருக்கிறது. இதுபோல, தமிழனுக்கு என்ன இருக்கிறது? இதற்குத் தமிழனின் ஆதாரம் என்ன இருக்கிறது?

மற்றும், இப்படியேதான் தமிழனுக்குக் கடவுள், சமயம், சமயநூல், வரலாற்றுச் சுவடி, இலக்கியம் முதலியவை என்று சொல்ல எதுவும் காண மிகமிகக் கஷ்டமாக இருக்கிறது.

இப்படிப்பட்ட நிலையில், தமிழர் விழா (பண்டிகை) என்பதாக நான் எதைச்சொல்ல முடியும்? ஏதாவது ஒன்று வேண்டுமே? அதை நாம் கற்பிப்பது என்பதும், எளிதில் ஆகக் கூடியது அல்லவே என்று கருதிப் பொங்கல் பண்டிகை என்பதைத் தமிழன் விழாவாகக் கொண்டாடலாம் என்று முப்பது ஆண்டுகளுக்கு முன் நான் கூறினேன். மற்றும் யாராவது கூறியும் இருக்கலாம்.

இந்தப் பண்டிகையும் (Harvest Festival) அறுவடைத் திருவிழா என்ற கருத்தில் தானேயொழிய, சங்கராந்திப் பண்டிகை, போகிப் பண்டிகை, இந்திரவிழா என்று சொல்லப் படும் கருத்தில் அல்ல.

இந்தப் பொங்கல் பண்டிகையை தமிழர் எல்லோரும் கொண்டாடவேண்டும்.

[கட்டுரை—'விடுதலை' 30-1-1959]

பொங்கல் பண்டிகை என்பது நாள், நட்சத்திரம், மதக்—கதை ஆதாரம் முதலியவை எதுவுமே இல்லாமல் தை மாதம் ஒன்றாம் தேதி என்பதாகத் தை மாதத்தையும் முதல் தேதியையுமே ஆதாரமாகக் கொண்டதாகும்.

இதற்கு எந்தவிதமான கதையும் கிடையாது. இந்தப் பண்டிகை உலகில் எந்தப் பாகத்திற்கும் எந்த மக்களுக்கும் உரிமையுள்ள பண்டிகையாகும். என்றாலும், மற்ற இடங்களில் மற்ற மக்களால் பல மாதங்களில் பல தேதிகளில் பல பேர்களால் கொண்டாடப் படுவதாகும்.

இக் கொண்டாட்டத்தின் தத்துவம் என்னவென்றால், விவசாயத்தையும் வேளாண்மையையும் அடிப்படையாகக் கொண்டு அறுவடைப் பண்டிகையென்று சொல்லப் படுவதாகும். ஆங்கிலத்தில் 'ஹார்வெஸ்ட் பெஸ்டிவல்' (Harvest Festival) என்று சொல்லப்படுவதின் கருத்தும் இதுதான்.

என்றாலும், பார்ப்பனர் இதை மத சம்பந்தம் ஆக்குவதற்காக விவசாயம், வெள்ளாண்மை, அறுவடை ஆகிய கருத்தையே அடிப்படையாகக் கொண்டு இதற்கு 'இந்திரன் பண்டிகை' என்றும் அதற்குக் காரணம் வெள்ளாண்மைக்கு முக்கிய ஆதாரமான நீரை (மழையை)ப் பொழிகிறவன் இந்திரன் ஆதலால் இந்திரனைக் குறிப்பாய் வைத்து, விவசாயத்தில் விளைந்து வெள்ளாண்மையாகியதைப் பொங்கி (சமைத்து) மழைக்கடவுளாகிய இந்திரனுக்கு வைத்துப் படைத்து பூசிப்பது என்றும் கதை கட்டி விட்டார்கள்.

இந்தக் கதையை இவ்வளவோடு விட்டுவிடவில்லை.

இம் மாதிரியான இந்திர விழாபற்றி கிருஷ்ணன் பொறாமைப்பட்டுத் தனக்கும் அந்த விழாவை (பூசையை) நடத்த வேண்டுமென்று மக்களுக்குக் கட்டளை இட்டதாகவும், மக்கள் அந்தப்படிச் செய்ததாகவும், இந்த இந்திரவிழா கிருஷ்ணமூர்த்தி விழாவாக மாறியது கண்ட இந்திரன் கோபித்து ஆத்திரப்பட்டு, இந்த கிருஷ்ணமூர்த்தி விழா ஈடேறாமல் நடைபெறாமல் போகும்பொருட்டு பெரிய மழையை உண்டாக்கி விழாக் கொண்டாடுவோர் வெள்ளாண்மைக்கு ஆதரவாக இருந்த கால்நடைகள், ஆடு மாடுகள் அழியும் வண்ணமாகப் பெரும் மழையாகப் பெய்யச் செய்துவிட்டான் என்றும், இதற்கு

ஆளான மக்கள் கிருஷ்ணமூர்த்தியிடம் சென்று முறையிட்டதாகவும், கிருஷ்ணமூர்த்தி மக்களையும் ஆடுமாடுகளையும் காப்பாற்ற ஒரு பெரிய மலை (கோவர்த்தனகிரி)யைத் தூக்கி அதைத் தனது சுண்டுவிரலால் தாங்கிப்பிடித்து காப்பாற்றினதாகவும், இதனால் இந்திரன் வெட்கமடைந்து கிருஷ்ணனிடம் தஞ்சமடைந்து தனது மரியாதையைக் காப்பாற்ற வேண்டுமென்று கேட்டுக்கொண்டதாகவும், அதற்கு இரங்கி கிருஷ்ணன், 'எனக்கு ஒருநாள் பண்டிகை; உனக்கு ஒருநாள் பண்டிகையாக, மக்கள் முதல்நாள் எனக்காக பொங்கல் பண்டிகையாகவும் பொங்கலுக்கு மறுநாள் மாட்டுப் பொங்கல் என்று கொண்டாடும்படியும் ராஜி செய்து கொண்டார்கள் என்றும் சிரிப்பிற்கிடமான—ஆபாச முட்டாள்தனமான கதைகளைக் கட்டிப் பொருத்திவிட்டார்கள்.

இதிலிருந்து தேவர்களுக்கு அரசனான இந்திரனின் யோக்கியதை எப்படிப்பட்டது? மக்களுக்குக் கடவுளான கிருஷ்ணனின் யோக்கியதை எப்படிப்பட்டது என்பதை மக்கள் சிந்தித்து உணர வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகிறேன்.

மற்றும், இதில் பொங்கலுக்கு முதல் நாளைக்கு ஒரு கதையையும், மறு நாளைக்கு ஒரு கதையையும் போகிப் பண்டிகையென்றும், சங்கராந்திப் பண்டிகையென்றும் பெயர் வைத்து மூன்றுநாள் பண்டிகையாக்கி, அதில் ஏராளமான முட்டாள்தனத்தையும் மூடநம்பிக்கையையும் புகுத்திவிட்டார்கள்.

நமது பார்ப்பனர்களுக்கு எந்தக் காரியம் எப்படியிருந்தாலும், யார் எக்கேடு கெட்டாலும் தாங்கள் மனித சமுதாயத்தில் உயர்ந்த பிறவி மக்களாகவும், உடலுழைப்பு இல்லாமல் வாழும் சுக ஜீவிகளாகவும் இருக்கவேண்டும் என்பதற்காக மனித சமுதாயம் முழுவதுமே அறிவைப் பயன்படுத்தாத, ஆராய்ச்சியைப் பற்றியே சிந்திக்காத முட்டாள்களாகவும், காட்டுமிராண்டிகளாகவும் இருக்கச் செய்யவேண்டும் என்பதே அவர்களுடைய பிறவிப் புத்தியானதால் அதற்கேற்ப உலக நடப்பைத் திருப்பிப் பாதுகாத்து வைக்கிறார்கள்.

பார்ப்பனர்களின் இம் மாதிரியான அட்டூழிய அக்கிரம காரியங்களில் இருந்து விடுபட்டு மனிதர்களாக நாம் வாழவேண்டுமானால் பொங்கல் பண்டிகை என்கின்றதை முதல் நாள் அன்றுமட்டும் நல்ல உயர்வான உணவு அருந்துவதையும், நல்லுடை உடுத்துவதையும், மனைவி மக்கள் முதலியவர்களுடன் இன்பமாகக் காலம் கழிப்பதையும் கொண்டு, நம்மால் கூடிய அளவு மற்றவர்களுக்கும் உதவி அவர்களுடன் குலாவுவதான காரியங்களையும் செய்வதன் மூலம் விழாக் கொண்டாட வேண்டியது அவசியமாகும்.

மற்றபடியாக, மதச் சார்பாக உண்டாக்கப்பட்டிருக்கும் பண்டிகைகள் அனைத்தும் பெரிதும் நம் இழிவிற்கும், பார்ப்பனர் உயர்விற்கும், நம் மடமைக்கும், காட்டுமிராண்டித் தன்மைக்கும் பயன்படத் தக்கதாகவே இருந்துவருவதால்—பயனளித்து வருவதால் அறிவுள்ள, மானமுள்ள மக்கள் மத சம்பந்தமான எந்தப் பண்டிகையையும் கொண்டாடாமலிருந்து, தங்களை மானமும் அறிவுமுள்ள மக்களாக ஆக்கிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மானமும் அறிவுமே மனிதற்கழகு.

[அறிக்கை—'விடுதலை' 13-1-1970]

## 5. பெயர் சூட்டுவிழா

தாய்மார்களே! தோழர்களே!

சாதாரணமாக, மனிதருக்குப் பெயர் என்பது ஒவ்வொரு நபருக்கும், அந்தந்த நபரைக் குறிக்கும் குறியீட்டுச் சொல்லாகும். மனித சமுதாயத்தில் இம் மாதிரியான ஒரு குறியீட்டுச்சொல் அவரவர்களுக்கு அடையாளஞ் சொல்லக்கூடிய சொல் என்பது சரித்திர காலத்திற்கு முன்பிருந்தே இருந்து வந்திருக்கிறது.

பெயர் சூட்டுவதில்..................சாதாரணமாக, மனிதர்களுக்கு ஒரு குறியீடு என்கிற தன்மையில் சூட்டப்படுகிற பெயர் என்கிற போதிலும், பெயர் சூட்டுவது என்பதில் ஒரு கொள்கை, தத்துவம் உள்ளே இருந்து வந்திருக்கிறது.

முதலாவது, சாதாரணமாக மக்களுக்குள் இன்றைய தினம் இருந்துவரும் பெயர்களைப் பார்த்தால் பெரும்பாலும் மதத்தின் அடிப்படையிலேயே இருந்துவருகின்றன. சாதாரணமாக, உலகத்தில் மதத்திற்குச் செல்வாக்கு ஏற்பட்ட பிறகு ஒவ்வொரு மதத்தாருக்கும் அந்தந்த மதத்தின் பெயரால் அந்தந்த மதத் தத்துவம் மதக்குறிப்பின்படியாகப் பெயர்கள் இருந்து வருகின்றன.

கிறித்தவர்களுக்கு கிறித்துவ மத சம்பந்தமான பெயர்களும், முஸ்லிம்களுக்கு முஸ்லிம் மார்க்கப்படியான பெயர்களும், பவுத்தர்களுக்கு பவுத்த தன்மைப்படியான பெயர்களும், இந்துக்கள் என்பவர்களுக்கு இந்துமதம் என்பவைகளின் சாஸ்திர சம்பிரதாயப்படியும் பெயர்கள் இருந்து வருகின்றன. இதற்குக் காரணம், என்னவென்றால், மத ஸ்தாபனங்களுக்கு ஏற்பட்ட செல்வாக்கும் மதத்தின் தன்மைப்படி பெயர் வைத்துக்கொள்வது என்பது புண்ணியம், பெருமைக்கு உகந்தது, உயர்ந்தது என்கிறதான கருத்தும் மக்கள் உள்ளத்திலே ஏற்பட்டதுதான் ஆகும்.

நம்மைப் பொறுத்தவரையில்—தமிழர்களைப் பொறுத்தவரையில் நம்முடைய பெயர்கள் என்பவைகள் எப்படி இருந்து வந்தன என்றால், மதச்சார்பு அற்றவையாக, மதத்திற்கு முற்பட்டு வெறும் பெயரீட்டுக் குறிச்சொல் என்கிற முறையிலேதான் இருந்து வந்திருக்கின்றன. மதச் சம்பிரதாயத்தின் அடிப்படையிலே தமிழர்களுக்குப் பெயர் இருந்ததில்லை. தமிழ்ப் பெயர்களைப் பார்த்தால் இது நன்றாகத் தெரியவரும்; இன்னும் சொல்லப்போனால் தமிழர்களின் நூல்களில்—2000, 3000 ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்ட நூல்களில் மதம் அதிகம் இருக்காது. அதுபோலவே தமிழர்களின் சரித்திரப் பெயர்களை எடுத்துப்பார்த்தாலும் அதிலே மத, கடவுள் சார்புப் பெயர்கள் அதிகம் இல்லை. சேர, சோழ, பாண்டியர்கள் என்பவர்களிலும் முற்பட்ட மூவேந்தர்களிலும் மதப் பெயர்கள் அதிகம் இல்லை.

நாளாக ஆக மத ஆதிக்கம் வந்து குவிந்துவிட்டது. மத, புராண, கடவுள் சம்பந்தமான காரியங்களுக்குச் செல்வாக்கு ஏற்பட்டு, சம்பந்தப்பட்டவர்கள் இந்த மத ஆதிக்கத்தை நிலை நிறுத்திக்கொள்ள வேண்டும் என்கிற தன்மையில் இந்தப்படியான மதப் பெயர்களைப் புகுத்திவிட்டார்கள்.

அதுவும் குறைந்தது இந்த 50 ஆண்டு காலத்துக்குள்ளாக ரொம்பவும் புகுந்துவிட்டது. அதுவும் இந்த மத சம்பந்தமான பெயர்கள் அதிகமாக ஏராளமாகப் புகுந்ததெல்லாம் பெண்களிடத்தில்தான் ஆகும். எந்தப் பெண்களுக்கும் கடவுள் பெயர், மத சம்பந்தமான பெயர் என்று வந்து புகுந்துவிட்டது.

இந்தப்படியான, மனித நபரைக் குறிக்கும் குறியீட்டுச் சொல் என்பது மதப் பெயர்களைக் கொண்டதாக ஏன் ஆகிவிட்டது என்றால், மதத்திற்கு, மத ஆதிக்கம் வளர்வதற்கு இதை இந்தப்படியான பெயர் சூட்டுவது என்பதை ஒரு பிரச்சார சாதனமாக வைத்துக்கொண்டார்கள்.

நீங்கள் சாதாரணமாகப் பார்த்திருக்கலாம். இந்தப் பெயர் சூட்டுவது என்பதிலே கூட இந்து மதத்தின் வருணாசிரமமுறை இருந்து வந்திருக்கிறது. அழகான பெயர்கள் எல்லாம் மேல் சாதிக்காரர்கள் என்பவர்கள் வைத்துக்கொள்ளுவதும்—அதாவது மேல் சாதித் தன்மையைக் குறிக்கும் கடவுள், மத சம்பந்தமான பெயர்களை மேல்சாதிக்காரர்கள் வைத்துக்கொள்வது என்றும், அந்த மேல்சாதித் தன்மையைக் குறிக்கும் பெயர்களைக்

கீழ்ச்சாதி மக்கள் என்போர்—அதாவது சூத்திரர், பஞ்சமர் எனப்படுவோர்கள் வைத்துக் கொள்ளக்கூடாது, வைத்துக்கொள்வது பாவம் எனவும் கருதப்பட்டது. சாதாரணமாக, இந்த ராமன், கிருஷ்ணன், லட்சுமி, சரஸ்வதி, பார்வதி என்கிற பெயர்கள் மேல் சாதிக்காரர்கள் பெயராகவும்; கருப்பன், மூக்கன், வீரன், காட்டேரி, பாவாயி, கருப்பாயி என்பன போன்ற பெயர்கள் கீழ்ச்சாதி மக்கள் வைத்துக்கொள்ள வேண்டிய பெயர்கள் என்பவைகளாகவும் இருந்து வந்திருக்கின்றன.

வரவர மதத்திற்கும் மதத்தன்மைக்கும், எதிர்ப்பும்—தங்களுடைய இழிவைப் பற்றியதுமான உணர்ச்சியும் மக்களுக்கு ஏற்பட ஏற்பட, இந்தப்படியான எதிர்ப்பை ஒழிப்பது என்கிற முறையில் எல்லோரும் எல்லாப் பெயர்களையும் வைத்துக்கொள்ளலாம் என்கின்றதான நிலைமை வந்தது.

சாதாரணமாக, இந்த இழிசாதி மக்கள் என்பவர்களின் பெயர்களுக்குக் கடைசியில் சாமி, அப்பன் என்ற சொற்கள் வரக்கூடாது. ஏனென்றால் மேல்சாதிக்காரர்கள் என்பவர்கள், பெயர் சொல்லிக் கூப்பிடும் போது இழிசாதி மகனை, 'சாமி!' என்றும் 'அப்பன்!' என்றும் கூப்பிடவேண்டியிருக்கிறது என்பதால்—அது மேல்சாதிக்காரர்களின் அந்தஸ்துக்கு மட்டம் என்பதால் அந்தப்படியான பெயர்களை இழிசாதிமக்கள் வைத்துக் கொள்ளக் கூடாது. அப்படியே வைத்துக் கொண்டாலும் அந்த 'சாமி' 'அப்பன்' என்ற சொல்லை விட்டுவிட்டு, மேல்சாதிக்காரர்கள் 'ராமா', 'கந்தா' என்றுதான் அழைப்பார்கள். இப்படியாகப் பெயர்கள் என்பவைகள் கடவுளின் பேராலும், மதசாஸ்திர சம்பிரதாயத்தின் பேராலும் அவற்றை வகுத்த வருணாசிரம மேல்-கீழ்சாதி முறைப்பிரகாரமே வழங்கி வந்து, மேற்கண்டவைகளுக்கு இவைகள் ஒரு பாதுகாப்பாகவும், ஆதாரமாகவும், அஸ்திவாரமாகவும், நின்று நிலவிவருகின்றன.

இன்னும் பல பெயர்களைப் பார்த்தால் மிக ஆபாசமாக இருக்கும். வைக்கப்படுகிற பெயர் கடவுள் பெயராக இருக்கிறதா என்றுதான் கவனிப்பார்களே தவிர, அப்படி வைக்கப் பட்டிருக்கிற பெயர்களுக்கு என்ன அர்த்தம், அது மிக ஆபாசமான அர்த்தமுடையதாக இருக்கிறதே என்று கவலைப்படமாட்டார்கள்.

சாதாரணமாக, ஆதிகேசவலு, குஞ்சிதபாதம், குஜலாம்பாள், துரோபதை என்கிற தாகவெல்லாம் பெயர் வைக்கிறார்களே! அந்தப் பெயர்களின் பொருளை விரித்துப்பார்த்தால் அதில் எவ்வளவு ஆபாசமும் அறிவற்றதுமான காரியங்கள் இருக்கின்றன! ஆனால், மக்கள் இதைப்பற்றியெல்லாம் கவலைப்படாமல் இம்மாதிரியான பெயர்களையே ஏற்றுக் கொண்டும் சூட்டிக்கொண்டும் ஏன் இருக்கிறார்கள் என்றால், நான் முன்னே சொன்னது போல், இந்தப்படியான பெயர்கள் என்பவைகள் கடவுள், மத சாஸ்திரங்களின் பேரால் ஏற்படுத்தப்பட்டுவிட்டன என்பதால்தான்.

இப்படியாக மத, சாஸ்திர, கடவுள் அடிப்படையிலேயே வளர்ந்து வந்த பெயர் முறைகள் இன்று கொஞ்சம் மறையத் தொடங்கியிருக்கின்றன. மக்கள் சமுதாயத்துக்கு மான உணர்ச்சியும், இந்தக் கடவுள், மத, சாஸ்திரங்கள் என்பவைகளின் பேரால் தாங்கள் அழுத்தப்பட்டும், அடிமைப் படுத்தப்பட்டும், இழிசாதி மக்களாக்கப்பட்டும் இருக்கிறதை—கடவுள், மத, சாஸ்திரத் துறையிலே இழிசாதிமக்கள்; பொருளாதாரத்துறையிலே ஏழை மக்கள்; அறிவுத்துறையிலே கீழ்மக்கள் என்பதாக இருக்கிற நிலைமையை உணர்ந்து—மக்கள் தங்கள் இழிவையும் ஏழ்மையையும் அடிமையையும் ஒழிக்கவேண்டும்; இவைகளிலிருந்து விடுதலைபெறவேண்டும் என்கிற மானஉணர்ச்சி பகுத்தறிவு உணர்ச்சி, ஏற்பட்டு வருவதால் இந்தப்படியான தங்கள் இழிவுக்கும், ஏழ்மைக்கும், கீழ்நிலைக்கும் காரணமான எந்தெந்த அமைப்பு முறைகள் இருக்கின்றனவோ அந்த அமைப்பு முறைகளை நம்முடைய விடுதலையைக் கோரி மாற்ற வேண்டும்; ஒழிக்கவேண்டும் என்கிற தன்மையில்

தான் திருமணத்துறை, சாதித்துறை, கிரஹப்பிரவேசம் என்கிற புதுமனை புகுவிழா சங்கதி, திருவிழாத்துறை, சங்கீத—இலக்கியத்துறை போன்ற எல்லாத் துறைகளிலும் மாற்றம் ஏற்படுத்தும் முயற்சி, கிளர்ச்சி நடத்துவதுபோல இந்தப் பெயர்த் துறையிலும் இது மாதிரியான மாறுதல் உணர்ச்சியோடு காரியம் நடத்தப்படுகிறது.

இதற்குமுன் மக்களிடத்தில் இவ்வளவு உணர்ச்சி இருந்ததில்லை. வர, வர இப்போது மக்களிடத்தில் மானஉணர்ச்சியும், பகுத்தறிவும் பெரும் அளவுக்கு வளர்ந்து வருகிறது; பலருக்கு ஏற்பட்டு வருகிறது. அந்தப்படியான உணர்ச்சி பெற்றவர்கள் செய்கிற காரியத்தில் எல்லாம் இம்மாதிரியான மாறுதல், அறிவுக்குப் பொருந்திய நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. இன்றைக்கு ஏராளமாக இதுமாதிரியான நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

இந்த மாதிரித்தன்மையில்தான் இந்தப் பெயர் சூட்டுவிழாக்கள் நடத்தப்படுகின்றன. இதில் சூட்டப்படுகிற பெயர்கள் சாதாரணமாக மடமையான மதத்துக்கோ அறிவற்ற தன்மைக்கோ ஏற்றதாக இல்லாமல் பகுத்தறிவுத் தன்மைக்கேற்றதாகவே சூட்டப்படும்.

சாதாரணமாக, குழந்தைகள் பிறக்கும்போது இருந்தே இந்த மாதிரியான புதுமைப் பெயர் வைத்துவிட்டால் நல்லது. அதுவே பழக்கத்தில் வந்துவிடும். இப்போது என் பெயரையே எடுத்துக்கொள்ளுங்களேன். இது இந்துமதம் என்கிறதன் சார்புப் பெயர்தான். இவைகளை ஒழிக்கவேண்டும் என்று சொல்லுகிற எனக்கே இந்தப்பெயர் இருக்கிறது. இந்தப் பெயர் கூடாததுதான். ஆனால், இந்தப் பெயராலே 73 வருடம் இதையே என்னைக் குறிக்கும் குறியீடாகக் கொண்டு வந்தாகிவிட்டது. அதுமட்டுமல்லாமல், இந்தப் பெயர் என்பது மிகவும் விளம்பரமாகிவிட்டது; 'யார் ராமசாமியா! அட! அதுதான் இந்த ஆள்!' என்கிற மாதிரி ஒரு முக்கியமானதாகி விட்டது! இனி என் பெயரை மாற்றுவது என்றால்—இது ஏற்படுத்துகிற புதுப்பெயர் என்பது இந்தப் பெயர் அளவில் என்னைக் குறிக்கும் குறியீட்டுச் சொல்லாக இருக்க முடியாது. புதுப்பெயரால், பெயர் வைக்கிற தத்துவத்தின்படி இன்னாருக்கு இந்தப் பெயர் என்று புரிந்துகொள்ளுகின்ற மாதிரியில் இருக்கமுடியாது. ஆகவேதான் சொல்லுகிறேன், குழந்தையாய் இருக்கும்போதே புதுமைப்பெயர், பகுத்தறிவு சான்ற பெயர் சூட்ட வேண்டும் என்பதாக. இனி வருங்கால சந்ததிகளை உலகத்துக்கு அறிமுகப்படுத்துவதே புதுமையான, பகுத்தறிவான பெயராக—ஆரியமத, சாஸ்திர, கடவுள் தன்மை கொண்ட பெயர் அற்றதான மாதிரியில் வைக்கவேண்டும்.

[உளுந்தூர் பேட்டையில், 15-3-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 24-3-1953]

## 6. ஒருவர் பேரால் விழா

தோழர்களே!

ஒரு பெரியாரைக் கொண்டாடுவது என்பது எதற்காக? பக்தி செலுத்தவா? வரம் பெற வேண்டுமென்ற ஆசைக்காகவா? அல்லது அந்தப்படி ஒரு பெரியாரை நாம் கொண்டாடுவதன் காரணமாகப் பலன் கிடைக்கும் என்பதற்காகவா? இல்லை. அனேகமாக இன்றைய தினம் கொண்டாடப்படுவது போல, இதுமாதிரி நிகழ்ச்சிகள் கொண்டாடப்படுவதெல்லாம் அவர் நடத்தை, அவர் மக்களுக்குச் சொன்ன போதனைகள், மக்களுக்காக அவர் ஆற்றிய தொண்டு முதலியவைகளை நினைவுபடுத்திக்கொண்டு, அவைகளைப் பாராட்டியும், போற்றியும், மற்ற மக்கள் அப்பெரியார்களின் போதனையைப் பின்பற்றுமாறும், அவர்களின் நடத்தையும் செயலையும் தங்கள் வாழ்க்கையில் பின்பற்றவேண்டும் என்பதை மக்களுக்கு உணர்த்தவுமேயல்லாமல் வேறில்லை.

[சென்னையில், 20-12-1953-ல், சொற்பொழிவு—'விடுதலை' 22-12-1953]

# 7. நபி விழா

நபி பிறந்த தின விழா என்பது நீண்ட காலமாக இந்த நாட்டில் நடைபெற்று வருகிறது. நபி அவர்களின் போதனைகளில் எல்லா போதனைகளும் எல்லோரும் ஒப்புக் கொள்ளக்கூடியதாக, பின்பற்ற முடியாததாக இருந்தாலுங்கூட, இந்த விழாவில் அப்படிப் பட்ட பல தரப்பினரும் பிரிவினரும் தன்மையாளர்களும் கலந்துகொண்டு கொண்டாடப் பட்டு வருகிறது. காரணம் என்னவென்றால், வெவ்வேறு நிலைமை, வாழ்வு, எண்ணம் உடைய பல்வேறுபட்ட மக்களால் பின்பற்ற ஒப்புக்கொள்ள முடியாதன என்று பல இருந்தாலும்—யாரும், எப்படிப்பட்டவர்களும் எந்த நிலை, தன்மை, எண்ணம் உடையவர் களாய் இருந்தாலும் அவர்களாலும் மறுக்கமுடியாத—எவர்களும் ஒப்புக்கொள்ளக் கூடியதான சில கருத்துக்கள், நீதிகள், கொள்கைகள் நபி அவர்களின் போதனையிலே அடங்கி இருக்கின்றன. அதோடு கூடவே, இந்த நாட்டிலுள்ள முஸ்லிம் நண்பர்கள் தங்களின் நபி அவர்களின் கொள்கையைப் பரப்பவேண்டும் ; பிரச்சாரம் செய்யவேண்டும் என்ற காரியத்தில் தாராளமாக மற்றவர்களையும் சேர்த்துக்கொண்டு கலந்துகொள்ள வாய்ப்பளித்து அவர்களைச் சொல்லச்செய்து அவர்கள் நபி அவர்களின் போதனைகளைப் போற்றிச் சொல்வதைக் கேட்டு மிகவும் திருப்தி கொள்கிறார்கள்.

எந்த ஒரு கொள்கையும் உலகத்து மக்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்கிற மாதிரி எல்லாத் தரப்பு மக்களுக்கும் பொருத்தமாக இருக்குமா என்றால், உள்ளபடி அந்தக் கொள்கைகள் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கனவாயும், எல்லோராலும் நியாயமான தன்மையில் இருக்கிறது என்று கூறப்பட்டாலுங்கூட, அந்தக் கொள்கைக்கும் எதிர்ப் பாளர்கள் இருக்கத்தான் செய்வார்கள். இது இயற்கை. ஏன் என்றால் உலகத்திலுள்ள மக்கள் அனைவரும் இயற்கையில் ஒரு நோக்கம், குணம், பண்பு கொண்டவர்களாய் இருக்கமுடியாது. மாறுபட்டுத்தான் இருப்பார்கள். அதற்கான காரணங்கள் வேண்டு மானால் மாறுபட்டு இருக்கலாமே தவிர, மாறுபாடு, வேறுபாடு இருப்பது இயற்கை. உலகத்து 200 கோடி மக்களும் ஒரே நோக்கத்தோடு ஏற்றுக்கொள்கிற மாதிரி இருக்க முடியாது.

மற்றொன்று ; ஒரு கொள்கை, அல்லது திட்டம், நியாயம் என்பது எந்தக் காலத்துக்கும், என்றைக்கும், எந்தநிலை, தன்மைக்கும் எல்லோரும் ஏற்றுக்கொள்ளுவர்—எல்லோரும் ஏற்றுக்கொள்கிற மாதிரியில் அமைக்கப்பட்டது—வகுக்கப்பட்டது என்பதாகச் சொல்லிவிட முடியாது. ஏனென்றால், எக்காலத்திற்கும் பொருந்துகிறமாதிரி கொள்கை சொன்னார்கள்—என்பதானவர்களின் சக்தி 'முக்காலமறிந்த ஞானபாவ'மென்பதாகச் சொல்வது ஒரு பக்கம் இருந்தாலுங்கூட—மக்கள் அக் காலத்தில் இருந்த அதே நிலையில் இருக்கிறார்களா? காலம் பழங்காலத்தைப் போலவே மக்களை உண்டுபண்ணுகிறதா? பழக்க வழக்கம், ஆசாபாசம், அறிவு நிலை அப்படியே இருக்கின்றனவா? என்பதை யோசிக்கவேண்டும்?

நாளுக்கு நாள் மக்கள் மாறிக்கொண்டுதான் போகிறார்கள். கால மாறுதலும் அதற்கேற்ப வழி செய்கிறது. 1000, 2000 வருடங்களுக்கு முன்பு இருந்த மக்கள் நிலைமை, எண்ணங்கள், ஆசாபாசங்கள், அபிலாஷைகள் வேறு; இன்றைக்கு இருக்கிற மக்களின் மனோபாவம், ஆசாபாசங்கள் வேறு. அதுபோலவே, 500 வருடங்களுக்கு முன் மக்கள் இருந்த நிலையில் இன்று இல்லை. 300 வருடங்களுக்கு முன்பு—போன நூற்றாண்டில் ஏன் 50 வருடங்களுக்கு முன்பு மக்கள் இருந்த நிலையில் இன்று மக்கள் இல்லை. 50 வருடத்துக்கு முந்தைய மக்களினின்றும் சகல தன்மைகளிலும் துறைகளிலும் இக் கால மக்கள் மாறுபட்டிருக்கிறார்கள். அத்தகைய எண்ணங்கள் ஆசை, அபிலாசைகளுக்கு ஏற்பவே மக்களின் செயல்கள் நடப்புக்கள் இருக்கின்றன.

பொதுவாக ஜீவன் என்றாலே சுயநலம் உடையதுதான். அதிலும் மனிதன் தன் வாழ்வு, பாதுகாப்பு, வசதிக்கான அளவில் எல்லாத் துறையிலுமே முயற்சி செய்கிறான். அதன்பேரில் வசதியைப் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்று வருகிறபோது அதற்கேற்ப மாறுதல் காண வேண்டி இருக்கிறது. கொஞ்சம் சுயநலம் சிலருக்கு அதிகமாக ஏற்பட்டால் தங்கள் வசதி, தங்கள் வாழ்வுக்கு மட்டுமே பந்தோபஸ்து தேடுகிற மாதிரியில், மனித சமுதாயத்தைப் பற்றியும், மற்றவர்களைப் பற்றியும் கவலைப்படாமல் தங்களுக்குச் சவுகரியமானதான அமைப்பை ஏற்படுத்திக் கொள்கிறார்கள். இது ஒரு பக்கமிருக்கட்டும்.

எதற்குச் சொல்லுகிறேன்? மனிதன் வாழ்வும், எண்ணமும், நடப்பும் ஒரே நிலையில் இருப்பதில்லை, மாறுபாடு அடைந்துவருகிறது. அந்தந்த நிலைக்கு ஏற்ற மாதிரியில் என்பதற்கு ஆகவே! அப்படிப் பார்க்கிறபோது ஒருவர் எப்போதோ, எந்தக் காலத்திலோ, என்ன என்ன காரியத்துக்காகவோ சொன்னதை எல்லோரும், எப்போதும் கைக்கொள்ள வேண்டும் என்று எதிர்பார்ப்பது, சொல்லுவது எல்லோருக்கும் ஏற்புடைத்தாகாது என்பதற்கு ஆகவே!

எந்த மதத்திலும் எவ்வளவு பெரியதாகச் சொல்லப்பட்டாலும் கூட அது அனைவராலும் ஏற்க செய்யக் கூடியது என்று கூட அல்ல. மேலும் அந்த மதத்தைச் சார்ந்த மக்களாலேயே எல்லாவற்றையும் ஒப்புக் கொள்ளப்பட முடிகிறதா? ஏற்றுக்கொண்டாலும் அதன்படியே நடக்க முடிகிறதா! அந்த மதத்தில் கட்டுப்பட்டிருப்பவர்கள் என்பவர்களிலேயே பலரால் அந்தப் பெரிய காரியங்கள் ஏற்றுக்கொள்ள முடியாதனவாக இருப்பதைப் பலரிடம் காணுகிறோமே! ஒரு சாரார் ஒரு மதத்தில் ஒன்றைப் பெரிய மிக முக்கியமான காரியம் என்கிறார்கள். பிறிதொரு சாரார் அதை எதிர்க்க வேண்டியவர்களாய் இருக்கிறார்கள். அவரவர்கள் தனிப்பட்ட கால தேச வர்த்தமான நிலைக்கும் வசதிக்கும் ஏற்ற மாதிரியில் இந்த வேறுபாடு இயற்கையாக எழுகிறது.

ஆதலால்தான் சொல்லுகிறேன், எல்லோரும் ஒரு சார்பாய் மறுக்கமுடியாமல் ஒப்புக் கொள்ளத்தக்க கோட்பாடுகளாக எல்லாமே இருப்பது என்பது மிகவும் அதிசயமான காரியம். அப்படிப்பட்ட அனைவராலும் ஒப்புக்கொள்ளக்கூடிய கோட்பாடு, காரியமாக சில இருந்தாலுங்கூட அது மிகப் பெரியதுதான். அந்தப்படி பார்க்கிறபோது நபி அவர்களின் உபதேசங்கள், கோட்பாடுகள், நடப்புகள் இவைகளில் பல எல்லோராலும் ஒப்புக் கொள்ளத் தக்கவையாயும், ஏற்றுக்கொள்ளத் தக்கவையாயும் மறுக்கமுடியாதவையாகவும் இருக்கின்றன. அது மிகவும் பாராட்டத்தக்க பெரிய காரியம் ஆகும்.

தோழர்களே! நபி அவர்களை நான் ஒரு மகான் என்றோ, அமானுஷ்ய சக்தி படைத்தவர் என்றோ கருதவில்லை. என்னைப் பொறுத்தவரையில், நபி அவர்களை ஒரு மனிதத் தன்மை படைத்த சிறந்த மனிதராகத்தான் கருதுகிறேனேயல்லாமல் அதற்கு மேற்பட்டதாகச் சொல்லப்படும் நிலையில் கருதவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முகமது நபி அவர்களுடைய முக்கியமான கருத்துக்களிலே தெய்வீகத் தன்மை என்பதை ஒப்புக்கொள்ள முடியாத நம் போன்றவர்களும், மற்றும் பல மதங்களைச் சேர்ந்த சீர்திருத்தவாதிகளும் ஆதரவு கொடுப்பதற்கும் ஒப்புக்கொள்வதற்கும் மேற்கோள்களாக எடுத்துக் காட்டுவதற்கும் பல கருத்துக்கள் இருக்கின்றன.

அவர் என்ன சொன்னார்? ஒரு கடவுள்தான் உண்டு, பல கடவுள்கள் இல்லை என்றார். நீங்கள் கேட்கலாம், 'நபி அப்படி அதாவது ஒரு கடவுள் என்று சொன்னார்; இதைப்பற்றி உன் கருத்து என்ன?' என்று. என்னைப் பொறுத்தவரையில் நான் சொல்கிறேன்: 'கடவுள் என்று மக்கள், ஆயிரக்கணக்கான கடவுள்களைக் கட்டி அழுகிறவர்களைவிட நபி அவர்கள் எவ்வளவோ மேலானவர்' என்பேன். முதலில் மக்கள், 'பல

கடவுள்கள் என்பது பொய், ஒரு கடவுள்தான் மெய்' என்ற நிலைக்கு வரட்டும்; மேற் கொண்டு அப்புறம் பார்த்துக்கொள்ளலாம். நம் நாட்டுக்கு நம்—மக்களுக்கு இது எவ்வளவு நல்ல உபதேசமென்பதைச் சிந்தியுங்கள்.

அடுத்தபடியாக முகமது நபி அவர்கள் சொன்னது, மனித சமுதாயத்தில் மக்களுக் குள் ஒருவருக்கொருவர் உயர்வு—தாழ்வு, பேதாபேதம், வித்தியாசம் இல்லை; யாவரும் சமமான பிறவியே என்று சொன்னார். இதுவும் மிக முக்கியமானதாகும்.

நம்மிலும் பல பெரியார்கள் இந்தப்படி சொன்னார்கள். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பது போலவெல்லாம் சொல்லிப்பார்த்தார்கள். ஆனால், அவைகள் வெறும் ஏட்டு அளவிலே இருக்கின்றனவே தவிர நடப்பில் இல்லை. ஆனால், முஸ்லிம் சமுதாயத் திலே, நடப்பிலேயே ஒரே ஆண்டவன் வழிபாடும், மக்களுக்குள் பிறவியில் பேதமற்ற நிலைமையும் இருந்துவருகின்றன. இது அவர்களைப் பொறுத்தமட்டும்தான். அதாவது அவர்கள் மதஸ்தர்களை பொறுத்தமட்டிலும்தான் என்று சொல்லப்பட்டாலுங்கூட, மற்ற மதங்களில் அந்த மதத்தில் கட்டுப்பட்டுள்ளவர்களுக்குள்ளாகவே காட்டப்படும் பேதா பேதங்கள், வித்தியாசங்கள் முஸ்லிம் மதஸ்தர்களுக்குள், அவர்களுக்குள்ளாகக் காண்பிக் கப்படுவதில்லையல்லவா?

இன்றையதினம் நமக்குள்ளும் இந்த உணர்ச்சி—அதாவது முஸ்லிம்கள் நபி அவர் களைப் பின்பற்றுகிறவர்கள் எப்படி ஒரு ஆண்டவன் மக்கள் அனைவரும் ஒருகுலம் என்ப தான தன்மை உடையவர்களாக இருக்கிறார்களோ, அதேபோன்ற உணர்ச்சியும் கருத்தும் இன்று நமக்குள்ளும் தோன்றிவிட்டது. தவிரவும், இந்த மாதிரியான உணர்ச்சி என்பது இன்றைக்கு ஒரு பேஷனாகவும் போய்விட்டது.

இதற்குக் காரணம் என்ன? நபி அவர்கள் உபதேசம் அமுலில் இருப்பதேயாகும்.

அடுத்தாற்போல, முகமது நபி அவர்கள் விக்கிரக ஆராதனையை அந்தக் காலத்தி லேயே மிகவும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார். இதில் மிக வேகமாகவே போயிருக் கிறார். 'விக்கிரகத்தை முஸ்லிம்கள் தொழக்கூடாது. அப்படி விக்கிரகத்தை வணங்கு கிறவன் முஸ்லிமே அல்ல' என்று சொல்லி அந்த அளவுக்கு அவர் உருவ வணக்கத்தைக் கண்டித்து வெறுக்கும்படி செய்துள்ளார். இதுவும் மிகவும் பாராட்டத்தக்க, போற்றத்தக்க காரியமாகும் என்பதோடு, இவையெல்லாம் நம் மக்கள் பின்பற்றவேண்டிய ஒரு பெரிய படிப்பினை என்பேன்.

இந்தக் காரியங்களைத் தவிர மற்றும் மிக முக்கியமானதொன்றை நபி அவர்கள் சொல்லியிருக்கிறார். அவர் சொன்னவற்றிலே இது மிகவும் முக்கியமாய்க் கவனத்தில் வைக்கவேண்டிய காரியமாகும். என்ன? அவர் சொல்லுகிறார், 'நான் என்ன சொல்லி இருந்தாலும், அவற்றில் உனக்கு சந்தேகம் இருந்தால் நீ உன் பகுத்தறிவைக்கொண்டு ஆராய்ந்துபார்' என்பதாகச் சொல்லியிருக்கிறார்.

தோழர்களே! மீண்டும் நினைவுக்குக் கொண்டுவருகிறேன். நபி அவர்கள் 'மக்கள் சமுதாயத்துக்கு ஒரே கடவுள்; மக்கள் சமுதாயம் ஒரே குலம்; உருவ வழிபாட்டுக்கு மக்கள் ஆளாகக்கூடாது. நான் என்ன சொல்லி இருந்தாலும் அவைகளை உங்கள் பகுத்தறிவு கொண்டு ஆராய்ந்து பாருங்கள்' என்பதாகச் சொல்லி இருக்கிறார்.

கடைசியாக இன்னொன்றும் சொன்னார்: நான்தான் கடைசி நபி. எனக்குப் பின்னால் நபிகள் (தீர்க்கதரிசிகள்) தோன்றமாட்டார்கள் என்று. அதைப்பற்றி நீங்கள் எப்படிக் கருதினாலும், என்ன முடிவுக்கு வந்தாலும் இன்றைய வரையிலே அவருக்குப் பின்னால் இந்தத் துறைகளில் அவர் சொன்ன கொள்கை கருத்துக்களைவிட மேலானதாகச் சொல்லுவதற்கு எவரும் தோன்றவில்லை. அந்த அளவுக்கு மனித சமுதாயத்தின் எல்லா



பெங்களூரில் 1954-ல், டாக்டர். மல்லலசேகரா, பி. என். ராஜ்போஜ்
ஆகியோருடன் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள்

வாழ்வுத்துறைத்தன்மைகள்பற்றியும் உயர்ந்த தத்துவங்கள் கொண்ட கோட்பாடுகள் சொல்லிவிட்டார் நபி அவர்கள்.

ஏதோ பொருளாதாரத் துறையில் சில பெரியார்கள் சில நூறு வருடங்களுக்கு முன் தோன்றி, பல அரிய கருத்துக்களைப் பொருளாதாரத் துறையைப் பொறுத்த வரையில் சொல்லி இருக்கிறார்கள். தோழர் ஜீவானந்தம் அவர்கள் அதைப் பற்றியும் கூட நபி அவர்கள் சொல்லியிருக்கிறார் என்று சொல்லிவிட்டார். அதுவும் மிக மகிழ்ச்சிக்கு உரியது என்பதோடு, நபி அவர்கள் சொன்னதற்கு மேலாக இதுவரை யாரும் எந்த ஆஸ்திகனும் சொல்லவில்லை.

இந்த விழாவிலிருந்து நாம் என்ன பயன் பெற்றுக்கொள்ளவேண்டும் என்றால், நபி அவர்களின் இக்காரியங்களையும், கொள்கைகளையும் நம் மனத்தில் பதிய வைத்துக் கொண்டு, அந்தப்படி நடக்க நாமும் முயற்சி செய்ய வேண்டும்.

மற்றும், தங்கள் மத சம்பந்தமான கோட்பாடுகளில் அதை யொட்டிய காரியங்களில் முஸ்லிம்கள் மற்றவர்களையும் அழைத்து மற்றவர்களுடைய பாராட்டைப் பெறவேண்டும் என்று கருதுகிறார்களோ அதேபோல மற்ற மதக்காரர்களும் தங்கள் மத சம்பந்தப்பட்ட காரியங்களில் மற்றவர்களை அழைத்து அவர்களின் பாராட்டைப்பெற முயற்சிக்க வேண்டும். அப்பொழுதுதான் முன்னேற்றத்திற்கு வழிதோன்றும்.

[சென்னையில் 20-12-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 23-12-1953]

## 8. புத்தர் விழா

பெரியோர்களே! தோழர்களே!

சரித்திர சம்பந்தமாக எவராவது மனிதனில் கீழ்சாதி, மேல்சாதி ஏன் என்பதுபற்றிக் கேட்டாரா என்றால், புத்தர் ஒருவர்தான் கேட்டார். அவர் ஒரு இராஜாவின் மகன்; அவர் பலவற்றைப்பற்றிக் கேட்டார். 'அவன் ஏன் கிழவன்?', 'இவன் ஏன் வேலைக்காரன்?', 'இவனுக்கு ஏன் கண் குருடு?'—என்று கேட்டார். அதே புத்தர்தான் கேட்டார், 'இவன் ஏன் கீழ்சாதி?' என்று. 'அது கடவுளால் பிறப்பிக்கப்பட்டது' என்றனர். 'அப்படிக் கீழ்சாதியாய் பிறப்பித்த கடவுள் எங்கேயடா?' என்றார். ஆத்மா பற்றிக் கூறினார்கள். 'அது என்ன? அப்படி ஒன்று இருப்பதாகக் காணோமே' என்றார். அப்படி வேலை செய்தவரையே இந்நாட்டைவிட்டுத் துரத்தினார்களே!

புத்தர் ஜயந்தி என்பது ஸ்ரீராம நவமி, கோகுல அட்டமி—கிருஷ்ண ஜயந்தி, கந்த சஷ்டி என்பவைபோல 'புத்தர் ஜயந்தி' நாள் என்பதுமாகும்.

ஆனால் இராமன், கிருஷ்ணன், கந்தன் பிறப்பு, பிறந்தநாள் ஜயந்தி என்பவை அடியோடு கட்டுக் கதையும், கற்பனைக் களஞ்சியமும் ஆகும். ஏனெனில், அவர்கள் காலம், பிறந்த முறை, மற்றும் அவர்களது நடப்பு, அவர்கள் செய்த அற்புதம் அதிசயம் என்பவை யெல்லாம் ஆராய்ச்சிக்கும் பகுத்தறிவுக்கும் விஞ்ஞான முறைக்கும் சிறிதும் பொருத்தமற்றவையாகும். அன்றியும், அவை முழுவதும் ஒரு மதசம்பிரதாய சார்புடைத் தாகும் என்பதோடு சரித்திரத்திற்குச் சம்பந்தப்படாததுமாகும்.

'இந்து மதம்' அதாவது பார்ப்பன ஆதிக்க ஆரிய மதமும், சைவ, வைணவ புராணங்களும் இல்லாவிட்டால் இராமன், கிருஷ்ணன், கந்தன் ஆகியவர்களுக்கு உலகில் இடமேயில்லை.

இந்தியா தவிர, அதுவும் இந்துக்கள், அதிலும் ஆரிய அடிமைகள் தவிர்த்த மற்றெங்கும் மற்றெவரிடமும் இராம, கிருஷ்ண, கந்தன்கள் கிடையவே கிடையாது; சொன்னாலும் வழியலா வழியில் சிரிப்பார்கள்.

இராமன் எவனுக்கோ பிறந்து—தசரதன் தன் பிள்ளையென்று கொண்டதாக வால்மீகி கட்டிய கதையில் கூறப்பட்டிருக்கிறது. அதாவது, தசரதனுக்கு 60,000 (அறுபதாயிரம்) வயதிற்கப்புறம் குழந்தை வேண்டியிருந்ததால் ஆரிய முறைப்படி யாகம் செய்து, யாகப் புரோகிதர்களிடம் தன் மனைவிகளை ஒப்புவித்து, அவர்களால் கர்ப்பம் உண்டாக்கப்பட்டு, அந்த மனைவிகளைத் திருப்பி புரோகிதர்கள் தசரதரிடம் ஒப்புவித்ததாகவும், அதற்காக அவர்கள் சன்மானம் வாங்கிக் கொண்டதாகவும் இராமாயணக் கதை கூறுகின்றது. இந்த விவரம்—அதாவது வால்மீகி இராமாயணம் கூறுவதை சந்திரசேகரப் பாவலர் இராமாயண ஆராய்ச்சியிலும், மன்மதநாத தத்தர் அவர்கள் இராமாயணம் ஆங்கில மொழிபெயர்ப்பிலும் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

அதாவது, பண்டித மன்மதநாத தத்தர் பின்வருமாறு மொழிபெயர்த்து எழுதுகிறார்:

Kausalya with three strokes slew that horse experiencing great glee. Kousalya with an undisturbed heart passed one night with that horse. The Hotas, Adhwaryus and the Ugatas joined the king's wives.

இதன் பொருள் வருமாறு :

"கோசலை மூன்று வெட்டில் அக் குதிரையை மிக உற்சாகத்தோடு கொன்றாள். அவள் கலங்கா நெஞ்சோடு ஓர் நாளிரவு அக் குதிரையோடு கழித்தாள். ஹோதா, அக்வர்யு முதலிய ரித்விக்குகள் இராஜ பாரியைகளைப் புணர்ந்தார்கள்.

பண்டித வில்சன் துரைமகனார், 'வேதகால இந்து மதம்' என்ற நூலில் பின் வருமாறு எழுதுகிறதாகக் குறிக்கப்பட்டுள்ளது.

Kausalya is directed to be all night in closest contact with the dead horse in the morning when the queen is released from the disgusting and in fact, impossible contiguity dialogue is given in the Yajush and in the Ashvamedha Section of the Sathapatha Brahmana and as explained in the Sutras, as taking place between the queen and the females accompanying or attending upon her and the principal priests which in brief is in the highest degree both silly and obscene.

இதன் பொருள் வருமாறு :

கோசலை ஒரு இரவு முழுதும் செத்த குதிரையை நன்றாகத் தழுவிப் படுத்திருக்கச் செய்யப்பட்டாள். காலையில் இந்த அருவருப்பானதும்—உண்மையாகவே அசாத்தியமானதுமான அக் குதிரையின் தேக சம்பந்தத்தினின்றும் நீங்கிய உடனே யசுர் வேத, சதபத பிரமாண அசுவமேத அத்தியாயத்திலும் சூத்திரங்களிலும் விவரித்துள்ளபடி, இராசபத்தினிகளுக்கும் அவர்களைச் சூழ்ந்துள்ள பெண்களுக்கும் ரித்விக்குகளுக்கும் ஒரு சம்பாஷணை நடைபெற்றது. அது சுருக்கமானதாக இருந்தபோதிலும் சொல்லுவதற்கு மிகவும் அசிங்கிதமாகவும், அருவருப்பை உண்டாக்குவதாயும் இருக்கிறது.

தெலுங்கில் வால்மீகி இராமாயணத்தை மொழிபெயர்த்துள்ள பண்டித லட்சுமணச் சார்லு, தமது மொழிபெயர்ப்பில், பக்கம் 181-ல் யாகம் முடிந்தவுடன் நடத்துபவன் தனது மனைவியாரை குருக்களிடம் தட்சணையாக ஒப்புவிக்க வேண்டுமென்பதும், பின் பணம் பெற்றுக்கொண்டு அப் பெண்களைச் சொந்தக்காரனிடம் ஒப்புவிக்க வேண்டுமென்பதும் சாஸ்திர விதி என்றெழுதுகிறார்.

இந்தக் கற்பனைகளும் நடப்பிற்கு—சாத்தியத்திற்கு ஒவ்வாததாகவே காணப்படுகின்றன. கிருஷ்ணன் சங்கதியும் எப்படியெனில், கிருஷ்ணன் பிறப்பும் பிறந்த மாதிரியும்

—பிறந்த உடன் குழந்தைப் பருவத்தில் செய்த செய்கைகளும், பெரியவனானபின் செய்த செயல்களும், பாட்டிகள் குழந்தைகளுக்குக் கூறும் காட்டுமிராண்டிக் கற்பனைகள் போன்றவையேயாகும். இவைகளைக் கொண்டு பார்த்தால் கிருஷ்ணன் சங்கதி அஸ்திவாரத்திலிருந்தே புளுகுக் களஞ்சியத்தில் பட்டதாகும்.

கந்தன் சங்கதியோ இன்னமும் மோசமாகும். சிவனும் பார்வதியும் 300 தேவ வருஷம் புணர்ந்தும் வயிறு வாய்க்காமல் போனதோடு, தேவர்கள் பயந்து இனிமேல் புணரக்கூடாது என்று தேவர்கள் புணர்ச்சியைத் தடுத்து, புணர்ச்சியைக் கலைக்கச்செய்து அதனால் சிவன் வீரியம் (இந்திரியம்) பூமியில் ஒழுகி ஆறாக ஓட, கங்கையில் கிளையாகப் பிரிந்து விழுந்து அவை உயிர் பெற, அவைகளை ஒன்று சேர்த்து பெண்கள் பால் கொடுக்க, அந்த இந்திரியக் கிளைகள் ஆறும், ஆறு தலைகளுடன் பால் குடித்ததால், அந்த உரு ஒன்று சேர்க்கப்பட்டதில் ஆறுமுகமாயிற்றென்றும், அதனால் கந்தனுக்கு ஆறுமுகன் என்பதாகப் பெயர் ஏற்பட்டதென்றும் கந்தபுராணம், இராமாயணம், காஞ்சி புராணம் முதலிய கதைகள் கூறும்.

இவை தவிர, சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து ஒரு தீப்பொறி வெளியாகி—அது, கந்தனானான் என்றும் புராணங்கள் கூறும்.

இவை இப்படி இருந்தாலும் இராமன், கிருஷ்ணன், கந்தன்களின் பிறப்பும் அவைகளின் நடப்பும் கற்பனை என்பதும், அறிவு ஆராய்ச்சி விஞ்ஞானத்துக்கும் சரித்திரத்திற்கும் சம்பந்தப்படாததுமாகும் என்பதுமாத்திரம் யாராலும் மறுக்கப்படாததாகும்.

ஆனால், புத்தர் சங்கதி அப்படி அல்ல. அவர் சரித்திர உண்மைக்கு இலக்கானவர். அறிவு ஆராய்ச்சிக்குக் கட்டுப்பட்டவர் என்பது மாத்திரமல்லாமல், அறிவு ஆராய்ச்சிக்கு உருவாகவே விளங்கியவர். அவர் தன்னைப்பற்றிக் கூறியவைகளும், மற்றவர்களுக்குக் கூறியவைகளும் பெரிதும் மறுக்கமுடியாததும் அறிவாளிகளால் தவிர்க்க முடியாதவைகளுமாகும். புத்தரை, புத்தர் சரித்திரத் தொகுப்பை, அதன் உண்மையை உலகம் முழுவதும் எம் மதத்தினரும் ஏற்றுக்கொள்ளுவதோடு உலக உண்மைச் சரித்திரம் என்பவற்றில் அவை இடம் பெற்றிருக்கின்றன.

அவைமாத்திரமல்லாமல் பெருத்த அஞ்ஞான மதமாகிய இந்து மதம் என்பதே இன்று—ஏன், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே—புத்தரை ஒரு தெய்வ அவதாரமாகக் கொண்டாடும் தன்மையில் இருந்து வருவதோடு பார்ப்பன ஆதிக்க-ஆரிய ஆதிக்க அரசாங்கமாகிய இந்திய அரசாங்கம் புத்தர் மதத்தை (கொள்கைகளை) ஏற்றுக்கொண்டதுபோல் அறிகுறிகள் காட்டி புத்த ஜயந்திக்கு விடுமுறையும் விட்டிருக்கிறது என்றால், புத்தரைப் பற்றிய பெருமைபற்றி யாருக்கும் எடுத்துக் கூறவேண்டிய அவசியமிருக்காது.

இன்றைய தினம் நாமெல்லோரும், இங்கே புத்தருடைய பிறந்த தின விழாவைக் கொண்டாடுவதற்காகக் கூடியிருக்கிறோம். மற்ற மதங்களிலுள்ள நாயன்மார்கள் தெய்வீகப் புருஷர்கள் என்று சொல்லுபவர்களின் பிறந்தநாள் போல் புத்தர் பிறந்தநாள் ஒரு கொண்டாட்ட நாளல்ல. அந்தப்படி நாயன்மார்கள், தெய்வீகப் புருஷர்கள் என்பவர்களின் பிறந்த நாளில் என்ன நடக்கும் என்றால் அவரை வைத்துப் பூஜை செய்வார்கள்; அவருடைய பிறந்த நாள் திருநட்சத்திரம், 'இறந்தநாள் திருநட்சத்திரம் என்று பல சடங்குகள் செய்வார்கள்.

மற்றும் இன்று உலகிலுள்ள மதங்கள் எல்லாவற்றிலும் புராதன—காட்டுமிராண்டி காலத்திய மதம், 'இந்து மதம்' என்று சொல்லப்படும் ஆரிய மதமேயாகும். அதற்குப் பிறகு இந்த 2000 ஆண்டுகளாக ஏற்பட்ட மதங்கள் யாவும் இந்து மத சீர்திருத்தமாக ஏற்பட்ட மதங்களே தவிர்த்து பெரிதும் புதிய மதங்கள் அல்ல.

ஏனென்றால், ஒரு மதமென்றால்—ஒரு கடவுள், ஆத்மா, மோட்சம், நரகம், மேல் உலகம், கீழ் உலகம் முதலியவை கிடையாது என்பது மாத்திரமல்ல; அவை இருக்கவே நியாயம் இல்லை என்பதை விஞ்ஞான ரீதியில் உடைத்துத் தள்ளுகிறார்.

இதுதான் இனி உலகக் கொள்கையாக—மார்க்கமாக இருக்கவேண்டிய நிலையில் விளக்கியிருக்கிறார். மத விஷயத்தில் இதற்குமேல் புரட்சி செய்ய இனி யாரும் தோன்ற முடியாது.

வேறு பல மதங்கள்—கடவுள், ஆத்மா, மோட்சம், நரகம் தவிர்த்த மற்றப் போக்குகளில் விஞ்ஞானத்தைத் தொடுவதாகக் காணப்பட்டாலும், அவை கடவுள், மத, மோட்ச, நரகங்களைக் கண்மூடி நம்பவேண்டுமே ஒழிய, 'பகுத்தறிவு கொண்டு ஆராயக்கூடாது; விஞ்ஞானத்திற்குச் சம்பந்தப்படுத்தக்கூடாது' என்று பச்சையாகக் கூறுகின்றன.

புத்தர்தான்—பகுத்தறிவுக்கும், விஞ்ஞானத்திற்கும் புறம்பான எதையும் நான் சொல்வதானாலும் தள்ளிவிடு என்று சொல்லியே அந்த அவையடக்கத்தின்மீது எதையும் கூறுகிறார். . ஆகையால்தான், அதை கடவுள், மதத்துறையில் புரட்சி மார்க்கம், புரட்சிக் கருத்து, புரட்சி உபதேசம் என்கிறோம். உண்மையில் அறிவுக்கு மதிப்பளிப்பவர்கள் சிந்திக்க வேண்டிய கருத்துக்களைப் பிரச்சாரம் செய்வதேதான் புத்தர் ஜெயந்தி நாளின் கருத்து என்பதைப் பொதுமக்களுக்குத் தெரிவிக்கப்படுகிறது. திராவிடர் கழகத்தார் இதற்காகவே அண்மையில் ஒரு நாள் வைத்து இந்த நாளைக் கொண்டாடக் கருதி இருக்கிறார்கள் என்பதை இதனால் தெரிவித்துக்கொள்ளப்படுகிறது.

ஆனால், புத்தருடைய பிறந்தநாள் அப்படி அல்ல. புத்தர், 'நான் சொன்னதை நம்பினால்தான் மோட்சத்திற்குப் போவார்கள்; இல்லாவிட்டால் நரகத்திற்குத்தான் போவார்கள்' என்று சொன்னவரல்லர். புத்தர் அறிவுக்கு நல்லமுறையில் விளக்கம் கொடுத்தவர். நாமும், இப்பொழுது, 'புத்தர் அப்படி—இப்படிச் சொல்லியுள்ளார், ஆகவே நீங்கள் எல்லோரும் அந்தப்படி நடவுங்கள்' என்று சொல்லுவதற்காக இங்கே கூடவில்லை. இந்தக் காரியத்தில் புத்தர் சர்வ ஜாக்கிரதையாக—'உங்கள் அறிவுக்குச் சரி என்று பட்டால் செய்யுங்கள்' என்று சொன்னார். அறிவைக் கொண்டு எதையும் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்பதற்குப் புத்தர் பிரதானம் கொடுத்திருக்கிறார். புத்தரைப்பற்றி மேலும் விளக்கமாக சொல்ல வேண்டுமென்றால் அவர் அறிவுக்கு மிக்க சுதந்திரம் கொடுத்தவர் என்று சொல்லலாம்.

ஏதோ வழக்கத்தினால் புத்தரை வணங்குகிற தன்மை ஏற்பட்டுவிட்டது. இதனால் என்ன ஏற்படுகிறது என்றால் புத்தரது மதத்தைச் சார்ந்தவன் என்றாலேயே அவன் புத்தரை வணங்குகிறவன் என்பதாக ஆகிவிடுகின்றது. புத்தரது மதம் வைதிகமல்ல. அப்படி அது வைதிக முறையில் சில சமயங்களில் நடப்பதற்குக் காரணம்—அதை அறிமுகப்படுத்துகிறவர்கள் அப்படிச் செய்துவிடுகிறார்கள். இதனால் நான் புத்தரைப்பற்றி சாதாரணமாகப் பேசுவதாகக் கருதிவிடக் கூடாது. புத்தரது பிறந்த நாளில் அவரைப் பற்றிப் பேசுவது, அவர் அறிவுக்கு அளித்த உணர்ச்சிக்கு, சுதந்திரத்திற்கு என்று சொல்லுகின்றோம். புத்தரது கருத்தை மக்கள் என்னவாகக் கருதுகிறார்கள் என்றால்—அதை ஒரு மத சம்பிரதாயமாகக் கருதுகிறார்கள். அப்படிப்பட்ட முறையில் அதற்குச் சில உபகரணங்கள் ஏற்பட்டுவிட்டன.

ஆனால், புத்தரது கொள்கை அல்லது சம்பிரதாயம் என்பது அப்படிப்பட்டதல்ல. புத்தர் அறிவுக்கு ஆராய்ச்சிக்கு முழுச் சுதந்திரம் கொடுத்திருக்கிறார். ஆதலால்தான் புத்தருடைய உபதேசங்கள் என்று சொல்லப்படும் அவரது கருத்துக்களை நாமும் அலசி ஆராய்ந்து பார்த்துச் சொல்லும் உரிமை அதில் இருக்கின்றது. அவர் சொன்னது ஒவ்வொன்றைப்பற்றியும் 'நான் சொல்லுவதை, நான் சொல்லுகிறேன் என்பதற்காக ஒப்புக்

கொள்ளாதீர்கள் ! எதையும் உங்கள் புத்தியில் ஆராய்ந்து சரி என்று பட்டால்மாத்திரம் ஏற்றுக்கொள்ளுங்கள் !' என்று சொல்லியிருக்கிறார்.

[பெரம்பூரில் 17-5-1954-ல் சொற்பொழிவு—'விடுதலை' 26-5-1954]

இன்று பிறிதொரு இடத்தில் புத்த ஜெயந்தி விழா அறிக்கை வெளியிடப்பட்டிருக்கிறது. புத்தர் (ஜயந்தி எனும்) பிறந்த நாள் விழா, 1956 மே மாதம் 24, 25, 26, 27 தேதிகளில் கொண்டாடுவது என்று சென்னை புத்தஜயந்தி விழாக் கொண்டாட்டக் குழுவினரால் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. திராவிடர் கழகத்தாராகிய நாம் இவ்விழாவில் கலந்துகொள்ள வேண்டுமென்று விழாக் குழுவினரால் அழைக்கப்பட்ட அழைப்பை கழகச் சார்பாக முழுமனதோடு ஏற்றுக்கொண்டிருக்கிறேன். ஆதலால், திராவிடர் கழகத் தோழர்களும் மற்றும் எல்லா ஸ்தாபனத் தோழர்களும் 'புத்தர் பிறந்த நாள் 2500-வது ஆண்டு விழா', சென்னை உட்பட தமிழ்நாடு எங்கும் சிறப்பாய் நடைபெறவும், புத்தர்பிரான் அறிவுரைகள் மக்கள் யாவருடைய உள்ளத்திலும் பதியும்படியான பிரச்சாரம் செய்யவும் ஆன எல்லா விதமான முயற்சியும் செய்யவேண்டுமாய் வேண்டிக்கொள்ளுகிறேன். நான் அறிந்தவரை புத்தர் அறிவுரையின் முக்கியத்துவமானது :—

1. 'எதையும் உன் அறிவைக் கொண்டு நன்றாய் ஆராய்ந்து பார்'.

2. 'உன் அறிவுக்குச் சரி என்று தோன்றியவைகளையே ஏற்றுக்கொள்'.

3. 'உனக்கு விளங்காத தன்மையில் கடவுள், ஆத்மா, தேவர், மேல் உலகம், கீழ் உலகம், மோட்சம், நரகம் என்றும் ; பிராமணன், சூத்திரன்–பஞ்சமன் என்றும் சொல்லப்படும் வெறும் கற்பனைச் சொற்கள் முதலியவைகளை நம்பாதே'. உலகில் உள்ள ஜீவன்களில் எல்லாம் மனிதன் எப்பொருளையும் ஆராய்ந்து பகுத்தறிந்து உணரும் உயர்ந்த அறிவுள்ள ஜீவன் ஆவான்—என்பதே ஆகும்.

'கடவுள் சொன்னார் என்றும், வேத சாஸ்திரம் சொல்லுகிறது என்றும், மகான் சொன்னது என்றும், வெகுபேர் பின்பற்றுகிறார்கள் என்றும், வெகுநாளாக நடந்துவருகிறது என்றும் கருதி எதையும் நம்பிவிடாதே ; உன் ஆராய்ச்சி அறிவு என்ன சொல்லுகிறதோ அதை நம்பு' என்றும் சொல்லி இருக்கிறார்.

[தலையங்கம்—'விடுதலை' 19-4-1956]

## 9. படத்திறப்பு

ஆசிரியப் பெருமக்களே ! மாணவ ஆசிரியர்களே !

ஒருவரைப் பெருமைப் படுத்துவதற்கென்றே ஒருவருடைய படத்திறப்போ அல்லது சிலைத் திறப்போ நடத்தப்படுமானால் அதை எல்லோருக்கும் நடத்தி, எல்லோரையும் பெருமைப்படுத்தலாம். ஆனால், அந்த நோக்கத்தின்மீது இதுபோன்ற நிகழ்ச்சி நடத்தப்படுவதில்லை. யார் ஒருவர் மக்கள் நன்மைக்குப் பாடுபடுபவராகவும், ஒழுக்கத்தில் சிறந்து தன்னலமற்ற சேவையில் ஈடுபட்டும் விளங்குகிறாரோ அவர் மற்ற மக்கள் யாவரும் அப் பண்புகளைப் பின்பற்றுவதற்கு எடுத்துக்காட்டாக இருக்கிறார். அப்பேர்ப்பட்டவரை மக்கள் உணரும்படி செய்யவேண்டும். அவரின் உயரிய பண்புகளையும், சேவைகளையும் மற்ற மக்களும் பின்பற்றி நடக்கும் வண்ணம் செய்ய வேண்டும். அதற்கென்று அவரின் குணங்களை மக்கள் பார்த்து, தமது வாழ்க்கையில் பின்பற்றிவந்த தகாத காரியங்களை விட்டொழித்துத் திருந்தி வாழவேண்டும் என்பதற்காகவே படத்திறப்பும், சிலைத் திறப்புமான நிகழ்ச்சிகள் நடத்தப்படுகின்றன. உருவ வழிபாடு வேறு—பண்பு வழிபாடு வேறு,

பலர் எங்களை 'உங்களுக்குத்தான் உருவ வழிபாடு கிடையாதே. இதை மட்டும் பின் பற்றலாமா?' என்று கேட்கலாம். ஆனால், உருவ வழிபாட்டுக்கென்று இது நடத்தப் படுவதில்லை. இது குண வழிபாடு, பண்பு வழிபாடு என்பதை அடிப்படையாகக் கொண்டது. ஒருவரின் குணத்தையும், பண்பையும் மக்கள் அறிந்து அதன்படி நடக்க வேண்டும் என்பதற்காக நடத்தப்படுவதாகும்.

[திருச்சி பெரியார் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் 17-3-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 21-3-1956]

## 10. என் பிறந்த நாள் விழா

தோழர்களே!

பிறந்த நாள் விழா என்பது முதன் முதலில் துவக்கப்பட்டது எல்லாம்—பொய், பித்தலாட்டங்களை அடிப்படையாக வைத்துத்தான். எப்படி எனில் இதுவரை கடவுள் களின் பிறந்த நாள் என்ற பெயரால்தான் நம் நாட்டில் விழாக் கொண்டாடுவது வழக்கம். உண்மையிலேயே இந்தக் கடவுள்கள் எல்லாம் இருந்தார்களா? பிறந்தார்களா? என்றால் அதுதானில்லை.

அப்படி அவர்கள் கொண்டாடியதன் நோக்கம்—அதை வைத்து மக்களிடத்தில் பக்திப் பிரச்சாரத்தைச் செய்யலாம் என்பதற்காகத்தான்; அதில் வெற்றியும் பெற்றார்கள். அடுத்து நாயன்மார், ஆழ்வார் ஆகியவர்களின் பிறந்த நாளைக் கொண்டாடி வந்தார்கள்; அவர்கள் எல்லாம் கடைந்தெடுத்த பித்தலாட்டக்காரர்கள். அவர்கள் செய்யாத காரியங் களை எல்லாம் இட்டுக்கட்டிச் சொல்லி அவர்களுக்குப் பெருமையை உண்டாக்கி அதன் மூலம் கடவுள்களைப் புதுப்பிக்க ஏற்பாடு செய்து விட்டனர்.

எந்த அயோக்கியத்தனமான பொய்யை எல்லாம் சொல்லியும் கடவுள் பக்தியை உண்டாக்கவே இவற்றையெல்லாம் செய்தனர்.

நம் இயக்கம் தோன்றி அறிவுப் பிரச்சாரம் செய்ததற்குப் பின்னால்தான்—உண்மை யிலேயே பிறந்த மனிதர்கட்கு, மனிதத் தொண்டு செய்த பெரியார்கட்குப் பிறந்த நாள் விழாக் கொண்டாடும் தன்மை ஏற்பட்டது.

எனக்குப் பிறந்த நாள் விழாக் கொண்டாடுவதன் நோக்கம், கடவுளை ஒழிப்ப தாகும். இதைப் போன்ற கருத்துக்களில் இப்போது மக்கள் உற்சாகம் காட்டுகிறார்கள். நாடெங்கும் என் பிறந்த நாள் விழாவைக் கொண்டாடுகிறார்கள் என்றால் நோக்கம் அதுதான்.

மற்றவர்கட்கு விழா நடக்கிறது என்றால் அது சாதி வளர்க்கவும் கடவுள் பக்தியை வளர்க்கவும் பயன்படுமே தவிர, உருப்படியாக சமுதாய வளர்ச்சிக்கு எள்ளளவும் பயன் படாதே. எங்களுக்கு விழா நடக்கிறது என்றால், அவற்றிற்கு மாறுபட்ட கொள்கையைப் பிரச்சாரம் செய்வதால்தான் ஆகும்.

[மாயூரத்தில் 22-9-1972-ல் சொற்பொழிவு—'விடுதலை' 9-10-1972]

# 7. வாழ்க்கை நெறி

## 1. திராவிடர்க்கு நெறி உண்டா?

திராவிடர்களின் சமயம், அதாவது மதம் என்பது பெயரளவில் இந்துமதம் என்று சொல்லப்பட்டாலும், அதற்கு எவ்விதப் பொருளும் ஆதாரமும் இல்லை என்றாலும் உண்மையில், திராவிடர்கள் 'மதம்' என்பது ஆரிய புராண மதமே. கிறித்தவர்கள், இஸ்லாமியர்கள் முதலானவர்களுக்கும் மதம் உண்டு என்றால் அவைகள் 'பைபிள்', 'குரான்' மதம் என்றெல்லாம் பெரிதும் சொல்லப்படுமே ஒழிய வேறுவிதமாய் இருப்பதில்லை. ஆனால், திராவிடர்கள் தங்களை இந்து மதஸ்தர்கள் என்று சொல்லிக்கொண்டாலும் அப்படிச் சொல்லிக்கொள்கிறவர்கள் அத்தனை பேர்களும், ஆரிய மதப் புராணக் காரர்களாகத்தான் இருந்தும், நடந்தும் வருகிறர்களே தவிர—தங்களுக்கு என்று வேதமோ, சாஸ்திரமோ இல்லாதவர்களாகவே இருந்து வருகிறார்கள்.

திராவிடர்களுக்கு வேதம் கிடையாது; இருப்பதாக சொல்லப்படுமானால் அது, திராவிடர்களுக்குச் சம்பந்தப்பட்டதில்லை என்றும், திராவிடர்கள் பார்க்கவோ தெரிந்து கொள்ளவோ கூடியது அல்லவென்றும்தான் சொல்லப்படுமே ஒழிய, திராவிடர்களுக்குரிய வேதம் கிடையாது. 'திராவிட வேதம்' என்று எதையாவது சொல்லப்படுமானால், அது திராவிடர்கள் பின்பற்றுகிற, நடத்தப்படுகிற தன்மைக்கும் நடப்புக்கும் கட்டுப்பட்டதுமல்ல; பின்பற்றச் செய்வதுமல்ல.

திராவிடர்களுக்கு ஏதாவது சாஸ்திரங்கள் இருக்குமானால், அவை திராவிடர்கள் இன்ன மாதிரியாய் நடத்தப்படவேண்டியவர்கள் என்றும், நடத்தப்பட வேண்டும் என்றும்; திராவிடர் அல்லாத மற்றவர்களுக்கு அதிகாரம் அளிப்பதும் ஆக்கினை இடச்செய்வதுமான சாஸ்திரங்களே ஒழிய—திராவிடர்கள் தாங்களாக நடந்துகொள்ளுவதற்கு ஏற்றதான சாஸ்திரங்கள் அல்ல. ஆகவே, திராவிடர்களாகிய நாம் சமயம், சாஸ்திரம், வேதம் ஆகிய எவையுமில்லாத ஒரு நிபந்தனையற்ற—திக்கற்ற அடிமை சமுதாயமாக இருந்துவருகிற ஒரு இழிவான தாக்கப்பட்ட சமுதாயஸ்தர்களேயாவோம். இந்தப்படியான இழிவை நிலை நிறுத்தவும் திராவிடர்கள் தாங்களே அந்த இழிவைச் சிறிது நேரமாகிலும் இறக்கி வைக்காமல் சதா சுமந்துகொண்டே இருக்கச் செய்வதற்குமாக ஆரியர்களால் ஏற்படுத்தப்பட்ட புராணங்களைப் பின்பற்றி நடப்பவர்களாக—இருப்பவர்களாகவே இருந்துவருகிறோம்.

திராவிடர்—ஆரியர் என்கின்றதான (தேவர்—அசுரர்) இரு இனங்களைக் குறிப்பிடுவதும்—திராவிடர்களை ஆரியர்கள் இழிவுபடுத்தி, அடிமைப்படுத்தி, கீழ்மைப்படுத்திக் கொண்டதாகக் கற்பனைச் சித்திரங்கள் கொண்டதும் அல்லாமல், மற்றபடி புராணங்களைப் பற்றிச் சொல்லவோ, அதைப் பின்பற்றவோ புராணங்களில் என்ன இருக்கிறது?

'தேவர்களை அசுரர்கள் தொல்லைப்படுத்தினார்கள். சிவன், விஷ்ணு என்கின்ற கடவுள்கள் தோன்றி அசுரர்களை வெற்றி கொண்டு தேவர்களுக்கு அடிமையாக்கிக் கொடுத்து, தேவர்களைக் காப்பாற்றினார்கள்' என்கின்ற கற்பனைக் காரணங்களுக்காக இல்லாமல்—மற்றபடி மனிதர்களுக்கு வேண்டியதான அறிவோ, ஒழுக்கமோ, நீதியோ, நாணயமோ எந்தப் புராணங்களிலாவது கடுகளவு காணமுடியுமா?

அப்படிப்பட்ட புராணங்களில் காணப்படும் நடப்புகளைக் கொண்டாடுவதும், அவைகளில் சொல்லப்பட்டபடி நடப்பதுந்தான் இன்று திராவிடர்களின் சமயமாக, நடப்பாகவே இருக்கிறது என்பதை எடுத்துக்காட்டவே இவ்வளவும் சொன்னோம்.

[தலையங்கம்—'குடிஅரசு' 12-10-1946]

## 2. தமிழர்க்கு நெறி உண்டா?

தோழர்களே! தாய்மார்களே!

இலக்கியம் படித்தவன் பழங்காலப் புலவன் என்ன சொன்னான், இலக்கியம் என்ன சொல்லுகிறது என்று பார்ப்பானே ஒழிய, அவைகளுக்கு அப்புக் கட்டிப் பேசுவானே ஒழிய, வேறு புதுமையில்—அறிவு ஆராய்ச்சிக்கு ஏற்றவற்றில் தன் புத்தியைச் செலுத்த மாட்டான். அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் படிப்பு அப்படிப்பட்டது.

சிலப்பதிகாரத்தைப்பற்றி, கண்ணகியைப் பற்றிப் பெரியதாகப் புகழ்வார்கள். அந்தக் கண்ணகியைப்போல் வேறு முட்டாள் பெண்பிள்ளையைக் காணவே முடியாது. அந்தக் கண்ணகியைப் புகழ்வதும் தமிழச்சிக்கு உதாரணம் காட்டுவதும் தமிழர் சமுதாயத்துக்கு எவ்வளவு இழுக்கு தெரியுமா! கோவலன் அவளைக் கல்யாணம் பண்ணி விட்டுவிட்டு, மாதவி என்ற தாசி அழகாய் இருக்கின்றாள் என்று அவள் வீட்டிலேயே போய் உட்கார்ந்துகொண்டு, கண்ணகி வீட்டுக்கு வரவே இல்லையாம். அதற்காக அவள் பூ முடித்துக்கொள்ளவில்லையாம்; பாயில் படுக்கவில்லையாம். அவன் அயோக்கியத் தனத்துக்கு, அவன் கேட்டு அனுப்பும்போதெல்லாம் நகைகளைக் கழற்றி அனுப்பிக் கொண்டே இருந்தாளாம். இது எவ்வளவு முட்டாள்தனம்! இந்தச் சிலப்பதிகாரம்போல் வேறு அழுக்கு மூட்டை இலக்கியம் இல்லவே இல்லை.

இதனைத் துணிவோடு கண்டித்து உண்மையினைச் சொல்ல நம் புலவர்களுக்குத் துணிவும் இல்லை; அவர்கள் அறிவு அப்படியெல்லாம் எண்ணத்தோன்றாது. சிலப்பதி காரமோ ஒரு கற்பனைக்கதை. கண்ணகியும் ஒரு கற்பனைப் பெண்பிள்ளை. நூல் முழுதும் மடத்தனம்–புளுகு! இப்படியா தமிழனுடைய வாழ்க்கைக்கு உதாரணம் எடுத்துக் காட்டுவது? புலவர்கள், பாவம்—இதில் ஊறியவர்கள் என்ன செய்வார்கள்? இதை நாட்டில் வைத்திருக்கலாமா? வயிற்றுப் பிழைப்புக்காக—நம் மேடையில் அலங்காரமாகப் பேச வேண்டுமானால் இது பயன்படும்; காரியத்திற்குப் பயன்படுமா? இந்த இலக்கியம் பூராவும் மூடநம்பிக்கை, பார்ப்பன உணர்ச்சிமிகுந்து காணப்படுவது. இந்த சிலப்பதிகாரத்தையோ கண்ணகியையோ எடுத்துப் பேசுவதாயிருந்தால்—கண்டித்துப் பேசவேண்டுமானால், எடுத்துக்கொள்ளலாம்; ஒழுக்கம், அறிவுக்கு எடுத்துப் பேசமுடியாது.

நம் புலவர்கள் தொல்காப்பியத்தைப்பற்றி அது பழமையான நூல்; மிகச்சிறந்தது என்று பேசுவார்கள். இருக்கின்ற நூல்களுக்கு எல்லாம் முந்தியது தொல்காப்பியம்; 2500, 3000 ஆண்டுகளுக்கு முந்தியது என்று பெருமை பாராட்டுவார்கள்.

இந்தத் தொல்காப்பியங்கூட பார்ப்பனர் தென்னாட்டில் ஆதிக்கம் வகிக்கத் தலைப் பட்ட பிறகுதான் எழுதப்பட்டதாகும். இதிலும் ஆரியக்கோட்பாடுகள் புகுந்து இருக் கின்றன. இதிலும், 'மேலோர் மூவர்' கீழோர்—நாம் என்று கூறப்படுகிறது. இந்த 'மேலோர் மூவர்க்கும்' தான் ஆதியில் கரணங்கள் இருந்து—பிற்காலத்தில்தான் கீழோ ராகிய நமக்கு வந்தன என்று கூறுகின்றது.

"மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க்கு ஆகிய காலமும் உண்டே" என்று கூறுகின்றது.

எனவே, தமிழன் இன்றைய நிலையில் தனது வாழ்க்கைக்குத் தேவையான கருத்துக் கள் என்று தெரிந்துகொள்ளத் தக்க கருத்துக்களைக் கொண்ட தமிழ்நூல் ஒன்றுகூட இன்று நமக்கில்லை.

மேலை நாடுகளிலுள்ள புலவர்கள் எல்லாம் அந்தந்த நாட்டு இலக்கிய வளர்ச்சிக்காக நூல்கள் இயற்றி, அந்தந்த நாட்டு மக்களை எல்லாம் முன்னேற்றப் பாதைக்கு அழைத்துச் செல்லுகின்றனர்.

ஆனால், நம்நாட்டுப் புலவர்களோ அப்படி அல்லர். நம்மக்களை எவ்வளவு தூரம் பின்னுக்கு இழுத்துச்சென்று—நம் மக்களைச் சிந்திக்கச் செய்யாமல் காட்டுமிராண்டிகளாக ஆக்க முடியுமோ, அந்த வேலையைச் செய்பவர்களாகவே இருக்கிறார்கள்.

[புதுக்கோட்டையில், 16-3-1960-ல் திருமணத்தில் தலைமையுரை—'விடுதலை' 28-3-1960]

## 3. புத்தம்

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

புத்த மதத்திற்குக் கடவுள் இல்லை; ஆத்மா இல்லை; நித்தியமொன்றுமில்லை என்கின்ற கொள்கைகள் இருக்கின்றன என்று சொல்லுகின்றார்கள்; இது புத்தரால் சொல்லப்பட்டது என்றும் சொல்லுகிறார்கள். இதை உண்மை என்றே வைத்துக் கொள்ளுவோம்.

இந்தக் கொள்கைகளை—புத்தர் சொன்னார் என்பதற்காக, புத்திக்குப் பட்டாலும் படாவிட்டாலும், பவுத்தர்கள் என்பவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டியவர்களாகின்றார்கள். இப்படியேதான் மற்ற மதக்காரர்களும் கடவுள், ஆத்மா நித்தியப் பொருள் உண்டு; மனிதன் இறந்த பிறகு கடவுளால் விசாரிக்கப்பட்டு, அவன் செய்கைக்குத் தகுந்தபடி மோட்சம், நரகம் (சன்மானம், தண்டனை) ஆகியவைகள் கடவுளால் கொடுக்கப்படுவது உண்டு என்பன போன்ற பல செய்திகளை நம்பிக்கொண்டிருக்கிறார்கள். இந்த இரண்டு கூட்டத்தார்களும் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களைத் தங்கள் தங்கள் பகுத்தறிவு, ஆராய்ச்சி, யுக்தி அனுபவம் ஆகியவைகள் காரணமாகக் கொண்டிருக்கிறார்கள் என்று ஏற்படுவதானால் இருதிறத்தாரும் சுயமரியாதை இயக்கக்காரர்களேயாவர்கள்.

ஏனெனில், கண்மூடித்தனமாய்—முன்னோர் வாக்கு என்பதாக அல்லாமல், தங்கள் தங்கள் அறிவு ஆராய்ச்சியின் பலனாய் ஏற்பட்ட அபிப்பிராயம் என்று சொல்லுகின்றவர்களாய் இருக்கின்றார்கள்; ஆதலால் அவர்கள் சுயமரியாதைக்காரர்கள் ஆகின்றார்கள்.

உதாரணமாக, புத்த மதத்தினன் என்பவன் ஒருவன் தனக்குக் கடவுள் இல்லை என்று வாயால் சொல்லிக்கொண்டு, காரண காரியங்களுக்கு ஆதாரம் என்ன என்பதை அறியாமல் சந்தேகப்பட்டுக் கொண்டிருப்பானானால் அவன் தன்னைப் புத்த மதத்தான் என்று சொல்லிக்கொள்ள முடியவே முடியாது. அது போலவே, ஒரு இந்துவோ, இஸ்லாமானவரோ, கிறித்தவரோ கடவுள் உண்டு என்று கூறுகின்ற மதக்காரராக இருந்து கொண்டு, நடப்பில் தங்கள் காரியங்களுக்கும், அவற்றின் பயன்களுக்கும் தங்களைப் பொறுப்பாக்கிக்கொண்டு, தங்கள் காரியங்களுக்குப் பின்னால் பயன் உண்டு என்கின்ற கொள்கையையும் நம்பிக்கொண்டு அதற்குச் சிறிதும் கட்டுப்படாமல் நடந்துகொண்டும் இருக்கின்ற ஒருவன், தன்னைக் கடவுள் நம்பிக்கைக்காரன் என்றும்—தனது ஆத்மா தண்டனையையும் சன்மானத்தையும் அடையக்கூடியது என்றும் நம்பிக்கொண்டிருக்கின்றவனாக இருக்கமாட்டான். ஆதலால், இந்த இரண்டு கூட்டத்தார்களும் சுயமரியாதைக்காரர்கள் அல்லர்.

ஏனெனில், அவர்களுடைய அறிவுக்கும் அனுபவத்திற்கும் விரோதமான நம்பிக்கையை உடையவர்களாக இருக்கின்றார்கள். ஆதலால், இவ்விரு கூட்டத்தாரிலும் சுயமரியாதைக்காரர்கள் என்பவர்கள் தங்களுக்குத் தோன்றியவைகளும், தாங்கள் கண்ட உண்மைகளும்—முன்னோர் கூற்றுக்கு ஒத்திருந்தால் மாத்திரம் முன்னோர் கூற்றுக்கு ஆதரவாக எடுத்துக்கொள்ள பாத்தியமுடையவர்களாவார்கள். அப்படிக்கில்லாமல் முன்னோர் கூற்றுக்குத் தாங்களே உண்மையைப் பொருத்துகின்றவர்களும்—அல்லது

அதற்கு ஆதரவாகத் தங்களது உண்மை இருக்கின்றது என்று கருதுகின்றவர்களும் சுயமரியாதைக்காரர்களாக மாட்டார்கள்.

ஆகையால், நீங்கள் எப்படிப்பட்ட கொள்கையை உடையவர்களாக இருந்தாலும், அதில் எவ்வளவு உண்மை இருப்பதாக இருந்தாலும், அதை நீங்கள் பிரத்தியட்சத்தில் தெளிவுபடுத்திக்கொண்டீர்களா? அனுபவத்தில் சரிப்பட்டு வருகின்றதா என்பதைப் பூரணமாய் அறிந்து கொண்டவர்கள் என்பதைப் பொறுத்தும், அவை உங்களுடைய சொந்த அபிப்பிராயத்தின்மீது நம்புகின்றீர்களா? அல்லது அந்தக் கொள்கைகளைச் சொன்ன மதத் தலைவர்கள் சொன்னதற்காக நம்புகிறீர்களா என்பதைப் பொறுத்துமேதான் உங்கள் மதத்திற்கோ கொள்கைக்கோ மதிப்புக் கிடைக்கும்.

[சென்னை மவுண்ட்ரோடிலுள்ள புத்தமத சங்கத்தில் 22-3-1931-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 29-3-1931]

## 4. புத்தரும் நாமும்

தோழர்களே!

புத்தர் மாநாடு என்பதாக ஈரோட்டில் போனவாரம் ஏன் ஒரு மாநாடு கூட்டினோம்? நாம் எல்லோரும் புத்தர்களாக ஆவதற்கா? அல்லது மக்களை, 'இந்த மதத்தை விட்டு புத்த மதத்துக்குப் போங்கள்' என்று சொல்லுவதற்கு ஆகவா? இல்லை. பின் எதற்கு என்றால், இன்றையதினம் நாம் எவையெவைகளை நம்முடைய கொள்கைகளாகச் சொல்லி, எவையெவைகளை நமக்கு ஏற்றதல்ல எனக் கருதி அழிக்கவேண்டும்—ஒழிக்க வேண்டும் என்று சொல்லி வருகிறோமோ அந்தக் காரியங்களுக்குப் புத்தருடைய தத்துவங்களும், உபதேசங்களும், கொள்கைகளும் மிகவும் பயன்படுகின்றன என்பதனாலேயே ஆகும். அதாவது, இன்றைய தினம் நம்மை அடிமைப்படுத்தி நடத்தி வருவதற்கான ஆதாரங்களாயுள்ள கடவுள், மத, சாஸ்திர, புராண, இதிகாசங்கள் ஒழிப்பு வேலைக்கு, புத்தர் சொன்னவைகள் மிகவும் ஆதரவளிக்கும்.

எப்படி என்றால், இன்றையதினம் நாம் சொல்லுகிற கொள்கைகள் எவையெவையோ அந்தக் கொள்கைகளைப் புத்தரும் 2000 ஆண்டுகட்கு முற்பட்ட காலத்திலேயே, இந்தத் தன்மையிலேயே சொல்லியிருக்கிறார் என்பதாக—அதாவது நாம் சொல்லுகிற கொள்கைகள் அவர் சொல்லிலும் இருக்கின்றன என்று ஒரு மேற்கோளாய் எடுத்துக்காட்டுவதற்காகப் பயன்படும். சாதாரணமாக சுயமரியாதை இயக்கத்தின் கொள்கைகளைச் சொல்லுகிற போது அதை யார் சொல்லுகிறார் என்றால் 'சாதாரண ஒரு இராமசாமி சொல்லுகிறான்' என்கிறபோது, 'இராமசாமியைவிட கீதை பெரிது; கீதையைவிட இவன் அறிவாளியாக்கும்?' என்பார்கள். அப்படிச் சொல்லுகிறவர்களுக்கு, 'இராமசாமி மட்டும் சொல்லவில்லை; நீங்கள் பத்தாவது அவதாரம் என்கிற புத்தரும்—இராமசாமி சொல்லுகிறதைத்தான் சொல்லியிருக்கிறார்' என்றால் எவன் அதை எதிர்க்க வரமுடியும்?

சாதாரணமாக, இன்று புத்தரை இந்துக்கள் என்பவர்களில் எல்லோரும் ஒத்துக் கொள்ளுகிறார்கள்; போற்றுகிறார்கள். புத்தக் கொள்கைக்காரர்களை எவ்வளவோ கொடுமைப்படுத்தி, அவர்கள் நிலையங்களுக்குத் தீ வைத்துக் கொளுத்தியும், புத்தர்களை அடித்து உதைத்துக் கழுவிலேற்றிச் சித்திரவதை செய்தும், மிஞ்சியவர்களைப் படகிலேற்றிக் கடலில் ஓட்டிவிட்டும்—ஆக இப்படிப் பலவிதமான கொடுமைகளைப் பார்ப்பனர்கள் இந்துமதம் என்பதன் பேரால் புத்தர்களுக்கு எதிராகச் செய்தும், புத்தர் பெருமையை ஒழிக்கமுடியாமல் போனதுடன்—இப்போது புத்தரை மகாவிஷ்ணுவின் பத்தாவது அவதாரம் என்றும், இந்து மதத்தின்—சைவம்-வைணவம் போன்ற உட்பிரிவு மதமே புத்தமதக் கொள்கை என்பதாகவும் ஆக்கிக்கொண்டு புத்தரை ஒப்புக்கொண்டார்கள் சரியாகவோ, தவறாகவோ.

அதுபோலவே, நம் சர்க்கார் என்பதும் புத்தரை ஒப்புக்கொண்டதோடு அவரது கோட்பாடுகள், கொள்கைகளுக்குச் சட்டப்படி மதிப்புக் கொடுத்து ஒப்புக்கொண்டிருக்கிறது. அதாவது புத்தருடைய சின்னமான சக்கரம் இன்று நாட்டுக்கொடி என்பதிலே வைக்கப்பட்டுள்ளது; தர்ம சக்கரம் என்கிற பெயரால், அதுபோலவே இந்திய சர்க்காரின் சின்னமாக புத்த அசோக ஸ்தூபிச் சின்னம் வைக்கப்பட்டுள்ளது. அதோடு புத்தர் பிறந்தநாள் என்கிற பேரால் சர்க்காரால் பொது விடுமுறையும் விடப்படுகிறது. இவ்வளவு தூரம் இதையெல்லாம் செய்கிறபோது இந்த சர்க்காரும் புத்தரது கொள்கையை ஏற்றுக் கொண்டது என்பதாகத்தானே அர்த்தம்! சர்க்காரும் ஒப்புக்கொண்டுள்ளது; இந்து மதஸ்தர்கள் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

அப்படி ஒப்புக்கொள்ளப்பட்டவரின் பேரால்—நாம் இன்று சொல்லுகிற கொள்கைகள் என்பவைகள் அவருடைய உபதேசத்திலும் இருக்கின்றன. அதுவும், நமக்கு எப்படி இந்தக் கொள்கைகள்தாம் இலட்சியமோ, அதேபோல அவரும் இந்தக் கொள்கைகளையே இலட்சியமாகக்கொண்டு சொல்லி வந்தார். ஆதலால், அந்தப்படியான அவரை நீங்கள் ஒப்புக்கொண்டுள்ளீர்கள் என்பதாகக் காட்டிச் சொல்லமுடியும். எப்போதும், நான் சொல்லுகிறேன் என்பதைவிட, நான் மட்டும் சொல்லவில்லை; நமக்குப் பெரியவர்கள் எல்லாம் இப்படித்தான் சொல்லுகிறார்கள் என்று சொல்லுவதிலே கொஞ்சம் பலம் அதிகமல்லவா? ஆதலால்தான் இந்தப்படிச் சொல்லுவதன் மூலம் பார்ப்பனர்கள், காங்கிரசுக் காரர்கள், பண்டார சந்நிதிகள், பாஷாண்டிகள், ஆண்டிகள் போன்றவர்கள் நம்மைக் குறைகூற முடியாது.

இதைப் போலவேதான், சுமார் 6 ஆண்டுகளுக்கு முன் 'வள்ளுவர் குறள் மாநாடு' கூட்டினோம். அன்றும் இதையே சொன்னேன். அப்போது பல பார்ப்பனர்களும், தமிழ்ப் பண்டிதர்களும், 'இதிலும் கைவைத்து விட்டானே!' என்றார்கள். நாம் குறளை எடுத்துக்கொள்ளுவதற்கு முன்னால் குறளுக்கு பார்ப்பன ஆதரிப்பு விளக்கமும், பாஷ்யமும் பார்ப்பனர்களாலும் அவர்களுடைய அடிமைகளாலும் கொடுக்கப்பட்டு—குறளின் உண்மைக் கருத்துக்கள், கொள்கைகள் மறைக்கப்பட்டு வந்தன. குறள் நம் கைக்கு வந்தவுடன் மக்களுக்கு உண்மை தெரிந்து இன்று பல மக்களாலும் குறளின் உண்மைத் தத்துவத்தைக் காண முடிந்தது; நாடெங்கும் குறள் சங்கமும், கழகமும், கொள்கையும் பரவுவதற்கு முடிந்தது. அது போலவேதான், இன்று நாம் 'புத்தக் கொள்கைப் பிரச்சார மாநாடு' கூட்டுகிறபோது பலர் பேசுகிறார்கள். 'இந்த இராமசாமி இதிலும் நுழைந்துவிட்டானே!' என்பதாக.

வள்ளுவரை ஆரிய மதத்தோடு சேர்த்துக்கொண்டு எப்படி அவர் மறைக்கப்பட்டு வந்தாரோ அப்படி புத்தரையும் பார்ப்பனர் மறைத்து வந்ததை வெட்ட வெளிச்சமாக்குகிறோமே என்கின்ற ஆத்திரத்தின் காரணமாகப் பார்ப்பனர் கண்டபடிப் பேசுகிறார்கள். நமக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. மேலெல்லாம் மலம் பூசிக் கொண்டு திரிபவன் மற்றொருவனைப் பார்த்து, 'உன்மேல் கெட்ட நாற்றம் அடிக்கிறது' என்பதுபோல்தான் அது.

தோழர்களே! புத்தமதம், அல்லது புத்தக் கொள்கை என்று சொன்னால் அது புத்தருக்குமட்டுமே சொந்தமான கொள்கை அல்ல. அது அறிவுக்குச் சொந்தமான கொள்கை. அறிவுதான் குரு என்றே அழுத்தமாகக் கூறியிருக்கிறார் புத்தர். 'உன்னுடைய அறிவு என்ன சொல்லுகிறதோ அந்தப்படி நட' 'அவர் சொன்னார், இவர் சொன்னார், இவ்வளவு பெரியவர் சொன்னார்; அதனால்தான் இப்படி நடக்கிறேன்' என்பது கூடாது. 'நான் சொன்னாலும் சரியென்றுபட்டால் மாத்திரம் ஏற்றுக்கொள்' என்று, அறிவுக்கு உரிமைகொடுத்தே புத்தர் எதையும் சொல்லியிருக்கிறார். அதுமாத்திரமல்லாமல் 'கடவுள் இருக்கிறாரோ இல்லையோ அதைப்பற்றி விவகாரம், கவலை எனக்கு வேண்டுவதில்லை.

ஆனால் எதற்காகக் கடவுள் என்பதாக இருக்கவேண்டும்? உயிர்கள் பிறப்பது இப்படி; அந்த உயிர்களின் வாழ்வு, அவைகளின் தன்மை, அடிப்படை இப்படி; அவைகளின் முடிவு இப்படி; அப்படியிருக்க இவைகளில் குறுக்கே எதற்காகக் கடவுளை இழுத்துப் போட வேண்டும்' என்றார்.

இந்த அளவோடு நிற்காமல் இன்னும் மேலேபோய்ச் சொல்லுகிறார், 'ஆத்மா என்பதாக ஒன்றும் கிடையாது' (புத்தன் என்றால் அநாத்மா கொள்கை கொண்டவன்) என்று தெளிவாகக் கூறி, 'ஆத்மா என்பதாக ஒன்று இருக்கிறது; அது உயிர்களின் கண்ணுக்குத் தெரியாமல் இயங்குகிறது; உடல்தான் அழிகிறதே தவிர, ஆத்மா அழிகிற தில்லை. உடல் அழிந்தபின் அந்த ஆத்மாவுக்கு அதனதன் கர்மவினைப்படிக்கு, அவை யவைகளுக்கு ஆன பலனை பகவான்—கடவுள் தருவார்' என்பதாகக் கூறி கடவுள் என்ற கற்பனையை உறுதிப்படுத்த, கடவுளுக்கு அனுசரணையானதாகச் சிருஷ்டிக்கப்பட்டுள்ள மற்றொரு கற்பனையான 'ஆத்மார்த்தக் கொள்கை'யை மிகவும் கண்டித்துள்ளார். மற்றபடி இவைகளைத் தவிர உருவவழிபாடு, பல கடவுள்கள், அந்தப்படியானவைகளுக் காகச் செய்யும் பூசை, உற்சவம் முதலான காரியங்களையும் நல்ல அளவுக்குக் கண்டித்துள்ளார்; அவைகளைத் தவறு என்று மிகத் தெளிவாகச் சொல்லியுள்ளார், இப்படி இன்னும் பலவிதத்திலும் இந்த ஆரியப், பார்ப்பனக் கொள்கை, கலாச்சாரம், மதம் ஆகியவற்றைக் கண்டித்துள்ளார் புத்தர்.

இந்தப்படியெல்லாம் சொன்னதற்காக அவரும் அவருடைய இயக்கத்தார்களும்மிகுந்த அளவுக்குக் கஷ்டம் அடைந்துள்ளனர்; தொல்லைகள் அனுபவித்துள்ளனர். புத்தமாநாடு ஏன் கூட்டவேண்டும் என்பதற்கு, பார்ப்பனர்கள் புத்தமதத்தை அழிக்க எடுத்துக்கொண்ட முயற்சிகளுக்கான ஆதாரங்களே போதும், அவ்வளவு தூரம் ஆரிய எதிர்ப்புக் கொள்கை கொண்டது புத்தக் கொள்கைகள், நான் முன்பே சொன்னதுபோல் இராத்திரியோடு இராத்திரியாக புத்தநிலையங்கள் பார்ப்பனர்களால் நெருப்பில் பொசுக்கப்பட்டுள்ளன; புத்தநூல்கள் நெருப்பில் போடப்பட்டும், ஆற்றில் எறியப்பட்டும் அழிக்கப்பட்டன; புத்தர்களைக் கப்பலேற்றி இந்த நாட்டைவிட்டுத் துரத்தினார்கள். எப்படி புத்தமதம் ஜப்பானிலும், சீனாவிலும், பர்மாவிலும், இலங்கையிலும் இன்னும் இதுபோன்ற இடங் களில், தீவுகளில் பரவமுடிந்தது என்றால்—இப்படிப் பாப்பனர்களால் கடலில் துரத்தப்பட்ட புத்தர்கள் அவரவர்கள் போய்ச் சேர்ந்த இடங்களில் தங்கள் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்ய, அங்கெல்லாம் புத்தமதம் தோன்றியது.

இன்னும் இந்த சைவர்கள் செய்தகொடுமை இருக்கிறதே அவை சொல்லிமுடியாது. இன்றைக்கும் நடக்கிறது திருவிழா, மதுரையில்—'சமணர்களைக் கழுவேற்றிய திருவிழா' என்று. அதுபோலவே வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருவத்திபுரம் (செய்யாறு) என்கிற ஊரிலுள்ள கோயில்மதிலில் சமணர்களைக் கழுவேற்றுவது போன்ற உருவத்தைச் செதுக்கி வைத்துள்ளார்கள். வைணவர்கள் யோக்கியதைதான் என்ன? அவர்களும் இப்படிச் செய்திருக்கிறார்கள். இன்னும், மாநாட்டில், புத்தர்மாநாட்டு வரவேற்புக் கழகத் தலைவர் தோழர் வேதாசலம் அவர்கள் எடுத்துச் சொன்னார்கள்—'இன்றையதினம் நம் கோயில் களாக இருக்கும் பல கோயில்கள் முன்பு புத்தநிலையங்களாக இருந்தன' என்றும், 'ஸ்ரீரங்கம், காஞ்சிபுரம், பழனி, திருப்பதி முதலிய இடங்களில் இருந்த புத்தர் நிலையச் சிலைகளே அரங்கநாதராகவும், வரதராசராகவும், ஏகாம்பரராகவும், சுப்பிரமணியனாகவும், வெங்கடாசலபதியாகவும் மாற்றப்பட்டிருக்கின்றன,' என்று. இப்படிப் பல கொடுமைகள் செய்யப்பட்டுள்ளன.

ஏதோ சைவர்கள் பேசிக்கொள்ளுகிறார்கள். 'நாங்கள் அன்பு வழிக்காரர்கள்; அன்பே சிவம் என்றெல்லாம்; அத்தனையும் பித்தலாட்டம். 'சைவம் வளர்ந்ததே பலாத்காரத்தினால்தான்' என்பது அவர்களுடைய நூல்களைப் பார்த்தாலே தெரியவரும்.

அதுமட்டுமல்ல; அன்பு, அன்பு என்கிறார்களே அவர்களுடைய கடவுள்களில் எதனுடைய நடத்தை அன்புடையதாய்—அன்பு நடத்தையாய் இருக்கிறது? தோன்றிய கடவுள்கள் அத்தனையும் மக்களை ஒவ்வொருவரைக் கொல்லுவதற்காகத் தோன்றிய கொலைபாதகக் கடவுள்களே தவிர, ஒரு கடவுளாவது கொலைசெய்யாத கடவுள் என்று சொல்லிவிடமுடியுமா? அந்தக் கடவுள்களின் ஆயுதங்கள் கூட மழு, சூலம், வேல் போன்ற ஆயுதங்கள்தாமே? அப்புறம் அன்பாவது, வெங்காயமாவது! அதுபோலவேதான் வைணவம்; அதாவது, வைணவக் கடவுள்கள் என்பவைகளின் யோக்கியதையுமாகும். ஆகவே இதிலிருந்து பொதுவாக மதசம்பந்தமான மாற்றம், மாறுதல் என்பதெல்லாம் பலாத்காரம் இல்லாமல் வெறும் அமைதி, அன்பு, அகிம்சை வழியிலே எதுவும் நடைபெற்றுவிடவில்லை என்றுதானே தோன்றுகிறது?

இப்போது நடைபெற்ற புத்தர் மாநாட்டின் மூலம் நல்லபலன் ஏற்பட்டிருக்கிறது என்றே சொல்லலாம். எல்லாதர, எல்லாநாட்டு மக்களுக்கும் நம் கொள்கையின் உண்மை நோக்கங்கள் தெளிவாகத் தெரிய ஒரு வசதி ஏற்பட்டதோடு மக்களிடமும் நல்ல அளவுக்குக் கிளர்ச்சி எண்ணமும் ஏற்பட்டிருக்கிறது.

மாநாட்டுத் தலைவர் டாக்டர் மல்லல சேகரா அவர்கள் பச்சையாக என்னிடம் ஒப்புக் கொண்டாரே; 'உங்கள் கொள்கைகள்தாம் புத்தர் கொள்கைகள்' என்று. அவர் கொழும்புவில் புத்தமதக் கலாச்சாரப் பேராசிரியர்; டாக்டர் பட்டம்பெற்றவர்; உலக புத்த அய்க்கிய சங்கத்தலைவர்; மற்றும் பல சங்கங்களுக்கும் தலைவர். '53 சங்கங்களுக்கு நான் தலைவனாய் இருக்கிறேன்' என்று, நான் பேசிக்கொண்டிருக்கும் போது என்னிடம் சொன்னார். அவர் கூறினார், 'பல மாநாடுகள் பார்த்திருக்கிறேன்; ஆனால், இதைப் போல் பார்த்ததில்லை' என்று. அந்த அளவுக்கு இந்த மாநாடு பயன்பட்டிருக்கிறது.

['புரட்சிக்கு அழைப்பு' நூலிலிருந்து ஈரோட்டில் 23, 24-1-1954லும், சென்னையில் 31-1-1954லும் சொற்பொழிவுகள்.]

## 5. பவுத்தர்களின் சடங்குகள்

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

பவுத்தர்கள் பெயரளவிலேயே, 'நாங்கள் புத்தரின் கொள்கைகளைக் கடைப் பிடிப்பவர்கள்' என்று கூறுகிறார்களே தவிர அவர்களும் இந்துமதத்தில் உள்ள வைதிக முறைகளைப் போன்ற—பகுத்தறிவுக்கொவ்வாத சடங்குமுறைகளைக் கடைப்பிடிக் கிறார்கள். அவர்கள் புத்தரையே தெய்வமெனக் கொண்டாடுகின்றனர். புத்தரின் சிலைகள் பல ரகங்களிலும் செய்யப்பட்டிருக்கின்றன. சில விக்கிரகங்கள் இருபது, முப்பது அடி நீளமுள்ளவைகளாகக் கூட இருக்கின்றன. தங்கத்தால் ஓடுகள்போட்ட ஆலயங்களும் இருக்கின்றன. அவர்களும் இதற்கென்றே செல்வத்தைப் பாழ்படுத்தி பெரிய பவுத்தக் கோவில்களையும், மடாலயங்களையும் கட்டியுள்ளனர். அவர்களும் புத்தவிக்ரகத்திற்குப் பச்சையாக உள்ள பதார்த்தங்களாகிய பழம் போன்றவைகளை வைத்துப் பூசை செய்கிறார்கள். இங்கு நின்றுகொண்டு வணங்குவதைப்போல் அல்லாமல் அவர்கள் மண்டியிட்டு உட்கார்ந்து கும்பிடுகிறார்கள்.

இவைகள் யாவையும் நான் கண்டபொழுது என்னுடைய மனத்திற்கு வெறுப்பாகி விட்டது. நாம் கடைப்பிடிக்கும் புத்தரின் கொள்கைக்கு முற்றிலும் மாறான முறையில் அவர்கள் நடந்துகொள்கிறார்கள்.

[சென்னை குயப்பேட்டையில், 6-2-1955-ல், சொற்பொழிவு—'விடுதலை' 8-2-1955]

# 6. புத்தர் யார்?

'புத்தர்' என்றால் என்ன? உங்களுக்குத் தெரியவேண்டும். ஈரோட்டில் நடந்த புத்த மாநாட்டில் திரு. மல்லல சேகரா விளக்கமாக எடுத்துச் சொன்னார். உலக புத்த சங்க தலைவர் அவர். அவர் வந்து எடுத்துக் கூறியபிறகுதான் நாமும் தைரியமாக ஓங்கி அடிப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தது. 'புத்தன்' என்று ஒருவர் இருந்தது கிடையாது. சித்தார்த்தன் என்று ஒருவர் இருந்திருக்கிறார். சித்தார்த்தன்தான் தன் புத்தியைக் கொண்டு ஆராய்ந்து, அதனால் புத்தர் ஆனார்! இது மல்லல சேகரா சொன்னது. புத்தர் என்றால் அறிவாளி என்றுதான் பெயர். ஆங்கிலப் பேரகராதியில் 'என்சைக்ளோ பீடியா—(Encyclopeadia Britanica) அதாவது 60, 70 வருடங்களுக்கு முன்னால் வெளிவந்த அகராதியில் பார்த்தால் புத்தன் என்றால் புத்தியை அடிப்படையாகக் கொண்டவன்; அறிவை அடிப்படையாகக் கொண்டவன், அறிவன் என்றுதான் அர்த்தம் இருக்கிறது. இன்றும் தமிழ் நிகண்டில் பார்த்தாலும், புத்தியை ஆதாரமாகக் கொண்டவன் புத்தன்; புத்திக்கு ஆதாரமாகத் தோன்றுகின்ற உண்மைகள்தாம் புத்தம் என்று இருக்கிறது. ஈரோடு புத்த மாநாட்டில் 'பாலி' வார்த்தையில் உள்ள சுலோகங்களைச் சொல்லி எடுத்துக்காட்டியபோது பெரிய அதிசயமாக இருந்தது.

புத்தமதம் என்பதிலும் ஒன்றைச் சொல்லி அதை நம்பித்தான் ஆகவேண்டும் என்ற கட்டுத்திட்டம் இல்லை. மல்லல சேகரா இதை விளக்கமாகச் சொன்னார். புத்த மதத்தில் சித்தார்த்தர் என்பவர் சொன்னதாக எதுவும் இல்லை. இப்போது 'குரான்' என்பது நபிகள் நாயகம் பல சந்தர்ப்பங்களில் பல பேரிடம் சொன்னதைப் பலபேர் கேட்டுக் கொண்டிருந்து எழுதினார்கள். அப்படி எழுதியதைக் கடைசியாக ஒத்துப்பார்த்தால் சரியாக இருந்தது என்று சொல்லுகிறார்கள். அதுபோல புத்தன் யாரிடம் என்ன சொன்னான் என்று சொல்லமுடியுமா? புத்தமதத்தில் சொல்லுவது எல்லாம், 'அம்மா சொல்லுகிறாள் என்பதற்காக நம்பாதே; அப்பா சொல்லுகிறார் என்பதற்காக நம்பாதே நீண்ட நாட்களாக நடந்து வருகிறது என்பதற்காக நம்பாதே; சாஸ்திரம் சொல்கிறது, வேதம் சொல்கிறது, அவர் சொல்கிறார், இவர் சொல்கிறார் என்பதற்காக எதையும் நம்பாதே; உன் அறிவுக்கு ஆதாரமானதை—பொருத்தமானதை நம்பு' இதைத்தான் இன்று நாம் சொல்லிவருகிறோம். இதைச் செய்ய இந்து மதத்தை விட்டு வெளியேறித்தான் ஆகவேண்டும் என்று என்ன கட்டாயம் இருக்கிறது?

[வேலூர் நகராட்சியில், 28-10-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 7-11-1956]

புத்தர் கொள்கை இருட்டடிக்கப்பட்டது. ஏனெனில், புத்தர் இந்நாட்டில்தான் பிறந்தார், வளர்ந்தார். உண்மைகளைக் கண்டறிந்து பிரச்சாரம் செய்தார் என்ற போதிலும், அவர் இந்நாட்டில்தான் விரட்டியடிக்கப்பட்டார். அவருடைய கொள்கை களுக்கும், உண்மைகளுக்கும் இந்நாட்டில்தான் மதிப்பின்றிப்போகும்படி செய்தனர். புத்தரைப் பற்றி இந்நாட்டு மக்கள் கொஞ்சமும் அறியமுடியாதபடி செய்துவிட்டனர். புத்தருக்கோ அவருடைய கொள்கைகளுக்கோ மரியாதை இல்லாது செய்துவிட்டனர். புத்தரை நினைத்தால் நினைத்த மனத்தைக் கழுவவேண்டும்! அவரைப் பற்றிக் காதினால் கேட்டால், காதைக் கழுவவேண்டும் என்ற அளவுக்குக்கூட புத்தரை வெறுக்கும் மனப் பான்மையை உண்டாக்கிவிட்டனர். இராமாயணத்தில் புத்தருக்கு இழுக்கு, இராமாயணத் தில் புத்தரைப்பற்றிக் கூறுகையில், 'புத்தன் ஒரு நாஸ்திகன்; திருடன்; அயோக்கியன் என்றும்' புத்த பிக்குகள் நாஸ்திகர்கள், சாஸ்திர புராணங்களை வெறுப்பவர்கள்,' என்றெல்லாம் ஆத்திரத்துடன் இராமன் வாயினாலேயே சொல்லுவதாகக் காணப்படுகிறது. நாயன்மார்களும் புத்தரை இழிவுபடுத்தினர். மற்றும் இந்து மதத்தின் பேரால் ஏராளமான நாயன்மார்கள், ஆழ்வார்கள் முதலியோர்கள் உண்டாக்கப்பட்டு அவர்கள் எல்லோரும்

புத்தரைப்பற்றியும், அவருடைய கொள்கைகளைப்பற்றியும் இழிவுபடுத்தி இருக்கின்றனர். நாயன்மார்கள் என்பவர்களெல்லாம் 'புத்தரை விரட்டவேண்டும்; வெட்டவேண்டும் அவர் பின் நடக்கும் புத்த பிக்குகளைக் கொலைசெய்யவேண்டும், அவர்களின் பெண்களைக் கற்பழிக்கவேண்டும்' என்றுங்கூட எழுதிவைத்திருக்கின்றனர்.

[சென்னையில், 26-5-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 28-5-1956]

## 7. புத்தர் விழா

திராவிடர்களைச் சூத்திரர்களாகவும், இழிமக்களாகவுமாக்கி, கல்வி கொடுக்காமல், அறிவு வளர்ச்சிக்கு இடம் கொடுக்காமல், காட்டுமிராண்டிகளாக்கியது ஆரியமாகும்.

திராவிடப் பெண்களைச் சூத்திரச்சிகளாகவும், சில பெண்களை தாசி, வேசி, தேவடியாள்களாகவும், சில இடங்களில் உள்ள பெண்களை—பார்ப்பனர்களையே தங்களுக்குக் காதலர்களாகவும், சம்பந்தக்காரர்களாகவும் வைத்துக்கொள்ளச் செய்தது ஆரியமாகும்.

இதை 35 ஆண்டுகளாக சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் ஆகியவை எதிர்த்துப் புரட்சி செய்து வந்ததால்—வருவதால் ஓரளவுக்கு நல்ல மாறுதல் ஏற்பட்டிருக்கிறதுடன், இதுவரை நடந்திராதமாதிரி ஒரு 'சூத்திரனுக்கும் தாழ்ந்த சாதி என்று சொல்லப்பட்டவர்—தமிழ் நாட்டுக்கு முதல் மந்திரி (நிர்வாகபதி)யாகவும், ஒரு 'சூத்திரர்' ஹைகோர்ட்டு முதல் நீதிபதியாகவும், ஒரு 'சூத்திரர்' பாதுகாப்புபதி (I. G. of Police) யாகவும், ஒரு 'சூத்திரர்' கல்விபதி (கல்வி அதிகாரி)யாகவும் வர நேர்ந்தது. ஆகவே, நிர்வாகம், நீதி, பாதுகாப்பு, கல்வி இலாகா தலைமையானது—மனுதர்மசாஸ்திரத்திற்கும், 200 ஆண்டு நடப்புக்கும் விரோதமாக—'அகில இந்திய பார்ப்பன சமுதாயத்தின் எதிர்ப்பையும், சூழ்ச்சிகளையும் சமாளித்து' இந்த நிலை இன்று தமிழ் நாட்டில் ஏற்பட்டு விட்டது.

மற்றும் முடநம்பிக்கைகளையொழிக்கும் முயற்சியும் ஓரளவுக்கு வெற்றிபெற்று பிள்ளையாரை உடைக்கவும்; இராமாயணம் வெறுக்கப்படவும், கொளுத்தப்படவுமான காரியங்கள் நடைபெறுவதுடன், ஆரியத்திற்கு அனுகுண்டு போன்ற 'புத்தர் பெருமான் விழா' கொண்டாடவும் தமிழ்நாடு முனைந்துவிட்டது.

இதைக்கண்டு பார்ப்பனர் அவதிப்படுகிறார்கள்; ஆத்திரப்படுகிறார்கள்; இடர் ஏற்படுத்தத் துடிக்கிறார்கள்.

தமிழர்கள் (சூத்திரர் எனப்பட்டவர்கள்), இந்தச் சமயத்தில் அசார்சமாய்க்—கவலையற்று இருந்துவிடாமல் 24, 25, 26, 27 தேதிகளில் புத்தர் விழாக் கொண்டாடுங்கள்! 'கடவுள்களும் ஆத்மாக்களும், பார்ப்பான் கற்பனையில் உதித்த பூச்சாண்டிகள் என்று கருதுங்கள்!

(நெஞ்சில் தீரமும், அறிவில் விளக்கமும் ஏற்பட்டவர்கள் குறைந்த அளவுக்கு, 'நான் இனிமேல் உருவ வணக்கம் செய்வதில்லை' உருவக் கடவுள்களுள்ள கோவில்களுக்கு வணக்கத்திற்காகப் போவதில்லை, எவ்வித மதக்குறியும் இட்டுக்கொள்வதில்லை.' என்கிறதான உறுதிசெய்துகொள்ள வேண்டுமாய் வேண்டிக்கொள்கிறேன்.)

டாக்டர் அம்பேத்கார் லோக்சபையிலேயே துணிந்து, 'எனக்குக் கடவுள் நம்பிக்கையும், ஆத்ம நம்பிக்கையும் கிடையாது' என்று சொல்லிவிட்டதுடன், ஆரியத்திலிருந்து அடியோடு விலகிவிட்டார். நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

[அறிக்கை—'தோழன்' 20-5-1956]

# 8. புத்தர்

புத்தர் பிறந்த காலம் ஆரியம் தலைசிறந்து விளங்கி மக்கள் ரொம்பவும் காட்டு மிராண்டிகளாக ஆக்கப்பட்டிருந்த காலம். வேதம், சாஸ்திரம், புராணம் எழுதியவர்கள், 'புத்திசாலிகளாக' இருந்தாலும் அந்தக் காலம் எந்த அளவு அறிவு வளர்ச்சி பெற்றிருந்ததோ அந்த அளவில்தான் அவர்கள் புத்திசாலிகளாக இருந்திருக்கமுடியும். புராணங் களில் பார்க்கும்போதே இது தெரியும்.

நான் வள்ளுவரைப் பற்றிச் சொல்லும்போதுகூட இதையேதான் சொல்வேன். அந்தக் காலத்தில் எந்த அளவு அறிவு வளர்ச்சி பெற்றிருந்ததோ—எந்தக் கருத்துக்கள் செல்வாக்குப் பெற்றிருந்தனவோ அந்த அளவுதான் இருக்கும். ஏதோ அவர்கள் சொல்லி விட்டார்கள் என்பதனாலேயே—அவர்கள் சொன்ன எல்லா விஷயங்களும் எல்லாக் காலத் திற்கும் பொருத்தமாக இருக்கும் என்று கொள்ளமுடியாது. வள்ளுவரும், புத்தரும் மக்கள் இன்றைய நிலையைவிட மிகுந்த காட்டுமிராண்டியாக வாழ்ந்த அந்தக் காலத்திலேயே அக் கால அறிவுக்கு ஏற்ற மாதிரி சொல்லியுள்ளார்கள் என்பதனால்தான் பெருமையுடன் அவர்களைப் பாராட்டுகிறோம்.

முஸ்லிம்களைப்பற்றிச் சொல்லும்போது நபிகள் பிறந்த காலத்தில் அராபிய மக்கள் அசல் காட்டுமிராண்டிகளாகவே வாழ்ந்தார்கள்; அந்தக் காட்டுமிராண்டிக் காலத்திலேயே, அவர் அந்தக்கால நிலைக்கு ஏற்ற வழி காட்டினார் என்பதனாலேயே அவரை மகான் என்கிறோம். அதுபோலவேதான், ஏசுநாதர். இவர்களையெல்லாம் பெரிதாகப் பேசக் காரணம் மக்களிடம் மூடநம்பிக்கையும், அறியாமையும், காட்டுமிராண்டித்தன்மையும் நிறைந்திருந்த காலத்தில் சொன்னார்கள் என்பதால்தான்.

மத சாஸ்திரிகள் வண்டி வண்டியாக அளப்பார்கள். ஆனால் சரித்திரத்தைப்பற்றிப் பேசினால், 'எவனோ வெள்ளைக்காரன் சொன்னதை நம்புகிறாயா? என்பார்கள். இவர் களெல்லாம் உள்ளபடியே மனச்சாட்சியை மறைத்துப் பேசுவார்கள். மக்களும் வாதாடத் தெரிந்த அளவு படித்து விஷயங்களைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று எண்ணுவ தில்லை. எதை எடுத்தாலும் சண்டப்பிரசண்டமாகப் பேசவேண்டும் என்பதைத் தவிர— சரித்திரம், உண்மைத் தத்துவம் படித்து விஷயங்களை உணர்ந்து பேசவேண்டும் என்று நினைப்பதேயில்லை. மதம் என்றாலே மடமைதான்.

வெள்ளைக்காரன் சொன்ன சரித்திரத்தைப்பற்றி கவலைப்படவேண்டாம். வடநாட்டில் 'பாரத இதிகாச சமிதி' என்ற ஒரு ஸ்தாபனம் உள்ளது. பெரிய பெரிய ஆட்க ளெல்லாம் அதில் முக்கியஸ்தர்களாக உள்ளார்கள். கவர்னர் முன்ஷி ஒரு முக்கியஸ்தர்; உபஜனாதிபதி டாக்டர் இராதாகிருஷ்ணன் ஒரு முக்கியஸ்தர்; பிர்லாதான் செலவுக்குப் பணம் கொடுக்கிறவர். மாஜி வெங்கட்ராம சாஸ்திரி இன்னும் பல ஆராய்ச்சிக்காரர்கள் உள்ள அந்த ஸ்தாபனத்தில் வேதகாலம் (vedic age) என்ற ஒரு புத்தகம் எழுதி யுள்ளார்கள். அதில் ஆராய்ச்சி செய்து முன்ஷி எழுதியிருக்கிறார். அதில் பல விஷயங்களை எழுதுகிறார்கள். அதற்கு அர்த்தம் மாத்திரம் வேறு சொன்னாலும் பல உண்மைகள் எழுதப்பட்டுள்ளன. அதில், 'அந்தக்காலம் காட்டுமிராண்டித்தனமான காலம்; புராண—இதிகாசங்கள் என்பவை சரித்திரங்கள் அல்ல; நடந்த விஷயங்களைப்பற்றியவையு மல்ல. அவை கற்பனைக் கதைகள். வியாசன் என்றாலே வியாசம், கதை, கற்பனை எழுதுகின்றவன் என்று அர்த்தம்; இவை ஒரு கருத்தைப் பிரச்சாரம் செய்யவே ஏற்பட்டவை' என்று முன்ஷி எழுதுகிறார். 'வேதிக் ஏஜ்' என்ற புத்தகத்தில் முன்னுரை யாக எழுதும்போது, 'புராணம் புகுந்து மக்கள் மனத்தில் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்து விட்டது. அதுதான் எங்களுக்குக் கஷ்டமாகிவிட்டது' என்று எழுதப்பட்டுள்ளது.

100க்கு 75 புராணங்கள் பின்னால் எழுதப்பட்டவை. புத்தர் 2500 ஆண்டுகளுக்கு முன்னால் இருந்தவர். புராண காலம் (Puranic age) என்பது 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலமாகும். (அதாவது புத்தர் காலத்திற்கு பிற்பட்ட காலமாகும்) என்று ஆராய்ச்சியாளர்கள் எழுதியுள்ளார்கள்.

புத்தர் ஏற்பட்டு, அறிவும் ஒழுக்கமும் ஏற்பட்டதை ஒழிக்கவே—அவதாரக் கதைகள்—அவற்றுள் முக்கியமாக கிருஷ்ண அவதாரம், அதிலும் சிறப்பாக கிருஷ்ணனின் திருவிளையாடல்கள் சிருஷ்டிக்கப்பட்டன. அதாவது மூட நம்பிக்கைக்காகக் கிருஷ்ணனும் ஒழுக்கக் கேடுகள் ஏற்பட அவனது திருவிளையாடல்கள், லீலைகள் ஆகியவைகளும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வளவும் செய்துவிட்டு, அவை கடவுள் நடத்தை—வாக்கு என்பதற்காக கீதையும் வெகு நாளைக்குப் பின் எழுதப்பட்டது.

சாதாரண அறிவுடன் பார்த்தாலே தெரியும். ஒரு கடவுளை இவ்வளவு கேவலமாக சிருஷ்டி செய்து பாட்டில், பஜனையில், நடனத்தில், கூட்டத்தில் மற்றும் சகலவிதமான முறையிலும் அதையே பிரச்சாரம் செய்யவேண்டிய அவசியமென்ன? கோபிகளிடம்—மாற்றான் மனைவியிடம் கிருஷ்ணன் செய்த லீலையைப்பற்றிய கதையை, வாயைப் பிளந்துகொண்டு பார்த்துக் கைதட்டுபவன், தன் வீட்டில் கிருஷ்ணன் வந்து லீலை நடத்த ஒத்துக்கொள்ளுவானா? தன் அறிவுக்கும் அனுபவத்திற்கும் ஒத்துவராத நிகழ்ச்சிகளைக் கூட வெறுத்து ஒதுக்கவில்லை என்றால் என்ன அர்த்தம்? அறிவைக்கொண்டு சிந்திக்க வேண்டும்! ஒரு சாதாரண கீழ்த்தர மனிதன் செய்ய மனம் இடம் தராத ஆபாசங்களையெல்லாம் கடவுள் பெயரால் நடத்தப்படுவதை வெறுத்து ஒதுக்காமல் அதற்கு ஆதரவு அளிப்பதும் அதைப் பண்டிகையாய்க் கொண்டாடுவதும் என்ன நியாயம்?

கீதை எழுதியதும், இராமாயணம் எழுதியதும் புத்தருக்குப் பின்னால்தான். புத்தர் அறிவும் ஒழுக்கமும் வளர வேண்டுமென்றார். அவை வளர்ந்துவிட்டால் இவர்கள் கதி என்னாவது? அதற்காகத்தான் புத்தர் பிரச்சாரத்தால் எவை எவை மழுங்கிப் போய்விட்டனவோ அவைகளை, மீண்டும் மீண்டும் பலப்படுத்தவே இவைகளை எழுதினார்கள். முன்ஷி எழுதியிருக்கிறார்: இராமனையும், கிருஷ்ணனையும்பற்றி—இவர்களால் ஆரியத்திற்கு அதிகமான பிரச்சாரம் ஏற்பட்டதாலேயே அவர்களை அவதாரமாக்கிவிட்டார்கள் என்று. இது பாரத இதிகாச சமிதிக்காரர்களே சொல்வது. இதை யெல்லாம் யாரும் சிந்திப்பதில்லை. எடுத்துப்போட்டு உட்கார்ந்து பேச ஆரம்பித்தால் இவை கற்பனைகள்—வடிகட்டின மடமை என்பது தெரியும்.

இன்று சாதியை ஒருவரும் ஆதரிப்பதில்லை; சாதி வேண்டுமென்று சொல்ல யாருக்கும் தைரியமில்லை. ஆச்சாரியார் ஒருவர்தான் சாதி காப்பாற்றப்பட வேண்டுமென்கிறார். அவரையும் கிட்டே நெருங்கிக் கேட்டால், ‘நான் வேறு அர்த்தத்தில் சொன்னேன்’ என்று சொன்னாலும் சொல்லிவிடுவார்.

எதற்கு சாதி இருக்கவேண்டும்? எப்படி சாதி இருக்கிறது? வேத சாஸ்திர புராணங்களை உபயோகப்படுத்தாமல் சாதி எங்கிருந்து வந்தது? அதை யெடுத்து பித்தலாட்டம் என்று சொல்லாமல், சாதி ஒழிப்புக்கு வேறு வழி என்ன இருக்கிறது?

நான்காவது அய்ந்தாவது சாதியாக்கி—பார்ப்பனரல்லாத மக்களை மடமையில் அழுத்திவைக்கவே வேத புராண மதம் வழி செய்கிறது. இதைக் கொஞ்சம் எடுத்துச் சொல்ல, திருத்த முயற்சித்தாலும், ‘நாஸ்திகன்’, ‘மதத் துவேஷி’, ‘வகுப்புத் துவேஷி’ என்று சொல்லித் தலையில் கல்லைத் தூக்கி வைத்துவிட்டால் என்ன அர்த்தம்?

இங்கு புத்தரைப்பற்றிப் பேசவேண்டிய அவசியமென்ன? இதுவும் என்ன ஆழ்வார், நாயன்மார் திருநட்சத்திரமா? புத்தரை வைத்து அவருக்குத் தேங்காய் பழம் வைத்துப்

பூஜை செய்வதோடு சரி என்றால் அப்படிப்பட்ட புத்தர் என்ற வார்த்தை அகராதியிலேயே இல்லாமல் இருந்தால் நல்லது என்றுதான் சொல்லுவேன்.

[எழும்பூரில், 15-5-1957-ல் சொற்பொழிவு—' விடுதலை ' 17-5-1957]

## 9. புத்தநெறி அழிக்கப்பட்டது

பெரியோர்களே! தோழர்களே!

நமது நாட்டில் பார்ப்பனர்களால் புத்தருடைய கொள்கைக்கு எவ்வளவு எதிர்ப்பு அந்தக் காலத்தில் இருந்திருக்கின்றது என்பதைப் பார்த்தாலே தெரியும். அவருடைய ஆட்கள் அந்தக் காலத்தில் இந்துமதக்காரர்களால் கழுவேற்றப்பட்டிருக்கின்றார்கள்; செக்கிலிட்டு அரைக்கப்பட்டும் நெருப்பில் தூக்கி எறியப்பட்டும் இருக்கின்றனர்.

காஞ்சிபுரம் போன்ற கோயில்களில் எல்லாம் புத்தர்களைக் கொடுமைப்படுத்துவது போன்ற சிற்பங்களை நாம் இன்றுங்கூடக் காணலாம். மதுரையில் மட்டும் 8000 சமணர்களைத் துடிக்கத் துடிக்கக் கழுவில் ஏற்றி, கழுமுனை மண்டையில் வந்து எட்டிப் பார்க்கும்படிச் செய்து இருக்கின்றனர்! இன்றுங்கூட மதுரையில் சமணர்களைக் கழுவேற்றும் விழா வருடந்தோறும் நடந்துகொண்டுதான் இருக்கிறது.

இமயமலைச் சாரலில் தோன்றிய புத்தருடைய கொள்கை தென்கோடியிலுள்ள கன்யாகுமரிவரையில் அந்தக் காலத்தில் பரவி இருந்திருக்கின்றது. தஞ்சைபோன்ற ஜில்லாக்களில் தெருவில் சிறு குழி வெட்டினால்கூட புத்த விக்கிரகங்கள் ஏராளமாக அகப்படுகின்றன. இப்படிப்பட்ட செய்திகளை நாம் தினம் பத்திரிக்கைகளில் காண்கிறோம்.

முட்டாள்தனமான அரசர்களும் இந்து மதத்தைச் சேர்ந்த ஆழ்வார்களும், நாயன்மார்களும் புத்த மடங்களையும் கோயில்களையும் இடித்துச் சூறையாடி இருக்கின்றனர். தங்கம், வைரம் இவற்றால் ஆன புத்த விக்கிரகங்களை எல்லாம் திருடிக்கொண்டுபோய்த் தங்கள் தங்கள் மதக் கோயில்களை யெல்லாம் புதுப்பித்து இருக்கின்றனர்.

திருமங்கை ஆழ்வார் என்பவன் நாகப்பட்டினத்தில் இருந்த தங்க புத்த விக்கிரகத்தைத் திருடிக்கொண்டுபோய், சீரங்கம் கோயிலுக்குத் திருப்பணிகள் செய்திருக்கின்றான். மற்றும், தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி போன்ற ஜில்லாக்களில் முன்பு புத்தக் கோயில்களாக இருந்த பலவற்றை இந்துக்கோயில்களாக மாற்றியிருக்கின்றனர்.

தஞ்சை ஜில்லாவில்மட்டும் அடிக்கொரு கோயில் காணப்படுகின்றது. இந்து மதம் என்று கூறப்படுபவற்றினைச் சார்ந்த கீர்த்திபெற்ற கோயில்களில் முக்கால் பாகத்திற்கு மேல் தஞ்சை ஜில்லாவிலும், திருச்சி ஜில்லாவிலும்மட்டும் உள்ளன. ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் பாடப்பெற்ற கோயில்களில் பெரும்பகுதிக்குமேல் தஞ்சை மாவட்டத்திலும் திருச்சி மாவட்டத்திலுமே உள்ளன. இவைகளுக்கு அந்தக் காலத்து முட்டாள் அரசர்களான சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் நிறைய நிலங்களை மானியமாக விட்டிருக்கின்றார்கள்.

இப்படி யெல்லாம்—எப்படியோ புத்த மார்க்கத்தை நாட்டிலிருந்தே ஒழித்துவிட்டார்கள். இந்தக் கொள்கை இப்போது இந்த நாட்டில் மிகமிக அரிதாக ஆகிவிட்டது; ஏன், புத்த நெறி இந்த நாட்டைவிட்டே வெளிநாடுகளுக்கு விரட்டி அடிக்கப்பட்டுவிட்டது.

இந்த நாட்டில் அதற்கு ஆதரவு இல்லாமற்போய்விட்டதே யொழிய வெளிநாடுகளில் அதற்கு நல்ல ஆதரவு ஏற்பட்டுவிட்டது. இன்று சைனா, ஜப்பான், திபெத், சயாம், பர்மா, சிலோன் போன்ற நாடுகளில் நல்லமுறையில் வளர்ந்து வருகிறது. வெள்ளைக்காரனை—கிறித்துவினது கொள்கை காட்டுமிராண்டித்தன்மையில் இருந்து நீக்கி சாதி அற்றவனாகச்

செய்தது. அந்த கிறிஸ்துவுங்கூட புத்தரின் கொள்கையினையே சுருக்கிக் கூறிஇருக்கின்றார் என்றுதான் கூறவேண்டும். எப்படி என்றால், புத்தரால் கூறப்பட்ட பத்துக் கோட்பாடுகளையே கிறிஸ்து, பத்துக் கட்டளைகளாகச் சுருக்கிக் கூறியிருக்கின்றார்! முகமதுநபி கூட ஏறத்தாழ அப்படித்தான் செய்துள்ளார்! ஆகவே, எல்லா மதத்தினர்களும் புத்தக் கொள்கையினை அடிப்படையாகக்கொண்டே தங்கள் கோட்பாடுகளை வளர்க்க முயன்றிருக்கின்றனர்.

எனவே, புத்தரை அடுத்து கிறிஸ்துவும் முகமது நபியும் தோன்றினார்கள். இவர்களுக்குப் பிறகு இந் நாட்டில் வேறு அறிவாளிகளே இல்லை என்று அர்த்தமா?

புத்தர் தன்னை மனிதர் என்றே கூறிக்கொண்டார். ஏசு தன்னைக் கர்த்தரின் தூதுவன் என்று கூறிக்கொண்டார். முகமது நபியும் தன்னை ஆண்டவனால் அனுப்பப் பட்ட தூதன் என்று கூறிக்கொண்டார். அப்படிக் கூறிக்கொண்டதால்தான் பாமர மக்கள் அவர்களை நம்பினார்கள்.

தன்னை, இப்படி மனிதன் என்று கூறிக்கொண்டு—மனித சமுதாயத்திற்கு வேண்டிய பகுத்தறிவுக் கருத்துக்களைக் கூறிய புத்த தர்மத்தை ஏற்றுக்கொள்ளாத காரணத்தால்தான், நாம் இன்று கடுகளவுகூட மான உணர்ச்சி அற்றவர்களாக, முட்டாள்களாக இருக்கிறோம்.

முட்டாள்தனம் என்றாலேயே சுலபத்தில் தீப் பிடித்துக்கொள்ளும் வஸ்து என்று சொல்லலாம். அறிவு என்றால் சீக்கிரத்தில் நெருப்புப் பிடிக்கமுடியாத வஸ்து என்பது பொருள்.

[ஆரல்வாய்மொழியில் 20-12-1958-லும், ஈத்தாமொழியில் 26-12-1958-லும் சொற்பொழிவு—'விடுதலை' 17-1-1959]

புத்தரும் சமணர்களும் பார்ப்பனப் பித்தலாட்டங்களை விளக்கியும் கடவுள், மத புராணங்களின் பித்தலாட்டங்களை விளக்கியும் பிரச்சாரம் செய்ததன் விளைவாகப் பார்ப்பனர்கள் மதிப்பிழக்க ஆரம்பித்தனர். இந் நிலையைக் கண்ட பார்ப்பனர்கள், சதி செய்து புத்தர்களையும், சமணர்களையும் அரசர்கள்மூலம் கொன்றே ஒழித்துக்கட்டினார்கள். அவர்களுக்குப் பிறகு வேறு எவருமே தோன்றவில்லை.

[இடைப்பாடியில், 4-5-1961-ல் சொற்பொழிவு—'விடுதலை' 17-5-1961]

## 10. புத்தம் ஒரு கொள்கையே

பெரியோர்களே! தோழர்களே!

புத்தம் என்றாலே அது ஒரு மதம் என்றே மக்களுக்குத் தவறாக உணர்த்தப் பட்டிருக்கின்றது. அது மதம் என்றே என்னிடம் பலர் வாதாடி உள்ளனர்.

புத்தர் என்று சொன்னது அவருடைய பெயர் அல்ல. அவர் பெயர் சித்தார்த்தர் என்பது. புத்தர் என்பது—புத்தியைப் பயன்படுத்துபவர் புத்தர் என்று பெயர். அகராதியிலும் இதுதான் உள்ளது. ஈரோட்டில் நடந்த புத்த மாநாட்டிற்கு, உலக புத்த சங்கத் தலைவர் திரு. மல்லல சேகராவை அழைத்திருந்தேன். அவரும் இதைத்தான் சொன்னார்.

புத்தன் என்றால் அறிவினைப் பயன்படுத்தி அதன்படி ஒழுகுபவன். எவர் எவர் அறிவைக்கொண்டு சிந்தித்துக் காரியம் ஆற்றுகின்றார்களோ அவர்கள் எல்லாம் புத்தர்கள்தாம். புத்தம் ஒரு மதமல்ல; அது ஒரு கொள்கை.

இந்த நாட்டில், புத்தர் என்றால் நாத்திகர் என்று அறிமுகப்படுத்தப்பட்டு உள்ளது. சாஸ்திரங்களிலும்—புத்தியை ஆதாரமாகக் கொண்டு காரியம் ஆற்றுபவர்கள் எல்லாம் நாத்திகர்கள் என்று கூறப்பட்டு உள்ளது. கடவுளை, மதத்தை ஒத்துக் கொண்டவன்தான் ஆத்திகன் ஆவான். கடவுளையோ, மதத்தையோ ஒத்துக்கொள்ளாமல்—அதனை அறிவைக் கொண்டு அலசிப் பார்ப்பவர்கள் எல்லாம் நாத்திகர் என்றே அழைக்கப்பட்டுள்ளனர்.

இராமாயணத்திலேயே புத்தர்கள் நாத்திகர்கள், அறிவு வாதம் பண்ணுபவர்கள் என்று கண்டிக்கப்பட்டு இருக்கிறது. எவன் ஒருவன் அறிவு கொண்டு முன்னோர்களின் நடப்புக்களையோ—கடவுள், மதம் இவைகளைப்பற்றியோ அறிவு வாதம் பண்ணுகிறானோ அவன் நாத்திகன் என்று குறிப்பிடப்பட்டு உள்ளது.

அறிவு கொண்டு நடப்பதற்குப் பெயர்தான் பவுத்தம். 'புத்தம் சரணம் கச்சாமி' என்பது—அறிவைக்கொண்டு சிந்திக்கவேண்டும்; அறிவுக்கு மரியாதை செலுத்தவேண்டும் என்பதுதான். அப்படிக்கல்லாமல் புத்தனைக் கடவுளாக எண்ணி வழிபாடு செய்யக்கூடாது; அப்படிப் புத்தரும் எதிர் பார்த்திருக்க மாட்டார்.

அறிவுப்பாதையில் ஈடுபட்டுப் பலதடவைகள் வழுக்கிவிழுந்தாலும் பரவாயில்லை. காலம் எல்லாம் மடையனாக இருந்து சாவதைவிட சிலதடவைகள் அறிவைக் கொண்டு சிந்தித்துக் காரியம் ஆற்றுவதில் இரண்டொன்று தவறினாலும் பரவாயில்லை. எப்படி குழந்தை தத்தித் தத்தி நடக்க எத்தனிக்கும்போது, கீழே சிலதடவைகள் பொத்துப் பொத் தென்று விழுந்தாலும் எப்படி பிறகு எளிதாக நடக்கின்றதோ அதுபோலவேதான், அறிவைக் கொண்டு சிந்திப்பதில் தயங்கக்கூடாது.

'சங்கம் தம்மம் கச்சாமி' என்பதும், 'தாம் கைக்கொண்டிருக்கும் ஸ்தாபனத்துக்கு நன்றி விஸ்வாசம் உடையவர்களாய் இருந்து பாடுபட வேண்டும்' என்பதாகும்.

புத்த தர்மம் என்றால், புத்தி தர்மம் என்பதாகும்; அதுதான் மனித தர்மமும் ஆகும். இந்த புத்தி தர்மத்தை—மனித தர்மத்தை எடுத்துக் கூறிப் பாடுபட்ட புத்தர்கள் எல்லாம் கழுவேற்றப்பட்டும், உடைமைகள் எல்லாம் சூறையாடப்பட்டும் இருக்கின்றனர். புத்த மடாலயங்கள் எல்லாம் இடிக்கப்பட்டும் தீ வைக்கப்பட்டும் இந்துக் கோவிலாக மாற்றப் பட்டும் கொடுமை இழைக்கப்பட்டும் இருக்கின்றன.

புத்தர் தோன்றிய காலம் பார்ப்பானுடைய ஆதிக்கமும் வைதிக மதமும் தலை கொழுத்துத் திரிந்த காலம். அந்தக் காலத்தில் தோன்றினார் புத்தர். அவர் கண்ணுக்கு ஒவ்வொரு பார்ப்பனரின் செய்கைகள், கோட்பாடுகள் எல்லாம் தவறாகப் பட்டிருக்கின்றன.

இதனை எல்லாம் மாற்றவே புத்தர் பாடுபட்டு இருக்கின்றார்.

[கோலார் தங்க வயலில், 29-4-1961-ல் சொற்பொழிவு—'விடுதலை' 16-5-1961]

## 11. புத்தரும் நாமும்

பெரியோர்களே!

சாதியை ஒழிக்க புத்தர் மேற்கொண்ட கருத்து என்ன?

அன்றைய தினம் சாதியை ஒழிக்கப் பாடுபட்ட புத்தர்தான் கடவுள் இல்லை என்று தைரியமாகச் சொன்னார். அவர் அப்படிச் சொன்னாரா இல்லையா என்று சிலர் வாதம் பேசுவதானாலும் அதை உறுதிப்படுத்தும் தன்மையில் அவர் எதற்கும் அஞ்சாமல் அடுத்த படியாக—'ஆத்மா என்பதாக ஒன்று கிடையவே கிடையாது; ஆத்மா என்று ஒன்று இல்லவே இல்லை' என்று கூறி இருக்கிறார். அதனால் அவருக்கு 'அனாத்மன்' என்றும் பெயர். ஆத்மா இல்லை என்பதை இலகுவில் யாரும் ஆதரிப்பவர்கள் இருக்கமுடியாது.

ஒருகால் திராவிடர் கழகமும் கம்யூனிஸ்ட் கட்சியும் வேண்டுமானால் ஆதரிப்பதாய் இருந்தாலுங்கூட மற்றவர்கள் ஆதரிக்கமாட்டார்கள்.

எனவே, இவ்வளவு சுலபத்தில்—மற்ற எவராலும் சொல்லமுடியாத ஒன்றை புத்தர் சொல்லி இருப்பதால்தான் அவர்தான் உண்மையாய்ச் சாதியை அறவே ஒழிக்கப் பாடு பட்டார் என்பதோடு, அன்னாருடைய பெயரை இன்றைய தினம் வரை சொல்லமுடிந்தது. இவ்வளவு தூரம் நாமும் போனால்தான் சீக்கிரத்தில் சாதியை வெட்டியெறிய முடியுமே தவிர, ஆத்மா இருப்பதாக ஒப்புக்கொண்டால் சாதி போகாது.

இவ்வளவு நல்ல ரீதியில் அமைந்த புத்தர் கொள்கை, நாளடைவில் பார்ப்பனர்களின் சூழ்ச்சியால் இந்த நாட்டிலே இல்லாமற் செய்யப்பட்டது. இப்போது எங்காவது புத்தமதம் இருக்கிறதா என்றால் சேரியிலே சிலபேரைக் காணலாம். அது பல பிரிவாக இருக்கிறது. எனவே கொஞ்சம் கொஞ்சமாக நாளடைவில் அதுவும் மறையத் தொடங்கிவிட்டது.

புத்தமதத்தை எதிர்த்தவர்களெல்லாம் சாமியாகவும், சாமியாராகவும் மாறிவிட்டார்கள்; ஆழ்வாராகவும், நாயன்மார்கள் என்றும் அழைக்கப்பட்டவர்கள் எல்லாம் தங்களுடைய புத்திசாலித்தனத்தால், பக்தியால் வந்தவர்கள் அல்லர். இவர்கள் எல்லாம் புத்தரை, சமணரை, புத்த சமணமதக் கொள்கைகளைக் கீழ்த்தரமாக—மூர்க்கத்தனமாக எதிர்த்து வைது பாடியதால் ஆழ்வார்கள், அடிகளார்களாக ஆனவர்கள்—ஆக்கப்பட்டவர்கள் ஆவார்கள்.

[திருவொற்றியூரில், 17–2–1952-ல் சொற்பொழிவு—'விடுதலை' 21–2–1952]

தலைவரவர்களே! தோழர்களே! தாய்மார்களே!

நான் கூறுவது, கடவுள் இருக்கிறார் அல்லது இல்லை என்று—புத்தர் எதைச் சொல்லி இருந்தபோதிலும் அவர் கூறிய ஓர் உண்மையை மட்டும் யாருமே மறுக்கமுடியாது. அதாவது, 'எதையும் உன் சொந்த புத்தியைக்கொண்டு ஆராய்ந்து பார்த்து ஏற்றுக்கொள்' என்று அவர் சொல்லிய இந்த உண்மையை மட்டும் யாரும் மறுக்கமுடியாது. இக்கொள்கை ஒன்று மாத்திரமே போதும்—அறிவு வளர்ச்சிக்கு! இதைப் பேசும்போதுதான் சிலர் மழுப்பிவிடுகின்றனர். இன்றுவரை புத்தரைத் தவிர வேறு யாருமே, 'அவனவன் சொந்த புத்தியின்படி நட' என்று சொல்லவே இல்லை. அப்படிச் சொன்னவர்கள் யாருமே கிடையாது. வள்ளுவர் ஒருவர் மட்டுமே இந்த உண்மையை வலியுறுத்திக்கூறி இருக்கிறார் என்பதைக் காணலாம். இந்து மதம் என்றால் என்ன? 'புத்தர் எவ்விடத்திலும் கடவுளைத் தாக்கிப் பேசவில்லை' என்று கூறுவது சுத்தப் பைத்தியக்காரத்தனம். இப்படிப் பேசுகிறவர்களுக்கு இந்து மதம் என்றால் என்ன என்பதே தெரியாது. வேதத்தை ஏற்று நடந்து வருவதுதான் இந்து மதம். உபநிஷத்துக்கள், மந்திர சாஸ்திரங்கள்படி நாம் நடப்பதனால் தான் இங்கு பார்ப்பான்—பறையனும், மேல்சாதி—கீழ்சாதியும், எண்ணற்ற கடவுள்களும், இலட்சக்கணக்கான கோயில்களும் குப்பை கூளங்களும் இருக்கின்றன. புத்தர்களை வைதிகர்கள் விரட்டினர். எல்லாவற்றையும் கற்று, எது உண்மை—எது பொய்? என்று யார் தெரிந்துவைத்திருக்கின்றானோ அவன்தான் புத்தன். 'திருடனும் பவுத்தனும் ஒன்றே; பவுத்தனுக்கும் நாத்திகனுக்கும் வித்தியாசமில்லை; ஆகையால், அவனை நாட்டில் விட்டு வைக்காதே' என்று இராமன் பரதனுக்குச் சொல்லியிருக்கிறான். மற்றொரு இடத்தில், 'பரதா! பவுத்தர்கள் எல்லாம் நாத்திகர்கள்; அவர்களோடு பழகாமல் இருக்கிறாயா?' என்று இராமன் கேட்கிறான். சில பார்ப்பனர்கள், புத்தர் கடவுளைத் திட்டிப் பேசவில்லை என்று பேசுகிறார்கள். இம் மாதிரியாக சிலர் பெரிய விஷயங்களில் தலை கொடுத்து விடுகிறார்கள். புத்தர், 'உன் புத்தியைக் கொண்டாடு; ஆராய்ச்சி செய்; மூடக் கொள்கைகளை, மூடத்தனமான பழக்க வழக்கங்களைக் கடைப் பிடிக்காதே' என்று கூறி

இருக்கிறார். அப்படி ஆராய்ச்சி செய்து பார்த்தால் ஒரு கடவுள் மிஞ்சுமா? இராமன், கிருஷ்ணன் எல்லோரையும் மறந்துவிட மாட்டார்களா? புத்தர் கூறிய ஒரு இலட்சியத்தை வைத்துக்கொண்டு ஏதாவது ஒரு கடவுளைக் கண்டு பிடியுங்களேன்; பார்ப்போம்!

[திருப்பத்தூரில், 30-5-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 3-6-1956]

## 12. புத்தம், வள்ளுவம் அழிவு

தோழர்களே!

2500 ஆண்டுகளுக்கு முன் சித்தார்த்தர் என்ற புத்தர் தோன்றி சாதியைக் கண்டித்தார்; கடவுள், ஆத்மா என்று கூறுவதெல்லாம் பித்தலாட்டம் என்று கூறினார்.

பெரிய இராஜாவுக்கு மைந்தராகப் பிறந்தவர் அவர். தமது இராஜபோகம் எல்லாம் துறந்து காஷ்மீரம் முதல் கன்னியாகுமரி வரை தமது கருத்துக்களை எல்லாம் எடுத்துக் கூறினார்.

ஆனால், புத்தருக்குப் பிறகு, பார்ப்பனர்கள் புத்தருடைய அறிவு மார்க்கத்தில் தாங்களும் பிச்சுக்களாகச் சேர்ந்து அதை ஒழிக்க முற்பட்டார்கள்; இரவோடு இரவாக சமண-பவுத்த மடங்களுக்குத் தீ வைத்துக் கொளுத்தியிருக்கின்றார்கள்; புத்தரின் அருமையான கொள்கைகளை இந்த நாட்டைவிட்டே ஒழித்துக்கட்டி விட்டார்கள். இன்று சீனா, ஜப்பான், பர்மா, சிலோன் ஆகிய இடங்களில் அந்தக் கொள்கை செழித்து வளர்ந்திருக்கின்றது.

புத்தரது மார்க்கம் ஒரு காலத்தில் தென்னிந்தியாவில் எவ்வளவு தூரம் மக்களிடம் செல்வாக்குப் பெற்றிருந்தது என்பதை உணர வேண்டுமேயானால்—இன்றுங்கூட, தஞ்சை, திருச்சி ஜில்லாக்களில் ஒரு சிறிய குழி தோண்டினாலுங்கூட ஏராளமான புத்த விக்கிரகங்கள் பல சமயங்களில் கிடைக்கின்றன. எவ்வளவோ சீரும் சிறப்புடனும் இந்நாட்டு மக்களுக்கு அறிவுப் பிரச்சாரம் செய்து வந்த புத்த-சமண மார்க்கத்தினர்களைப் பனங்காயைச் சீவுவதுபோலத் தலைகளையெல்லாம் வெட்டிக் குவித்திருக்கின்றனர்! இப்படி இவர்கள் கொடுமைப்படுத்தப்பட்டதை விளக்கும் முறையிலே, பல சைவ, வைணவக் கோயில்களில் சிற்ப வடிவிலேயே அடித்து வைத்திருப்பதைப் பார்க்கின்றோம்.

இன்றுங்கூட மதுரையில் ஆண்டுதோறும் 3000 சமணர்களைக் கழுவேற்றிக் கொன்ற கொடிய செயலை விழாவாகக் கொண்டாடுகின்றனர்.

புத்தருக்கு அடுத்தபடி வள்ளுவர் தோன்றி, 'பிறப்பினால் பேதம் கிடையாது; எதையும் அறிவைக்கொண்டு சிந்தித்து அதன்படி நட' என அருமையான கருத்துக்களை எல்லாம் தமது நூலாகிய திருக்குறளில் கூறிச் சென்றார். ஆனால், அவற்றைப் பார்ப்பனர்கள் குப்பைத்தொட்டியில் போகும்படி செய்துவிட்டார்கள்.

பிறகு எத்தனையோ ஆழ்வாராதிகள், நாயன்மார்கள், அவதாரப் புருஷர்கள் என்பவர்கள் எல்லாம் தோன்றியிருக்கின்றனர். அவர்கள் எல்லாம் பார்ப்பானுக்கு நல்ல பிள்ளையாக நடந்துகொண்டு, அதன்மூலம் தாங்கள் புகழ் விளம்பரம் அடைந்து, தம் இனத்திற்குத் துரோகம் செய்து, பார்ப்பானுக்குக் காட்டிக்கொடுத்துத்தான் பெரியவர்களாகியிருக்கின்றனர்.

ஆகவே புத்தர், வள்ளுவர் ஆகிய இருவருக்குப் பிறகு திராவிடர் கழகத்தாராகிய நாங்கள்தாம் இந்த சாதி, கடவுள் மூடநம்பிக்கைகள் இவற்றை எதிர்த்து வருகின்றோம்.

[திருச்சியில், 27-3-1959-ல் சொற்பொழிவு—'விடுதலை' 6-4-1959]

# 13. தமிழர் நிலை மாறவேண்டும்

தமிழர்களான கவிஞர்கள், கட்டுரையாளர்கள், அறிவுப் பிரச்சாரம் செய்பவர்கள், எழுத்தாளர்கள் மற்றும் நடிப்புத் துறையில் உள்ளவர்கள் முதலிய யாவரும் தங்கள் கலைகளை மக்களுக்குப் பயன்படும் வகையில் அவற்றைக் கையாளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தமிழர்கள் புரட்சிகரமான மாறுதலடைய வேண்டிய நிலையில் இருக்கிறார்கள்.

தமிழர்களைக் கைதூக்கிவிட இன்று எந்தக் கலையும் எந்தக் கவிஞரும் இல்லை. உள்ளவர்கள் எல்லோரும், 'பத்தாம் பசலிக்காரர்கள்' என்று சொல்லும்படி, பழமையைக் கண்டே தங்கள் கலைகளைப் பயன்படுத்துகிறார்கள்.

தமிழர்களைத் தாழ்த்தியதும் தலைதூக்க வொட்டாமல் அழுத்தியதும் தமிழறிஞர், கலைஞர், கவிஞர், புலவர் முதலியவர்கள் கையாண்ட சமய இலக்கியமும், முன்னோர்களைப் பின்பற்றிவந்த நடப்புகளும், தமிழர்களைக் குலைத்து உருவாக்கிய அரசியலுந்தான்.

தமிழன் வளர்ச்சிக்கு, அறிவிற்கு, கலைகளுக்கு, சமயத்திற்கு, அரசியலுக்கு—பார்ப்பான் காட்டிய வழியைத் தவிர, ஒரு தமிழன் காட்டிய வழி என்று சொல்ல இன்று என்ன இருக்கிறது? நமது கலைஞர்கள், கவிஞர்கள், புலவர்கள், அரசியல்வாதிகள் பார்ப்பானைக் குறை மட்டும் சொல்லிக் கொண்டு, அவன் கலாச்சாரத்தில் மூழ்கி, அவன் காட்டிய வழியில் நடந்து கொண்டு வாழ்கிறவர்களாகத்தான் இருந்து வந்தார்கள்; வருகிறார்கள் என்பதல்லாமல் தமிழர் நலனுக்கு, வளர்ச்சிக்கு, இழிவு நீக்கத்திற்கு என்று யாராவது எந்த அளவுக்காவது பாடுபட்டார்கள் என்று ஒரு விரலையாவது நீட்ட முடிகிறதா?

எல்லாத் தமிழ் உணர்ச்சியாளரும், எப்படிப்பட்ட பார்ப்பன வெறுப்பாளரும் சுய நலத்திற்கு வேண்டுமான அளவுதான் வெறுப்பைக் காட்டிக் கொள்கிறார்களே தவிர, தமிழ் நலத்திற்கு, தமிழர் சமுதாய நலத்திற்கு என்பதாகக் காட்டிக் கொண்டவர்கள் தமிழர்களில் மிகமிக அரிதாகவே இருந்து வருகிறார்கள்.

தமிழ்ப் பெரியோர்கள், கல்வியாளர்கள, மேதாவிகள், பெரும்பதவியாளர்கள் யாவரும் தமிழர்களின் கேட்டிற்கும் இழிவிற்குமே பார்ப்பனர்களால் கற்பனை செய்து உண்டாக்கப்பட்ட கதைகள், காவியங்கள், புராணங்கள், இதிகாசங்கள் இவைகளில் புகுத்தப்பட்ட கடவுள்கள்—கந்தன், சிவன், விஷ்ணு, கணபதி, இராமன், கிருஷ்ணன் முதலியவற்றைக் கும்பிடுபவர்களாகவும் இவர்களது பெண்டுபிள்ளைகளையும் பின்பற்றி நடப்பவர்களாகவும் இருக்கிறார்களே தவிர—அறிவைப் பற்றியோ, மானத்தைப் பற்றியோ, இனநலத்தைப் பற்றியோ சிந்தித்தவர்கள் என்று சொல்லி ஒருவரையும் குறிப்பிட முடியவில்லையே!

எந்தப் பெரிய மனிதன்—அறிஞர், கவிஞர், வித்துவான், மேதாவி என்பவர் யாரானாலும்—அவர், திவசம், திதி முதலிய பார்ப்பனக் காரியங்களைச் செய்பவரும்; இவை சம்பந்தமான நெற்றியில் சாம்பல், செம்மண், சுண்ணாம்பு, பூச்சுப்பட்டை அடித்துக் கொள்பவர்களும்; கடவுள், சமயப்பற்று உடையவர்களுமாகத்தான் இருக்கிறார்களே ஒழிய, இவை எதற்கு, இவற்றின் பலன் என்ன என்று சிந்தித்தவர்கள், சிந்திக்கிறவர்கள் ஒருவரையும் காண முடியவில்லையே!

இன்னும் தமிழன் சூத்திரனாக இருக்கிறான் என்றால்—இருந்து கொண்டு திவசம், திதி செய்துகொண்டு, சாம்பல் மண்ணை நெற்றியில் அடித்துக் கொண்டு கோவில் குளங்களுக்குப் போய்க்கொண்டிருக்கிறான் என்றால்—தமிழன் எந்த வகையில் முன்னேறத்

தக்கவன் என்பது புரியவில்லை. பார்ப்பானைக் கூப்பிட்டுத் திதி கொடுக்கிற தமிழன்; எப்படித் தன்னைச் சூத்திரன் அல்லன் என்று சொல்லிக்கொள்ள முடியும்?

இன்னும் தமிழனுக்கு மானம், வெட்கம், பகுத்தறிவு வரவில்லையென்றால் மற்ற எந்த நூற்றாண்டில் வரமுடியும்?

சமுதாயப் புரட்சிக்கு உண்மையாகவே இந்தச் சமயம் மிகப் பொருத்தமான காலம் என்பதே என் கருத்து.

இன்று நமக்குப் பெரும் 'சனியனாக' அய்க்கோர்ட் ஒன்று இருக்கிறது. மற்ற எல்லா ஸ்தாபனங்களும் பெரிதும் நமக்கு அனுகூலமாக இருக்கின்றனவென்றே சொல்லலாம். ஆனால், தமிழனுக்குப் புத்தி, மானம் இருக்கவேண்டும்; இருந்தால்தான் எளிதில் மாற்றம் உண்டாக்கிக்கொள்ள முடியும்.

கல்வி இலாகாவில் பகுத்தறிவுப் புத்தகங்களையும், பகுத்தறிவு ஆசிரியர்களையும் நல்லவண்ணம் புகுத்தவேண்டும்.

உத்தியோக இலாகாவில் பெரிதும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைப் புகுத்த வேண்டும். போலீசிலும், கிராமக்கணக்கு, மணியம் பதவிகளிலும் தாழ்த்தப்பட்டவர்களை அதிகமாகப் புகுத்தவேண்டும்.

மற்றும் நிர்வாகத் துறையில் அய். ஏ. எஸ்ஸை (I. A. S.) ஒழித்துக் கட்டியாக வேண்டும். இது, வெள்ளையன், தன் சாதியாரிடமே நீதித்துறை—நிர்வாகத் துறை இருக்க வேண்டுமென்று செய்த சூழ்ச்சியேயாகும். ஆகவே, இவை தமிழர்களைத் தலையெடுக்கவொட்டாமல் செய்துவரும் காரியங்களுக்காகவே இருந்து வருகின்றன.

இந்தக் காரியங்களை இன்றைய ஆட்சி செய்துவிடுமானால், இந்த ஆட்சியை அசைக்க எவராலும் முடியாது என்பதோடு தமிழர் நிலையும் நல்ல அளவுக்கு முன்னேற்றமடையக்கூடும் என்பது நமது கருத்து.

['விடுதலை'—தலையங்கம்—7-10-1972]

# 8. சீர்திருத்தம்

## 1. சீர்திருத்தம்

இப்போது சமுதாய முற்போக்குக்கும் சமத்துவத்துக்கும் விடுதலைக்கும் புதியதாக நாம் கைக்கொள்ளவேண்டியது என்னவென்றால், அறிவு வளர்ச்சிக்கும், சமத்துவத்திற்கும் தடையாய் இருப்பவைகளை அழித்துவிடவேண்டும் என்பதேயாகும். இவ்விதம் அழிவு வேலை மூலம் தடைகளை நீக்கிவிட்டால் தானாகவே முற்போக்குக்கு சரியான பாதை ஏற்பட்டுவிடும் என்பது அதில் நன்றாய் அறியக்கிடக்கிறது. இந்தக் குறிப்பானது, 'இருப்பதை எடுத்துவிட்டால் வேறொன்று வேண்டாமா?' என்று, ஆலோசனை இல்லாமல் பிதற்றிக்கொண்டிருக்கிற விதண்டாவாதிகளுக்கும்—பாமர மக்களை ஏய்ப்பதற்குச் சில சுயநலவாதிகள், 'நாயக்கர் எல்லாவற்றையும் அடியோடு அழிக்கவேண்டுமென்று கூறுகிறாரே; அப்படி அழித்துவிட்டால் மக்களுக்கு வேறுகதி என்ன?' என்று நீலிக்கண்ணீர் விட்டுக்கொண்டிருக்கும் பாசாண்டிகளுக்கும் தக்க பதிலாகும்.

மற்றும், ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்னால் நடந்துவந்த சீர்திருத்தங்கள் பலிக்காமல் தடைபட்டுப் போனதற்குக் காரணம், மேற்குறிப்பிட்டதான தடைகளாய்

இருப்பவைகளைச் சரியானபடி வேருடன் களைந்தெறிவதான அழிவுவேலை செய்யாதது தான் என்றும், தற்காலத்தில் செய்யப்படுகிறதாய்ச் சொல்லப்படுவதெல்லாம் புரட்டும், சுயநலமும் அடிப்படையாய்க் கொண்டதென்றும், சீர்திருத்தத்திற்கு விரோதிகளாய் உள்ள உயர்ந்த சாதிக்காரர் என்பவர்களாலும், சித்தாந்தக்காரர்களாலுமே நடைபெற்று வந்த தென்றும் தெளிவாய் எடுத்துக் கூறியிருப்பதிலிருந்தும்—நமது நாடு உண்மையான சீர்திருத்தமடையாமல் போனதற்கான காரணம் விளங்கும்.

மற்றும், 'கபிலரை ஏமாற்றிவிட்டோம்; புத்தரை ஏமாற்றிவிட்டோம்; கூன் பாண்டியனை ஏமாற்றிவிட்டோம்; மூவேந்தர்களை அழித்துவிட்டோம்; முகமதிய அரசாங்கத்தை ஒழித்துவிட்டோம்; நாயக்கர் அரசாங்கத்தைப் பாழ்படுத்திவிட்டோம்; கம்பனைக்கொண்டே எங்களைக் கடவுளாகவும், தேவர்களாகவும் செய்துகொண்டோம். இப்படிப்பட்ட எங்களுக்கு, சில பார்ப்பனரல்லாத கூலிகளைப் பிடித்தே இப் புதிய சீர்திருத்த இயக்கத்தை ஒழித்து—எங்கள் ஆதிக்கத்தைப் பழையபடி நிலைநிறுத்திக் கொள்ளச் செய்வதுதானா ஒரு பிரமாதமான காரியம்?' என்று மனப்பால் குடித்துக் கொண்டு இறுமாந்து, ஆணவமாய் பிதற்றித் திரிபவர்களுக்கு, அக்கிராசனர் உபந்யா சத்தில், 'அந்தக் காலமும் சவுகரியமும் அப்போதைய அரசாங்கத்தின் யோக்கியதையும் வேறு; இந்தக் காலமும் இப்போதைய அரசாங்கமும் சீர்திருத்தம் செய்யவோ, அழிவு வேலை செய்யவோ விருப்பம் கொண்டவர்களுடைய சவுகரியமும் வேறு' என்று சொல்லி யிருப்பது தக்க பதிலாகும். இப்போதைய இயக்கம் அடிக்க அடிக்க எழும்பும் பந்து போலவும், வெட்டவெட்டத் துளிரும் செடிகள் போலவும் பரவிவிட்டது. கொஞ்ச காலத் திற்கு முன் ஒருவர் எழுதியதுபோல்,—அதாவது, 'எங்களுக்கு இச் சுயமரியாதை இயக்கம் கண்களைத் திறந்துவிட்டது; இனி எவர் தடுத்தாலும், இந்த இராமசாமி நாயக்கரே மாறிவிட்டாலும், இந்த உணர்ச்சியை அடக்கிவிட முடியாது' என்று எழுதியதுபோல்— இனி என்றைக்கும் இந்த இயக்கமும் இந்த உணர்ச்சியும் மறையாது என்பதையும், யாரும் அழிக்கமுடியாது என்பதையும் வெள்ளிடை மலைபோல் விளக்கிவிட்டது.

மற்றபடி, பெண்கள் விடுதலைக்குத் தடையான அர்த்தமற்ற கற்பும் சம்பந்தமற்ற விதவைத் தன்மையும் அழிக்கப்படவேண்டும் என்றும்; அவைகள் அழிக்கப்படத்தக்க முறைகளும்—அதாவது கணவன் என்பவன், 'பழைய சாதம் சுடுகிறது; விசிறிகொண்டு வீசு' என்றால், உடனே மனைவி என்பவள் விசிறிகொண்டு வீசவேண்டியதுதான் கற்பு என்றும்; மனைவி என்பவள் கிணற்றில் தண்ணீர் இறைத்துக்கொண்டிருக்கும்போது, புருஷன் என்பவன் கூப்பிட்டால், திடீரென்று சேந்தும் கயிற்றை விட்டுவிட்டு ஓடிவர வேண்டும் என்றும்; ஓடிவந்தால் மாத்திரம் போதாது—கிணற்றில் கயிறும் பாத்திரமும் அந்தரங்கமாய்த் தொங்கிக்கொண்டிருக்க வேண்டுமென்றும்; அப்படி தொங்கிக் கொண்டிருந்தால்தான் 'கற்பு' உள்ளவள், பதிவிரதையானவள் என்றும் சொல்வதான கற்பையும் பதிவிரதாத் தன்மையையும் அடியோடு ஒழித்தாக வேண்டும் என்று குறிப்பிட்டிருப்பதும்; விதவைகளுக்கு அவர்கள் தாய், தகப்பன்மாரோ அல்லது சுற்றத்தார்களோ மறுகல்யாணம் செய்துவைக்காவிட்டால், அவ் விதவைகள் தங்களுக்கு இஷ்டமான கணவரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டியது என்றும்; புருஷனுடன் வாழும் மற்ற பெண்களும் இதற்கு உதவிசெய்து விதவைகளைக் கணவனுடன் வாழச் செய்ய அனுகூலமாயிருக்க வேண்டும் என்றும் சொல்லியிருப்பது குறிப்பிடத்தக்கது. அதுமாத்திரமன்றி, குறுகிய நோக்கங்கொண்டோ அல்லது விஷமப் புத்தி கொண்டோ, 'பெண்கள் எப்படி வேண்டுமானாலும் ஒழுக்க ஈனமாய் நடந்துகொள்ளலாமா?' என்று கேட்பவர்களுக்கும் சமாதானமாக—அதாவது, 'கணவன்-மனைவி என்பதாக இருவர் சேர்ந்து இல்வாழ்க்கை நடத்துவதற்காகச் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் பலனாகவோ, காதலன்-காதலி என்கின்ற முறையில் இருவர்களின் காதல் இன்பத்தின் பயனாகவோ,

இருவரையும் சமநிபந்தனைகள் கொண்ட கற்பு என்னும் சங்கிலி எவ்வளவு இறுகக் கட்டினாலும் அது எவ்விதத்திலும் பெண்கள் விடுதலைக்கு இடையூறாக இருக்காது' என்று சொல்லியிருப்பதும் மிகவும் குறிப்பிடத்தக்கது.

மற்றபடி, விதவைகள் என்னும் கொடுமைப்படுத்தப்பட்டவர்கள் விஷயத்திலும், 'அவர்கள் தங்கள் துக்கநிவர்த்திக்கு, இனி பெற்றோர்களையோ உறவினர்களையோ எதிர்பாராமல் தாங்களாகவே தக்க கணவனைத் தேர்ந்தெடுத்து வெளிப்படுத்திவிட வேண்டியதுதான்' என்று குறிப்பிட்டிருப்பதும்; மற்றபடி புருஷனுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் பெண்களும் விதவைகளின் மேற்கண்ட முயற்சிக்கு உதவி செய்ய வேண்டியது என்றும் குறிப்பிட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கதேயாகும்.

மற்றபடி, சாதி வித்தியாசம், தீண்டாமை, மூடப்பழக்கவழக்கங்கள் ஆகியவைகளை ஒழித்தலைப்பற்றியும், கல்வியைப்பற்றியும் குறிப்பிட்டிருப்பவைகளும் ஊன்றிக் கவனிக்கத் தக்கவைகளாகும்.

மகாநாட்டிலும் அக்கிராசனரின் உபந்யாசத்திற் கண்டபடியே, சில தீர்மானங்களே யானாலும் மிக முக்கியமான தீர்மானங்களாகவே தீர்மானிக்கப்பட்டிருப்பதானது குறிப்பிடத்தக்கது.

அதாவது, பெண்கள் சுதந்திரத்திற்குப் பெரிதும் இப்போது இடையூறாயிருப்பது—அவர்களுக்குச் சொத்துரிமை இல்லாமையால்தான் என்பதை உணர்ந்து, இனிமேல் குடும்பச் சொத்தில் பெண்களுக்குச் சம உரிமையும்; விதவைகள் விதவைத் தன்மையுடன் இருந்துகொண்டு கஷ்டப்பட வேண்டியதற்குக் காரணமாய் இருப்பது—அவர்களுக்குப் புருஷன் இறந்தவுடன் மற்றவர்களிடம் ஜீவனாம்சத்திற்குத் தொங்கிக்கொண்டிருக்க வேண்டியிருப்பதால்தான் என்பதை உணர்ந்து, அது மாறும்படி புருஷன் சொத்து பாத்தியம் முழுவதும் சர்வ சுதந்திரத்துடன் விதவைகளுக்கு அளிக்கப்பட்டுவிடவேண்டும் என்றும் தீர்மானித்திருப்பதானது சரியான பரிகாரமாகும்.

மற்றும், 'தீண்டாதார்' என்பவர்கள் கல்வி இல்லாத காரணத்தால் முன்னேற முடியாமல் இருப்பதால் அவர்களுக்குச் சாப்பாடுபோட்டுக் கட்டாயக்கல்வி கொடுக்க வேண்டுமென்று தீர்மானித்திருப்பதும்; மூடப்பழக்க வழக்கங்களை ஒழிப்பதற்காகப் பள்ளிக்கூடங்களில் குருட்டு பக்தி, மூடநம்பிக்கைகளுக்கு இடம் தரும்படியான கல்வி கற்பிக்கக்கூடாதென்றும்; மூடநம்பிக்கையும் குருட்டு பக்தியும் உள்ள உபாத்தியாயர்களை பள்ளிக்கூடங்களில் பிள்ளைகளைப் படிப்பிக்கச் சேர்க்கக்கூடாது என்றும்; உபாத்தியார் களைத் தயார் செய்யும் பள்ளிக்கூடங்களிலும், பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடங்களிலும் மூடநம்பிக்கைகளும், குருட்டு பக்தியும் உண்டாக்கத்தக்க எந்தப் புத்தகங்களையும் பாடப் புத்தகமாக வைக்கக்கூடாதென்றும் தீர்மானிக்கப்பட்டிருப்பதும்—மற்றும் சில தீர்மானங் களும், முக்கியமாக 'மதத்தின் பேரால் பெண்களுக்குப் பொட்டுக்கட்டி விபசாரத்திற்கு விடும் வழக்கத்தை ஒழிக்கச் சட்டம் செய்யவேண்டும்' என்று திருமதி டாக்டர் வோகளி ஆர்யா அவர்களால் பிரேரிக்கப்பட்டு திருமதி அலமேலுமங்கைத்தாயாரவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏகமனதாய் நிறைவேற்றப்பட்ட தீர்மானமும் குறிப்பிடத்தக்கவை.

['குடி அரசு'—தலையங்கம்—2-12-1928]

## உ. சீர்திருத்தக்காரர்களுக்கு

உண்மையான சீர்திருத்தத்தை நமது நாட்டிற்கு விரும்புபவர்கள், முதலில் சீர்திருத்தக் கொள்கைக்கு இடையூறாக இருக்கும் புல்லுருவிகளையும், கறையான்களையும் அழிக்கத் தைரியமாய் முற்படவேண்டும். பழக்க வழக்கம் என்கின்ற பிசாசுகளை முதலில் ஓட்டிவிட வேண்டும்.

பழக்கவழக்கங்களை விடவேண்டுமானால் மனிதன் பகுத்தறிவுக்கு மதிப்புக் கொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். அப்படிப் பகுத்தறிவுக்கு மதிப்புக் கொடுப்பவர்கள் கேள்வி மாத்திரத்திலேயே ஒன்றை நம்பிவிடக்கூடாது; எழுதிவைத்திருப்பதாலேயே ஒன்றை நம்பிவிடக்கூடாது; வெகுகாலமாக நடந்துவருவதாகத் தெரியவருவதனாலேயே ஒன்றை நம்பிவிடக்கூடாது; அனேகர் பின்பற்றுவதாலேயே நம்பிவிடக்கூடாது; கடவுளாலோ மகாத்மாவாலோ சொல்லப்பட்டது என்பதாலேயே நம்பிவிடக்கூடாது. ஏதாவது ஒரு விஷயம் நம்முடைய புத்திக்கு ஆச்சரியமாய்த் தோன்றுவதாலேயே அதைத் தெய்வீகம் என்றோ மந்திரசக்தி என்றோ நம்பிவிடக்கூடாது. எப்படிப்பட்ட விஷயமானாலும் நடுநிலைமையில் இருந்து பகுத்தறிவுக்குத் தாராளமாய் விட்டு ஆலோசிக்கத் தயாராயிருக்கவேண்டும். அப்படி இருந்தால்தான் கண்மூடித்தனமான பழக்க வழக்கம் முதலியவைகளை ஒழிக்கமுடியும்.

அப்படிக்கில்லாமல், 'எதையும் நம்பித்தானாகவேண்டும்'; 'பெரியவர்கள் நடந்தபடிதான் நடக்கவேண்டும்' என்று நினைப்போமானால், எதை நம்புவது? யார் சொன்னது சரி? யார் சொன்னது தப்பு? எந்த எந்தப் புத்தகம் கடவுள் சொன்னது? அதில் எதெது மத்தியில் நுழைக்கப்பட்டது? அவைகளில் அறிவாளிகளுக்கு எழுதியது எது? புத்தியில்லாத பாமர மக்களுக்கு எழுதியது எது? பெரியவர்கள் யார்?—இவை போன்ற விஷயங்களுக்குச் சமாதானம் எங்கே இருக்கிறது? நமது சீர்திருத்த வேலையின் ஜீவநாடி இந்த இடத்தில் தான். இருக்கிறது. இங்குதான் மனிதன் தைரியமாயும் உறுதியாயும் இருக்க வேண்டும்.

தீவிர சீர்திருத்தங்களைப்பற்றிப் பிரச்சாரம் செய்வதன்மூலல் மக்களுக்கு எடுத்துச் சொல்லி முழுவதையும் சரிப்படுத்திவிடலாம் என்று எண்ணுவதும் மிகுதியும் பைத்தியக்காரத்தனமாகும்.

ஏனெனில், நமது பிரச்சாரத்தைச் செய்வதற்கு நமக்குள்ள சந்தர்ப்பத்தைக் காட்டிலும்—நமது சீர்திருத்தத்திற்கு எதிரிகளான வைதிகர்கள், பண்டிதர்கள், சுயநலப் பார்ப்பனர்கள், அவர்களது கூலிகள் ஆகியவர்களுக்கே மிகுதியும் சந்தர்ப்பங்களும் சவுகரியங்களும் அதிகமாய் இருக்கின்றன. எப்படியெனில், கோயில்கள், புராணங்கள், சித்திரப்படங்கள் ஆகியவைகளும் அவைகளின் உற்சவம், காலட்சேபம், பஜனை, சம்பிரதாயம் ஆகியவைகளும்; பள்ளிக்கூடப் படிப்பு, பாடப்புத்தகம் முதலியவைகளும் யாருடைய பிரயத்தனமும் இல்லாமல் மக்களுக்குள் சீர்திருத்தத்திற்கு விரோதமான விஷயத்தைப் புகுத்திவிடுகின்றன. இது தவிர, கோடிக்கணக்கான ரூபாய்கள் வருவாய் கொண்ட மக்களும் மடாதிபதிகளும் ஸ்தாபனங்களும் வெட்டி ஆட்களும் இருக்கின்றனர்.

அன்றியும், ஜனப்பிரதிநிதித்துவமான ஓட்டுகள் பெற்று அதன்மூலம் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்களால் சட்டங்கள் செய்யப்பட்டு, முழு சீர்திருத்தங்களையும் செய்துவிடலாம் என்று எண்ணுவதும் அறியாமையே ஆகும். ஏனெனில், ஜனப்பிரதிநிதித்துவமான ஓட்டுகள் என்பன பெரிதும் பாமர மக்களிடையே இருக்கின்றன. பிரதிநிதிகளாக வருபவர்களும் பெரிதும் சீர்திருத்த விரோதிகளுக்குப் பயந்தவர்களாகவும், சரியான சீர்திருத்த அறிவில்லாதவர்களாகவுமே இருக்கிறார்கள்.

சர்க்காரும் நம்முடைய கேவல நிலையினால் வாழவேண்டியவர்களாக இருக்கின்றார்கள். அதனால், உண்மையானதும் முடிவானதுமான சீர்திருத்தம் ஒரு நாட்டிற்கு வரவேண்டுமானால், ஏகச் சக்ராதிபத்தியத் தன்மை கொண்ட ஒரு வீரனின் ஆட்சியில்தான் முடியும்.

அதாவது, 'இந்தப் பொதுக் கோயிலுக்குள் செல்ல எல்லோருக்கும் உரிமை உண்டு' என்று விளம்பரம் செய்யவேண்டும். யாராவது ஆட்சேபித்தால் அவர்களைச் சிறையிலிட

வேண்டும். இதைப் பொது ஜனங்கள் கூட்டம்போட்டுக் கண்டிக்க ஆரம்பித்தார்களானால் உடனே கோயிலை இடித்தெறிந்துவிடவேண்டும்.

சாதி வித்தியாசமோ உயர்வு தாழ்வோ கற்பிக்கின்ற புத்தகங்களைப் படிக்கக்கூடாது என்று சொல்லிவிடவேண்டும்; மீறிப் படிக்க ஆரம்பித்தால் அவற்றைப் பறிமுதல் செய்ய வேண்டும். உயர்வு-தாழ்வு வித்தியாசம் முதலியவை கொண்ட மடாதிபதிகளை எல்லாம் சிறையில் அடைத்துவிடவேண்டும். பொதுஜனங்கள் கிளர்ச்சி செய்தால் மடாதிபதிகளைத் தீவாந்திரத்திற்கு அனுப்பிவிடவேண்டும். சுவாமிகளுக்கு உள்ள நகைகள், வாகனங்கள், பூமிகள் எல்லாவற்றையும் பறிமுதல் செய்து, அவைகளை விற்றுப் படிப்பில்லாதவர்களுக்குப் படிப்பும், தொழில் இல்லாதவர்களுக்குத் தொழிலும் ஜீவனமும் ஏற்படுத்த உபயோகப் படுத்திவிடவேண்டும்.

இதுபோன்ற காரியங்கள் செய்யத்தக்க உரம் கொண்ட வீர ஆட்சிக்கு நாட்டைக் கொண்டுவரவேண்டும். அப்பேர்ப்பட்ட வீரர்களின் ஆட்சிக்குட்பட்ட நாடுகள்தான் இன்று சுயமரியாதையும் சீர்திருத்தமும் பொலிந்து விளங்குகின்றன.

அப்பேர்ப்பட்ட வீர ஆட்சிக்கு நாட்டைக் கொண்டுவரவேண்டுமானால், அனேக சீர்திருத்தக்காரர்கள் உயிர்துறக்கத் தயாராயிருந்துகொண்டு பாமர மக்களிடையில் உண்மையைப் பரப்ப முன்வரவேண்டும்.

நம் நாட்டுப் பார்ப்பனர்கள் நம் சீர்திருத்தங்களை எதிர்க்க வெளியில் வருவதில்லை. ஒரு விதத்தில் ஒளிந்துகொண்டார்கள். ஆனாலும், நம்மவர்களிடையே சில கூலிகளையும் ஏமாந்த சோணகிரிகளையும் பிடித்து அவர்களை நம்மீது ஏவிவிட்டு தடைவேலை செய்யச் செய்துவிட்டு, தங்களுக்குள் ஒற்றுமையும் கட்டுப்பாடும் செய்துகொள்ள வருணாசிரம தர்ம மாநாடு, ஆரிய தர்ம பரிபாலன மகாநாடு, பிராமணர்கள் மகாசபை, சனாதனதர்மிகள் மகாநாடு, வேதவித்துக்கள் மகாநாடு, புரோகிதர்கள் மகாநாடு, பண்டிதர்கள் சாஸ்திரிகள் கனபாடிகள் சம்மேளனம் ஆகிய பல மாநாடுகள் திருட்டுத்தனமாகவும் சூழ்ச்சியாகவும் கூட்டி, அவற்றில் பல இரகசிய தீர்மானங்கள் செய்து, இரகசிய சமாச்சாரப் போக்குவரத்து மூலம் தெரிவித்துக்கொண்டு கட்டுப்பாடாய் வேலைசெய்து வருகிறார்கள்.

இவ்வளவும் செய்துவிட்டு, சீர்திருத்த இயக்கத்திற்கு, 'நாஸ்திக இயக்கம்' என்ற பெயரைக் கொடுத்து, அதற்குப் பல தப்பர்த்தங்களையும் பழிப்புக்களையும் கற்பித்து வருகிறார்கள். இதைச் சில பார்ப்பனரல்லாதார்களும் நம்பிக்கொண்டு அர்த்தமில்லாமல் குற்றம் சொல்கின்றார்கள். ஆனாலும், சீர்திருத்தக்காரர்கள் என்பவர்கள் நாஸ்திக மதம் என்கின்ற பூச்சாண்டிக்குப் பயப்படக்கூடாது. அது ஒரு அர்த்தமற்ற வார்த்தை. அதன் உண்மை அர்த்தமும் உண்மைப் பிரயோகமும் என்னவென்றால், 'பார்ப்பனீயத்தில் அதாவது பார்ப்பனர்களுடைய வேதம், சாஸ்திரம், இதிகாசம், புராணம் ஆகியவைகளில் நம்பிக்கை இல்லாதவன்; பார்ப்பனர்களின் புரட்டுக்களைக் கண்டுபிடித்து வெளிப்படுத்துகின்றவன்' என்பதாகும். இந் நிலையில், நாம் எல்லோரும் நல்ல உறுதியான நாஸ்திகர்களே ஆவோம். ஆகையால், நாம் ஒவ்வொருவரும் தைரியமாய் நம்மை நாஸ்திகர் என்றே சொல்லிக்கொள்ளவேண்டும். சீர்திருத்தக்காரர்கள் தங்களுடைய பெயரின் இறுதியில் 'நாஸ்திகன்' என்ற பட்டத்தையே சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்போது தான் நாஸ்திகப் பூச்சாண்டியைக் கொல்லமுடியும்.

நமக்கும் வேதத்துக்கும் என்ன சம்பந்தம்? அதை யார் உண்டாக்கினார்கள்? யாருக்காக உண்டாக்கப்பட்டது? என்ன பாஷையில் செய்யப்பட்டது? அதில் நமது நிலைமை என்ன? மேற்கண்ட விஷயங்களை யோசித்துப் பார்த்தால், அதை நம்பலாமா? நாம் ஒப்புக்கொள்ளலாமா? அது நமது மக்களிடையே பரப்பப்படுவதற்கோ இருப்பதற்கோ இடம் கொடுக்கலாமா? என்பன விளங்கும்.

கடைசியாக, சீர்திருத்தக்காரர்களுக்கு ஒரு எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன்.

மதவெறியும் சமயவெறியும் பிடித்தவர்களும்—பொதுவாகப் பார்ப்பனர்களும், சமத்துவம் சுதந்திரம் சுயமரியாதை பகுத்தறிவு ஆகியவைகள் கொண்ட சீர்திருத்தத்திற்கு எப்போதுமே விரோதிகள் என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

ஒருவர், 'எங்கள் மதத்தில் மேற்கண்ட சீர்திருத்தமுண்டு' என்பார். 'ஆனால், எங்களைப்போல் வேஷம் போட்டுக்கொள்ளவேண்டும்; எங்கள் வேதத்தை நம்பவேண்டும், எங்கள் சாமியையும் தூதனையும் வணங்கவேண்டும்' என்று சொல்லுவார்கள்.

மற்றொருவர், 'எங்கள் சமயத்தில் சீர்திருத்தம் உண்டு. ஆனால், எங்களைப் போல் வேஷம் போட்டுக்கொண்டு எங்கள் சாமிகளையும் புராணங்களையும் நம்பவேண்டும்' என்பார்கள். நம்பாவிட்டால் 'நாஸ்திகர், அஞ்ஞானி, பாவிகள், சமய துவேஷி' என்று சொல்லிவிடுவார்கள். இவர்கள் எல்லோரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையும், இவர்கள் உண்மைச் சீர்திருத்தத்திற்கு விரோதிகள் என்பதையும் மறந்துவிடாதீர்கள்.

முக்கிய எச்சரிக்கை என்னவென்றால், பார்ப்பனர்களில் சிலர் சீர்திருத்தக்காரர்கள் என்று சுலபத்தில் பட்டம்பெற்றுப் 'புரட்டு' விடுவார்கள். அதாவது, கள்ளும் சாராயமும் குடித்தால் அதனாலேயே அவர் ஒரு சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். ஒருவர் ஆடு, மாடு, பன்றி, சாப்பிட்டால் அதனாலேயே அவர் ஒரு சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். மற்றொருவர் வெட்டிச் சோறாக யார் வீட்டிலும் கிடைத்ததையெல்லாம் சாப்பிட்டு வயிற்றை நிரப்பிக்கொண்டு திரிந்தால் அதனாலேயே அவர் ஒரு பெரிய சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். மற்றொருவர் ஒழுக்கமில்லாமல் யாரையும் எந்தப் பெண்ணையும் கலியாணமாகவோ வைப்பாட்டியாகவோ வேசியாகவோ அனுபவித்துக் கொண்டு திரிந்தால் அதனாலேயே அவர் ஒரு பெரிய சீர்திருத்தக்காரர் ஆகிவிடுவார். ஜனங்களும் முட்டாள்தனமாக அவர்களை வித்தியாசமற்றவரென்றும் சீர்திருத்தக்காரர்கள் என்றும் நம்பிவிடுவார்கள். ஆனால், அவர்களால் சீர்திருத்தத்திற்கு மாத்திர மன்னியில் பார்ப்பனரல்லாத சமூகத்திற்கே பெரிய ஆபத்து என்பதை மறந்துவிடாதீர்கள்.

மற்றும், எந்த விஷயத்திலும் சாமியையும் மதத்தையும் குறுக்கே கொண்டுவந்து போட்டுவிடுகின்றார்கள். ஆகவே, உங்களுடைய முன்னேற்றத்திற்குத் தடையாக எந்த மதமாவது கடவுளாவது குறுக்கிட்டால் அவற்றைத் தைரியமாக எதிர்க்கவேண்டுமென்றே கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இனி, பார்ப்பனர்கள் நம்மிடம் வித்தியாசம் காட்டுவதுடன், பார்ப்பனரல்லாதாருக்குள்ளும் பற்பல சாதியார் ஒருவருக் கொருவர் வித்தியாசம் பாராட்டுகின்றனர். மேல் சாதியார்களை நீங்கள் உங்களுக்குச் சமமாக இருக்க வேண்டு மென்று விரும்புவீர்களானால், உங்களுக்குக் கீழேயுள்ள சாதியார்களுக்கும் நீங்கள் சமத்துவம் அளிக்க வேண்டும். நம்மிடமிருக்கும் கொடுமை, பார்ப்பனர்கள் காட்டும் கொடுமைகளைவிடச் சற்று அதிகம் என்றே சொல்லவேண்டும். ஆனால், நாம் பார்ப்பனர்களை ஏன் அதிகமாகச் சொல்லுகிறோமென்றால், அவர்கள் வைத்த தீதான் நம்முடைய வீடுகளிலும் பிடித்துக் கொண்டது. நாம் மேல்சாதி என்பாரோடு சண்டை செய்து, வகுப்புவாரிப் பிரதிநிதித்துவப் படி உத்தியோகம் கொடுக்க வேண்டுமென்ற கொள்கையில் வெற்றிபெற்றால், கீழ்சாதியார்களெனச் சொல்லப்படுகிறவர்களுக்கும் அவர்களுக்குரிய பங்கை நாம் கொடுக்கவேண்டும். சர்வகட்சி மாநாட்டுத் திட்டத்தில் எல்லா வகுப்பாருக்கும் சமத்துவம் கொடுக்க வேண்டுமென்ற விஷயமே காணப்படவில்லை. பார்ப்பனர்களுக்குப் பயந்தே எல்லோரும் அதில் கையெழுத்துப் போட்டுவிடுகிறார்கள். முதலில் எல்லா வகுப்பாருக்கும் சமத்துவம் கொடுப்பதைவிட வேறு என்ன சீர்திருத்தம் வேண்டும் என நினைக்கின்றீர்கள்?

பிச்சை எடுப்பதற்கு உபயோகமாயிருக்கும் வேதப்படிப்பிற்காக, கொள்ளை கொள்ளையாக இலாபம் சம்பாதிக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்கள், பார்ப்பனர்களுக்குச் சோறும் போட்டுப் படிக்கும்படி செய்கின்றார்கள். இம் மாதிரியான உதவி ஆதித் திராவிடப் பிள்ளைகளுக்கு அளிக்கப்படுமானால், அவர்களில் வயிற்றுப்பிழைப்பிற்கு வழியின்றிச் சிறுவயதிலேயே கூலிக்குச் செல்லும் எத்தனையோ பிள்ளைகள் பள்ளிக்கூடம் சென்று படித்து மந்திரி வேலைக்குத் தயாராக இருப்பார்களென்பதை நினைத்துப் பாருங்கள்.

இனி, சிலர் வேதங்களும் புராணங்களும் பழங்கதை என்று சொல்லிக் கொண்டு, பண்டிகை திதி திவசம் கிரகணம் ஆகியவைகள் வரும்போது, அவர்கள் அப் புத்தகங்களையே முதலில் திறந்து பார்ப்பார்கள். ஆனால், அவர்களைக் கேட்டால், 'வழக்கத்திற்கு விரோதமாக நடக்கலாமா?' வென்று கூறுகிறார்கள். அவர்களை எந்தக் கூட்டத்தில் சேர்ப்பது?

கடைசியாக, சீர்திருத்தங்கள் மக்களுக்கு ஒழுக்கம் கற்பிக்கவும், அறிவை விருத்தி செய்யவும், ஜீவன்களிடத்தில் அன்பும் இரக்கமும் காட்டவும், சமத்துவத்தையும் சுயமரியாதை உணர்ச்சியையும் அதிகப்படுத்தவுமே அமையவேண்டும் என்பதைச் சீர்திருத்தவாதிகளுக்கு ஓர் வேண்டுகோளாக விடுத்து, அதில் தங்களைப் பொறுப்புடன் ஈடுபடுத்திக் கொள்ளவேண்டும் என்று முடிக்கிறேன்.

['குடிஅரசு'–தலையங்கம்—9-12-1928]

## 3. எது ஆக்கவேலை?

சகோதரிகளே! சகோதரர்களே!

இப்போது நமது நாட்டில் ஆக்கவேலை செய்வதென்பது சாத்தியப்படாது என்பதை நான் உங்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். பாழும் மதத்தின் பேரால் உலகமே பல பிரிவுகளாகப் பிரிந்துகிடக்கின்றது.

குறிப்பாக, நமது நாடு மதத்தின் பேரால் பிரிந்தது மாத்திரமல்லாமல் சாதிகளின் பேரால் பல பிரிவுகளாகப் பிரிந்து கிடக்கின்றது. இவை மாத்திரமல்லாமல், பணக்காரன்–ஏழை; படித்தவன்–பாமரன் என்ற பிரிவுகளும் நிரந்தரமாய் ஆகிக்கொண்டும் வருகின்றன. இப்படி நிரந்தரமாக இருக்கும்படியாக ஏற்பாடு செய்துகொண்ட மேல்சாதி–கீழ்சாதி முதலாகிய பிரிவுகளை அழிக்க ஆரம்பித்தால், இதை ஆதரவாய்க் கொண்டு மற்றொரு கெடுதி, அதாவது ஏழை–பணக்காரன் என்கின்ற பிரிவு நிரந்தரமாய் இருக்கும்படி ஒரு புதுமுயற்சி செய்யப்படுகிறது. இவைகளெல்லாம் அரசியல் கிளர்ச்சியாலும் சீர்திருத்த முயற்சியாலுமேதான் செய்யப்படுகின்றன. அதாவது, இந்த ஏற்பாடுகள்தான் சீர்திருத்தம் என்று சொல்லப்படுகின்றன. நமது பாமரமக்கள் இதன் இரகசியத்தைத் தெரியாமல்—விளக்கில் விட்டில் பூச்சிகள் விழுவதுபோல—அதில் விழுந்து, மடிந்து வருகின்றார்கள். இதற்காகவேதான் கடவுளும் மதமும் சாதியும் அரசியலும் ஏற்படுத்தப்பட்டன வென்றும் அந்தப்படியே பயன்பட்டு வருகின்றனவென்றும் நான் உறுதியாய்க் கூறுவேன். இவைகளையெல்லாம் அடியோடு ஒழிப்பதுதான் நாம் மனித சமூகத்திற்குச் செய்ய வேண்டிய உண்மையான தொண்டாகும். இதை விட்டுவிட்டு செய்யப்படும் வேறு எவ்விதமான தொண்டும் மனித சமூகத்திற்குக் கேடு விளைவிப்பதாகும்.

ஆகவே, நாட்டிற்கு நன்மை செய்வதாய்க் கூறிக்கொண்டு மக்களை மீளாத அடிமையிலும், கொடுமையிலும் ஆழ்த்தப்போகும் பாதகமான வேலைகளையெல்லாம் கூட நாம் அழிக்க வேண்டியவர்களாய் இருக்கின்றோம். நாட்டுச் செல்வங்களை நாட்டிலுள்ள மக்களில் சிலர் தங்கள் தேவைகளுக்கு மேலாகவும் தகுதிக்கு மேலாகவும் சேர்த்து வைத்துக்

கொண்டு, அவைகளையெல்லாம் அக்கிரமமான வழியில் செலவு செய்துகொண்டு, மக்களை அடிமைப்படுத்தி ஆனந்தமாய் வாழ்ந்துகொண்டு இருக்கின்ற அவர்களேதான் 'இந்த நாடு தரித்திர நிலையில் இருக்கின்றது; விடுதலை பெறவேண்டும்' என்று பாசாங்கு செய்கின்றார்கள். கஷ்டப்படும் மக்களும் ஏழைமக்களும் தங்கள்மீது திரும்பாமல் இருக்கட்டும் என்று—அன்னிய நாட்டுக்காரர்களை நமக்குக் காட்டி நம்மை அந்தப் பக்கம் திருப்பி விடுகின்றார்கள்.

சாதாரணமாக, ஒரு குழந்தையிடமிருந்து ஒரு சாமானை வாங்கவேண்டுமானால், எப்படி அதற்கு வேடிக்கை காட்டிப் பொருளை எடுத்துக் கொள்ளுகின்றோமோ, அது போலவே பாமர மக்களை, 'சுயராஜ்யம் பார்!' 'பூரண சுதந்திரம் பார்!' 'மோட்சம் பார்!' 'கடவுளைப் பார்!' என்று பராக்குக்காட்டி, அவர்கள் வேலையின் பயனையும் அவர்களது செல்வத்தின் பங்குகளையும் சிலரே கொள்ளையடித்துக் கொள்ளுகின்றார்கள். இந்தக் கூட்டத்தாரின் தந்திரமேதான் இந்த நாட்டில் தரித்திரம் என்பதற்கும், அடிமைத் தனம் என்பதற்கும், அறிவும் ஆராய்ச்சியும் அற்ற தன்மை என்பதற்கும் ஆதாரமாய் இருக்கின்றது.

இந்த நாட்டின் செல்வத்தில் எவ்வளவு பெரிய பாகத்தை மதமும் கடவுளும் என்கின்ற பேரால், வேலை செய்யாத சோம்பேறிகள் அனுபவிக்கின்றார்கள் என்பதை நமது மூட ஜனங்கள் அறிந்து கொள்ளாமலேயே 'இந்த நாடு தரித்திரமான' நாடு என்று அழுகின்றார்கள்.

இந்த நாட்டிலுள்ள சந்நியாசிகள், துறவிகள், மதாச்சாரியார்கள் என்பவர்களுக்குள்ள சொத்துக்களும் வரும்படிகளும் வேறு யாருக்காவது இருக்கின்றதென்று யாராவது சொல்லமுடியுமா? அவர்களுக்கு எதற்காக அவ்வளவு சொத்தும் வரும்படியும் வேண்டியிருக்கின்றதென்று எந்தப் பொருளாதாரவாதியாவது கவனிக்கின்றானா? ஒரு சந்நியாசி கோடிக்கணக்கான ரூபாய் சொத்தும், வருஷத்தில் இலட்சக்கணக்காக வரும்படியும் உடையவனாக இருந்தால் அந்தநாடு ஏழைநாடு, தரித்திரநாடு என்று யாராவது சொல்ல முடியுமா? ஒரு முழம் உயரமுள்ள குழவிக் கல்லுக்கு நமது நாட்டில் எத்தனை கோடி ரூபாய்கள் சொத்தும் எவ்வளவு வரும்படியும் இருக்கின்றன? இப்படி எத்தனை ஆயிரக் கணக்கான குழவிக் கல்லுகள் நமது நாட்டில் செல்வத்தோடு, யானை, குதிரை, ஒட்டகம், பல்லக்கு, இரதம், தேர் முதலிய வாகனங்களோடு, பல பெண்டாட்டிகளோடு, பல கலியாணங்களோடு வாழ்கின்றன—என்பவைகளை நேரில் பார்க்கும் ஒரு யோக்கியன் நமதுநாடு தரித்திரநாடு என்று சொல்ல வருவானா? இதை எந்தப் பொருளாதார நிபுணனாவது கவனித்து நமது நாடு தரித்திரம் உள்ள நாடு என்று சொல்லுகின்றானா?

மற்றும், பிரபுக்கள், செல்வவான்கள், இலட்சுமிபுத்திரர்கள் என்று சொல்லிக் கொண்டு எத்தனை ஆயிரக்கணக்கான ஏக்கர் பூமிகள் உடையவர்களும் எவ்வளவு இன்கம்டாக்ஸ் வரிகொடுக்கக் கூடிய இலாபம் அனுபவித்துக் கொண்டு, கோடிகோடியாய்ப் பொருள் சேர்த்து, தாசிவேசி ராஜபோகம் அனுபவித்துக்கொண்டு நிரந்தர ராஜாவாகவும், ஜமீனாகவும், பிரபுவாகவும், பாளையக்காரராகவும் இருக்க முயற்சிமேல் முயற்சி செய்து கொண்டு இருக்கும் மக்கள் பல ஆயிரக்கணக்காக இருந்துகொண்டிருக்கும் இந்த நாட்டை தரித்திரநாடு என்று யாராலும் சொல்லமுடியுமா?

மற்றும், நாள் ஒன்றுக்கு 100, 200, 500, 1000 ரூபாய்கள் வீதம் சம்பாதிக்கும் வக்கீல்களும் டாக்டர்களும் ஏராளமாய் இருந்துகொண்டு—ஒவ்வொருவரும் அய்ம்பதாயிரம், இலட்சம், அய்ந்து இலட்சம் பெறும்படியான பங்களாக்களில் வாழ்ந்துகொண்டு—நிலத்தில் கால்படாமல், நகத்தில் அழுக்குப்படாமல், சரீரத்தில் வேர்வை இல்லாமல்—பிழைத்துக் கொண்டிருக்கும் மக்கள் பல ஆயிரக்கணக்காக, இலட்சக்கணக்காக வாழும் இந்த நாட்டை தரித்திரமுள்ள நாடு என்று யாராவது சொல்லமுடியுமா?

இந்தக் கூட்டத்தினர்தானே இன்றைய தினம் இந்த நாடு தரித்திரநாடு, ஏழைநாடு, அடிமைநாடு என்றும் இது சுதந்திரநாடு ஆகவேண்டும், சுயராஜ்யநாடு ஆகவேண்டும் என்றும் பிரமாதமாய்க் கூப்பாடு போடுகிறார்கள்? ஒவ்வொரு காலத்திலும் வரும் சீர்திருத்தங்களிலெல்லாம் இந்தமாதிரி மக்கள்தானே நமது பிரதிநிதிகளாய் இருந்து நமக்காக என்று ஆட்சிபுரிந்து வருகின்றார்கள்? இப்படிப்பட்டவர்களுக்குத்தானே இன்னமும் அதிகாரமும் பெருமையும் கீர்த்தியும் பணமும் வரவும் ஏற்படவும்; நாம் மதத்தையும் கடவுளையும் சாதியையும் காப்பாற்ற முயற்சிப்பதோடு, சுயராஜ்யமும் பெற வேண்டுமென்றும் பாடுபடுகிறோம்.

நமது நிலைக்குக் காரணம் என்ன? நமது தரித்திரத்திற்கு யார் காரணம்? நமது செல்வமும், பாடும் என்ன ஆகின்றன? என்கின்ற அறிவு நமக்கு இல்லாமல் இருக்கிற முட்டாள்தனமே நமது இன்றைய இழிவுநிலைக்குக் காரணம். மதத்தையாவது, சாதியை யாவது, கடவுளையாவது உண்மை என்று நம்பி அவைகளைக் காப்பாற்ற முயற்சிக்கும் எவனாலும்—மக்களுக்குச் சமத்துவமும் அறிவும் தொழிலும் செல்வமும் ஒருகாலும் ஏற்படவே ஏற்படாது.

ஆனால், இவைகளை அழிக்க மக்கள் ஒரு காலமும் சம்மதிக்கமாட்டார்கள். இவை களைக் காப்பாற்ற அனேகவிதமான ஸ்தல ஸ்தாபனங்கள் ஆதியிலேயே ஏற்பாடு செய்யப்பட்டுவந்து, குழந்தைப் பருவமுதலே நமக்குள் புகுத்தப்பட்டுவந்திருப்பதால் இது சுலப சாத்தியமான காரியமாக இருக்கமுடியவில்லை. இவைகளில் எங்கு கை வைத்தாலும் நமது எதிரிகள் நம்மீது 'நாத்திகன்' என்னும் ஆயுதத்தை வீசி எறிந்து நம்மைக் கொல்லப் பார்த்துவிடுகிறார்கள். நமது மக்களும் பெரும்பாலாய் மூடர்களாய் இருப்பதால், அந்த நாத்திகம் என்னும் ஆயுதத்தைக் கொண்டே நமது எதிரிகளுக்கு உதவியாகவும் நமக்கு எதிரியாகவும் நின்று, நமது முயற்சிகளுக்கு இடையூறு செய்வார்கள். ஆகையால், நாம் இன்றைய நிலையில் இருந்து ஒரு சிறுமாறுதல் செய்யவேண்டுமானாலும் நமது எதிரி களின் ஆயுதமாகிய நாத்திகத்திற்குப் பயப்படாமல், 'ஆமாம்; நான் நாத்திகன்தான்' என்று சொல்லிக்கொண்டு அந்த நாத்திகத்தையே நாட்டில் எங்கும் மூலை முடுக்குகளில் கூடப் பரப்ப நாம் துணியவேண்டும். அப்போதுதான் நமது எண்ணம் ஈடேறமுடியும். ஆதலால், நாம் இனிச் செய்யவேண்டியது முக்கியமாய் நாத்திகப் பிரச்சாரமேயாகும்.

[கேரளா—சேர்த்தலையில், 7-9-1930-ல் தலைமையுரை—'குடி அரசு' 14-9-1930]

பெரியோர்களே! தோழர்களே!

சமுதாய சீர்திருத்த விஷயத்தில் அரசியல் சீர்திருத்தச் சட்டங்கள் மூலம் இதுவரை நாம் தக்க பலன் அடையவேயில்லை. சமுதாயத்தில் ஏதாவது சிறிய முன்னேற்றமாவது பெற்றிருக்கிறோம் என்று சொல்லப்படுமானால்—அது, பொதுக் கிளர்ச்சியின் பயனாய்—நிவர்த்தி இல்லாமல் மேல்சாதிக்காரர்கள் இடம் கொடுக்கவேண்டி ஏற்பட்டதல்லாமல் மற்றபடி சட்டத்தின் மூலமாய் ஏற்பட்டதென்று சொல்லுவதற்குத் தகுந்ததான காரியம் ஒன்றும் இல்லை.

[திருவாரூரில், 24, 25-8-1940-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 25-8-1940]

## 4. சீர்திருத்தமா? அழிவு வேலையா?

தோழர்களே! தாய்மார்களே!

சாதிமுறைகள் என்பவை எல்லாம் இந்துமதத்தினுடைய சிருஷ்டியேயாகும். இந்துக் கடவுள்கள் பேராலும், சாஸ்திரங்கள் பேராலுமேதான் அவை நிலை நிறுத்தப் படுகின்றன. பகுத்தறிவற்ற சில சமுதாய சீர்திருத்தக்காரர் என்பவர்கள் இப்படிப்பட்ட

கடவுள்—மதசாஸ்திரங்களுக்கும் இந்து மதத்திற்கும், வேதாந்தமும் தத்துவார்த்தமும் சொல்லி, இவற்றை ஏற்படுத்தினவர்களுக்கு நல்ல பிள்ளையாக ஆவதற்கு முயற்சிப்பார்கள். இந்த அறிவீனமும் மோசமும் தந்திரமும் ஆன காரியங்களால் தாங்கள்மாத்திரம் மரியாதை அடையலாமே தவிர, சமுதாயத்தின் இழிநிலையைப் போக்க ஒரு கடுகளவும் பயன்படாது. ஆகையால் உங்களுக்கு முதலாவதாக நான் என்ன சொல்லுகிறேன் என்றால், நீங்கள் உங்களுடைய நிலையைச் சிறிதாவது மாற்றிக்கொள்ள வேண்டும் என்று உண்மையாய் ஆசைப்படுவீர்களானால், இந்துமதம் என்பதையும் அது சம்பந்தப்பட்ட கடவுள், மத, புராண, சாஸ்திர, இதிகாசம் என்பவைகளையும் உதறித்தள்ளி, அவற்றிலிருந்து வெளி வாருங்கள். நீங்கள் அதைச் செய்யவில்லையானால், இனியும் ஓராயிரம் ஆண்டிற்குக் கூட நீங்கள் எப்படிப்பட்ட மாநாடுகளும் சங்கங்களும் பிரச்சாரங்களும் கிளர்ச்சிகளும் நடத்தினாலும், எவ்வளவுதான் அரசியல் சுதந்திரமும் பொருளாதார முன்னேற்றமும் பட்டம் பதவிகளும் பெற்றாலும் உங்கள் சமுதாயத்திற்குள்ள இழிவு நீங்கப்போவதில்லை. இது உறுதி, உறுதி!

உங்களுக்கு முன் முயற்சித்தவர்கள் செய்த தவறுகளையே நீங்களும் செய்துகொண்டிருந்தால், உங்கள் வாழ்நாளும் அவர்களைப்போலவே தவறு செய்யத்தான் முடியுமே ஒழிய, திருத்தம் காண முடியவேமுடியாது. மலைக் காய்ச்சலால் அவதிப்படும் மக்கள் 'கொய்னா' சாப்பிடுவதையே அதற்குப் பரிகாரம் என்று கருதுவார்களானால், அம் மக்களுக்கு மருந்து சாப்பிடுகிற வேலையும், மருந்து வியாபாரிகளுக்கு இலாபம் கிடைக்கிற வேலையும்தான் நடைபெறுமே தவிர—அவர்களுக்கும் அவர்கள் சந்ததிகளுக்கும் மலைக் காய்ச்சல் ஏற்படுவது தடுக்கப்படமாட்டாது.

உண்மையில் மலைக் காய்ச்சலை ஒழிக்கவேண்டுமானால், மலைக் காய்ச்சலுக்கு ஆதாரமான—அதை உற்பத்திசெய்கிற கொசுப்பூச்சிகள், விஷக் காற்றுகள் முதலியவைகளை ஒழிக்கவேண்டும். இவைகள் ஒழிக்கப்படவேண்டுமானால் மறுபடியும் இவைகள் உற்பத்தி ஆகாவண்ணம் கசுமாலங்களையும் குப்பைகூளங்களையும் நெருப்பு வைத்து எரித்து, அழுக்குத் தண்ணீர்க் குட்டைகளை மூடியாகவேண்டும். அதுபோலவேதான், நம் சமுதாய இழிவுக்குக் காரணங்களாய் இருக்கிற எப்படிப்பட்ட மதத்தையும் கடவுளையும் ஆதாரங்களையும் நாம் அடியோடு அழித்தே தீரவேண்டியவர்களாக இருக்கின்றோம்.

இந்து மதத்தையோ, அது சம்பந்தமான கடவுள், மதம், சாஸ்திரம், இதிகாசம், புராணங்களையோ சீர்திருத்திவிடலாம் என்று நினைப்பது வெறும் கனவும் வீண் வேலையும் கடைந்தெடுத்த முட்டாள்தனமுமேயாகும்.

சரியானவழி—புத்திசாலித்தனமான வழி என்னவென்றால் அதிலிருந்து தப்பித்துக் கொள்வதுதான்; அதாவது, இந்துமதத்தை விட்டு நாம் வெளியேறிவிட வேண்டியதுதான்.

அதாவது, இந்து மதம் என்பதற்கு—வேறு வார்த்தை சொல்ல வேண்டுமானால் ஆரியம், பார்ப்பனீயம் என்றுதான் சொல்லவேண்டும். உங்களுக்குச் சந்தேகமிருந்தால் அகராதிப் புத்தகங்களையும், அறிஞர்களால்—ஆராய்ச்சி நிபுணர்களால் எழுதப்பெற்ற ஆராய்ச்சிக் குறிப்புகளையும் பார்த்துத் தெரிந்துகொள்ளுங்கள். இதை நீங்கள் யாவரும் நன்றாய் ஞாபகத்தில் வையுங்கள். ஆஷாடபூதிகளைக்கண்டு ஏமாந்துவிடாதீர்கள். புத்தர், சங்கரர், இராமானுஜர் போன்றவர்களின் முயற்சிகள் என்ன, என்ன? புத்தரை ஒழிக்கவே—இராமன், கிருஷ்ணன், இராமாயணம், கீதை, புராணங்கள், அவை சம்பந்தப்பட்ட கோவில்கள் முதலியவைகள் கற்பிக்கப்பட்டன. இவைகளை ஆதரித்துப் பிரச்சாரம் செய்யவே சங்கரர், இராமானுஜர்கள் முயன்றுவந்தார்கள். இவர்களைப் பின்பற்றித்தான் ஆழ்வார்களும், நாயன்மார்களும், பக்தர்களும், தாசர்களும், மகாத்மாக்களும், ஆனந்தாக்

களும், சுவாமிகளும் தோன்றினர். எனவே, இதை எல்லாம் உணர்ந்தவர்கள்தான் இன்று இந்நாட்டு மனித சமுதாய சீர்திருத்தத்திற்கு ஒரு கடுகளவாவது தகுதியுடையவர்கள் ஆவார்கள்.

[கான்பூரில், 29, 30, 31-12-1944-ல் நடைபெற்ற அகில இந்திய பிற்படுத்தப்பட்ட, பார்ப்பனரல்லாதார் மாநாட்டுத் தலைமையுரை—'குடி அரசு' 13-1-1945]

சமுதாயச் சீர்திருத்தத்தில் இரண்டு வகைகள் உண்டு. முதலாவதாக, சமுதாயச் சடங்குகளைத் தீர்ப்பதற்காக, அந்தச் சடங்குகளின் காரண, காரியங்கள்—மூலம்—என்ன என்பதுபற்றிக் கவலைப்படாமல் மேலாக சீர்திருத்தம் செய்வது. இரண்டாவதாக, சமுதாயக் குறைபாடுகள் ஏன், எப்படி வந்தன என்று கண்டறிந்து, அந்தச் சங்கடங்களுக்குக் காரணமாய் இருக்கும் அடிப்படைகளை ஒட்டி சமுதாயச் சீர்திருத்தம் செய்வது.

உதாரணமாக, ஓர் ஊரில் அடிக்கடி மலேரியா வருகிறதென்றால் ஆஸ்பத்திரி வைத்து, போர்டு போட்டு, மருந்து கொடுத்து, தற்காலிகமாய் நோயைப் போக்கும் வைத்தியர்கள் போன்றவர்கள் முதலாவது வகையினர். மலேரியா வருவதன் காரணத்தைக் கண்டறிந்து, அக் காரணங்களை ஒழித்து அந்த ஊரைச் சுத்தமாக்கி, மலேரியா வரவொட்டாமல் செய்வது என்ற சுகாதாரப்பணி செய்வது போன்றவை இரண்டாம் வகையினர்—நாங்கள்.

தீண்டாமையை ஒழிக்க வைத்தியர்கள்—டாக்டர்கள்போல் முயன்று, தீண்டப்படாதவர் என்பவர்களுக்கு எல்லா இடங்களிலும் சமத்துவம் அளிக்கவேண்டும் என்பதுபோன்ற சீர்திருத்தங்கள் செய்பவர் பலர். ஆனால், நாங்கள் தீண்டாமை ஏன்? எப்படி வந்தது? என்று பார்க்கிறோம். மதத்தால் அவர்கள் தீண்டப்படாதவர்கள் என்ற பதில் வருகிறது. மதத்தால் ஏன் தீண்டப்படாதவர்கள் என்று கேட்கின்றோம்? அது சாஸ்திர சம்மதம் என்கிறார்கள். இந்த சாஸ்திரம் எப்படி வந்தது என்றால், அது 'ஆண்டவன் ஆணை' என்கிறார்கள். அப்படியானால், தீண்டாமையை நிலைக்கச்செய்யும் மதத்தையும், அதற்கு ஆதரவு அளிக்கும் சாஸ்திரத்தையும், அதை ஏற்படுத்திய கடவுள்களையும் ஒழித்தால்தான் தீண்டாமை ஒழியும் என்கிறோம்.

அந்தப்படி இல்லாமல், சமுதாய சீர்திருத்தம் என்ற பெயரால் சில சீர்திருத்தங்களைத் தீண்டாதவர்களுக்குச் செய்து கொடுத்தாலும், அவர்கள் தீண்டப்படாத மக்கள் என்ற சாதியில் அல்லது அரிஜனங்கள் என்ற சாதியில்தான் இருப்பார்களே தவிர அந்தப் பெயர் ஒழியாது. அதனால் திராவிடர் கழகம் இவைகளின் அஸ்திவாரங்களைக் கண்டுபிடித்து—அதாவது சாதிமுறை எந்த உருவத்திலும் எதிலும் இல்லாமல் அவைகளைத் தகர்க்கும் வேலையில் ஈடுபட்டிருக்கிறது.

இன்று சமுதாயத்தில் பார்ப்பனர், சூத்திரர், பஞ்சமர் என்ற மூன்று பெரும் பிரிவுகள் இருக்கின்றன. இதில் மேல்சாதிக்காரன் என்ற காரணத்தினால் பார்ப்பனனும், கீழ்சாதிக்காரன் என்ற காரணத்தினால் பஞ்சமனும் தங்களுக்கு வேண்டிய சலுகைகள் பெறுகின்றனர். ஆனால், இடையில் இருக்கும் சூத்திரர்கள் சலுகை இல்லாமல் வேதனைப்படுகின்றனர்.

[வத்தலக்குண்டில், 13-4-1950-ல் சொற்பொழிவு—'விடுதலை' 16-4-1950]

## 5. மாறுதலுக்கு எதிர்ப்பு

சமுதாயத்தில் மாற்றம் செய்ய விரும்பும்போது உலகத்தில் எதிர்ப்பு வருவது இயற்கையே. ஆனால், எந்த நாட்டுச் சரித்திரத்தைப் புரட்டினாலும் மாறுதல் இருந்தே தீரும். மாறுதல் செய்ய விரும்புபவன் கீழே விழுந்து பல கஷ்டங்களை அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.





பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள் 1954-ல் பர்மாவில் நடைபெற்ற உலக பவுத்த மாநாட்டுக்குச் சென்றிருந்தபோது வரவேற்கப்படுகிறார். (மேலே)
அங்கு ஒரு முடிதிருத்தகத்தில் முடிதிருத்தம் (Shampoo) செய்துகொள்கிறார். (கீழே)



1954-ல் பர்மாவில் பெரியார் ஈ. வெ. ரா. அவர்கள்

கட்டை வண்டி ஏறுகிறவன் இரயிலை வெறுப்பான். பின், இரயிலின் அவசியத்தை உணர்ந்து இரயிலில் ஏறிப் பிரயாணம் செய்வான். நெய்விளக்கைத் தவிர வேறு எந்த விளக்கும் கூடாது, மண்ணெண்ணெய் கூடாது என்று கூறியவர்கள்கூட இன்று மின்சார விளக்குகளைப் பொருத்தி இருக்கிறார்கள். பறவைகளுக்கும் எருமை, புலி, எலி போன்ற வைகளுக்கும் பகுத்தறிவு கிடையாது. ஆனால், மனிதன் அய்ந்து அறிவைத் தாண்டி, ஆறாவது அறிவை—பகுத்தறிவைப் பெற்றிருக்கிறான். அனுபவத்தைப் பெறுவதும், மற்றவர்கள் செய்வதை, சொல்வதை யோசிக்க சக்தி பெற்றிருப்பதும் மனித இனம். எனவே, மனித இனம் வாழ்வில் வளர்ச்சியடைந்து வருகிறது.

அறிஞர்களின் ஏற்பாட்டால் 1910-ல் வெளிவந்த வாகனத்துக்கும் 1951-ல் வெளி வந்திருக்கிற வாகனத்துக்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. உலகம் நாளுக்கு நாள், மணிக்குமணி முன்னேறிக்கொண்டு போகும்போது, நமது தமிழர் சமூகம் மட்டிலும் சூத்திரப் பட்டத்துடன் பின்னேறிக் கொண்டு போகிறது. நாம் செய்யும் மாறுதல் சுக போகிகளுக்குப் பாதகமாக இருந்தால்—அவர்களின் இன்பவாழ்வு பாதிக்கப்படும் என்று நினைத்தால், அவர்கள் மாறுதலை மறுப்பார்கள்; எதிர்ப்பார்கள்.

1928 என்று நினைக்கிறேன்; எங்கள் சுயமரியாதை இயக்கத்தில் பல செட்டியார்கள் சேர்ந்தார்கள். அந்தக் காலத்தில் பார்ப்பனர்கள் கப்பல் ஏறி வெளி நாடுகளுக்குப் போகக் கூடாது. அப்படிப் போனால் சாதிக்குப் பாதகம் விளையும் என்ற நிலையில் இருந்தார்கள். ஆனால், இன்று சாதி ஆசாரத்தையும் மறந்து, வெளி நாடுகளுக்காகக் கடல் கடந்து பிழைப்புக்காகவும், பதவிகள் வகிக்கவும் செல்லுகிறார்கள். இதுவும் மாறுதல்தானே! முப்பது ஆண்டுகளுக்கு முன்பு ரோமத்தைக் கத்தரித்து 'கிராப்பு' வைத்திருந்தால் பள்ளிக்கூடத்தில் படிக்க இடம் தரமாட்டார்கள். ஆனால், இப்பொழுது அவர்களே கிராப்பு வைத்துக்கொள்ளுகிறார்கள். நெற்றியில் எதுவுமில்லை என்றால் பள்ளியில் மாணவர்களை நுழைய விடமாட்டார்கள்; ஆனால், இன்று 100க்கு 90 விகிதம் தமிழர்கள் நெற்றியில் எதுவும் வைத்துக்கொள்ளுவதில்லை. 150 ஆண்டுகட்கு முன்பு பெண்கள் ரவிக்கை போட்டுக் கொண்டதில்லை; மலையாளத்தில் மார்பில் துணிகூடப் போடக்கூடாது; இன்று பாட்டியம்மாள்கூட ரவிக்கை போட ஆசைப்படுகிறார்கள். நான் ஈரோடு சேர்மனாக இருந்தபொழுது குழாய்த் தண்ணீருக்கு ஏற்பாடு செய்தேன். மக்களெல்லாம் போற்றி னார்கள். ஆனால், என் தாயார் மட்டிலும், குழாய்த் தண்ணீர் கூடாது என்றார்கள். காரணம் என்ன? குழாய்த் தண்ணீரை யார் யார் பிடித்துவிடுகிறார்களோ—அதில் தீட்டு ஒட்டியிருக்குமே என்பதற்காக! பிறகு திருந்தினார்கள். மாறுதல் வேண்டும்போது பிடிவாதம் இருக்கத்தான் செய்யும். அக்கம் பக்கத்தைப் பார்த்து மாறுதல் ஏற்பட்டுவிடும். உலகம் போகிற போக்கைப் பார்த்தால் மனித சமுதாய வளர்ச்சி எந்த அளவில் கொண்டு போய்விடுமோ! என்ன ஆகுமோ? யார் கண்டது?

நம் நாட்டு இராஜாக்களெல்லாம் கடவுளாக மதிக்கப்பட்டார்கள்; கடவுள் அவதார மென எண்ணப்பட்டார்கள். கடவுளுக்குச் செய்வதெல்லாம் இராஜாவுக்கும் செய்தார்கள். ஆனால், அந்த இராஜாக்களெல்லாம் இன்று என்ன ஆனார்கள்? அரசாங்கத்திடம் சம்பளம் வாங்கும் இராஜாவாக ஆக்கப்பட்டார்கள். ஜமீன்தார்களும் இப்படியே ஒழிக்கப்பட் டார்கள். 'கடவுள் ஒருவனை உயர்ந்தவனாகவும், ஒருவனைத் தாழ்ந்தவனாகவும் படைத்தார்' என்ற வருணாசிரம வேதாந்தம் எங்கே போயிற்று? இப்படியே சுதந்திர ஜனநாயக எண்ணத்துடன் ஆராய்ந்தால் மாறுதல் கண்டிப்பாய்க் கிடைக்கும்.

2000 ஆண்டுகளாக சூத்திரர்கள் இருக்கிறார்கள்; ஏன் அப்படி இருக்கவேண்டும்? ஒரு பாவமும் அறியாத குழந்தை பிறந்ததும், நடமாட ஆரம்பித்ததும் ஏன் சூத்திரனாக இருக்கவேண்டும்? இந்த இருபதாம் நூற்றாண்டிலும், ஏன் புராணத்திலும், சாஸ்திர–சம்பிரதாயத்திலும் சூத்திரப் பட்டம் இருக்கவேண்டும் என்று கேட்பது தப்பா? உள்ளதைச்

சொல்லி மாறுதல் விரும்பும் எங்களைக் குறைகூறுபவர்கள், தொந்தரவு கொடுப்பவர்கள் ஒரு காலத்தில் அதே மாறுதலுக்காக உழைப்பார்கள் என்பதும் எனக்குத் தெரியும்.

அடிமை முத்திரை குத்தப்பட்டவர்களாக, விலை கொடுத்து வாங்கும் அடிமைகளாக நீக்ரோக்கள் நடத்தப்பட்டார்கள். லிங்கன் தோன்றினார்; மாறுதலைச் செய்தார். இன்று அந்தச் சமூகம், பிற இனத்தவர்களுடன் சரிசமமாக வாழும் ஒரு நிலையை ஏற்படுத்திக்கொண்டது.

சீனாவில் சன்யாட்சன் தோன்றினார்; மாறுதலை உண்டுபண்ணினார். 'ஐரோப்பாவின் நோயாளி' என்று கூறப்பட்ட துருக்கி நாட்டிலே கமால் பாட்சா தோன்றி மாறுதலை உண்டுபண்ணினார். ஆனால், தமிழ் நாட்டில் சித்தர்களும் வள்ளுவரும் புத்தரும் தோன்றி—சாதி ஒழிய வேண்டும், மாறுதல் வேண்டும் என்று கூறியும் மாறுதல் காண முடியவில்லையே? உழைப்பதெல்லாம் நம்மவர்களாக இருந்தும், கீழ்சாதியாகத்தானே வாழ்கிறோம்! மலையாள நாட்டில் ஈழவர்கள் வீதியில் நடக்கக்கூடாது என்ற சம்பிரதாயமெல்லாம் மாறி, மாறுதல் ஏற்பட்டு, இன்று வீதியில் நடக்கிறார்கள். ஆனால், தமிழ் நாட்டில் இன்னும் தீண்டப்படாதவன் இருக்கத்தானே செய்கிறான்! அது போகட்டும். நம் தாய்நாட்டுக்குத் தமிழ்நாடு என்று பெயர்; ஆனால் தமிழுக்கு இடமில்லை. கோயிலில் வடமொழியில் மந்திரம் ஓதப்படுகிறது; இந்தி படித்தால்தான் பதவி கிடைக்கும்; தமிழில் சங்கீதம் வராது; தெலுங்கில்தான் சங்கீதம் வரும். சாஸ்திரம், புராணம் எல்லாம் வடமொழியில்!

காந்தியார் நம் நாட்டில் என்ன ஆனார்? மகாத்மாவாகி, மகானான அவரே மூன்று குண்டுகளுக்கு இரையானாரே! 'சூத்திரன் படிக்கக்கூடாது' என்கிறது மனுதர்மம்; 'எல்லோரும் படிக்க வேண்டும்' என்றார் காந்தியார்—உடனே பாய்ந்தன மூன்று குண்டுகள்! 'முஸ்லிம் மதமா, இந்து மதமா? எல்லாம் ஒன்றுதான்' என்றார் காந்தியார்—பாய்ந்தன மூன்று குண்டுகள்! எனவே, மாறுதலுக்கு எதிர்ப்பு இருந்துதான் தீரும்; அதைப்பற்றிக் கவலையில்லை.

நீங்கள் ஒவ்வொருவரும் சமத்துவம் காண, மாறுதல் கொள்ளப் பாடுபடுங்கள்! உயர்ந்தவன்–தாழ்ந்தவன் என்ற பேதமொழிய உழையுங்கள்! இந்நாட்டில் தமிழர்களாகிய நீங்கள் ஒற்றுமையாக இருங்கள். அதற்காகப் பாடுபடுபவர்களுக்கு உதவியாக இருங்கள். என் தொண்டின் அடிப்படை நோக்கமெல்லாம் சாதி ஒழிப்பேயாகும்.

[மலாயாவில், கோலப்பிறை செயின்ட் மார்க் ஸ்கூல் திடலில் 16-12-1954-ல் சொற்பொழிவு—
ஆதாரம்: பினாங்கு, 'சேவிகா' 18-12-1954—'விடுதலை' 23-12-1954]